ஸ்ரீ:

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.







நாலாயிர திவ்யப்ரபந்தத்துள் முதலாயிரத்தில்

## பெரியாழ்வார்

அருளிச்செய்த

# திருப்பல்லாண்டும், பெரியாழ்வார் திருமொழியும்


ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதிபயங்கரம்

**அண்ணங்கராசாரியர்**

இயற்றிய


திவ்யார்த்ததீபிகை யுரையுடன் கூடியவை

மூன்றும் பதிப்பு


ஸ்ரீ வேங்கடேச்வரா பிரஸ், சின்ன காஞ்சீபுரம்.

கிடைக்குமிடம்:—

க்ரந்தமாலா ஆபிஸ், விஷ்ணுகாஞ்சீபுரம்.

விலை ரூ. 6—0—0.

1959.

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்

    

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்

ஸ்ரீகாஞ்சி பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர் இயற்றிய
திவ்யார்த்த தீபிகையுரையோடு கூடின

# முதலாயிரம்

## பொதுத்தனியன்கள்

———O———

நம்பெருமாள் அருளிச்செய்தது

ஸ்ரீசைலேச தயாபாத்ரம் தீபக்த்யாதி குணார்ணவம்:
ய                வந்தே ரம்யஜாமாதரம் முநிம்.

| | | | |
|---|---|---|---|
| ஸ்ரீசைலேச தயாபாத்ரம் | திருமலையாழ்வார் என்னும் திருவாய்மொழிப்பிள்ளையின் திருவருளுக்குப் பாத்ரபூதரும் | யதீந்த்ர ப்ரவணம | எம்பெருமானார் பக்கலிலே ப்ராவண்ய முடையவருமான |
| தீ பக்தி ஆதி குண அர்ணவம் | ஞானம், பக்தி முதலிய நற்குணங்களுக்குக் கடல் போன்றவரும் | ரம்ய ஜாமாதரம் முநிம வந்தே | மணவாள மாமுனிகளை வணங்கா நின்றேன். |

"இப்புவியிலரங்கேசற்கு ஈடளித்தான் வாழியே" என்று வாழ்த்தப்படா நின்ற மணவாளமாமுனிகள் திருவரங்கம் பெரிய கோயிலில் ஸ்ரீ ரங்கநாதன் திருமுன்பே, திருவாய்மொழியின் சிறந்த வியாக்கியானமாகிய ஈடுமுப்பத்தாறாயிரப்படியைக் காலக்ஷேபம் ப்ரவர்த்திதது வருகிற அன்டயிலே காலக்ஷேப சாத்துமுறையன்று ஸ்ரீ ரங்கநாதன் தானே ஒரு சிறுபிள்ளை வடிவுடன திருவோலக்கத்தினிடையே ஓடிவந்து கைகூப்பிநின்று ஸ்ரீசைலேசதயாபாத்ரமென்று தொடங்கும் இந்தத் தனியனை வெளியிட்டுச் சென்றதுமன்றியில், வடமொழி வேதத்தின் ஆதியிலும் அந்தத்திலும் ப்ரணவோச்சாரணம் பண்ணுவது நியதமாயிருப்பது போலத் தமிழ்வேத*பாராயணத்தின் ஆதியிலும் அந்தத்திலும் இந்தத்தனியனை ஸ்ரீ வைஷ்ணவர்களனைவரும் நியதமாக அநுஸந்திக்கக் கடவர்களென்று நியமனமு மருளினன்.

மணவாளமாமுனிகளின் ஆசார்யரான திருவாய்மொழிப்பிள்ளைக்கு ஸ்ரீ சைலேசர் என்று திருநாமம். ... ... ... ... ...*

கூரத்தாழ்வான் அருளிச்செய்தது

[illegible]நாதஸமாரம்பாம் நாதயாமுநமத்யமாம்
அஸ்மதாசார்ய பர்யந்தாம்        குருபரம்பராம்.

| | | | |
|---|---|---|---|
| லக்ஷ்மீநாத ஸமாரம்பாம் | எம்பெருமானைத் தொடக்கத்திலே உடைத்தாய் | அஸ்மதாசார்ய பர்யந்தாம | எமக்கு ஆசார்யரான எம்பெருமானாரை முடிவிலே உடைத்தான |
| நாத யாமுந மத்யமாம் | ஸ்ரீமந்நாதமுனிகளையும் ஆளவந்தாரையும் இடையிலே உடைத்தாய் | குருபரம்பராம் வந்தே | ஆசார்ய பரம்பரையை வணங்காநின்றேன். |

இதனால், எம்பெருமான் முதலாக இன்றளவுமுள்ள ஸகலாசார்யர்களையும் தொழுதாயிற்று

இதுவும் ஆழ்வான் அருளிச்செய்தது

யோநித்யமச்யுதபதாம்புஜயுக்மருக்ம
வ்யாமோஹதஸ் ததிதராணி த்ருணாய மேநே

**அஸ்மத்குரோர் பகவதோஸ்ய தயைகஸிந்தோ:**
**ராமாநுஜஸ்ய சரணௌ சரணம் ப்ரபத்யே**

| | | | |
|---|---|---|---|
| ய: | யாவரொரு எம்பெருமானார் | அஸ்மத் குரோ: | எமக்கு ஆசார்யராய் |
| நித்யம் | எக்காலும் | பகவத: | ஸமஸ்த கல்யாணகுண பரிபூர்ணராய் |
| அச்யுதபதாம்புஜ யுக்ம ருக்ம வ்யாமோஹத: | எம்பெருமானது திருவடித் தாமரை யிணைகளாகிற ஸுவர்ணத்திலுள்ளமிருந்த விருப்பத்தினாலே | தயா ஏக ஸிந்தோ: | திருவருட்கடலான |
| | | அஸ்ய ராமாநுஜஸ்ய | எம்பெருமானாருடைய |
| தத் இதராணி | அத்திருவடிகளுக்குப் புறம்பாயுள்ள விஷயங்களை | சரணௌ | திருவடிகளை |
| த்ருணாய மேநே | துருமமாக நினைத்துத் தள்ளிவிட்டாரோ | சரணம் | உபாயமாக |
| | | ப்ரபத்யே | பற்றுகிறேன். |

ஆளவந்தார்

**மாதாபிதா யுவதயஸ் தநயா விபூதி:**
**ஸர்வம் யதேவ நியமேந மதந்வயாநாம்,**
**ஆத்யஸ்ய ந: குலபதேர் வ**
**யுகளம் ப்ரணமாமி மூர்த்நா**

| | | | |
|---|---|---|---|
| மத் அந்வயாநாம் | என்னைச் சேர்ந்தவர்களுக்கு | ந: ஆத்யஸ்ய குலபதே: | நமக்குக் குலகூடஸ்தராகிய ஆழ்வாருடைய |
| நியமேந | எப்பொழுதும் | | |
| மாதா பிதா யுவதய: தநயா: விபூதி: ஸர்வம் | தாய், தந்தை, மாதர், மக்கள், செல்வம் (மற்றுமுள்ள) எல்லாமும் | வகுள அபிராமம் | மகிழமலர்களினால் அழகாயும் |
| | | ஸ்ரீமத் | நித்யோஜ்வலமாயுமிருக்கிற |
| | | தத் அங்க்ரியுகளம் | அந்தத் திருவடியிணையை |
| யத் ஏவ | யாதொரு ஆழ்வார் திருவடியேயோ | மூர்த்நா ப்ரணமாமி | தலையால்வணங்குகின்றேன் |

ஸ்ரீபராசரபட்டர் அருளிச்செய்தது

**பூதம் ஸரச்ச மஹதாஹ்வய பட்டநாத**
**ஸ்ரீபக்திஸார குலசேகர யோகிவாஹாந்,**
**பரகால ய**
**ஸ்ரீமத்பராங்குசமுநிம் ப்ரணதோஸ்மி நித்யம்**

| | | | |
|---|---|---|---|
| பூதம் | பூதத்தாழ்வாரையும் | பக்தாங்க்ரிரேணு பரகாலயதீந்த்ர மிச்ராந் | தொண்டரடிப்பொடியாழ்வார் திருமங்கையாழ்வார் ம் |
| ஸரச்ச | பொய்கையாழ்வாரையும் | | |
| மஹத் ஆஹ்வய பட்டநாத ஸ்ரீ பக்திஸார குலசேகர யோகிவாஹாந் | பேயாழ்வார் பெரியாழ்வார் திருமழிசையாழ்வார் குலசேகராழ்வார் திருப்பாணாழ்வார் இவர்களையும் | ஸ்ரீமத்பராங்குசமுநிம் | நம்மாழ்வாரையும் |
| | | நித்யம் | நாள்தோறும் |
| | | ப்ரணத: அஸ்மி | ஸேவிக்கிறேன் |

ஆழ்வார்கள் பதின்மரையும் ஆசாரியர்களில் முக்கியரான எம்பெருமானாரையும் சேர்த்து அநுஸந்திக்கும் ச்லோகமாமிது. இதில், பொய்கையார் பூதத்தார் பேயார் என்கிற முறைமைப்படியே திருநாமங்களைப் பதியாமல் பூதத்தாழ்வாரை முன்னே பதித்தும் நம்மாழ்வாரை முடிவிற் பதித்துமிருப்பது ச்லோகம் கூடினவகையிலே அமைந்த அமைப்பு என்று நினைத்திடுவர் சிலர். அங்ஙனன்று; காஸார பூத மஹதாஹ்வய பக்தி ஸாராந் ஸ்ரீமச்சடாரி குலசேகர பட்டநாதாந், பக்தாங்க்ரிரேணு முநிவாஹந கார்த்திகேயாந் ராமாநுஜஞ்ச யமிநம் ப்ரணதோஸ்மி நித்யம்" என்று அடைவுபடக் கவி சொல்லுவதில்

*அருமையொன்றுமில்லை: ஆயினும், பூதத்தாழ்வார் தொடங்கி நம்மாழ்வார் முடிவாக அமைக்கப்பட்ட இந்த ப்ரக்ரியைக்கு நல்ல நியாமகம் ஒன்றுண்டு கேண்மின்—*

*ஆழ்வார்களுள் முக்கியரான நம்மாழ்வாரை அவயவியாகவைத்து மற்றுள்ள ஆழ்வார்களை அவர்க்குத் திருமுடி திருக்கண் முதலிய அவயவங்களாக வைத்துப் பூருவாசாரியர்கள் ச்லோகங்களருளிச் செய்துள்ளார்கள் அவற்றில் பூதத்தாழ்வாரைத் திருமுடியாகவும், பொய்கை பேயாழ்வார்களைத் திருக்கண்களாகவும், பட்டர்பிரானைத் திருமுகமாகவும், திருமழிசைப்பிரானைத் திருக்கழுத்தாகவும், குலசேகரப்பெருமாளையும் திருப்பாண்பெருமாளையும் திருக்கைகளாகவும், தொண்டரடிப்பொடிகளைத் திருமார்பாகவும், கலியனைத் திருநாபியாகவும் எதிராசனைத் திருவடியாகவும் உருவகப்படுத்தியிருத்தலால் அந்த ப்ரக்ரியைக்கு ஏற்ப இந்தத் தனியன் திருவவதரித்ததென்று பெரியார் கூறுவர். அவயவபூதர்களை முந்துற வரிசையாகச் சொல்லி, அவயவியான ப்ரபந்நஜநகூடஸ்தரை முடிவில் சொல்லியிருப்பது இவ்வகையிலே நன்கு பொருந்துமென்றுணர்க. பட்டர் திருக்கோட்டியூரிலே எழுந்தருளியிருக்கும்போது நஞ்சீயருடைய பிரார்த்தனையினால் அருளிச்செய்த ச்லோகமிது.*

போதுத்தனியன்களின் உரை முற்றிற்று.

## *திருப்பல்லாண்டு, பெரியாழ்வார் திருமொழிகளின்*

# தனியன்கள்

---

(ஸ்ரீமந்நாதமுனிகள் அருளிச்செய்தது.)

குருமுகமநதீத்ய ப்ராஹ வேதாநசேஷாந்
நரபதிபரிக்ல்ப்தம் சுல்கமாதாதுகாம:,
ச்வசுரமமரவந்த்யம் ரங்கநாதஸ்ய ஸாக்ஷாத்
த்விஜகுலதிலகம் தம் விஷ்ணுசித்தம் நமாமி.

| | | | |
|---|---|---|---|
| ய: | யாவரொரு பெரியாழ்வார் | ப்ராஹ | (பகவத் கிருபையினால்) எடுத்துரைத்தாரோ, |
| நரபதி பரிக்ல்ப்தம் | வல்லபதேவனென்கிற அரசனால் ஏற்படுத்தப்பட்ட | அமர வந்த்யம் | தேவர்களினால் ஸேவிக்கத் தகுந்தவரும் |
| சுல்கம் | பந்தயப்பொருளாகிய பொற்கிழியை | ரங்கநாதஸ்ய ஸாக்ஷாத் ச்வசுரம் | ஸ்ரீரங்கநாதனுக்கு நேராக மாமனாரும் |
| ஆதாதுகாம: | க்ரஹிக்க எண்ணமுடையவராய் | த்விஜகுலதிலகம் | ப்ராமண குலத்திற்குத் திலகம் போன்றவருமான |
| குருமுகம் அநதீத்ய | ஆசார்யமுகமாக ஒரு கல்வியும் கற்காமலே | தம் விஷ்ணு சித்தம் | அப்பெரியாழ்வாரை |
| அசேஷாந் வேதாந் | (பரதத்துவ நிர்ணயத்திற்கு வேண்டிய) வேதங்களெல்லாவற்றையும் | நமாமி | வணங்குகிறேன். |

*பாண்டியபட்டர் அருளிச்செய்தவை*

மின்னார் தடமதிள்சூழ் வில்லிபுத்தூ ரென்றொருகால்
சொன்னார் கழற்கமலஞ் சூடினோம் — முன்னாள்
கிழியறுத்தா னென்றுரைத்தோங் கீழ்மையினிற் சேரும்
வழியறுத்தோம் நெஞ்சமே வந்து.

| | |
|---|---|
| மின் ஆர் | "ஒளிநிறைந்த |
| தட | பெரிய |
| மதிள் | திருமதிலாலே |
| சூழ் | சூழப்பட்ட |
| வில்லிபுத்தூர் என்று | ஸ்ரீவில்லிபுத்தூர்" என்று |
| ஒருகால் சொன்னவர் | ஒருதரம்உச்சரித்தவருடைய |
| கழல் கமலம் | திருவடித் தாமரைகளை |
| சூடினோம் | சிரமேற்கொண்டோம்; |
| முன் நாள் | "புருஷார்த்தம்வெளியாகாத முற்காலத்தில் |
| | (பரதத்துவ நிர்ணயம் பண்ணி) |
| கிழி | பொருள் முடிப்பை |
| அறுத்தான் என்று | அறுத்தருளினர்" என்று |
| உரைத்தோம் | சொல்லப்பெற்றோம்; |
| நெஞ்சமே | ஓ நெஞ்சே! |
| வந்து | நீ அநுகூலமாய் வரப்பெற்று |
| கீழ்மையினில் | அதோகதியாகிற நரகத்தில் |
| சேரும் | சேருகைக்குடலான |
| வழி | வழியை |
| அறுத்தோம் | அறப்பண்ணினோம். |

பாண்டியன் கொண்டாடப் பட்டர்பிரான் வந்தானென்று
ஈண்டிய சங்கமெடுத்தூத—வேண்டிய
வேதங்க ளோதி விரைந்து கிழியறுத்தான்
பாதங்கள் யாமுடைய பற்று.

| | |
|---|---|
| பாண்டியன் | வல்லபதேவனென்கிற பாண்டிய ராஜன் |
| கொண்டாட | ப்ரசம்ஸிக்க, |
| பட்டர்பிரான் | "ப்ராஹ்மணர்களுக்கு உபகாரகரான பெரியாழ்வார் |
| வந்தான் என்று | எழுந்தருளினார்" என்று |
| ஈண்டிய | திரளினான |
| சங்கம் | சங்குகளை |
| எடுத்து | கையில்கொண்டு |
| ஊத | (பலர்) ஊத, |
| வேண்டிய | (விஷ்ணு பாரம்யஸ்தாபநத்துக்கு) ஆவச்யகங்களான |
| வேதங்கள் | வேதவாக்கியங்களை |
| ஓதி | உபந்யஸித்து |
| விரைந்து | விளம்பியாமல் [த்வரித்து] |
| கிழி | வித்யாசுல்கமாக வைத்த பொருள் முடிப்பை |
| அறுத்தான் | அறுத்தருளின பெரியாழ்வாருடைய |
| பாதங்கள் | திருவடிகளானவை |
| யாமுடைய | நமக்கு |
| பற்று | புகலிடம். |

★ தனியன் உரை முற்றிற்று ★

ஸ்ரீ:

# பெரியாழ்வார் வைபவச்சுருக்கம்

ஸ்ரீ வில்லிபுத்தூரில் அந்தணர் குலத்திலே ஆனிமாதத்து ஸ்வாதீநக்ஷத்திரத்தில் அவதரித்த விஷ்ணுசித்தரென்னும் திருநாமமுடையராயிருந்த இவ்வாழ்வார் அவ்வூர்ப்பெருமானுக்கு நந்தவனமமைத்துத் திருமாலைகட்டிச் சாத்துபவராயிருந்தார். அக்காலத்து, தென் மதுரையரசனான வல்லபதேவன் நற்கதி காணும் வழியைச் சிந்தித்துத் தன் புரோஹிதனான செல்வநம்பியின் உபதேசத்தினால் பல வித்வான்களையும் திரட்டிப் பரதத்துவநிர்ணயம் பண்ணுவிக்க விரும்பி, மதுரையில் ஒரு பெரியஸ்தலத்தில் அபாரமான பணத்தை வித்யாசுல்கமாகக் கிழிச்சீரையில்வைத்துப் பலவிடங்களிலுமுள்ள பண்டிதர்களுக்கு அழைப்புப் பத்திரிகை யனுப்பினான். இவ்வாழ்வாரைக்கொண்டு பரதத்துவ நிர்ணயம் செய்விக்க விரும்பிய ஸ்ரீ வில்லிபுத்தூர்ப் பெருமாள் கனவிலே இவர்க்கு நியமனம் தந்தருளி, இவர் ஸர்வஜ்ஞராம்படியான விசேஷ கடாக்ஷமும் செய்தருளி மதுரை வித்வத்ஸபைக்கு இவரையனுப்ப, இவரும் சீக்கிரமாய் எழுந்தருளி ஸ்ரீமந்நாராயணனே பரமபுருஷனென்று ச்ருதி ஸ்ம்ருதி இதிஹாஸ புராணங்களைக்கொண்டு பலவாறாக உபந்யஸித்து அக்கிழியை அறுத்துக்கொண்டார். இங்ஙனம் பரதத்துவ நிர்ணயஞ் செய்தருளின இவ்வாழ்வாருக்கு அரசன் யானையின் மீது மஹோத்ஸவம் செய்விக்க, பரமபதநாதனான எம்பெருமான் இந்த மஹோத்ஸவத்தைத் தானுங் கண்டு களிக்க விரும்பிப் பெரிய பரிவாரங்களோடு கருடன்மீது எழுந்தருளி நெருங்கி நிற்க, ஆழ்வார் ஸேவித்து வியந்து யானைமணிகளைத் தாளமாகக்கொண்டு பல்வகையிலும் திருப்பல்லாண்டு பாடினார். பிறகு விசேஷ பஹுமானம் பெற்று ஸ்ரீ வில்லிபுத்தூர்க்கு

எழுந்தருளி மதுரையிற் கிடைத்த பொருள்களையெல்லாம் பகவானுக்கே ஸமர்ப்பித்துப் 'பெரியாழ்வார் திருமொழி' என்னும் திவ்ய ப்ரபந்தத்தை அருளிச்செய்து முன்போலவே நந்த வனத் திருப்பணியில் நிரதராயிருந்து வாழ்ந்து விளங்கினர். ... .... ...*

—பெரியாழ்வார் வைபவச்சுருக்கம் முற்றிற்று.

ஸ்ரீ:

# திருப்பல்லாண்டு முன்னுரை

இப்பிரபந்தத்திற்குத் திருப்பல்லாண்டென்று திருநாமம் வழங்குதற்குக் காரணம் யாதெனில்; ஒவ்வொரு பாசுரத்திலும் பல்லாண்டு பல்லாண்டு என்றுசொல்லி மங்களாசாஸநம் செய்திருப்பதனால் அதனையே நிரூபகமாக்கிப் பல்லாண்டு என்று திருநாமம் சாத்தினர். திரு என்பது வடமொழியில் ஸ்ரீசப்தம்போல் மேன்மையையுணர்த்தும்; மேன்மைதங்கிய மங்களாசாஸந ப்ரபந்தம் என்றபடி. இப்பிரபந்தம் பல்லாண்டென்று தொடங்கப்படுதலால முதற்குறிப்பு என்னு மிலக்கணத்தால் திருப்பல்லாண்டெனத் திருநாமம் பெற்றதென்னவுமாம்.

அவாப்த ஸமஸ்தகாமனென்றும் ஸர்வரக்ஷகனென்றும் ப்ரஸித்தனான ஈச்வரனைக் கண்டால் தமக்கு வேண்டிய மங்களங்களை அவனிடத்தில் பிரார்த்தித்துப் பெறவேண்டியிருக்க, தாம் அவனுக்கு மங்களமுண்டாகுமாறு ஆசாஸிப்பது தகுதியோவென்னில்; பகவத்க்ருபையினால் கிடைத்த பக்தியினால் அந்த பகவானுடைய ஸர்வரக்ஷகத்வம் முதலான குணங்களை அடியோடு மறந்து 'பகவானுக்குக் குறையொன்றுமில்லாமலிருப்பதே நமக்கு மங்களம்' என்று இவ்வாழ்வார் நினைத்து மங்களாசாஸநம் பண்ணுகிறார் எனறுணர்க.

மற்றுள்ள ஆழ்வார்களுக்கும் மங்களாசாஸநத்தில் ஊற்றமிருந்தாலும் அவர்களுக்கு அது எப்போதோ ஒருகாலுள்ளதேயன்றி இப்பெரியாழ்வார்க்குப்போலே நித்யமாயும் முக்கியமாயுமிராது. அவர்கள் எம்பெருமானை ரக்ஷகனாகப்பற்றி அவனிடத்தில் தங்களுடைய வாழ்ச்சியைப் பெறுவதற்கு விரும்புவார்கள். இவ்வாழ்வார் அப்படியல்லாமல் எம்பெருமானுடைய வாழ்வையே தமக்கு வாழ்வாக நினைத்துப் பெருமாளுக்கு என்ன தீங்குவருகிறதோவென்று பயப்பட்டுக் காப்பிடத்தேடுகிற பரமபக்தராவர். ஆனதுபற்றியே மற்றுள்ள ஆழ்வார்களைவிட மிக்க பெருமையுடையவரானது காரணமாகவே இவர்க்குப் பெரியாழ்வாரென்று ப்ரஸித்தியுண்டாயிற்று. ... ... ... ...*

ஸ்ரீ:

பெரியாழ்வார் அருளிச்செய்த

# திருப்பல்லாண்டு

1. பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு *
பலகோடி நூறாயிரம்
மல்லாண்ட திண்டோள் மணிவண்ணா * உன்
சேவடி செவ்விதிருக் காப்பு.

| | | | |
|---|---|---|---|
| மல் ஆண்ட | மல்லர்களை நிரஸித்த | பல ஆயிரம் ஆண்டு | அநேகப்ரஹ்மகல்பங்களிலும் |
| திண் தோள | திண்ணிய தோள்களை உடையவனே | பல கோடி நூறு ஆயிரம் | இப்படி உண்டான பல [illegible] |
| மணி வண்ணா | நீலமணிபோன்ற திருநிறத்தை உடையவனே! | உன் சேவடி செவ்வி | உன்னுடைய சிவந்த திருவடிகளின் அழகுக்கு |
| பல் ஆண்டு பல ஆண்டு | பலபல வருஷங்களிலும் | திருக்காப்பு | [illegible] |

* * *—பாண்டியராஜனுடைய பண்டிதஸபையிலேவந்த பரதத்வநிர்ணயம் ப பெரியாழ்வார்க்கு அவ்வரசன யானையின்மேலே மஹோத்ஸவம் செய்வித்தபோது அந்த உத்ஸவத்தைக்கண்டு ஆநந்திப்பதற்காக ஸ்ரீவைகுண்டநாதன் ஸபரிவாரனாய் எழுந்தருளி எதிரே ஸேவைஸாதிக்க, ஆழ்வார் ஸேவித்து 'இந்த அருமருந்தன்ன எம்பெருமானுக்கு எழும்பூண்டெல்லாம் அஸுரராக்ஷஸமயமாயிருக்கிற இந்நிலத்திலே யாராலே என்ன தீங்கு விளைகிறதோவென்று அதிசங்கைப்பட்டு 'ஒரு அமங்களமும் நேரிடாதபடி மங்களமே யாயிருக்கவேணும்' என்று பல்லாண்டு பாடுகிறார். அதாவது—ஜய விஜயீபவ என்கிறார்.

ஆழ்வார் இப்படி அதிசங்கையாலே மங்களாசாஸநம் பண்ணுகிறாரென்று தெரிந்து கொண்ட எம்பெருமான் 'ஐயோ! ஏன் இவர் இப்படி பயப்படுகிறார், எப்படிப்பட்ட எதிரிகளையும் ஒரு விரல் நுனியாலே வென்றொழிக்கவல்ல தேஹவலிவு நமக்கு உண்டென்பது இவர்க்குத் தெரியவில்லை போலும்; அந்தவலிவைக் காட்டினோமாகில் இவருடைய அச்சம் அடங்கிவிடும்' என்று நினைத்து, முன்னே க்ருஷ்ணாவதாரகாலத்தில் தன்னைக் கொல்லும்படி கம்ஸனாலே ஏவப்பட்டுவந்த சாணூரன் முஷ்டிகன் முதலிய மல்லர்களை நுறுக்கித் தள்ளின தன்னுடைய புஜபலத்தைக் காட்டினான்; ஆழ்வாருடைய அச்சம் தணிவதற்காகக் காட்டின அந்த வலிவு ஆழ்வாருடைய பயம் அதிகரிப்பதற்கே காரணமாயிற்று. புத்திரன் சூரனாயிருந்தால் அவனுடைய தாயானவள் 'இவன் ஒருவரையும் லக்ஷியம்பண்ணாமல் யுத்தம செய்யப் போய்விடுவனே! யாராலே என்ன கெடுதி நேர்ந்துவிடுமோ' என்று பயப்படுவதுபோல் இவரும் அந்த மல்லாண்ட திண்டோள் வலிமைக்குப் பயப்பட்டு மீண்டும் மங்களாசாஸநம் பண்ணுகிறார்.

பல்லாண்டு என்று ஒரு தடவை சொன்னால் போராதா? "பல்லாயிரத்தாண்டு" என்றும் "பல்கோடி நூறாயிரமும் பல்லாண்டு" என்றும் அதிகமாகச் சொல்லுவானேன்? என்னில்; தாஹித்தவன் தாஹம் தீருகிறவரையில் 'தண்ணீர், தண்ணீர்' என்றே சொல்லிக் கொண்டிருப்பதுபோல் இவரும் தம்முடைய அச்சம் அடங்குமளவும் மங்களாசாஸநம் ஓயமாட்டார்.

மல்லாண்ட என்றவிடத்தில் மல் என்ற சொல் மல்லர்களைச் சொல்லும். ஆயுதத் துணையின்றி தேஹவலிவையேகொண்டு சண்டை செய்பவர் மல்லர். இனி, மல்லாண்ட என்பதற்கு 'பலசாலியான' என்றும் பொருளுண்டு. மல்—வலிவு. "உன் சேவடி செவ்வி திருக்காப்பு" என்று திருவடிக்குமாத்திரம் மங்களாசாஸநமிருந்தாலும் இது திருமேனி முழுமைக்கும் மங்களாசாஸநம் பண்ணினதாகும். சேஷபூதனுக்குத் திருவடியே உத்தேச்யம் என்பதைக் காட்டவே சேவடி செவ்வி திருக்காப்பு என்றார். செவ்வடி என்று ஆம் சேவடி என்றாலும் ஒன்றே; இருவகைப் பாடமுமுண்டு. "பலகோடி நூறாயிரம்" "பல்கோடி நூறாயிரமும்" என்பன பாடபேதங்கள்.

இந்தப் பாசுரம் பல்லவிபோலே ஒவ்வொரு பாசுரத்தோடும் சேர்த்துச் சொல்லத் தகுந்தது. இதையும் மேல் பாசுரத்தையும் சேர்த்து ஒரு பாட்டாக அநுஸந்திப்பது ஸம்ப்ரதாயம். ... ... ... ... (௧

2. அடியோமோடும்நின்னோடும் பிரிவின்றியாயிரம்பல்லாண்டு *
வடிவாய்நின்வலமார்பினில் வாழ்கின்றமங்கையும்பல்லாண்டு *
வடிவார்சோதிவலத்துறையும் சுடராழியும்பல்லாண்டு *
படைபோர்புக்குமுழங்கும் அப்பாஞ்சசன்னியமும்பல்லாண்டே. (௨

அடியோமோடும் { தாஸபூதர்களாய் அடியேன் தொடக்கமாயுள்ள சேதநர்களோடும்
நின்னோடும் — ஸ்வாமியான தேவரீரோடும்
பிரிவின்றி — பிரிவில்லாமல்
ஆயிரம் பல்லாண்டு } இந்த ஸம்பந்தம் நித்யமாகச் செல்லவேணும்.
வடிவாய் — (உனக்கு) நிரூபக பூதையாய்
நின் — உன்னுடைய
வலமார்பினில் — திருமார்பின் வலது பக்கத்தில்
வாழ்கின்ற — பொருந்தியிரா நின்றுள்ள
மங்கையும் { நித்ய கல்யாண சாலியான பெரிய பிராட்டியார் தொடக்கமான நாய்ச்சிமார்களும்
பல்லாண்டு;—

| | | | |
|---|---|---|---|
| வடிவு ஆர் | உன் திருமேனியை வ்யாபித்திருக்கிற | போர் | யுத்தங்களில் |
| | | புக்கு | புகுந்த |
| சோதி | ஜ்யோதிஸ்ஸையுடையனாய் | முழங்கும் | கோஷிக்கின்ற |
| வலத்து | வலத்திருக்கையிலே | அ | அளவற்ற பெருமையையுடைய |
| உறையும் | நித்யவாஸம்பண்ணுமவனாய் | | |
| சுடர் | பகைவரை எரிக்குமவனான | பாஞ்சசன்னியமும் | ஸ்ரீ பாஞ்சஜந்யாழ்வானும் |
| ஆழியும் | திருவாழியாழ்வானும் | | |
| | பல்லாண்டு;— | | பல்லாண்டு—,[ஏ—ஈற்றசை] |
| படை | சேனைகளையுடைய | | |

* * *—சேஷபூதர்களான அடியோங்களும் ஸர்வசேஷியான தேவரீரும் ஒருவரையொருவர்விட்டுப்பிரியாமல் நெடுநாளளவும் மங்கலமாக வாழவேணும்; பெரிய பிராட்டியாரும் தேவரீருமானசேர்த்தி எப்போதும் மாறாமல் நித்தியவாழ்ச்சியாகச் செல்லவேணும்; திருவாழியாழ்வானும் திருச்சங்காழ்வானும் குறையொன்றுமின்றி வாழவேணும்—என்று இப்பாட்டால் உபயவிபூதிகளோடுங்கூடின நிலைமைக்கு மங்களாசாஸநம் பண்ணுகிறார். "அடியோமோடும்" என்று இந்த லீலாவிபூதியிலிருக்கிற தங்களையும், மற்ற மூன்றடிகளாலே பரமபதமாகிய நித்யவிபூதியிலுள்ள பெரியபிராட்டியார் முதலானவர்களையும இப்பாட்டில் கூறியிருப்பதனால் உபயவிபூதியுக்தனான எம்பெருமானுக்கு இப்பாசுரத்தால் பல்லாண்டு பாடினாராயிற்று.

எம்பெருமானுடைய மங்களத்தை மாத்திரமே அபேக்ஷிப்பவரான இவ்வாழ்வார் அடியோமோடும் என்று தம்முடைய மங்களத்தையும் ஏன் விரும்புகிறாரென்னில் ; மங்களாசாஸநம் பண்ணுவதற்குத் தம்மைப்போன்ற அடியவர்கள் இல்லாவிடில் எம்பெருமானுக்கு என்ன தீங்கு விளைந்திடுமோ வென்கிற பயசங்கையினால் மங்களாசாஸநத்தில் ஊக்கமுடைய தம்முடைய மங்களத்தையும் விரும்புகிறார். ஆகவே, எம்பெருமானுடைய மங்களாசாஸநத்தின் அபிவிருத்திக்காகவே தம்முடைய ஸ்தைர்யத்தை வேண்டுகின்றாரென்க.

[வடிவாய்நின்வலமார்பினில் வாழ்கின்ற மங்கை.] பெரியபிராட்டியாராலே எம்பெருமானுக்கு மேன்மையுண்டாகின்றதென்பது 'வடிவாய்' என்ற விசேஷணத்தினால் விளங்கும். புஷ்பத்திற்குப் பரிமளத்தினாலும், ரத்நத்திற்கு ஒளியினாலும் மேன்மையுண்டாகக் காண்கிறோமிறே. மங்கை—எப்போதும் மங்கைப்பருவமுடையவள் ; அந்தப் பருவத்துக்கு வயதின் எல்லை—பன்னிரண்டு முதல் பதின்மூன்றளவும்.

ஆழ்வார்க்குக் கண்ணெதிரிலே விளங்குகிற சங்கை "அப்பாஞ்சசன்னியமும்" என்று (பரோக்ஷமான வஸ்துவைக் கூறுமாபோலே) கூறலாமோவென்னில்; தம்முடைய கண்ணெச்சில் படாதபடி முகத்தைத் திருப்பி வைத்துக்கொண்டு சொல்லுகிறார் என்று கொள்க. அல்லது, அன்று பாரதப்போரிலே அப்படிப்பட்ட அரிய பெரிய காரியங்கள் செய்த பாஞ்சஜந்யம் என்றும், அழகிய பாஞ்சஜந்யம் என்றும் பொருள் கொள்ளலாம் ... ... (உ)

3. வாழாட்பட்டுநின்றீருள்ளீரேல் வந்துமண்ணும்மணமுங்கொண்மின் *
கூழாட்பட்டுநின்றீர்களை யெங்கள்குழுவினில்புகுதலொட்டோம் *
ஏழாட்காலும்பழிப்பிலோம்நாங்கள் இராக்கதர்வாழ் * இலங்கை
பாழாளாகப்படைபொருதானுக்குப் பல்லாண்டுகூறுதுமே. (௩)

| | | | |
|---|---|---|---|
| வாழ் ஆள் பட்டு | உஜ்ஜீவிப்பதற்கு உறுப்பான (எம்பெருமானுடைய) அடிமைத்தொழிலில ஈடுபட்டு | வந்து | (நீங்கள் எங்களோடே) வந்து சேர்ந்து |
| நின்றீர் | நிலைத்து நின்றவர்கள் | மண் கொள்மின் | (எம்பெருமானுடைய உத்ஸவார்த்தமான திருமுளைத் திருநாளுக்குப்) புழுதிமண் சுமவுங்கள்; |
| உள்ளீர் ஏல் | இருப்பீர்களாகில் | | |

| | |
|---|---|
| மணமும் கொணமின் | (அந்த உத்ஸவத்துக்கு) அபிமானிகளாகவும் இருக்கள்; |
| கூழ் ஆள்பட்டு நின்றீர்களை | சோற்றுக்காக (ப்பிறரிடத்தில்) அடிமைப்பட்டிருப்பவர்களை |
| எங்கள் குழுவினில் புகுதல் ஒட்டோம் | எங்களுடையகோஷ்டியிலே அங்கீகரிக்கமாட்டோம்; (எங்களுக்குள்ள சிறப்பு என்னவென்றீர்களோ.) |
| நாங்கள் | நாங்களோ வென்றால் |
| ஏழ் ஆள் காலும் | ஏழு தலைமுறையாக |

| | |
|---|---|
| பழிப்பு இலோம் | ஒருவகைக் குற்றமும் இல்லாதவர்கள்; |
| | (எங்களுடைய தொழிலோவென்னில்) |
| இராக்கதர் வாழ் இலங்கை | ராக்ஷஸர் வஸிக்கிற லங்கையிலிருந்த |
| ஆள் | ஆண்புலிகள் யாவரும் |
| பாழ் ஆக | வேரோடே அழிந்துபோகும்படி |
| படை | (வாநர) சேனையைக் கொண்டு |
| பொருதானுக்கு | போர்செய்த பெருமாளுக்கு |
| பல்லாண்டு கூறுதும் | பல்லாண்டு பாடுகிறவர்களாயிருக்கின்றோம். |

* * *—இவ்வாழ்வார் தனியாயிருந்து மங்களாசாஸநம் பண்ணுவதில் த்ருப்திபெருமலும், 'போக்யமான வஸ்துவைத் தனியே அநுபவிப்பது தகாது' என்கிற நியாயத்தைக் கொண்டு இன்னும் பலபேர்களையும் மங்களாசாஸநத்திற்குத் துணைகூட்டிக்கொள்ளவேணுமென்று நினைத்தார்; உலகத்தில் எத்தனைவகையான அதிகாரிகள் இருக்கிறார்களென்று ஆராய்ந்துபார்த்தார்; செல்வத்தை விரும்புமவர்கள், ஆத்மாநுபவமாகிற கைவல்யத்தை விரும்புமவர்கள், எம்பெருமானுடைய அநுபவத்தை அபேக்ஷிப்பவர்கள் என்றிப்படிப்பட்ட அதிகாரிகள் இருப்பதைக்கண்டார்; இம்மூவகை யதிகாரிகளில் செல்வத்தை விரும்புமவர்களும் கைவல்யத்தை விரும்புமவர்களும் ப்ரயோஜநாந்தரபரர்களாயிருந்தாலும் அந்த அற்ப பலனுக்காகவாவது எம்பெருமானைப் பணிந்து ப்ரார்த்திக்கின்றார்களாகையால் அவர்களையும் திருத்திப் பணிகொள்ளலாமென்று ஆழ்வார் நிச்சயித்து மேற்சொன்ன மூவகையதிகாரிகளையும் மங்களாசாஸநத்துக்கு அழைக்கவிரும்பி, முதல்முதலாக, எம்பெருமானுடைய அநுபவத்தையே விரும்புமவர்களான ஜ்ஞாநிகளை அழைக்கிறார்.

பகவான் தவிர மற்ற தேவதைகளுக்குச் செய்கிற கைங்கரியமெல்லாம் செய்வதற்குக் கஷ்டமாயும், கஷ்டப்பட்டுச்செய்தாலும் அந்த தேவதைக்கு த்ருப்திகரமல்லாமலும், ஒருவாறு த்ருப்திகரமானாலும் அற்பபலனைக் கொடுப்பனவாயுமிருப்பதால் அவை துயரத்தையே விளைக்கும்; பகவத்விஷயத்தில் செய்யும் கைங்கரியமோ, எளிதாகச் செய்யக்கூடியதாயும், விரைவில் எம்பெருமானை உவப்பிக்கவல்லதாயும், சாச்வதமான பலனையளிப்பதாயுமிருப்பதால் அப்படிப்பட்ட பகவத்கைங்கரியத்தில் ஊன்றியிருப்பவர்களை "வாழாட்பட்டு நின்றீர்" என்றழைக்கிறார். அப்படிப்பட்ட அதிகாரிகள் மிகவும் அருமைப்பட்டவர்கள் என்பதைக் காட்டுகிறார் "உளரீரேல்" என்பதனால்.

[மண்ணும்மணமும் கொண்மின்.] மண் கொள்ளுகையாவது—மஹோத்ஸவத்தில் அங்குரார்ப்பணத்திற்குப் புழுதி மண்சுமப்பது. மணங்கொள்ளுகையாவது—அந்த மஹோத்ஸவத்தினிடத்தில் அபிமானங்கொண்டிருப்பது. முற்காலத்தில் அடிமை யோலை யெழுதும்போது "மண்ணுக்கும் மணத்துக்கும் உரியேனாகக் கடவேன்" என்றெழுதுவது வழக்கமாம்.

முதலடியில் "உள்ளீரேல்" என்ற ஆழ்வார் உரக்கக் கூவினபடியைக் கேட்ட பலபேர்கள் அவரெழுத்த வாசியறியாமல் முடிவந்தார்கள்; அவர்களில் வயிற்றுப் பிழைப்புக்காக நீசசேவைபண்ணி ஜீவிப்பவர்களும் சேர்ந்திருந்தபடியால் அவர்களை விலக்கித்தள்ளுகிறார் இரண்டாமடியால். பகவத்ஸம்பந்தத்தால் தமக்கு உண்டாயிருக்கிற பெருமையும், தம்முடைய காலக்ஷேப க்ரமத்தையும் அருளிச்செய்கிறார் பின்னடிகளில்.

[ஏழாட்காலும்.] முன்னே மூன்று, பின்னே மூன்று, நடுவில் தான்ஒன்று; ஆக ஏழு தலைமுறையிலுமென்றபடி. அன்றி, முன்னேழு, பின்னேழு, நடுவேழு என்றுகொண்டு [அதாவது—முன்னே பத்து, பின்னே பத்து, நடுவில்தான் ஒன்று என்றுகொண்டு] இருபத்தொரு தலைமுறையைச் சொன்னதாகவுமாம். நாங்கள் அநாதிகாலமாக எம்பெருமானையே உபாயமாக

வும் உபேயமாகவுங்கொண்டு, அப்பெருமான் என்றைக்கோ செய்தருளின ராவணஸம்ஹாரத்திற்கு இன்றிருந்து மங்களாசாஸநம் பண்ணுகிறோமாகையாலே பரமவிலக்ஷணர்களாயுள்ள எங்களுடைய கோஷ்டியில் நீங்கள் ப்ரவேசிக்கலாகாதென்று –வயிறு வளர்க்கும் வம்பர்களை விலக்கித் தள்ளினாராயிற்று. ... ... (௩)

4. ஏடுநிலத்திலிடுவதன்முன்னம்வந்து எங்கள்குழாம்புகுந்து *
கூடுமனமுடையீர்கள் வரம்பொழிவந்தொல்லைக்கூடுமினோ *
நாடுநகரமும்நன்கறிய நமோநாராயணாயவென்று *
பாடுமனமுடைப்பத்தருள்ளீர் வந்துபல்லாண்டுகூறுமினே. (௪)

(கைவல்யாநுபவத்தை விரும்பி உபாஸனை செய்பவர்களே !' நீங்கள்)

வந்து — (கைவல்யத்தில் ஆசையை விட்டு) வந்து

எங்கள் குழாம் புகுந்து — (அநந்ய ப்ரயோஜநரான) எங்களுடைய கோஷ்டியிலே அந்வயித்து

கூடும் மனம் உடையீர்கள் — ஒன்றாய்ச்சேர்ந்துவிடவேணுமென்கிற விருப்பமுடையவர்களாயிருந்தால்

ஏடு நிலத்தில இடுவதன் முன்னம் — பொல்லாத ஸ்தானமாகிய கைவல்யத்திலே உங்களைக் கொண்டு தள்ளுவதற்கு முன்னே

வரம்பு ஒழி வந்து — (ஆத்மாநுபவம மாத்திரம் செய்வோமென்று நீங்கள் வைத்துக்கொண்டிருக்கிற) வரம்பைஒழித்துக்கொண்டு

(இனி பூர்ணாநுபவம் பண்ணுவோமென்று) வந்து

ஒல்லை கூடுமின் — சீக்கிரமாக எங்களோடுசேர்ந்து விடுங்கள்;

(அப்படிச் சேர்ந்தபின்பு)

நாடும் நகரமும் நன்கு அறிய — நாட்டிலுள்ளவர்களும் நகரத்திலுள்ளவர்களும் (உங்களுடைய) நன்மையை அறிந்துகொள்ளும்படி

நமோநாராயணாய என்று — திருமந்திரத்தைச் சொல்லி

பாடும் மனம் உடை பத்தர் — பாடவேணுமென்கிற எண்ணத்தையுடைய பக்தர்களுக்குள்

உள்ளீர் வந்து பல்லாண்டு கூறுமின் — சேர்ந்தவர்களாயிருந்து (எம்பெருமானுக்கு) மங்களாசாஸநம் பண்ணுங்கள்.

* * *—இப்பாட்டில், ஆத்மாநுபவத்தையே விரும்பியிருக்கும் கைவல்யார்த்திகளை மங்களாசாஸநத்துக்கு அழைக்கிறார். கீழ்ப்பாட்டில் கூறப்பட்டவர்களை விலக்கினாப்போலே இவர்களையும் விலக்கவேண்டியிருந்தாலும், இவர்கள் கைவல்யமாகிற ஸ்வப்ரயோஜநம் பெறுவதற்காகவாகிலும் எம்பெருமானைச் சரணமடைந்தார்களேயென்கிற மகிழ்ச்சியினால் அவர்களையும் க்ரமமாக உபதேசங்களாலே திருத்த நினைத்துக் கூப்பிடுகிறார். இந்த கைவல்யார்த்திகளைப் போலே ஐச்வர்யார்த்திகளும் ப்ரயோஜநாந்தரபரர்களாயிருக்க அந்த ஐச்வர்யார்த்திகளை முதலில் அழைப்பதைவிட்டுக் கைவல்யார்த்திகளைக் கூப்பிட்டது ஏனென்னில்; கேண்மின் ;—ஐச்வர்யார்த்திகளை ஸாவகாசமாகவும் திருத்திக் கொள்ளலாம்; கைவல்யார்த்திகளை அப்படி ஸாவகாசமாகத் திருத்திக்கொள்ள முடியாது. ஏனென்றால், கைவல்யார்த்திகளின் உபாயாநுஷ்டாநம் முடிந்துவிட்டால், ஆத்மாநுபவத்துக்காக ஏற்பட்ட மோக்ஷலோகத்தில் போய்ச்சேர்ந்துவிடுவர்கள் ; மறுபடியும் அங்கிருந்து ஒருநாளும் திரும்பிவருதலில்லாமையாலே இப்போதே அவர்களைத் திருத்திக்கொள்ளாமல் சிறிது விளம்பித்தாலும் அந்த அதிகாரிகள் பாழாய்ப்போவர்களே ! என்கிற அநுதாபத்தினால் ஆலஸ்யம் ஸஹியாமல் ஐச்வர்யார்த்திகளுக்குமுன்னே கைவல்யார்த்திகளை யழைக்கிறார்.

ஏடுநிலம் என்று கைவல்ய ஸ்தாநத்தை எங்ஙனே சொல்லுமென்னில்; ப்ரகரணபலத்தினால் சொல்லும்; பொல்லாத ஸ்தானமென்று பதப்பொருள். அன்றியே, ஏடு—ஸூக்ஷ்மசரீரமானது, நிலத்தில்—தனக்குக் காரணமான மூலப்ரக்ருதியிலே, இடுவதன்முன்னம்—லயிப்பதற்கு முன்னே, என்றும் பொருள் கொள்ளலாம். ஸ்தூலசரீரமென்றும் ஸூக்ஷ்மசரீரமென்றும் சரீரம் இருவகைப்படும்; பஞ்சபூதங்களின் [ஸூக்ஷ்ம அவஸ்தைகளாகிய] தந்மாத்ரைகள் ஐந்தும் கர்மேந்திரியங்கள் ஐந்தும் ஞானேந்திரியங்கள் ஐந்தும் மநஸ்ஸு ஒன்றும் ஆகிய

பதினாறு தத்துவங்களுடன் கூடிய சரீரம் ஸூக்ஷ்ம சரீரமெனப்படும்; தந்மாத்ரைகளின் ஸ்தூலங்களான பூதங்களுடன் சேர்ந்து அவற்றோடு பஞ்சவிஷயங்களும், ப்ரக்ருதி, மஹாந், அஹங்காரம்—ஆகிய இருபத்தினான்கு தத்துவங்களுடன் கூடிய சரீரம் ஸ்தூலசரீரமெனப் படும். ஆத்மா தனது ஸூக்ஷ்மசரீரம் விரஜாநதீஸ்நாநத்தால் நீங்கியபின்புதான் பரமபதத்தையோ கைவல்யத்தையோ அடையும்: இவ்விரண்டில் எதையடைந்தபின்பும் திரும்பி வருதல் இல்லை. [இவ்விருவகையான சரீரங்களுள் ஸூக்ஷ்மசரீரமானது ஸ்தூலசரீரத்திற்காட்டிலும் ப்ரதானமாய் அதனுடைய ஸாரமுமாயிருப்பதால், பாலின் ஏடு போலுமென்ற காரணம் பற்றி 'ஏடு' என்பது ஸூக்ஷ்மசரீரத்தைக்காட்டும்.]

"வரம்பொழிய" என்பது வரம்பொழி என்று கடைக்குறையாயிருக்கிறது. வரம் பொழியவந்து என்றபடி. இவ்விடத்தில், வரம்பாவது—அவரவர்கள் ஏற்படுத்திக்கொண்ட ஒரு எல்லை; 'ஆத்மாநுபவத்தோடு நாம் நின்றுவிடவேண்டியது; பகவானை யநுபவிக்கப்போகக் கூடாது' என்று நீங்கள் வைத்துக்கொண்ட வரம்பை ஒழித்துவிட்டு உடனே வந்துசேருங்கள் என்றழைக்கிறார்.

கைவல்ய நிஷ்டர்கள் "ஓமித்யேகாக்ஷரம் ப்ரஹ்ம வ்யாஹரந் மாமநுஸ்மரந்" என்கிற சாஸ்திரப்படி தங்கள் கோரிக்கை நிறைவேறுவதற்காகப் ப்ரணவத்தைமாத்திரம் உச்சரிப்பார்கள்; இனி அப்படியல்லாமல் திருவஷ்டாக்ஷரத்தையும பூர்த்தியாகக் கோஷித்துக் கொண்டு வரவேணுமென்று பின்னடிகளால் அழைக்கிறார். பத்தர்—பக்தர். ... (௪)

5. அண்டக்குலத்துக்கதிபதியாகி அசுரரிராக்கதரை *
இண்டைக்குலத்தையெடுத்துக்களைந்த இருடீகேசன்றனக்கு *
தொண்டக்குலத்திலுள்ளீர்வந்தடிதொழுது ஆயிரநாமஞ்சொல்லி *
பண்டைக்குலத்தைத்தவிர்ந்து பல்லாண்டுபல்லாயிரத்தாண்டென்மினே. (௫)

| | | | |
|---|---|---|---|
| அண்டம் குலத்துக்கு அதிபதி ஆகி | அண்ட ஸமூஹங்களுக்கெல்லாம் நியாமகனாய் | பண்டு குலத்தை தவிர்ந்து | (ப்ரயோஜநாந்தரத்தை விரும்பிக்கிடந்தமையாகிற) பழைய தன்மையை நீக்கிக்கொண்டு |
| அசுரர் இராக்கதரை | அஸுர ராக்ஷஸர்களுடைய | வந்து | எங்களோடு சேர்ந்து |
| இண்டை குலத்தை | நெருக்கமான கூட்டத்தை | அடிதொழுது | பகவானுடைய திருவடிகளை ஸேவித்து |
| எடுத்து களைந்த | நிர்மூலமாக்கின | ஆயிரம் நாமம் சொல்லி | எல்லாத் திருநாமங்களையும் அநுஸந்தித்து |
| இருடீகேசன் தனக்கு | ஹ்ருஷீகேசனான பகவானுக்கு | பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு என்மின் | எப்போதும் மங்களாசாஸனம் பண்ணிக் கொண்டிருங்கள். |
| தொண்டர் குலத்தில் உள்ளீர் | அடியவராயிருப்பவர்களுடைய கோஷ்டியில் சேர்ந்தவர்களே! [ஐச்வர்யார்த்திகளே] (நீங்கள்) | | |

* * *—இப்பாட்டில் ஐச்வர்யார்த்திகளை அழைக்கிறார். அவர்கள் இருவகைப்படுவர்; நெடுநாளாக இருந்து கைதப்பிப்போன செல்வத்தை மறுபடியும் அடைய விரும்புகிறவர்கள் ஒரு வகுப்பு; நெடுநாள் தரித்ராகவேயிருந்து புதிதாகச் செல்வமடைய விரும்புகிறவர்கள் மற்றொரு வகுப்பு. (முதல் வகுப்பினர்—ப்ரஷ்டைச்வர்யகாமர்களென்றும இரண்டாம் வகுப்பினர் அபூர்வைச்வர்யகாமர்களென்றும் சொல்லப்படுவர்.) இவ்விரு வகுப்பினரையும் இப்பாட்டில் அழைக்கிறார். இவ்வர்த்தம் இப்பாட்டில் எங்ஙனே தெரிகின்றதென்றால்; கேண்மின்;—"அண்டக்குலத்துக்கதிபதியான இருடீகேசனுக்குத் தொண்டக்குலத்திலுள்ளீர்!" என்றும, "அசுரரிராக்கதரை இண்டைக்குலத்தை யெடுத்துக்களைந்த இருடீகேசனுக்குத் தொண்டக்குலத்திலுள்ளீர்" என்றும் வினையை இரண்டாகப் பகுத்துக்கொள்க. அண்டங்களுக்கு அதிபதியாயிருக்கை ஐச்வரியத்துக்கு முடிவெல்லையாயிருப்பதால், புதிதான ஐச்வரியத்தைப்பெற விரும்புகின்ற அதிகாரி அப்படிப்பட்ட அண்டாதிபதித்வத்தைப் பெறவிரும்பி அந்த விருப்பம்

வெளிப்படும்படி "அண்டாதிபதயே நம:, அண்டாதிபதயே நம:" என்று எப்போதும் உருப் போடுவர்கள்; அந்த அதிகாரிகளையழைக்கிறாரென்பது முதல் விளியால் விளங்கும். ஏற்கெனவேயிருந்த செல்வத்தை அஸுரராக்ஷஸாதிகள் போன்ற சத்துருக்கள் அபஹரித்துக் கொண்டதனால் அச்செல்வத்தை மறுபடியும் ஸம்பாதித்துக்கொள்ள விரும்புமவர்கள் அந்த விருப்பம் வெளிப்படும்படி "அஸுரசத்ரவே நம:, அஸுரசத்ரவே நம:". என்று உருப் போடுவர்கள்; அந்த அதிகாரிகளை அழைக்கிறாரென்பது இரண்டாம் விளியால் விளங்கும்.

ஆகவிப்படி இருவகை அதிகாரிகளையும் அழைத்து 'அந்தோ! நீங்கள் ஸ்வயம் ப்ரயோஜநமாக ஸஹஸ்ரநாமங்களையும் வாயாரச் சொல்லி ஆநந்திக்கலாமாயிருக்க, அதை விட்டு, 'அண்டாதிபதி:, அஸுரசத்ரு:' என்ற இரண்டு நாமங்களை மாத்திரம் அற்ப பலனுக்காக உருப்போட்டுக்கொண்டிருக்கிறீர்களே; இது தகாது; இனி ஆயிரநாமங்களையும் அநந்யப்ரயோஜநமாக அநுஸந்தித்து எங்களுடைய கோஷ்டியிலே சேர்ந்து மங்களாசாஸநம் பண்ண வாருங்கள்—என்றழைக்கின்றாரென்க.

அண்டமாவது—உலகவுருண்டை; அது அளவற்றதாகையாலே அண்டக்குலமென்கிறது. அதுக்கு அதிபதியென்று எம்பெருமானைச் சொல்வது கருத்துடன் கூடியதாகும்; உன்னைப்போலே நாங்களும் அண்டாதிபதியாக வேணுமென்று தெரிவித்துக்கொண்டபடி.

இண்டைக்குலம்—நெருக்கமான கூட்டம் என்றபடி. 'இண்டக்குலம்' என்று பாடமாகில், "இண்டர்—குலம்" என்று பிரியும்; அஸுரராக்ஷஸர்களாகிற சண்டாளருடைய கூட்டத்தை என்றபடி. இருடீகேசன்—ஹ்ருஷீகேசன்; இந்திரியங்களை அடக்கியாள்பவன் என்கை. தொண்டர்+குலம்; தொண்டக்குலம். ... .... (ரு)

6\. எந்தைதந்தைதந்தைதந்தைதம்மூத்தப்பன் ஏழ்படிகால்தொடங்கி *
வந்துவழிவழியாட்செய்கின்றோம் * திருவோணத்திருவிழவில்
அந்தியம்போதிலரியுருவாகி அரியையழித்தவனை *
பந்தனைதீரப்பல்லாண்டு பல்லாயிரத்தாண்டென்றுபாடுதுமே. (சா)

| | | | |
|---|---|---|---|
| (அநந்யப்ரயோஜநரான நாங்கள்) | | அந்தி அம் போதில் | அழகிய ஸாயம் ஸந்தியா காலத்தில் |
| எந்தை தந்தை தந்தை தந்தை தம் மூத்தப்பன் ஏழ்படி கால் தொடங்கி | என்பிதாவும் அவருடையபிதாவும் அவருடைய பிதாவும் அவருடைய பிதாவும் அவருடையபாட்டனுமாகிய ஏழு தலை முறையாக | அரி உரு ஆகி | நரஸிம்ஹ மூர்த்தியாய்த் தோன்றி |
| | | அரியை | ஆச்ரிதனான ப்ரஹ்லாதனுக்குப்பகைவனான இரணியனை |
| வந்து | (உரிய காலங்களில்) வந்து | அழித்தவனை | கொன்றொழித்த பெருமானுக்கு |
| வழி வழி | முறைதப்பாமல் | பந்தனை தீர | (அன்றைய) அனுக்கம் தீரும்படி |
| ஆள் செய்கின்றோம்; | கைங்கர்யம் பண்ணுகிறோம்; | | |
| திருஓணம் திருவிழவில் | ச்ரவண நக்ஷத்திரமென்கிற திரு நாளிலே | பல்லாண்டுபல்லாயிரத்தாண்டு என்று பாடுதும் | மங்களாசாஸநம்செய்வோம். |

***—"வாழாட்பட்டு" என்கிற பாசுரத்தில் அநந்யப்ரயோஜநர்களான முமுக்ஷுக்களை யழைத்தாரன்றோ; அழைக்கும்போது "ஏழாட்காலும் பழிப்பிலோம் நாங்கள்" என்று தம்முடைய பெருமையைச் சொல்லிக்கொண்டாரே; அப்படி அழைக்கப்பட்ட அநந்யப்ரயோஜநர்கள் 'நாங்களும் உம்மைப்போலவே ஏழுதலைமுறையாக அடிமை செய்கிறவர்கள்' என்று தங்களுடைய பெருமையையும், எம்பெருமானுக்கு மங்களாசாஸநம் பண்ணுகிறவர்களென்கிற தங்களுடைய தினசரியையையும் சொல்லிக்கொண்டு வந்து சேர்ந்ததாக இப்பாசுரம் அமைக்கப்படுகிறது.

'என் தந்தை' என்பது எந்தையென மருவிற்று. ஏழ்படிகால்—'படி' யென்பதற்கு உடம்பு என்று பொருள்; அச்சொல் தலைமுறையைக் காட்டுகிறது. எங்களுடைய ஸந்ததியில் ஒருவர்தப்பாமல் எல்லாரும் ஆட்செய்பவர்கள் என்பதற்காக வழிவழி யென்கிறார்.

[திருவோணத்திருவிழவில் இத்யாதி] எம்பெருமான் எந்த நக்ஷத்திரத்தில் அவதரித்தாலும் அவை யெல்லாம் "ச்ரோணா நக்ஷத்ரம் விஷ்ணுர் தேவதா" என்று வேதத்தில்

சொன்னபடி. விஷ்ணு நக்ஷத்ரமாகிய திருவோண நக்ஷத்திரத்தின் அம்சமாயிருக்கைக்கலை டாகையாலும், விசேஷித்துத் திருநக்ஷத்திரம் சொல்லாத அவதாரங்களுக்கெல்லாம் இதையே நக்ஷத்திரமாகக் கொள்வது உசிதமாகையாலும் "திருவோணத் திருவிழவில் அரியுருவாகி" என்றார். ச்ரோணு என்னும் வடசொல் ஓணமெனத்திரிந்தது. அரியுரு=ஸிம்ஹமென்னும் பொருளதான ஹரியென்னும் வடசொல் அரியென்று விகாரப்பட்டிருக்கின்றது. "நரஹரியாகி" என்னுமல் 'அரியுருவாகி' என்றது—ப்ரதானமான சிரஸ்ஸு ஸிம்ஹமாயிருப்பதனாலாம். தூணிலே நரசிங்கமாகத்தோன்றி இரணியனைக்கொன்று ப்ரஹ்லாதனைக் காத்தருளின இதிஹாஸம் ப்ரஸித்தம்.

பந்தநா என்னும் வடசொல் பந்தனையெனத் திரிந்தது; அனுக்கம் என்று பொருள்(௬)

7. தீயிற்பொலிகின்றசெஞ்சுடராழி திகழ்திருச்சக்கரத்தின் *
கோயிற்பொறியாலேயொற்றுண்டுநின்று குடிகுடியாட்செய்கின்றோம் *
மாயப்பொருபடைவாணனை ஆயிரம்தோளும்பொழிகுருதி
பாய * சுழற்றியவாழிவல்லானுக்குப் பல்லாண்டுகூறுதுமே. (எ)

| | | | |
|---|---|---|---|
| தீயின் | (சந்திரன் ஸூர்யன் அக்கி முதலிய) சுடர்ப்பொருள்களெல்லாவற்றையும்விட | | (அதுவும் தவிர) |
| பொலிகின்ற | ப்ரபலமாகப் ப்ரகாசிப்பதும் | மாயம் பொரு படை வாணனை | க்ருத்ரிமயுத்தம் செய்பவனும் சேனைகளை யுடையவனுமான பாணாசுரனுடைய |
| செம் சுடர் திகழ் | சிவந்த ஒளியோடு கூடி விளங்குவதுமான | ஆயிரம் தோளும் | ஆயிரந்தோள்களினின்றும் |
| திரு சக்கரத்தின் | திருவாழியாழ்வான் எழுந்தருளியிருக்கிற | பொழி | வெளிக்கிளம்புகிற |
| | | குருதி | ரத்தமானது |
| கோயில் ஆழி பொறியாலே | ஸ்தானமாகிய வட்டவடிவமான அடையாளத்தினால் | பாய | வெள்ளமாகப் பாய்ந்தோடும்படி |
| ஒற்றுண்டு நின்று | அடையாளம் செய்யப்பட்டவர்களாயிருந்து | சுழற்றிய ஆழி | திருக்கையிலேசுழலச் செய்த சக்ராயுதத்தை |
| குடி குடி | அநாதிஸந்தாநமாக | வல்லானுக்கு | ஆளவல்ல எம்பெருமானுக்கு |
| ஆள் செய்கின்றோம் | (எம்பெருமானுக்கு) கைங்கரியம் செய்து வருகின்றோம்; | பல்லாண்டு கூறுதும். | மங்களாசாஸநம்செய்வோம். |

* * *—"எடுநிலத்தில்" என்னும் பாசுரத்தில் கைவல்யார்த்திகளை அழைத்தாரன்றோ; அழைக்கும்போது "நாடுநகரமும் நன்கறிய" என்று உங்களுடைய நன்மையை எல்லாரும் தெரிந்துகொள்ளும்படி நீங்கள் வரவேணுமென்று ஒருவார்த்தை சொன்னார்; அவர்களும் அப்படியே வரவேணுமென்று நிச்சயித்து 'சங்கு சக்கரங்களாலே திருவிலச்சினை செய்து கொள்வது நல்ல உபாயம்' என்று அதைச் செய்துகொண்டு அடிமை செய்பவர்களாய், பாணுஸாயுத்தத்தில் ஸ்ரீக்ருஷ்ணனுக்கு அடிமைசெய்த திருவாழியாழ்வானுக்கும் அவனை அடிமைகொண்ட ஸ்ரீக்ருஷ்ணனுக்கும் அக்காலத்தில் மங்களாசாஸநம் செய்யப்பெறாத குறைதீர மங்களாசாஸநம் செய்பவர்களாக ஆய்விட்டோம் என்று தாங்கள் குடும்பமாகத் திருந்தினபடியைச் சொல்லிக்கொண்டு வந்தார்களாக அமைத்த பாசுரம் இது.

"ஸுதர்சநம் பாஸ்கரகோடிதுல்யம்" என்கிறபடியே திருவாழியாழ்வான் கோடிஸூர்ய ப்ரகாசனாகையால் "தீயிற்பொலிகின்ற" எனப்பட்டது. தேஜ:பதார்த்தங்களெல்லாவற்றையும் விட அதிகமாக ஜ்வலிக்கிற என்றபடி. பொலிகின்ற என்பதும், திகழ் என்பதும் திருச்சக்கரத்திற்கு அடைமொழிகள். இனி, "தீயிற்பொலிகின்ற" என்பதை சக்கரத்தின் பொறிக்கு அடைமொழியாக்கி, அக்கியால் விளங்குகிற சக்கரத்தின் பொறி என்றும் உரைக்கலாம். மந்த்ர பூர்வகமாக ஹோமஞ்செய்த அக்கியில் காய்ச்சப்பட்ட சங்கு சக்கரங்களின் பொறிகளை [அடையாளங்களை] புஜங்களில் அணிந்துகொள்வது ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாயம்.

பாண: என்ற வடசொல் வாணனெனத் திரிந்தது. ... (எ)

8. நெய்யிடைநல்லதோர்சோறும் நியதமுமத்தாணிச்சேவகமும் *
கையடைக்காயும்கழுத்துக்குப்பூணொடு காதுக்குக்குண்டலமும் *

**மெய்யிடநல்லதோர்சாந்தமுந்தந்து என்னைவெள்ளுயிராக்கவல்ல ***
**பையுடைநாகப்பகைக்கொடியானுக்குப் பல்லாண்டுகூறுவனே. (அ)**

| | | | |
|---|---|---|---|
| நெய் எடை | நெய்யோடுஸமமான நிறையையுடையதாய் | தந்து | (ரஜஸ்தமோ குணங்களால் ஐச்வரியத்தை விரும்பின என்னுடைய விருப்பத்தின்படியே) கொடுத்து |
| நல்லது | போக்யமாய் | | |
| ஓர் | விலக்ஷணமான | | |
| சோறும் | ப்ரஸாதத்தையும் | | |
| நியதமும் அத்தாணி சேவகமும் | எப்போதும் பிரியாமல் கூடவேயிருந்து செய்கிற ஸேவக வ்ருத்தியையும் | என்னை | இப்படி ஸம்ஸாரியாய்க் கிடந்த என்னை |
| | | வெள் உயிர் ஆக்க வல்ல | சுத்த ஸாத்விகனைச் செய்தருளினவனாய் |
| கை அடைக்காயும் | திருக்கையால் ப்ரஸாதிக்கும் தாம்பூலத்தையும் | | |
| கழுத்துக்கு பூணோடு | கழுத்தில் தரித்துக் கொள்ள வேண்டிய ஆபரணத்தையும் | பை உடை நாகம் பகை கொடியானுக்கு | படத்தை யுடைய பாம்புக்கு விரோதியான கருடனைக் கொடியாக வுடையனான எம்பெருமானுக்கு |
| காதுக்கு குண்டலமும் | காதில் இட்டுக்கொள்ள வேண்டியகுண்டலத்தையும் | | |
| மெய் இட | உடம்பில்பூசிக்கொள்ளும்படி | | |
| நல்லது ஓர் சாந்தமும் | சிறந்த சந்தனத்தையும் | பல்லாண்டு கூறுவன் | மங்களாசாஸநம் பண்ணுவேன். |

* * *—"அண்டக்குலத்துக்கதிபதியாகி" என்னும் பாசுரத்தில் ஐச்வர்யார்த்திகளை அழைத்தாரே; அவர்கள்தாம் எம்பெருமானிடத்தில் சில ஐச்வர்யங்களைப்பெற்றுக்கொண்டு திருந்தி மங்களாசாஸநத்துக்கு ஸித்தராக வந்தபடியைச் சொல்லிக்கொள்ளுகிறார்களாக அமைத்தது இந்தப் பாசுரம். கீழ்ப்பாசுரங்களிற்போல் இதில் பன்மையின்றியே "பல்லாண்டு கூறுவன்" என்று ஒருமையாகப் பிரயோகமிருப்பதற்குக் காரணம் கேண்மின்;—உலகத்தில் அநந்ய ப்ரயோஜநர்களுடைய கூட்டமும் கைவல்யார்த்திகளுடைய கூட்டமும் மிகவும் ஸ்வல்பமாயிருக்குமாகையாலே அந்தக் கூட்டங்களிலுள்ள நாலைந்துபேர்கள் பேசினதாகக் கொண்டு அவர்களது பாசுரங்களில்"பல்லாண்டுபாடுதுமே" என்றும் "பல்லாண்டு கூறுதுமே" என்றும் பஹுவசந ப்ரயோகம் பண்ணப்பட்டது: ஐச்வர்யார்த்திகளான இவர்களுடைய கூட்டம் அப்படி ஸ்வல்பமாயிராமல் அளவற்றிருக்குமாகையால், ஒரு பெரிய கூட்டத்துக்கெல்லாம் ஒருவன் பிரதானனாய் நின்று பேசுவது வழக்கமாகையால் அப்படியே இங்கும் ஒருவன் பேசுவதாக வைக்கப்பட்டது. மேல் "அல்வழக்கொன்று மில்லா" என்கிறபாட்டிலுள்ள ஏகவசநத்துக்கும் இதுவே ஸமாதாநம்.

உலகத்தார்க்கு வேண்டிய பதார்த்தங்கள் மூன்றுவிதம்—தாரகம், போஷகம், போக்யம் என. அன்னம் தாரகம்; நெய் பால் தயிர் முதலானவை போஷகம். சந்தனம் புஷ்பம் தாம்பூலம் முதலியவை போக்யம். ஆக இந்தப்பதார்த்தங்கள் ஒருவனுக்குப் போதுமானவை கிடைத்தால்அவ்வளவில் த்ருப்திபெற ப்ராப்தம். ஸர்ப்பட்ட அண்டாதிபத்யமெல்லாம் வேணுமென்று விரும்புவது பகவத்விபூதியையெல்லாம் தன்னதாக்கிக்கொண்டு அநர்த்தப்படுவதற்கே காரணமாகும். ஆகையால் ஸ்வரூபஜ்ஞாநமில்லாமல் அண்டாதிபத்யம் அளிக்கவென்று நாங்கள் எம்பெருமானைப் பிரார்த்தித்தாலும் அவன் பரமக்ருபாளுவாய் எங்களை உஜ்ஜீவிப்பிக்கத் திருவுள்ளம்பற்றி எங்களுக்கு உசிதமாய் வேண்டியவளவு தாரக—போஷக—போக்ய வஸ்துக்களைக் கொடுத்து இனிமேலாவது எங்களுக்கு நல்லபுத்தியுண்டாகும்படி குளிரக் கடாக்ஷித்து "ஐச்வரியம் த்யாஜ்யம், பகவத்கைங்கர்யமே புருஷார்த்தம்" என்னும் அத்யவஸாயத்தைப் பிறப்பித்து எங்களை சுத்தஸ்வரூபராக ஆக்கினன்: அப்படிப்பட்ட எம்பெருமானுக்கு மங்களாசாஸநம் பண்ணுவோம் நாங்கள்—என்று ஐச்வர்யார்த்திகள் சொல்லுவதாக இந்தப் பாசுரம் உள்ளது.

"நெய் எடை" என்றும் "நெய் இடை" என்றும் பாடபேதமுண்டு. முந்தினபாடத்தில், நெய்பாதி சோறுபாதியாய் இரண்டும் ஒரெடையாயிருக்குமென்கை. ஒருவிசைச் சோற்றுக்கு ஒருவிசை நெய்சேர்ப்பதென்றால், இதனில் விஞ்சிய நல்ல சோறு இல்லையன்றோ.

"செய்யிடை" என்ற பாடத்தில், 'செய்யின் நடுவே சோறு' என்று பொருளாய், செய்யின் அளவு அதிகமாயும் ப்ரஸாதத்தினளவு அல்பமாயுமிருக்கு மென்கை. நல்லது ஓர் சோறு= இட்டவன் 'நாம் இட்டோம்' என்று அஹங்காரங் கொண்டாலும், உண்டவன் 'இதற்கு நாம் என்ன கைம்மாறு செய்வோம்' என்றிருந்தாலும் நல்ல சோறாகமாட்டாது; பெற்ற தாய் இட, புத்திரன் உண்ணுஞ் சோறுபோலே அன்புடன் இடப்பட்டு ருசியில் குறையில்லாத சோறு என்றபடி.

அத்தாணிச் சேவகமாவது—ஆஸ்தாந ஸேவகம்; எம்பெருமானிருக்குமிடத்தில் கூடவேயிருந்துகொண்டு பிரியாமல் நின்று செய்கிற கைங்கரியம். ஐச்வர்யார்த்தியானவன் சொல்லுகிற இந்தப்பாசுரத்தில் "அத்தாணிச் சேவகமும் தந்து" என்று எங்ஙனே சொல்லலாம்? அநந்யப்ரயோஜநாதிகாரிக்கன்றோ அத்தாணிச்சேவகமுள்ளது? சோறு அடைக்காய் பூண் குண்டலம் ஆகிய இவற்றைத்தந்து என்றால் சேருமே யொழிய அத்தாணிச் சேவகமும் தந்ததாகச் சொல்லுகிறது சேராதே யென்னில்; ஐச்வர்யார்த்தியாயிருந்தாலும் பகவத் க்ருபையாலே திருந்தி அநந்யப்ரயோஜநனாய் வந்தமைதோற்றும்படியாகச் சொல்லுகிற பாசுரமாகையாலே சேருமென்க. நான் அபேக்ஷித்த ஜீவநத்தைமாத்திரம் கொடுத்துவிடாமல் உஜ்ஜீவநத்தையு முண்டாக்கி என்னைப் பரிசுத்தாத்மாவாகச் செய்தானே! என்று ஸந்தோஷித்துச் சொல்லுகிற பேச்சு.

வெள்ளுயிர்=சுத்தமான ஆத்மா. ஸத்வம் ரஜஸ் தமஸ் என்று மூன்று குணங்களுண்டு: அவற்றுள் ஸத்வகுணத்தை வெண்ணிறமுள்ளதாகவும் ரஜோ குணத்தைச் சிவப்பு நிறமுள்ளதாகவும் தமோ குணத்தைக் கறுப்பு நிறமுள்ளதாகவும் கூறுவாராதலால் இங்கே ஸாத்விகனை வெள்ளுயிரென்றார்.

பையுடைநாகப்பகைக்கொடியானுக்கு என்கிற விடத்தில் "பையுடை நாகத்தானுக்கு" என்றும் "(நாகப்) பகைக்கொடியானுக்கு" என்றும் பிரித்துக்கொள்வது நன்று. "அநந்த சாயியாய் கருடத்வஜனானவனுக்கு மங்களாசாஸநம் பண்ணுகிறேனென்கை" என்று வியாக்கியானமருளிச்செய்த பெரியவாச்சான்பிள்ளையின் திருவுள்ளம் இதுவேயாம். நாகத்துக்கு 'பையுடை' என்று விசேஷணமிட்டபடியால் அது வீணாகாமைக்காக இப்படி அர்த்தம் செய்யவேண்டியதாயிற்றென்க. ஸந்தோஷத்தாலே விரிந்த படங்களையுடைய திருவனந்தாழ்வான்மேலே சயனிப்பவனும், அந்த நாகஜாதிக்கு சத்ருவான கருடனை த்வஜமாக வுடையனுமிருக்கிற எம்பெருமானுக்கு என்றபடி.

நியதம், குண்டலம், நாகம்—வடசொற்கள். ... ... (அ)

9. உடுத்துக்களைந்தநின்பீதகவாடையுடுத்துக் கலத்ததுண்டு*
தொடுத்ததுழாய்மலர்சூடிக்களைந்தன சூடுமித்தொண்டர்களோம் *
விடுத்ததிசைக்கருமந்திருத்தித் திருவோணத்திருவிழவில் *
படுத்தபைந்நாகணைப்பள்ளிகொண்டானுக்குப் பல்லாண்டுகூறுதுமே. (௯)

| | |
|---|---|
| | (எம்பெருமானே!) |
| உடுத்து | தேவரீர் அரையில் சாத்திக் கொண்டு |
| களைந்த | கழித்துவிட்ட |
| நின் பீதகவாடை | தேவரீருடை பீதாம்பரத்தை |
| உடுத்து | உடுத்துக்கொண்டும் |
| கலத்தது | தேவர் அமுதுசெய்தபாத்திரத்தில் மிகுந்திருப்பதை |
| உண்டு | புஜித்தும், |
| சூடி களைந்தன | தேவர் சாத்திக்கொண்டு களைந்தவைகளான |
| தொடுத்த | தொடுக்கப்பட்டுள்ள |
| துழாய் மலர் | திருத்துழாய் மலர்மாலைகளை |
| சூடும் | சூட்டிக்கொள்ளுகிறவர்களான |
| இத் தொண்டர்களோம் | இப்படிப்பட்ட தாஸர்களான நாங்கள்.— |
| விடுத்த திசை கருமம் திருத்தி | தேவரீர் ஏவி யனுப்பிய திக்கிலே ஆகவேண்டிய காரியங்களை ஒழுங்காகச்செய்து, |
| படுத்த | கீழே பாங்காகப்பரப்பிய |
| பை நாகம் அணை | படத்தையுடைய பாம்பாகிற படுக்கையில் |
| பள்ளிகொண்டானுக்கு | சயனித்திருக்கிறதேவரீருக்கு |
| திரு ஓணம் திருவிழவில் | ச்ரவணத் திருநாளிலே, |
| பல்லாண்டு கூறுதும் | மங்களாசாஸநம்செய்வோம். |

* * *—"வாழாட்பட்டு" என்னும் பாசுரத்தில் அழைக்கப்பட்டு "எந்தை தந்தை தந்தை" என்னும் பாசுரத்தால் தங்கள் வ்ருத்தியைச் சொல்லிக்கொண்டுவந்து சேர்ந்த அநந்ய ப்ரயோஜநர்கள் தாம் எம்பெருமானை நோக்கிப் பல்லாண்டு பாடும்படியை அருளிச்செய்வது இப்பாட்டு. "நின் பீதகவாடை" என்று முன்னிலையாகச் சொல்லியிருப்பதால் இந்தப் பாசுரம் எம்பெருமானையே நோக்கி அவர்கள் சொல்லுவதாக நன்கு விளங்கும். கீழே ஆழ்வாரால் அழைக்கப்பட்ட மூவகை அதிகாரிகளும் வரிசையாக 'எந்தை தந்தை' 'தீயிற்பொலிகின்ற' 'நெய்யிடை நல்லது' என்னும் பாசுரங்கள் சொன்னது ஆழ்வாரை நோக்கிச் சொன்னதாம். இனி, 'உடுத்துக்களைந்த' 'எந்நாளெம்பெருமான்' 'அல்வழக்கொன்று மில்லா' என்கிற மூன்றுபாசுரங்களும்—அவர்கள் எம்பெருமானையே ஸாக்ஷாத்தாக நோக்கிச் சொல்வதாம். மேலிரண்டு பாசுரங்களில் எம்பெருமானுடைய விளி வ்யக்தமாகவுள்ளது; இப்பாசுரத்தில் அப்படி வ்யக்தமாக இல்லாவிடினும் "நின் பீதகவாடை" என்கிற சொல்லாற்றலால் வ்யக்தமாகிறது.

எம்பெருமானே! நாங்கள் எங்களுக்கென்று அன்னம் வஸ்திரம் புஷ்பம் முதலானவற்றை விலைக்கு வாங்கி உபயோகிப்பதில்லை; தேவரீர் அநுபவித்துக் கழித்தவற்றை மஹாப்ரஸாதமாகக் கொண்டு அவற்றையே உடுப்பதும் உண்பதும் சூடுவதும் செய்வோம் நாங்கள்; அவ்வளவோடும் நில்லாமல், தேவரீருக்கு எந்த திக்கிலே எந்த காரியம் ஆக வேண்டியிருந்தாலும் அவற்றை ஒழுங்குபடச்செய்து முடிப்பதும் செய்வோம். அவ்வளவிலும் த்ருப்தி பெறாமல், ஒரு வெள்ளிமலையில் காளமேகம் சாய்ந்து கிடப்பதுபோல் ஆதிசேஷசயனத்திலே தேவரீர் பள்ளிக்கொண்டிருக்கிற கிடையழகுக்குப் பல்லாண்டு பாடுவதும் செய்வோமென்கிறார்கள்.

பீதகவாடை= 'பீதம்' என்னும் வடசொல் கப்ரத்யயம் பெற்றுப் பீதகமென்றாயிற்று: பொன்வர்ணமான ஆடை என்கை. எம்பெருமானுடைய திவ்ய பீதாம்பரத்தைப் பிறர் உடுத்துக்கொள்ளலாமோ?, அஃது அப்பெருமானுக்கே அஸாதாரணமன்றோ? என்னில்; அவனுக்கு அஸாதாரணமான பீதாம்பரத்தை இங்கே விவக்ஷிக்கவில்லை; சில ஆஸனங்களில ஸாதாரணத் திருப்பரிவட்டங்களும் சாத்திக்கொள்வதுண்டாகையால் அவற்றைச் சொல்லுகிறது. அவை பீதகவாடையாகுமோ வென்னில்; எம்பெருமான் திருவரையில் சாத்திக் கொள்ளும் வஸ்த்ரங்களெல்லாம் திவ்யபீதாம்பரத்தின் அம்சமேயாமென்பது சாஸ்த்ரம்.

பள்ளிகொண்டானுக்கு—பள்ளிகொண்டவுனக்கு என்கை. முன்னிலையில் படர்க்கை வந்த இடவழுவமைதி. "ஒருமையிற் பன்மையும் பன்மையிலொருமையும், ஓரிடம் பிறவிடம் தழுவலுமுளவே" என்பது நன்னூல். ... ... ... (௯)

10. எந்நாளெம்பெருமான் உன்றனக்கடியோமென்றெழுத்துப்பட்ட
அந்நாளே *அடியோங்களடிக்குடில் வீடுபெற்றுய்ந்ததுகாண் *
செந்நாள்தோற்றித் திருமதுரையுட்சிலைகுனித்து *ஐந்தலைய
பைந்நாகத்தலைப்பாய்ந்தவனே உன்னைப்பல்லாண்டுகூறுதுமே. (௧௦)

| | | | |
|---|---|---|---|
| எம்பெருமான் | ஸ்வாமிந்! | செம் நாள் தோற்றி | நல்லநக்ஷத்திரத்திலே திருவவதரித்து |
| உன் தனக்கு | தேவரீர்க்கு | திரு மதுரையுள் | அழகிய வடமதுரையிலே (கம்ஸனுடைய ஆயுத சாலையில புகுந்து) |
| அடியோம் என்று | நாங்கள் அடிமைப்பட்டவர்களென்கிற | சிலை குனித்து | வில்லை வளைத்து முறித்து |
| எழுத்து | சொல்லானது | ஐந்தலைய | ஐந்து தலைகளையுடைய |
| பட்ட நாள் | எங்களுடைய வாயில் உண்டாகப் பெற்ற நாள் | பை | படத்தோடு கூடின |
| எந்நாள் | எந்த தினமோ, | நாகம் | காளிய நாகத்தினுடைய |
| அந்நாளே | அந்ததினம முதலாகவே | தலை | தலையேலே |
| அடியோங்கள் | அடியோங்களுடைய | பாய்ந்தவனே | குதித்தவனே! |
| அடி குடில் | அடிமைப்பட்ட ஸந்தானமெல்லாம் | உன்னை பல்லாண்டு கூறுதும் | தேவரீருக்கு மங்களாசாஸநம் செய்வோம். |
| வீடு பெற்று உய்ந்ததுகாண் | நல்ல கதியை யடைந்து உஜ்ஜீவித்து விட்டது; | | |

* * *—"ஏடுநிலத்தில்" என்கிற பாசுரத்தில் அழைக்கப்பட்டு "தீயிற்பொலிகின்ற" என்னும் பாசுரத்தால் தாம் திருந்தினபடியைச் சொல்லிக்கொண்டு வந்து சேர்ந்த கைவல்யார்த்திகள் எம்பெருமானை நோக்கி மங்களாசாஸநம் பண்ணுகிறபடியைச் சொல்வது இந்தப் பாசுரம்.

எம்பெருமானே! நாங்கள் கைவல்ய புருஷார்த்த ப்ராப்திக்கு ஸாதநமாக "ஓம், நம:" முதலிய சொற்களைச் சொல்லிக்கொண்டு தேவரீரை பஜநம் பண்ணினோம்; தேவரீர் எங்களைக் கடாக்ஷித்து நாங்கள் மீட்சியற்ற கைவல்யத்தை யடைந்து கெட்டுப்போகாதபடி அருள் புரிந்து நல்லபுத்தியை புண்டாக்கினபடியால் அடியோங்கள் இப்போது திருந்தி தேவரீருக்குப் பல்லாண்டு பாடுகிறவர்களாக ஆய்விட்டோ மென்கிறார்கள்.

எம்பெருமானே!, தேவரீருக்கு அடியோமென்று எழுத்துப்பட்ட நாள் எந்நாளோ, அந்நாளிலேயே அடியோங்களுடைய குடில் உஜ்ஜீவித்துப்போயிற்று என்றது—நாங்கள் கைவல்யப்ராப்திக்கு ஸாதநமாக ஓம், நம: என்பதை அநுஸந்தித்து அதனால் யாத்ருச்சிகமாக நல்லபுத்தி பிறந்து குடிகுடியாக உஜ்ஜீவித்தோமென்றபடி. குடில்—க்ருஹம்; நைச்யாநுஸந்தாநப் பேச்சு.

வில்விழவென்கிற வியாஜம் வைத்துக் கம்ஸனால் வரவழைக்கப்பட்ட கண்ணபிரான் அவனுடைய ஆயுதசாலையிலே புகுந்து வில்லையெடுத்து முறித்ததும் தன்னுடைய விஷத்தாலே யமுநாநதியின் ஒரு மடுவைக் கெடுத்துக்கொண்டு எல்லார்க்கும் பயங்கரமாயிருந்த காளிய நாகத்தைத் தண்டித்ததும் ப்ரஸித்தம். .... ... ... ... (௰)

11\. அல்வழக்கொன்றுமில்லா அணிகோட்டியர்கோன் * அபிமானதுங்கன்
செல்வனைப்போலத் திருமாலேநானுமுனக்குப்பழவடியேன் *
நல்வகையால்நமோநாராயணாவென்று நாமம்பலபரவி *
பல்வகையாலும்பவித்திரனே உன்னைப்பல்லாண்டுகூறுவனே. (கக)

| | | | |
|---|---|---|---|
| திருமாலே | ச்ரிய:பதியே! | பல் வகையாலும் பவித்திரனே | எல்லாவிதங்களாலும் பரிசுத்தனை பெருமானே! |
| அல் வழக்கு ஒன்றும் இல்லா | அநீதிகள் ஒன்றுமில்லாமலிருக்கிற | | |
| அணி கோட்டியர் கோன் | அழகிய திருக்கோட்டியூரிலுள்ளவர்களுக்குத் தலைவரும் | நல் வகையால் | அடியேனுக்கு நன்மையுண்டாகும்படி |
| அபிமானதுங்கன் | ஸ்ரீவைஷ்ணவாபிமானத்தால் சிறந்தவருமான | நமோ நாராயணா என்று | திருமந்திரத்தை அநுஸந்தித்து |
| செல்வனை போல | செல்வநம்பியைப் போலவே | பல நாமம் பரவி | (தேவரீருடைய) அநேக திருநாமங்களைச் சொல்லியேத்தி |
| நானும் | நானும் | | |
| உனக்கு | தேவரீருக்கு | உன்னை பல்லாண்டு கூறுவன் | தேவரீருக்கு மங்களாசாஸநம் பண்ணுவேன். |
| பழ அடியேன் | பழமையான தாஸனாய் விட்டேன்; | | |

* * *—"அண்டக்குலத்துக்கு" என்னும் பாசுரத்தாலே அழைக்கப்பட்டு "நெய்யெடை" என்னும் பாசுரத்தால் தாங்கள் திருந்தினபடியைச் சொல்லிக்கொண்டுவந்த ஐச்வர்யார்த்திகள் எம்பெருமானை நோக்கி மங்களாசாஸநம் பண்ணுகிறார்கள். இதில் ஐச்வர்யார்த்திகள் எண்ணிறந்தவர்களாகையாலே அவர்களுள் ஒருவன் சொல்லுகிறானென்று, "நெய்யெடை" என்கிற பாசுரத்தில் "கூறுவனே" என்று ஏகவசநப்ரயோகம் பண்ணினது போலவே இதிலும் கொள்வது.

அல்வழக்குஒன்றுமில்லா—தேஹமே ஆத்மாவென்று நினைப்பது, பகவானுக்கு சேஷமாய்ப் பரதந்த்ரமான ஆத்மாவை ஸ்வதந்த்ரமென்று நினைப்பது, தேவதாந்தரங்களைப் பரதெய்வமாக நினைப்பது, எம்பெருமானிடத்தில் க்ஷுத்ர பலன்களை அபேக்ஷிப்பது, மோக்ஷத்துக்காகவும் கருமம் ஞானம் முதலிய உபாயாந்தரங்களை அநுஷ்டிப்பது இவை முதலானவை அல்வழக்குகள்—அநியாயங்கள்; அவையில்லாதவரான செல்வநம்பி தேவரீர்க்கு எப்படி நித்யதாஸரோ அப்படி நாங்களும் நித்யதாஸராய்விட்டோம் என்கிறார்கள். 'அணிகோட்டி

யர்கோன்' என்கையாலே செல்வநம்பி திருக்கோட்டியூரில் அவதரித்தவர் என்று விளங்குகிறது.

இத்தனைநாள்வரையில் ஐச்வர்யார்த்தியாயிருந்து இன்று வந்து சேர்ந்தவன், 'செல்வநம்பியைப்போல நானும் பழவடியேன்' என்னலாமோவென்னில்; பாபத்தாலே வந்த அஹங்காரம் கழிந்துவிட்டால் எல்லா ஆத்மாக்களுக்கும் அடிமையே நிலைநிற்பதாகையால் அப்படி சொல்லக் குறை என்? இப்போது நல்வகையால் ஏற்றபடியால் இதுவரையில் இந்த ஐச்வர்யார்த்திகள் பகவந்நாமங்களைக் கெட்டவழியில உபயோகப்படுத்தினார்களென்று ஏற்படுகின்றது. கெட்டவழியாவது—ப்ரயோஜநாந்தரப்ரார்த்தனை. இதுவரையில் தங்களுக்கிருந்த அசுத்திகளையெல்லாம் போக்கி சுத்தப்படுத்திச் சேர்த்துக்கொண்டபடியால் பல்வகையாலும் பவித்திரனே! என்கிறார்கள். அபிமானதுங்கன்—வடசொல் தொடர். ... ... (கக)

12. பல்லாண்டென்றுபவித்திரனைப் பரமேட்டியை * சார்ங்கமென்னும்
வில்லாண்டான்றன்னை வில்லிபுத்தூர்விட்டுசித்தன்விரும்பியசொல் *
நல்லாண்டென்றுநவின்றுரைப்பார் நமோநாராயணாயவென்று *
பல்லாண்டும்பரமாத்மனைச் சூழ்ந்திருந்தேத்துவர்பல்லாண்டே. (கஉ)

| | | | |
|---|---|---|---|
| பவித்திரனை | பரிசுத்தனும் | நல் ஆண்டு என்று | நமக்கு நல்லகாலம் வாய்த்ததென்று (மகிழ்ந்து) |
| பரமேட்டியை | பரமபத நிலயனும் | | |
| சார்ங்கம் என்னும் வில் ஆண்டான் தன்னை | ஸ்ரீ சார்ங்கமென்கிற தநுஸ்ஸை அடக்கி ஆளவல்லவனான எம்பெருமானை | நவின்று உரைப்பார் | ஸர்வதா அநுஸந்திப்பவர்கள் |
| வில்லிபுத்தூர் விட்டுசித்தன் | ஸ்ரீவில்லிபுத்தூரிற் பிறந்த பெரியாழ்வார் | பரமாத்மனை | ஸ்ரீமந் நாராயணனை |
| | | சூழ்ந்து இருந்து | சுற்றும் சூழ்ந்துகொண்டு |
| பல்லாண்டு என்று | பல்லாண்டு பல்லாண்டென்று தொடங்கி | நமோ நாராயணாய என்று—, | |
| விரும்பிய சொல் | ஆதரத்தோடு சொன்ன சொல்லாகிய இப்பிரபந்தத்தை, | பல் ஆண்டும் | எப்போதும் |
| | | பல்லாண்டு ஏத்துவர் | மங்களாசாஸநம் பண்ணப் பெறுவார்கள். |

* * *—பரமபதத்தி லெழுந்தருளியிருப்பவனும் நித்யபரிசுத்தனும் பஞ்சாயுதங்களைத் தரித்துக்கொண்டிருப்பவனுமான ஸர்வேச்வரன்விஷயத்தில் பெரியாழ்வார் பொங்கும் பரிவாலே பாடின இத்திருப்பல்லாண்டு திவ்யப்ரபந்தத்தை, நமக்கு நல்லகாலம் வந்துவிட்டதென்கிற கொண்டாட்டத்துடன் இவ்விபூதியில் எஞ்ஞான்றும் பாடுகிறவர்கள் மறுமையில் மோக்ஷலோகத்தை யடைந்து அங்கும் எம்பெருமானுடைய முகோல்லாஸத்தையே புருஷார்த்தமாக நினைத்து அனேக தேஹங்களை எடுத்துக்கொண்டு அப்பெருமானுடைய நான்கு பக்கங்களிலும் இருந்துகொண்டு மங்களாசாஸநம் பண்ணப்பெறுவர்களென்று இதனால் பலன் சொல்லித் தலைக்கட்டிற்றாயிற்று.

பவித்திரன்—தான் பரிசுத்தனாயிருப்பதோடு அபரிசுத்தர்களையும் பரிசுத்த ராக்கவல்லவன். பரமேஷ்டீ என்னும் வடசொல் பரமேட்டியெனத் திரிந்தது; மிகச்சிறந்த ஸ்தானத்தில் வாழ்பவன் என்று பொருள். சார்ங்கம் என்பது (வடமொழியில்) வில்லுக்குப் பொதுப் பெயராயிருந்தாலும், பெருமாளுடைய திருவில்லுக்குச் சிறப்புப் பெயருமாம். “வில் ஆண்டான்” என்ற சொல்லாற்றலால்—'சத்துருக்களைக் காட்டு காட்டு' என்று விம்மிக் கிளம்புகின்ற வில்லை அடக்கியாள்பவன் எம்பெருமான் என்பது விளங்கும்.

வில்லி கண்டார் என்பவர்களில் மூத்தவனான வில்லி யென்பவனாலேற்படுத்தப்பட்ட புதிய நகரமாகையால் வில்லிபுத்தூரென்று திருநாமம்; வில்லி யென்பவன் புற்றில்நின்றும் வடபத்ரசாயிப் பெருமாளைக் கண்டெடுத்துப் பிரதிஷ்டை செய்த திவ்யதேசமென்று இதனை வில்லி பற்றூர் என்றுங் கூறுகின்றனர். வடமொழியில் ஸ்ரீதந்விநவ்யபுரம் எனப் பெரும்பான்மையாகவும் ஸ்ரீதந்விவல்மீகபுரமெனச் சிறுபான்மையாகவும் வழங்கப்பெறும்.

விட்டுசித்தன்—விஷ்ணுவை சித்தத்திலே உடையவர் என்று பொருள். மற்ற ஆழ்வார்களுடைய சித்தத்திலும் எம்பெருமான் எழுந்தருளியிருந்தாலும் "அரவத்தமளியினோடும் அழகிய பாற்கடலோடும், அரவிந்தப் பாவையுந்தானும் அகம்படி வந்து புகுந்து, பரவைத் திரைபலமோதப் பள்ளிகொள்கின்ற பிரானை" என்றும் "பனிக்கடலில் பள்ளிகோளைப் பழகவிட்டோடிவந்து, என் மனக்கடலில் வாழுவல்ல மாயமணாளநம்பி" என்றும் இவ்வாழ்வார் தாமே பேசிக்கொள்ளும்படியாக எம்பெருமான் குடும்பத்தோடே வந்து நித்யவாஸம் பண்ணப்பெற்ற ஏற்றம் இவ்வாழ்வார் திருவுள்ளத்திற்கே அஸாதாரணமென்றுணர்க. (கஉ)

அடிவரவு:—பல் அடி வாழ் ஏடு அண்டம் எந்தை தீ நெய் உடுத்து எந்நாள் அல்வழக்கு பல்லாண்டு வண்ணம்.

[ஆதி கூறுதும், அநந்தரம் கூறுமின் அண்டம் என்மின், எந்தை பாடுதும், தீ உடுத்து எந்நாள் கூறுதும், செய்யும் அல்லும் கூறுவனே.]


ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதிபயங்கரம்
அண்ணங்கராசாரியர் இயற்றிய
திவ்யப்ரபந்த திவ்யார்த்த தீபிகையில்
திருப்பல்லாண்டு உரை முற்றிற்று.
பெரியாழ்வார் திருவடிகளே சரணம்

---

ஸ்ரீ:

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

## பெரியாழ்வார் அருளிச்செய்த

# பெரியாழ்வார் திருமொழி.

[ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர் இயற்றிய தீபிகையுரையோடு கூடியது]

### முதற்பத்து—முதல்திருமொழி—வண்ணமாடங்கள்

அவதாரிகை:—ஸ்ரீக்ருஷ்ணாவதார சரிதைகளைப் பரிபூர்ணமாக அநுபவிக்க ஆசை கொண்ட பெரியாழ்வார் ஸ்ரீக்ருஷ்ணனுடைய திருவவதாரவைபவத்தை இத் திருமொழியில் அருளிச்செய்கிறார். கண்ணபிரான் திருவவதரித்த காலத்தில் திருவாய்ப்பாடியிலுள்ளவர்கள் ஸந்தோஷமுள்ளடங்காமல் அதற்குப் போக்குவீடாகச் செய்த காரியங்களை முதல் ஐந்து பாசுரங்களிலருளிச்செய்கிறார்....

*

பிற்காலத்தவரான ஆழ்வார் தாம் அர்ச்சாவதாரத்தி லீடுபட்டவராதலால் திருக்கோட்டியூரெம்பெருமான் விஷயமாக இப் பதிகம் பாடுகிறார்.

13. வண்ணமாடங்கள்சூழ் திருக்கோட்டியூர் * கண்ணன்கேசவன் நம்பிபிறந்தினில் *
எண்ணெய்சுண்ணம் எதிரெதிர்தூவிட * கண்ணன்முற்றம் கலந்தளறாயிற்றே. (க)

| | |
|---|---|
| வண்ணம் மாடங்கள் சூழ் திருக்கோட்டியூர் | அழகுபொருந்திய மாடங்களாலே சூழப்பட்ட திருக்கோட்டியூரில் (எழுந்தருளியுள்ள) |
| கேசவன் நம்பி கண்ணன் | கேசவனென்ற திருநாமமுடையனும் கல்யாணகுண பரிபூர்ணனுமான ஸ்ரீக்ருஷ்ணன் |
| இன் இல் பிறந்த | (நந்தகோபருடைய) இனிய திருமாளிகையிலே திருவவதரித்தருளினவளவிலே, (திருவாய்ப்பாடியிலுள்ளார்) |
| எண்ணெய் சுண்ணம் எதிர் எதிர் தூவிட | எண்ணெயையும் மஞ்சள் பொடியையும் (ஸந்தோஷத்தாலே ஒருவர்க்கொருவர்) எதிர்த்துத்தூவ, |
| கண் நல் முற்றம் | விசாலமாய் விலக்ஷணமான (நந்தகோபர் திருமாளிகையில) திருமுற்றமானது |
| கலந்து | (எண்ணெயும் மஞ்சள் பொடியும் தரையுண்டு) தன்னிலே சேர்ந்து |
| அளறு ஆயிற்று | சேறாய்விட்டது. |

* * *—திருக்கோட்டியூரில் எழுந்தருளியிருக்கிற எம்பெருமான் திருவாய்ப்பாடியில் நந்தகோபர் திருமாளிகையில் ஸ்ரீக்ருஷ்ணனாக அவதரித்தவளவில் அங்குள்ளவர்களெல்லாரும் அளவுகடந்த ஆநந்தமடைந்து எண்ணெயையும் மஞ்சள் பொடியையும் ஒருவர்மேல் ஒருவர் தூவிக்கொள்ளவே அவ்விரண்டும் கீழேவிழுந்து ஒன்றுசேர்ந்து அந்தத் திருமாளிகையின் முற்றம் முழுவதையும் சேறுமயமாக ஆக்கிவிட்டன.

க்ஷீராப்தியிலிருந்து எம்பெருமான் கண்ணனாக அவதரித்தனனாகப் புராணம் கூறுகிற்க, இங்கே திருக்கோட்டியூரில் நின்றும் அவதரித்ததாகச் சொல்லுகிறது என்னென்னில்; முன்பு இரணியன் மூவுலகங்களையும் அரசாண்டபோது தேவதைகள் அவ்வசுரனை முடிப்பதற்கு வேண்டிய உபாயத்தை ஆலோசிப்பதற்குத் தகுதியானதும் அசுரர்களின் உபத்ரவமற்றதுமான இடத்தைத் தேடுமளவில், கதம்பமுனியின் சாபத்தினால் துஷ்டரொருவரும் கிட்ட வரமுடியாமலிருந்த இந்த (திருக்கோட்டியூர்) க்ஷேத்திரம் க்ஷீராப்திபோலவே ஆலோசிப்பதற்கு ஏகாந்தஸ்தாநமாயிருந்தபடியாலும், தேவதைகளின் கூட்டத்திலெழுந்தருளி அவர்களை ரக்ஷிக்கவேண்டிய ரீதியைச் சிந்திக்கின்ற க்ஷீராப்திநாதன்போலவே இந்த க்ஷேத்திரத்து எம்பெருமானும் சேஷசாயியாயிருப்பதனாலும், தமக்கு மங்களாசாஸநத்துக்குக் கூட்டுறவான செல்வநம்பியைப்பற்றிச் சொல்லும்போது $ ஸ்மரிக்கநேர்ந்த இந்த திவ்யதேசத்தினிடத்தில் தமக்குள்ள அன்புமிகுதியினாலும் இப்படி ஐக்கியமாக அருளிச்செய்தாரென்று கொள்க. தேவர்கள் கூட்டமாயிருந்து ஆலோசித்தஸ்தலமென்கிற காரணம்பற்றியே இதற்கு கோஷ்டீபுரம் என்ற திருநாமமாயிற்று; அதுவே தமிழில் கோட்டியூர் என்றாயிற்று.

கண்ணபிரான் வடமதுரையில் கம்ஸனுடைய சிறைக்கூடத்திலே பிறந்திருக்க, நந்தகோபருடைய திருமாளிகையிற் பிறந்ததாகச் சொன்னது—கம்ஸனுக்குத் தப்பிக் கோகுலத்தில் பிரவேசித்தபின்புதான் இவன் பிறந்ததாக நினைத்திருக்கையாலே.

பிறந்தினில்—இதை முழுச்சொல்லாகக்கொண்டு 'பிறந்தவளவில்' என்றுமுரைக்கலாம். "பிறந்து இன் இல்" என்று பிரித்துக்கொண்டால் பிறந்து—'பிறக்க' என்னும் செயவெனச்சத்தின் திரிபாம்: "சொல்திரியினும் பொருள் திரியாவினைக்குறை" என்னும் நன்னூற் சூத்திரமறிக. இனி, 'பிறந்த இன் இல்' என்றும் பிரிக்கலாம; பிறந்த போக்யமான க்ருஹத்திலே என்றபடி.

'சூர்ணம்' என்ற வடசொல் சுண்ணமெனத் திரிந்தது. தூவிட—தூவியிட.

கண்ணன்முற்றம்—கண்ணன் பிறந்தபோதே அவனையே திருமாளிகைக்குத்தலைவனாக நந்தகோபர் அபிமானித்ததனால் 'கண்ணபிரானுடைய முற்றம்' என்கிறார் என்றுமுரைக்கலாம; 'கண் நல் முற்றம்' என்றும் பிரிக்கலாம். ... ... ... (க)

**14.** ஓடுவார்விழுவார் உகந்தாலிப்பார் * நாடுவார்நம்பிரான் எங்குத்தானென்பார் *
பாடுவார்களும் பல்பறைகொட்டநின்று* ஆடுவார்களும் ஆயிற்றுயப்பாடியே. (உ)

$ திருப்பல்லாண்டில் "அல்வழக்கொன்று மில்லா அணிகோட்டியர் கோனபிமான துங்கன் செல்வனைப்போல" என்றது காண்க.

| | | | |
|---|---|---|---|
| ஆய்ப்பாடி | திருவாய்ப்பாடியானது. | எங்கு தான் என்பார் | எங்கேதான் (இராநின்றான்) என்பாரும் |
| ஓடுவார் | (ஸம்ப்ரமித்து) ஓடுவாரும் | | |
| விழுவார் | (சேற்றிலே வழுக்கி) விழுவாரும | பாடுவார்களும் | பாடுவார்களும் |
| உகந்து ஆலிப்பார் | உகப்புக்குப் போக்குவிடாக கோஷிப்பாரும் | பல் பறை கொட்ட நின்று ஆடுவார்களும் | பலவகை வாத்யங்கள் முழங்க அதற்குப்பொருந்த நின்று கூத்தாடுவாருமாக |
| நாடுவார் | (பிள்ளையைத்) தேடுவாரும் | | |
| நம் பிரான் | நமக்கு உபகாரகனான கண்ணன் | ஆயிற்று | ஆய்விட்டது. |

* * *—கோகுலத்திலுள்ளாரெல்லாரும் தங்கட்குத் தலைவரான நந்தகோபர்க்குப் பிள்ளை பிறந்ததாகக்கேள்விப்பட்டு அளவற்ற ஆநந்தமடைந்து தாம் செய்வது இன்னதென்று தெரியாமல், சிலர் ஓடினார்கள்; சிலர் சேற்றிலே வழுக்கி விழுந்தார்கள்; சிலர் உரக்க கோஷம் செய்தார்கள்; சிலர் 'நம் கண்மணி எங்கே!' என்று குழந்தையைத் தேடினார்கள்; சிலர் பாடினார்கள்; சிலர் பறையடிக்க சிலர் அதுக்குத் தகுதியாகக் கூத்தாடினார்கள்; ஆக இப்படி பஞ்சலக்ஷம்குடியிலுள்ளாரெல்லாரும் சொல்லமுடியாத கோலாஹலமாயிருந்தார்கள்.

ஸ்ரீ க்ருஷ்ணஜநநத்தால் திருவாய்ப்பாடியில் விகாரமடையாதா ரொருவருமில்லையென்பார் ஆய்ப்பாடியே ஓடுவாரும்...ஆடுவாருமாக ஆயிற்றென்றார். 'எங்குற்றான்' என்ற பாடமும் கொள்ளத்தக்கதே. ... .... ... ... ... (உ)

15\. பேணிச்சீருடைப் பிள்ளைபிறந்தினில் * காணத்தாம்புகுவார் புக்குப்போதுவார் *
ஆணொப்பார் இவன்நேரில்லைகாண் * திருவோணத்தான் உலகாளுமென்பார்களே. (௩)

| | | | |
|---|---|---|---|
| சீர் உடை பிள்ளை | ஸ்ரீமானான க்ருஷ்ணன் | ஆண் ஒப்பார் இவன் நேர் இல்லை | "ஆண்தன்மையோடிருப்பவர்களில் இவனோடு ஒத்திருப்பார்(யாரும்) இல்லை; (இவன்) |
| பேணி பிறந்தினில் | (கம்ஸாதிகள் கண்படாதபடி தன்னைக்) காத்துவந்து பிறந்தவளவில் | | |
| தாம் | ஆய்ப்பாடி ஆயர்கள் | திரு ஓணத்தான் உலகு ஆளும் | ச்ரவண நக்ஷத்திரத்தில் அவதரித்த ஸர்வேச்வரனுடைய விபூதிகளையெல்லாம் ஆளக்கடவன்" |
| காண புகுவார் | (கண்ணனைக்) காண்கைக்காக உள்ளே நுழைவாரும் | | |
| புக்கு போதுவார் | உள்ளேபோய் (கண்டு) வெளிப்புறப்படுவாரும், | என்பார்கள் | என்று சொல்லுவாருமாக ஆனார்கள். |

* * *—கண்ணபிரான் அவதரித்தகாலத்தில் கோகுலத்தவர்கள் அந்தக் குழந்தையைப் பார்க்க நந்தகோபர் திருமாளிகையிற் புகுந்துகொண்டும், புகுந்து பார்த்தவர்கள் வெளியில் புறப்பட்டு வந்துகொண்டும், அவர்களில் † ஸாமுத்ரிக சாஸ்த்ரம் தெரிந்தவர்கள் 'இவன் எல்லாரைக்காட்டிலும் விலக்ஷண புருஷன் என்னும்படியாக லக்ஷணங்கள் அமைந்திருப்பதனால் இவன் உபய விபூதி நிர்வாஹகனாயிருப்பன்' என்று சொல்லிக்கொண்டும் இருந்தார்கள்.

கண்ணபிரான் பிறக்கும்போது சங்கு சக்கரங்களுடனே தோன்றக்கண்ட தேவகீ வஸுதேவர்கள் 'இந்த ரூபத்தைக் கம்ஸன் தெரிந்துகொள்ளாதபடி மறைத்துக்கொள்' என்று ப்ரார்த்திக்க, அப்படியே தாய்தந்தையருடைய சொல்லைப் பரிபாலித்து, அக்காலத்தில் கம்ஸனால் நேரக்கூடிய ஆபத்தில் நின்றும் தப்பினபடியால், 'பேணி' என்றும், 'சீருடைப்பிள்ளை' என்றும் அருளிச்செய்தார். சொன்னபடி கேட்கிற பிள்ளையன்றோ சீருடைப்பிள்ளை. பேணி என்பதற்கு—ஆசைப்பட்டுக்கொண்டு என்றும், தன்னை மறைத்துக்கொண்டு என்றும் பொருள் சொல்லலாம்.

ஆண் ஒப்பார் இவன்நேரில்லை=லோகத்திலுள்ளவர்கள் ஆண் என்கிற தன்மையில் மாத்திரம் இவனை யொத்திருக்கிறார்களே யொழிய, மற்றபடி திருமேனி ஸந்நிவேசம் முதலானவற்றில் இவனுக்கு ஒப்பானவர்கள் இல்லையென்கை. "ஆணொப்பான்" என்று பாட

† ஸாமுத்ரிக சாஸ்த்ரமாவது—கைமுதலிய அவயவங்களிலுள்ள ரேகைகளைப் பார்த்து அத்ருஷ்டம் சொல்லும நூல்.

மாகில், ஆண்களுக்கு உரிய லக்ஷணத்தால் என்று பொருளாம்; ஆண்விகுதி—மூன்றும் வேற்றுமையுருபு.

"திருவோணத்தானுலகு" என்று ஆறும்வேற்றுமைத் தொகையாகக் கொள்ளாமல் 'திருவோணத்தான்' என்றும் 'உலகாளும்' என்றும் இரண்டு வாக்யமாகப் பிரித்துக்கொண்டு, இப்படியிருப்பதால் இவன் திருவோணத்தானாகிய திருமாலேயாவன், உலகங்களையும் ஆள்வன் என்பதாகவு முரைக்கலாம். ஆளும்=செய்யுமென்னும் வாய்பாட்டு வினைமுற்று ஆண்பாலுக்கு வந்தது. ... ... ... (௩)

**16.** உறியைமுற்றத்து உருட்டிநின்றாடுவார் * நறுநெய்பால்தயிர் நன்றாகத்தூவுவார் *
செறிமென்கூந்தல் அவிழத்திளைத்து * எங்கும்அறிவழிந்தனர் ஆய்ப்பாடியாயரே. (௪)

| | | | |
|---|---|---|---|
| ஆய்ப்பாடி ஆயர் | திருவாய்ப்பாடியிலுள்ள இடையர்கள் | நன்றாக தூவுவார் | நிச்சேஷமாக தானம்பண்ணுவார் சிலரும. |
| உறியை | (பால்தயிர்சேமித்துவைத்த) உறிகளை | செறி மென் கூந்தல் அவிழ திளைத்து | (நெருங்கி மெத்தென்றிருக்கிற மயிர் முடியானது அவிழ்ந்து கலையும்படி நர்த்தனம் பண்ணுவார் சிலருமாக, |
| முற்றத்து உருட்டி நின்று ஆடுவார் | முற்றத்திலே உருட்டிவிட்டு கூத்தாடுவார் சிலரும், | எங்கும் | சேரிடங்களும |
| நறு நெய் பால் தயிர் | மணமிக்க நெய்யையும் பாலையும் தயிரையும் | அறிவு அழிந்தனர் | தங்களுடைய விவேகம் ஒழியப்பெற்றனர். |

* * *—கண்ணன் பிறந்த ஸந்தோஷம் உள்ளடங்காமல், நெய்யும் பாலும் தயிருமிருக்கிற உறிகளை அறுத்துக்கொண்டுவந்து முற்றத்திலே உருட்டிவிட்டு ஆடினார்கள் சிலர்; நெய் பால் தயிர் முதலியவற்றை அபாரமாக தானஞ்செய்தார்கள் சிலர்; தலைமுடி அவிழ்ந்ததும் தெரியாமல் கூத்தாடினார்கள் சிலர்; ஆகவிப்படி கோகுலத்து இடையர்களெல்லாரும் ஸந்தோஷப் பெருமையினால் இன்னதுதான் செய்வதென்று தெரியாமல் உன்மத்தரானார்கள்.

நன்றாகத்தூவுவார் என்றவிடத்து நன்று ஆக—(பின்னைக்கு) நன்மையுண்டாகும்படி என்று முரைக்கலாம். ... ... ... (௪)

**17.** கொண்டதாளுறி கோலக்கொடுமழு * தண்டினர்பறியோலைச்சயனத்தர் *
விண்டமுல்லை அரும்பன்னபல்லினர் * அண்டர்மிண்டிப் புகுந்துநெய்யாடினர். (௫)

| | | | |
|---|---|---|---|
| தாள் கொண்ட உறி | கால்நெருக்கத்தை யுடைய உறிகளையும் | விண்ட முல்லை அரும்பு அன்ன பல்லினர் அண்டர் | விகஸித்த முல்லையரும்பு போன்ற பற்களையுடையரான இடையரானவர்கள் |
| கோலம் கொடு மழு தண்டினா | அழகிய கூர்மையான மழுக்களையும் தடிகளையுமுடையராய் | மிண்டி | (ஒருவருக்கொருவர் நெருக்கி |
| பறி ஓலை சயனத்தர் | (தாழைமடலினின்றும்) பறிக்கப்பட்டஓலைகளினால் செய்த படுக்கையையுடையராய் | புகுந்து நெய் ஆடினர் | (க்ருஷ்ண மந்திரத்திலே) புகுந்து நெய்யாடலாடினார்கள். |

* * *—ஜாதிக்குத் தகுந்தபடி உறியையும் மழுவென்னும் ஆயுதத்தையும் பசுமேய்க்கிற கோலையும் ஓலைப்பாயையும் உடையரான இடையர்கள் ஆநந்தத்தினால் தங்களுடைய பற்கள் வெளியே தோன்றும்படி சிரித்துக்கொண்டு நெருங்கிவந்து நின்று நெய்யாடலாடினார்கள். நெய்யாடலாவது—ஸந்தோஷ ஸூசகமாக எண்ணெய் தேய்த்துக்கொண்டு ஒருவரோடொருவர் தழுவி நின்று ஆடும் ஆட்டம்; எண்ணெய் தேய்த்துக்கொண்டு ஸ்நானஞ் செய்தலுமாம்.

"விண்டின்முல்லை" என்றும் பாடமுண்டாம்; வீண்டு—மலை; மலை முல்லை யரும்பு நெருங்கப் பூத்தாற்போலேயிருக்கிற (வெண்ணிறமான) பற்களையுடையர் என்றபடி. அண்டர்—இடையர்களும் தேவர்களும்: இங்கு இடையர்களைச் சொல்லுகிறது. ... ... (௫)

**18.** கையுங்காலும் நிமிர்த்துக்கடாரநீர் * பையவாட்டிப் பசுஞ்சிறுமஞ்சளால் *
ஐயநாவழித்தாளுக்கு அங்காந்திட * வையமேழுங்கண்டாள் பிள்ளைவாயுளே. (சா)

| | | | |
|---|---|---|---|
| கையும காலும் நிமிர்த்து | திருக்கைகளையும் திருவடிகளையும் (நீட்டி) நிமிர்த்து | ஐயநா வழித்தாளுக்கு அங்காந்திட | மெல்லிதானநாக்கை வழித்தவளான யசோதைக்காக (கண்ணன்) வாயைத் திறக்க, (அவள்) |
| கடாரம் நீர் | கடாரத்தில்(காய்ச்சின) திருமஞ்சனத் தீர்த்தத்திலே | | |
| பசு சிறு மஞ்சளால் | குறுங்கண்ணுள்ள பசு மஞ்சளால் | பிள்ளை வாயுள் | கண்ணபிரானுடைய வாயினுள்ளே |
| பைய ஆட்டி | திருமேனிக்குப் பாங்காக ஸ்நாகம்செய்வித்து | வையம் ஏழும் கண்டாள் | உலகங்களை யெல்லாம் ஸாக்ஷாத்கரித்தான். |

* * *—யசோதைப்பிராட்டி ஒருநாள் ஸ்ரீக்ருஷ்ணசிசுவைக் குளிப்பாட்டும்போது வழக்கப்படியே குழந்தையின் கையையும் காலையும் நீட்டி நிமிர்த்துப் பசுமஞ்சளைப் பூசி, நல்ல வாஸநாத்ரவ்யங்களைச் சேர்த்துக்காய்ச்சின தீர்த்தத்தைக் கொண்டு குளிப்பாட்டி, முடிவில் மஞ்சள் தேய்வைக்கொண்டு நாக்கு வழிக்குமளவில் அந்தக்குழந்தை வாயைத் திறக்க, அந்தவாயிலே ஸகலலோகங்களையுங் கண்டாள். அர்ஜுநனுக்கு திவ்யசக்ஷுஸ்ஸைக் கொடுத்துத் தன்னுடைய விச்வரூபத்தைக் காட்டினாப்போலே யசோதைக்கும் தன்னுடைய ஸ்வதந்த்ரமான இச்சையினாலே இப்படி காட்டியருளினனென்க. ... (சா)

**19.** வாயுள்வையகங் கண்டமடநல்லார் * ஆயர்புத்திரனல்லன் அருந்தெய்வம் *
பாயசீருடைப் பண்புடைப்பாலகன் * மாயனென்று மகிழ்ந்தனர்மாதரே. (எ)

| | | | |
|---|---|---|---|
| வாயுள் வையகம் கண்ட நல்மடவார் மாதர் | (பிள்ளையின்) வாயினுள்ளே உலகங்களை ஸாக்ஷாத்கரித்த வைலக்ஷண்யத்தையும் மடப்பத்தையுமுடைய ஸ்த்ரீகளானவர்கள், ("இவன்) | அரு தெய்வம் | பெறுதற்கரிய தெய்வம், |
| | | பாய சீர் உடை | பரம்பினபுகழையுடையனும் |
| | | பண்பு உடை | குணங்களையுடையனுமான |
| | | பாலகன் | (இந்த)சிறுபிள்ளையானவன் |
| | | மாயன் | ஆச்சர்யசக்தியுக்தன்" |
| ஆயர் புத்திரன் அல்லன் | இடைப்பிள்ளை யல்லன், | என்று மகிழ்ந்தனர் | என்று (ஒருவருக்கொருவர்) சொல்லிக்கொண்டு ஆனந்தித்தார்கள். |

* * *—கண்ணனுடைய வாயில் ஸகல லோகங்களையுங்கண்ட யசோதையானவள் ஆநந்தத்தாலே மற்றுமுள்ள பெண்டுகளையும் அழைத்துக்காட்ட, கண்ணபிரான் அவர்களுக்கும் அருள்கூர்ந்து அப்படியே காட்டிக்கொடுக்க, அப்பெண்களெல்லாரும் யசோதையைப் போலவே கண்ணன் வாயில் ஸகல லோகங்களையுங் கண்டு ஆச்சரியப்பட்டு 'இவன் ஸாமாந்யனான இடைப்பிள்ளை யல்லன்; ஸாக்ஷாத் பரமபுருஷனே இப்படிவந்து அவதரித்தானாக வேணும்' என்று கொண்டாடிக் கூறினார்கள். ... .... (எ)

**20.** பத்துநாளுங்கடந்த இரண்டாநாள் * எத்திசையும் சயமரங்கோடித்து *
மத்தமாமலை தாங்கியமைந்தனை * உத்தானஞ்செய்து உகந்தனராயரே. (அ)

| | | | |
|---|---|---|---|
| பத்து நாளும்கடந்த இரண்டாம் நாள் | பத்துநாளும் கழிந்த பன்னிரண்டாநாளான நாமகரண தினத்திலே | | |
| எத்திசையும் சயம் மரம் கோடித்து | எல்லாத்திக்குகளிலும் ஜய தோரண ஸ்தம்பங்களை நாட்டி அலங்கரித்து, | ஆயர் | இடையரானவர்கள் |
| மத்தம் மா மலை தாங்கிய மைந்தனை | மதம்பிடிக்குந் தன்மையுள்ள மிருகமாகிய யானைகள் தங்கியிருக்கிற கோவர்த்தந பர்வதத்தை (குடையாக) ஏந்திநின்ற குழந்தையாகிய கண்ணனை | உத்தானம் செய்து | கைத்தலத்திலே வைத்துக் கொண்டு |
| | | உகந்தனர் | ஸந்தோஷித்தார்கள். |

* * *—ஸ்ரீக்ருஷ்ண சிசுவுக்கு நாமகரணம் செய்யவேண்டிய தினம வந்த வளவில், கோகுலத்து இடையர்களெல்லாரும் எங்கும் வெற்றித்தோரணங்களை நாட்டி அலங்கரித்து

ஸ்ரீக்ருஷ்ணனென்று திருநாமமிட்டு அக்குழந்தையைத் தங்கள் தங்கள் கையிலே யெடுத்துக் கொண்டு ஆநந்தம் பொங்கி நின்றார்கள். பிறந்த பத்தாம் நாளிலாவது பன்னிரண்டாம் நாளிலாவது வேறு நல்ல நாளிலாவது நாமகரணம் செய்யும்படி ஸ்ம்ருதி கூறுகின்றது. கண்ணபிரான் மலையைக் குடையாகப்பிடித்தது நாமகரணஞ்செய்த பின்பு நிகழ்ந்ததாயினும், இவ்வாழ்வார் பிற்காலத்தவராகையாலே இப்போது அதனை அநுஸந்திக்கக் குறையில்லை.

மைந்தன்—'மைந்து' என்று இளமைக்கும் வலிமைக்கும் அழகுக்கும் பெயர்; அதனை யுடையவன் மைந்தன். உத்தானம்—வடசொல். ... ... (அ)

**21.** கிடக்கில்தொட்டில் கிழியவுதைத்திடும் * எடுத்துக்கொள்ளில் மருங்கையிறுத்திடும் *
ஒடுக்கிப்புல்கில் உதரத்தேபாய்ந்திடும் * மிடுக்கிலாமையால்நான்மெலிந்தேன்நங்காய். (௯)

நங்காய் — பூர்ணைகளான ஸ்த்ரீகளே! [இப்பிள்ளையானவன்]
கிடக்கில் — (தொட்டிலில்) கிடந்தானாகில்
தொட்டில் கிழிய உதைத்திடும் — தொட்டிலானது கிழியுமாம்படி (கால்களினால்) உதையாநின்றான்;
எடுத்து கொள்ளில் — (இவனை இடுப்பில்) எடுத்துக் கொண்டால்
மருங்கை இறுத்திடும் — இடுப்பை முறியாநின்றான்;
ஒடுக்கி புல்கில் — (இவனுடைய கைகால்களை) ஒடுக்கி மார்வில் அணைத்துக் கொண்டால்
உதரத்து பாய்ந்திடும் — வயிற்றிலே பாயாநின்றான்
மிடுக்கு இலாமையால் — {இச்சேஷ்டைகளைப் பொறுக்கவல்ல சக்தி (இப்பிள்ளைக்கு) இல்லாமையால்
நான் மெலிந்தேன் — தாயாகிய நான் மிகவும் இளைத்தேன்.

* * *—யசோதையானவள் தன் ஸமீபத்திலுள்ள பெண்களை நோக்கிக் கண்ணனுடைய பருவத்துக்குத் தகுதியல்லாத செயல்களைச் சொல்லுவதாக இப்பாசுரம் அமைந்தது. நங்காய்! என்று ஏகவசநமான ஸம்போதநம் ஜாதியொருமையாய், 'நங்கைமீர்களே!' என்றபடி. பருவத்திற்குத்தகுந்த செயல்களைச்செய்யும் புத்திரர்களைப் பெற்றிருப்பதனால் நீங்கள் ஒன்றுங் குறைவில்லாமலிருக்கிறீர்கள் என்று சொல்லிக்கொண்டவாறு. என்னுடைய பிள்ளையைத் தொட்டிலில் கிடக்கவிட்டாலோ, இவன் தொட்டில் கிழிந்துபோம்படி காலாலுதைக்கிறான்; 'கால்கள் மெத்தென்றிருப்பதால் நோயுண்டாகுமே' என்று தொட்டிலினின்றும் எடுத்து இடுப்பில் வைத்துக்கொண்டால், இடத்தைவிட்டு நழுவி இடுப்பை முறித்துவிடுகிறான்; 'எனக்கே இக்குழந்தை செய்யும் சேஷ்டையினால் இடுப்பு முறியும்போது இக்குழந்தைக்கு எவ்வளவு நோவுண்டாகுமோ! இஃது இவனுடைய திருமேனியின் ஸௌகுமார்யத்துக்குத் தகாதே' என்று நினைத்து ஒரு தொழிலுஞ் செய்யமுடியாதபடி மார்பிலே வலிய அணைத்துத் தழுவிக்கொண்டால் கால்களினால் வயிற்றை யுதைக்கிறான்: இப்படி இவன் தன்னுடைய பருவத்திற்குத் தகாத காரியங்களைச் செய்வதை நினைத்து நினைத்து நான் மிகவும் இளைத்துவிட்டேன் என்கிறாள்.

மிடுக்கு இலாமையால்—இதற்கு இருவகையாகப் பொருள்கொள்ளலாம்;–இப்படி மிகச்சிறிய குழந்தையாகிய இவனுடைய செய்கையைப் பொறுக்கும் வல்லமை எனக்கு இல்லாமையால் என்றும், இந்த செய்கைகளையெல்லாம் தாங்குவதற்கு வேண்டிய சக்தி இந்தக் குழந்தைக்கு இல்லாமலிருப்பதனால் என்றும். ... ... (௯)

**22.** செந்நெலார்வயல்சூழ் திருக்கோட்டியூர் * மன்னுநாரணன் நம்பிபிறந்தமை*
மின்னுநூல் விட்டுசித்தன்விரித்த * இப்பன்னுபாடல்வல்லார்க்கு இல்லைபாவமே. (௰)

செம் நெல் ஆர் வயல் சூழ் திருக்கோட்டியூர் — செந்நெல் தானியங்களால் நிறையப்பெற்ற கழனிகளாலே சூழப்பட்ட திருக்கோட்டியூரிலே
மன்னு — பொருந்திவர்த்திக்குமவனாய்
நாரணன் — நாராயணசப்தவாச்யனாய்
நம்பி — ஸர்வகுண பூர்ணனான ஸர்வேச்வரன்
பிறந்தமை — திருவவதரித்தபடியை
மின்னு நூல் விட்டு சித்தன் விரித்த — விளங்காநின்ற யஜ்ஞோபவீதத்தையுடைய பெரியாழ்வார் விஸ்தரித்து அருளிச்செய்த
பன்னு இ பாடல் வல்லார்க்கு — ஜ்ஞாநிகள் எப்போதும் அநுஸந்திக்கக்கடவதான இப்பாசுரங்களை ஓதவல்லவர்க்கு
பாவம் இல்லை — பாபமில்லை.

* * *—செந்நெல் நிறைந்த வயல்களால் சூழப்பட்ட திருக்கோட்டியூரிலே நித்யவாஸம் பண்ணுகிற ஸ்ரீமந்நாராயணன் திருவாய்ப்பாடியில் வந்து திருவவதரித்தபடியைப் பட்டர்பிரான் பேசினதும் பக்தர்களுக்கு போக்யமுமான இத்திருமொழியை ஓதவல்லவர்கள் எம்பெருமானை அநுபவிப்பதற்கு இடையூறான பாவங்களில் நின்று நீங்கி வாழ்வர் என்று இத்திருமொழி கற்றார்க்குப் பலன் சொல்லித் தலைக்கட்டினாராயிற்று.

நம்பி பிறந்தமை என்றது—திருவாய்ப்பாடியில் நடந்த கொண்டாட்டங்களுக்கும் உபலக்ஷணம். ... ... .... (ம)

முதற்பத்து—முதல் திருமொழியுரை முற்றிற்று.

---

## முதற்பத்து—இரண்டாந் திருமொழி: சீதக்கடல்

(யசோதைப்பிராட்டி ஆய்ச்சிகளையழைத்துக் கண்ணனுடைய அவயவசோபைகளைக் காட்டுகிறாள்.)

---

அவதாரிகை:—திருவாய்ப்பாடியில் திருவவதரித்த கண்ணபிரானுடைய திவ்யமங்கள விக்ரஹத்தின் வைலக்ஷண்யத்தை அக்காலத்தில் யசோதைப்பிராட்டி அநுபவித்தாப்போலே [அதாவது, ஊரிலுள்ள பெண்டுகளை யெல்லா மழைத்துக் காட்டினாப்போலே] ஆழ்வார் தாமும் தம்மை அவளாகவே பாவித்து அப்படியே பேசியநுபவிக்க விரும்பித் திருவடி தொடங்கித் திருமுடியளவாக அநுபவித்துப் பேசுகிறார். *

**23.** சீதக்கடலுள் ளமுதன்னதேவகி * கோதைக்குழலாள் அசோதைக்குப்போத்தந்த *
பேதைக்குழவி பிடித்துச்சுவைத்துண்ணும் * பாதக்கமலங்கள்காணீரே பவளவாயீர்
வந்துகாணீரே. (க)

| | | | |
|---|---|---|---|
| சீதம் கடல் உள் அமுது அன்ன தேவகி | குளிர்ந்திராநின்றுள்ள திருப்பாற்கடலிலே உள் ளமுதாகப்பிறந்த பிராட்டியோடொத்த தேவகிப் பிராட்டியால் | பேதை குழவி பிடித்து சுவைத்து உண்ணும் | இளம் சிசுவான கண்ணபிரான் (தன் கைகளால்) பிடித்து ருசிபார்த்து (திருப்பவளத்தில்வைத்து) புஜியாநின்றுள்ள |
| கோதை குழலாள் அசோதைக்கு போத்தந்த | பூமாலையால் அலங்கரிக்கப்பட்டகேசபாசத்தையுடைய யசோதையாகிற எனக்கு அனுப்பப்பட்டவனுடைய | பாதம கமலங்கள் காணீர | திருவடித் தாமரைகளை வந்துகாணுங்கோள்; |
| | | பவளம் வாயீர் வந்து காணீர் | பவளம்போல் சிவந்தஅதரத்தையுடைய பெண்காள்!, வந்து காணீர்!!- |

* * *—வேதத்தில் "விஷ்ணோ: பதே பரமே மத்வ உத்ஸ:" [எம்பெருமானுடைய சிறந்த திருவடியில் தேன் வெள்ளமுண்டு] என்று சொல்லப்பட்டுள்ளது; இதை யடியொற்றி ஆழ்வார்களும் 'தேனே மலரும் திருப்பாதம்" என்கிறார்கள். இப்படிப்பட்ட தனது திருவடியிலுள்ள தேனைப் பருகுவதற்காகவும், தனது திருவயிற்றில் கிடக்கும் உலகங்கட்கெல்லாம் உஜ்ஜீவநமுண்டாகும்படியாகவும் ஸ்ரீக்ருஷ்ணன் தனது திருவடிகளிலொன்றையெடுத்து வாயிலேவைத்துச் சுவை பார்த்துக்கொண்டிருக்க, அதைக்கண்ட யசோதைப்பிராட்டி தான் மிக மகிழ்ந்து, இதைப் பிறரும் கண்டு மகிழவேணுமென்றெண்ணித் தன்னருகிலுள்ளாரைக் கொண்டாடியழைத்து 'நீங்கள் இக்குழந்தை சுவைத்துண்ணும் இப்பாதக் கமலங்களைப் பாருங்கள்' என்று அவர்கட்குக் காட்டுகின்றாள்.

கடலில் இரண்டு அமுதம் பிறந்தன; ஒன்று தேவர்களுக்கு போக்யமான உப்புச் சாறுகிய அம்ருதம்; அது புறவமுதமாம். மற்றொரு அம்ருதம் [1]. "அமுதில்வரும் பெண்ணமுது" எனப்பட்ட பிராட்டி: இவளே உள்ளமுதம். ஆகவே இங்கு 'உள்ளமுதன்ன" என்றது பிராட்டியைப்போன்ற என்றபடியாயிற்று. "திருவின்வடி வொக்கும் தேவகி" என்று மேலும் கூறுவர். பிராட்டியைப்போலே பரோபகாரமே சீலமாகவுள்ள தேவகி என்க.

---

1. பெரிய திருமொழி; 6-1-2

யசோதை தானே சொல்லுகிற பாசுரமாக அமைந்தவிதனில் "கோதைக் குழலாள் யசோதைக்குப் போத் தந்த" என்னலாமோ வென்னில்; யசோதையின்சொல்லாக அருளிச் செய்தாலும் இடையில் தமது தன்மையுந்தோன்ற அருளிச்செய்வரென்க. ... (௧)

24. முத்தும்மணியும் வயிரமும்நன்பொன்னும் * தத்திப்பதித்துத் தலைப்பெய்தாற்போல் *
எங்கும் * பத்துவிரலும் மணிவண்ணன்பாதங்கள் * ஒத்திட்டிருந்தவாகாணீரே
ஒண்ணுதலீர்வந்துகாணீரே. (௨)

| | | | |
|---|---|---|---|
| முத்தும் மணியும் வயிரமும் நன் பொன்னும் தத்திப் பதித்துத் தலைப் பெய்தாற் போல் | முத்துக்களையும் ரத்னங்களையும் வஜ்ரங்களையும் மாற்றுயர்ந்த பொன்னையும் மாறிமாறிப் பதித்துச்சேர்த்தாற்போலே | பத்து விரலும் | விரல்கள் பத்தும் |
| | | ஒத்திட்டிருந்த ஆ | ஒன்றோடொன்றொத்து அமைந்திருக்கும்படியை காணீர்!—; |
| எங்கும் மணி வண்ணன் பாதங்கள் | திருமேனியெங்கும் மணி போன்ற வர்ணத்தையுடையனான கண்ணனுடைய திருவடிகளிலுள்ள | ஒள் நுதலீர் | ஒளிபொருந்திய நெற்றியையுடையீர்காள்! வந்து காணீர்!—. |

* * *—முதலடியில் சில ரத்னங்களைச்சொன்னது நவரத்னங்களுக்கும் உபலக்ஷணம். கோமேதகம், நீலம், பவழம், புட்பராகம், மரகதம், மாணிக்கம, முத்து, வைடூரியம், வைரம் என்பன நவரத்தினங்களாம். கால்களுக்கு இடுகின்ற செம்பஞ்சு மருதாணி என்பன போல ஸ்ரீகிருஷ்ணனுடைய பாதங்களில் ஒன்பது விரல்களுக்கு நவரத்ன வர்ணத்தையும் மற்றொரு விரலுக்குப் பொன்னிறத்தையும் யசோதை இட்டு 'என் மணிவண்ணனுடைய பாதங்களில் பத்துவிரலும்—நவரத்னங்களையும் நல்ல பொன்னையும் ஒளிவிளங்க மாறிமாறிப் பதித்துவைத்தாற்போலச் சேர்ந்தனவாய் லக்ஷணங்களில் குறையொன்றுமில்லாமலிருப்பதை வந்து பாருங்கள் என்கிறாள். ... .... ... ... (௨)

25. பணைத்தோளிளவாய்ச்சி பால்பாய்ந்தகொங்கை * அணைத்தாரவுண்டு கிடந்தவிப்பிள்ளை*
இணைக்காலில்வெள்ளித் தளைநின்றிலங்கும் * கணைக்காலிருந்தவாகாணீரே காரிகையீர்
வந்துகாணீரே. (௩)

| | | | |
|---|---|---|---|
| பணை தோள் இள ஆய்ச்சி | மூங்கில்போன்ற தோள்களையுடையளாய் இளமைப் பருவத்தை யுடையளான யசோதையாகிய என்னுடைய | இ பிள்ளை | இந்தக் கண்ணபிரானுடைய |
| | | இணை காலில | சேர்த்தியழகு அமைந்த திருவடிகளில |
| பால் பாய்ந்த கொங்கை | பாலசொரிகிற முலையை | வெள்ளி தளை நின்று இலங்கும கணை கால் இருக்க ஆ | வெள்ளித்தண்டை நின்று விளங்காநிற்கிற கணைக் காலிருந்தபடியை காணீர்!—; |
| அணைத்து ஆர உண்டு கிடந்த | (திருக்கையால்) அணைத்துக் கொண்டு வயிறு நிரம்ப (பாலை) அமுது செய்து (களித்துக்) கிடக்கின்ற | காரிகையீர் | அழகுடையபெண்காள்! வந்து காணீர்!!—. |

* * *—"பணைத்தோளிள வாய்ச்சி" என்றது—தன்மையில் வந்த படர்க்கை: ஆய்ச்சியாகிய என்னுடைய என்றபடி- அன்பினால் நெறித்துப் பால் சொரிகிற என் முலையைத் திருக்கைகளாலே அணைத்து வயிறாரவுண்டு மகிழ்ந்துகிடக்கிற இப்பிள்ளையினுடைய கால்களில் வெள்ளித்தண்டை விளங்காநிற்கிற கணைக்காலின் அழகை வந்து காணுங்கள்.... (௩)

26. உழந்தாள்நறுநெய் ஒரோதடாவுண்ண * இழந்தாளெரிவினால் ஈர்த்தெழில்மத்தின் *
பழந்தாம்பாலோச்சப் பயத்தால்தவழ்ந்தான் * முழந்தாளிருந்தவாகாணீரே முகிழ்
முலையீர்வந்துகாணீரே. (௪)

| | | | |
|---|---|---|---|
| உழந்தாள் | (நெய்முதலியவற்றை) பிரயாஸப்பட்டுத் தடாவிலே சேர்த்த யசோதையாகிய என்னுடைய | பழ தாம்பால் | (சுற்றிக்கடைந்ததையாலுண்டான பழமை பொருந்திய தாமபை |
| நறு நெய் | மணம் மிக்க நெய்யை | ஓச்ச | (அடிப்பதாகக்) கையை யெடுக்க |
| ஓரோ தடா உண்ண | ஒவ்வொரு தடாவாக (கண்ணன்) அமுது செய்த வளவில் | பயத்தால் தவழ்ந்தான் | அச்சத்தாலே (அதைத்தப்பு போவதாகத்) தவழ்ந்த கண்ணனுடைய |
| இழந்தாள் | (பிள்ளையை) இழந்தவளாக நினைத்த நான் | முழந்தாள் இருந்தஆ | முழங்கால்களிருந்தபடியை காணீர்!—; |
| எரிவினால் | வயிற்றெரிச்சலாலே | முகிழ் முலையீர் | முகிழ்த்த முலையையுடைய பெண்காள்! வந்து காணீர்!!—. |
| ஈர்த்து | கையைப்பிடித்திழுத்து | | |
| எழில் மத்தின் | அழகிய மத்தினுடைய | | |

* * *—கீழ்ப்பாட்டிற்போல இப்பாட்டிலும் உழந்தாள் என்றதும் இழந்தாள் என்றதும்—தன்மையில் வந்த படர்க்கை. ச்ரமப்பட்டுக் கறந்து காய்த்துத் தோய்த்துக் கடைந்து வெண்ணெயாக்கி யுருக்கித் தடாக்களிலே நான் சேர்த்து வைத்திருந்தேன்; அந்த நெய்யை ஒவ்வொரு தடாவாக ஒன்றும் மிச்சமாகாதபடி இவன் வாரியுண்டான்; 'இவ்வளவு நெய்யை வாரியுண்டால் ஜரிக்கமாட்டாதே!' என்கிற வயிற்றெரிச்சலாலே கையைப்பிடித்திழுத்து, மத்திலே சுற்றிக் கடைந்து பழகின தாம்பாலே அடிப்பதாக நான் ஓங்க, பயத்தாலே அதைத் தப்புவதாகத் தவழ்ந்தான்; இப்படிப்பட்ட இவனுடைய முழந்தாள்களிருக்கும்படியைப் பாருங்கள் என்கிறாள்.

இனி, தன்மையில் வந்த படர்க்கையாகக்கொள்ளாமல் படர்க்கையாகவே கொண்டு, பெரியாழ்வார் தாமான தன்மையில் அருளிச்செய்கிறா ரென்னவுமாம்.

இழந்தாள்—பிள்ளையை இழந்ததாக நினைத்தவளென்கை: இவ்வளவு நெய்யை வாரியுண்ட பிள்ளை பிழைக்கப்போகிறானோ என்று அஞ்சினள் போலும். பயம்—வடசொல். (௬)

**27.** பிறங்கியபேய்ச்சி முலைசுவைத்துண்டிட்டு * உறங்குவான்போலே கிடந்தவிப்பிள்ளை *
மறங்கொளிரணியன் மார்வைமுன்கீண்டான் * குறங்குகளைவந்துகாணீரே குவிமுலையீர்
வந்துகாணீரே. (௭)

| | | | |
|---|---|---|---|
| முன் மறம் கொள் இரணியன் மார்வை கீண்டான் | முற்காலத்திலே த்வேஷங் கொண்ட ஹிரண்யனுடைய மார்பைப் பிளந்தவனும், | உறங்குவான் போலே கிடந்த இப்பிள்ளை | (ஒன்றுமறியாமலே) உறங்குமவனைப்போலே படுத் திருப்பவனுமான இந்தக் கண்ணனுடைய |
| பிறங்கிய பேய்ச்சி முலை சுவைத்து | (கொடுமையால்வந்த) ப்ரகாசத்தையுடைய பூதனையினுடையமுலையை (பசையறுமபடி) ஆஸ்வாதித்து | குறங்குகளை | திருத்துடைகளை வந்து காணீர்!—; |
| உண்டிட்டு | அமுதுசெய்து | குவி முலையீர் | குவிந்த முலைகளையுடைய பெண்காள்! வந்து காணீர்!—; |

* * *—நரஸிம்ஹாவதாரம் செய்தவனும் கிருஷ்ணாவதாரம் செய்தவனும் ஒருவனே என்ற வுண்மையை இவ்வாழ்வார் உணர்ந்தவராதலால் "மறங்கொளிரணியன் மார்வை முன் கீண்டானாகிய இப்பிள்ளை" என்றார். ... .... ... (௭)

**28.** மத்தக்களிற்று வசுதேவர்தம்முடை * சித்தம்பிரியாத தேவகிதன்வயிற்றில் *
அத்தத்தின்பத்தாநாள் தோன்றியவச்சுதன் * முத்தமிருந்தவாகாணீரே முகிழ்நகையீர்
வந்துகாணீரே. (௮)

மத்தம் களிறு வசு தேவர் தமமுடைய — மதத்தையுடைய யானைகளை நிர்வஹிக்கு மவரான ஸ்ரீ வஸுதேவருடைய
சித்தம் பிரியாத — மனத்தைவிட்டுப்பிரியாத
தேவகிதன் — தேவகியினுடைய
வயிற்றில — வயிற்றிலே
அத்தத்தின் பத்தாம் நாள — ஹஸ்த நக்ஷத்ரத்துக்குப் பத்தாவதான திருநாளிலே
தோன்றிய அச்சுதன் — திருவவதரித்த கண்ணபிரானுடைய
முத்தம் இருந்த ஆ — சண்ணமிருந்தபடியை
காணீர்!—;
முகிழ் நகையீர் — புன்சிரிப்பையுடைய பெண்காள்!
வந்து காணீர்!!—.

* * *—இப்பாட்டில் முத்தம் என்றது ஆண்குறியை. 'மூத்ரம்' என்னுஞ் சொல் மூத்திரம் பேய்வதற்கு உறுப்பான அவயவத்தைச் சொல்லிற்றாய், அச்சொல் முத்தமெனத் திரிந்திருப்பதாகச் சிலர் கூறுவர். சிறுகுழந்தைகளின் குறியைப் பேரன்புடையார் முத்தமிடுவர்களென்னுங் காரணம்பற்றி அக்குறிக்கு முத்தமெனப்பெயராயிற்றென்று சிலர் சொல்வர்.

அத்தத்தின் பத்தாநாள—ஹஸ்த நக்ஷத்ரத்திற்குப் பத்தாவது நாள் (கீழ்முறையில் எண்ணிப்பார்த்தால்) ரோஹிணீ நக்ஷத்ரமும், (மேல்முறையில் எண்ணிப்பார்த்தால்) திருவோண நக்ஷத்ரமுமாம். இவற்றுள் ரோஹிணீ நக்ஷத்ரம் ஸ்ரீக்ருஷ்ணாவதார நக்ஷத்ரம்: திருவோண நக்ஷத்ரம்—நாராயண தன்மையுள்ள திருமாலுக்கு உரிய நக்ஷத்ரம். இன்ன நக்ஷத்ரத்தில் தோன்றினவனென்று வாய்விட்டுச் சொல்லாமல் "அத்தத்தின் பத்தாநாள் தோன்றிய" என்று சொல்லுவானேன்? என்னில்; இவ்வாழ்வார் மங்களாசாஸநபரராகையினால் 'கண்ணபிரானது திருவவதார நக்ஷத்ரத்தை நேரே சொன்னால் சத்ருக்கள் அபிசாரம் செய்வர்களோ!' என்ற அதிசங்கையினால் மறைத்துச் சொல்லுகிறாரென்று ரஸமாக நிர்வஹிப்பர்கள். (அபிசாரமாவது—சத்ருக்கு மரணமுண்டாகுமாறு செய்யும் யாகவிசேஷம். அதில் சத்ருவின் பெயரை ஸங்கல்பத்திற் சொல்லும்போது "இன்ன நக்ஷத்ரத்தில் பிறந்த இன்னானுக்கு மரணமுண்டாக" என்று குறிப்பிடவேண்டிய அவசியமிருப்பதால், அதற்கு நக்ஷத்ர நிச்சயமுண்டாகாதபடி மறைத்துச் சொல்லுகிறாரென்றவாறு.)

தேவகிக்கு இட்ட விசேஷணத்தினால்--வஸுதேவருடைய மனம் கோணாதபடி ஒழுங்காக நடப்பவள் தேவகி என்பது வெளியாம். வஸுதேவர் யானைகள் கட்டி வாழ்ந்தவராதலால் மத்தக்களிற்றுவசுதேவர் என்றார். ... ... (சா)

29. இருங்கைம்மதகளிறு ஈர்க்கின்றவனை * பருங்கிப்பறித்துக் கொண்டோடுபரமன்றன் *
நெருங்குபவளமும் நேர்நாணும்முத்தும் * மருங்குமிருந்தவாகாணீரே வாணுதலீர்
வந்துகாணீரே. (எ)

இருகை மத களிறு — பெரிய துதிக்கையையுடைய மதமத்தமான குவலயாபீடத்தை
ஈர்க்கின்றவனை — தன்வசமாக நடத்தாநின்ற பாகனை
பருங்கி — கொன்று
பறித்துக்கொண்டு — (யானையின் கொம்புகளை) முறித்துக்கொண்டு
ஓடி — (கம்ஸனிருக்கு மிடத்தைத் தேடிக்கொண்டு) ஓடின
பரமன் தன் — பரமபுருஷனான கண்ணனுடைய
நெருங்கு பவளமும் — செறியக்கோத்த பவள வடமும்
நேர் நாணும் — அழகிய அரைநாணும்
முத்தும — முத்துவடமும் (இவற்றோடே சேர்ந்த)
மருங்கும் இருந்த ஆ — திருவரையும் இருந்தபடியை
காணீர்!—;
வாள் நுதலீர் — ஒளிபொருந்திய நெற்றியையுடைய பெண்காள்!
வந்து காணீர்!!—.

* * *—இடையினழகையும் அதிலுள்ள ஆபரணங்களினழகையும் காட்டும் பாசுரம் இது. ஸ்ரீக்ருஷ்ணனைக் கொல்லக்கருதிய கம்ஸன் வில்விழாவென்கிற வியாஜம்வைத்துக் கண்ணனை அழைக்க, அப்பிரானும் பலராமனுடனே புறப்பட்டு வந்து கம்ஸனரண்மனையினுட்புகும்போது, இவர்களைக் கொல்லும்படி கம்ஸனால் ஏவி நிறுத்தப்பட்டிருந்த குவலயாபீடமென்னும் மதயானை சீறிவர, ஸ்ரீக்ருஷ்ண பலராமர்கள் அவ்யானையை எதிர்த்து அதன் தந்தங்களிரண்டையும் சேற்றிலிருந்து கொடியைப்பறித்தெடுப்பதுபோல எளிதிற் பிடுங்கி

யெடுத்து அவற்றையே ஆயுதமாகக்கொண்டு அவற்றால் பாகனையும் அவ்யானையையும் கொன்றனனென்ற வரலாறு முன்னடிகளில் அடங்கியுள்ளது.

அன்றியே, ஊரில் இடைப்பிள்ளைகள் தெருவிலே விளையாடும்போது ஒருவனை யானையாகவைத்து அவனை யொருவன் இழுத்துக்கொண்டு திரிய, அவனைக் கண்ணபிரான் மோதியடித்துத் தானிழுத்துக்கொண்டு ஓடுகின்ற லீலாவிசேஷத்தை முன்னடிகளிற் கூறினதாகவும் உரைப்பர். இங்ஙனமுரைத்தல் மேற்பாட்டோடு மிக இணங்கும். ... (௭)

**30.** வந்தமதலைக் குழாத்தைவலிசெய்து * தந்தக்களிறுபோல் தானேவிளையாடும் *
நந்தன்மதலைக்கு நன்றுமழகிய * உந்தியிருந்தவாகாணீரே ஒளியிழையீர்
வந்துகாணீரே. (௮)

| | | | |
|---|---|---|---|
| வந்த மதலை குழாத்தை வலி செய்து | (தன்னோடுவிளையாட) வந்த சிறுபிள்ளைகளின் கூட்டத்தில் தன்வல்லமையைக் காட்டிக்கொண்டு | நந்தன் மதலைக்கு | நந்தகோபர்க்கு (விதேயனை) பிள்ளையாகிய கண்ணனுடைய |
| தந்தம் களிறுபோல் | கொம்புமுளைத்த யானைக் குட்டிபோல் | நன்றும் அழகிய உந்தி இருந்த ஆ | மிகவுமழகிதான நாபி இருக்கிறபடியை காணீர்!—; |
| தானே விளையாடும் | தானே முக்கியனாய் நின்று விளையாடுமவனாய் | ஒளி இழையீர் | ஒளியால் விஞ்சின ஆபரணங்களணிந்த பெண்காள்! வந்து காணீர்!!—. |

* * *—கண்ணபிரான் தான் சிறு குழந்தையாயிருந்தாலும் தன்னோடு விளையாடுவதற்குக் கூட்டமாய்வரும் பாலகர்களையெல்லாம் தனது வல்லமையால் அடக்கி, அவர்களெல்லாம் ஒருபக்கமும் தான்மாத்திரம் ஒருபக்கமுமாக நின்று இப்படி தானே பிரதானனாய் நின்று விளையாடுவன்; அப்போதுதான் கொம்பு முளைக்கப்பெற்ற யானைக்குட்டியை த்ருஷ்டாந்தமாகச் சொல்லத்தகுந்திருப்பன்; இப்படிப்பட்டவனுடைய உந்தியைப் பாருங்களென்கிறாள்.

**31.** அதிருங்கடல்நிறவண்ணனை * ஆய்ச்சி மதுரமுலையூட்டி வஞ்சித்துவைத்து *
பதறப்படாமே பழந்தாம்பாலார்த்த * உதரமிருந்தவாகாணீரே ஒளிவளையீர்
வந்துகாணீரே. (௯)

| | | | |
|---|---|---|---|
| அதிரும் கடல் நிறம் வண்ணனை | கோஷிக்கின்ற கடலினது நிறம்போன்ற நிறத்தையுடைய கண்ணனுக்கு | பதறப் படாமே | தன் எண்ணம் தப்பாதபடி |
| ஆய்ச்சி | யசோதையானவள் | பழதாம்பால் ஆர்த்த உதரம் இருந்த ஆ | பழகின கயிற்றாலே கட்டிவைத்த வயிறு இருந்தபடியை |
| மதுரம் முலை ஊட்டி | இனிய முலைப்பாலை ஊட்டி, | | காணீர்!—; |
| வஞ்சித்து வைத்து | (மேல், தான் இவனைக்கட்டப்போகிறதை இவனறியவொண்ணாதபடி) ஏமாற்றி | ஒளி வளையீர் | ஒளிமிக்க வளையையுடைய பெண்காள்! வந்து காணீர்!!—. |

* * *—கண்ணபிரான் இளம்பிராயத்தில் கோகுலத்திலுள்ள இடையர் மனைகளிலெல்லாஞ் சென்று அவர்களது பால் தயிர் வெண்ணெய் முதலியவற்றைத்திருடியுண்டதை அவ்விடைச்சிகள் வந்து முறையிட, அறிந்த யசோதை அக்குற்றத்திற்கு ஒரு தண்டனையாகக் கண்ணனை வயிற்றில் கயிற்றினால்கட்டி உரலோடு பிணித்துவைத்தாளென்பது இதில் அறியத்தக்கது. "கடல்நிறவண்ணன்" என்னாமல் "அதிருங் கடல்நிற வண்ணன்" என்றது கண்ணனுடைய அடங்காத் தன்மையைக்காட்டும். .... ... (௯)

**32.** பெருமாவுரலில் பிணிப்புண்டிருந்து * அங்கு, இருமாமருதம் இறுத்தவிப்பிள்ளை *
குருமாமணிப்பூண் குலாவித்திகழும் * திருமார்விருந்தவாகாணீரே சேயிழையீர்
வந்துகாணீரே. (௧௦)

| | | | |
|---|---|---|---|
| பெரு மா உரலில் பிணிப்புண்டிருந்த | மிகப்பெரிய உரலோடு கட்டுண்டிருந்த | குரு மாமணி பூண் குலாவி திகழும் | மிகவும் சிறந்த கௌஸ்து பாபரணமானது அசைந்து விளங்காநின்றுள்ள |
| அங்கு | அந்த நிலைமையிலே | | திருமார்வு இருந்த ஆ காணீர்!—. |
| இரு மா மருதம் இறுத்த இப்பிள்ளை | இரண்டு பெரிய மருதமரங்களை முறித்தருளின இக் கண்ணபிரானுடைய, | சே இழையீர் | செவ்விய ஆபரணங்களை யுடைய பெண்காள்! வந்து காணீர்!!—. |

* * *—"குருமாமணிப்பூண்" என்ற சிறந்த ரத்நாபரணமாகிய கௌஸ்துபமணியைச் சொல்லுகிறது. குரு வடசொல் விகாரம். ச்லாக்யமான என்றபடி. அப்படிப்பட்ட திவ்யாபரணம் விளங்கப்பெற்ற திருமார்வினழகைக் காணுங்களென்கிறாள். ...

33. நாள்களோரைந்து திங்களளவிலே * தாளைநிமிர்த்துச் சகடத்தைச்சாடிப்போய் *
வாள்கொள்வளையெயிற் றாருயிர்வவ்வினான் * தோள்களிருந்தவாகாணீரே சுரிகுழலீர்
வந்துகாணீரே. (கக)

| | | | |
|---|---|---|---|
| நாள்கள் | (கண்ணன் பிறந்தபின்பு சென்ற) நாட்கள் | வாள் கொள் வளை எயிறு | ஒளிக்கொண்டதாய் வளைந்திராநின்றுள்ள கோரப்பற்களையுடைய பூதனையினது |
| ஓர் நாலு ஐந்து திங்கள் அளவிலே | ஒரு நாலைந்து மாதத்தளவிலே | ஆர் உயிர் | அரிய உயிரை |
| | | வவ்வினான் | முடித்த கண்ணனுடைய |
| தாளை நிமிர்த்து | காலைத்தூக்கி | தோள்கள் | இருந்த ஆ காணீர்!—; |
| சகடத்தை சாடிப் போய் | சகடாஸுரனை உதைத்து விட்டு, | சுரி குழலீர் | சுருண்ட கேசத்தையுடைய பெண்காள்! வந்து காணீர்!!—. |

"நாலைந்துதிங்களளவிலே" என்பதற்கு—நாலு அல்லது ஐந்து மாதங்களுக்குள்ளே என்றும், (நாலு மைந்துங்கூடின) ஒன்பது மாதங்களுக்குள்ளே என்றும் (நாலால் பெருக்கப்பட்ட ஐந்தாகிய) இருபது மாதங்களுக்குள்ளே என்றும் பொருளாகும். இவ்வாழ்வார் மங்களாசாஸநபரராதலால், ஸ்வல்ப வயஸ்ஸிலே அரிய பெரிய காரியஞ்செய்தானென்று சொன்னால் கண்ணெச்சில்படுமோ! என்றஞ்சி அங்ஙனம் த்ருஷ்டிதோஷம் வாராமைக்காக, மாதம் நாலென்றும் ஐந்தென்றும் ஒன்பதென்றும் இருபதென்றுந் தெரியாதபடி மயங்க வருளிச்செய்தனரென்று ரஸோக்தியாகவருளிச்செய்வர் பூருவர்.

"சகடத்தைச் சாடிப்போய்....ஆருயிர் வவ்வினான்" என்கிறாரே; பூதனையை முடித்தது முன்பும் சகடத்தைச் முறித்தது பின்பும் நடந்திருக்க முன்பின்னாக மாறாடிச் சொல்லுவானேன்? என்னில்; முறைபடச் சொல்லவேணுமென்கிற எண்ணமில்லையென்க. அந்தந்த காரியங்களைச் செய்தவன் என்பது மாத்திரமே விவக்ஷிதம். எயிறு+ஆருயிர், எயிறாருயிர். எயிறு—எயிற்றையுடையவளுக்கு ஆகுபெயர். "எயிற்றியாருயிர்" என்பது எயிற்றாருயிரென விகாரப்பட்டதென்பாருமுளர்.

சந்திரனுக்குப் பெயரான திங்களென்னுஞ் சொல் மாதத்தை எங்ஙனே குறிக்குமென்னில்; சந்திரனுடைய கலைகள் ஒருமுறை தேய்ந்து வளர்தல் ஒருமாதம்—எனச் சந்திரனலறியப்படும் மாதத்திற்கு லக்ஷணை: இச்சொல் சாந்த்ரமாநத்து மாதத்தையே குறிக்க வேண்டியதாயினும் ஸௌரமாநதது மாதத்தையும் வழக்கில் குறித்துவருகின்றது. ... (கக)

34. மைத்தடங்கண்ணி அசோதைவளர்க்கின்ற * செய்த்தலைநீலநிறத்துச் சிறுப்பிள்ளை *
நெய்த்தலைநேமியுஞ் சங்கும்நிலாவிய * கைத்தலங்கள்வந்துகாணீரே கனங்குழையீர்
வந்துகாணீரே. (கஉ)

மை தட கண்ணி அசோதை வளர்க்கின்ற — மையணிந்த பெரிய கண்களையுடைய யசோதைப் பிராட்டியாலே வளர்க்கப்படுகின்றவனுடைய,
தனிசெய்நீலம்நிறம் — உயர்ந்த க்ஷேத்ரத்திலே (அலர்ந்த) கருநெய்தல் பூவினது போன்ற நிறத்தையுடையவனுன (இந்த)
சிறு பிள்ளை — பாலக்ருஷ்ணனுடைய
செய் தலை நேமியும் சங்கும் நிலாவிய கைத்தலங்கள் — கூர்மை பொருந்தியநுதியையுடைய திருவாழியும் திருச்சங்கும் அமைந்திராநின்றுள்ள உள்ளங்கைகளை
வந்து காணீர்!!—;
கனம் குழையீர் — பொன்னால்செய்த காதணிகளையுடைய பெண்காள்!
வந்து காணீர்!!—.

* * *—கண்ணழகுபடைத்த யசோதைப்பிராட்டி பிறர்கையில் காட்டிக்கொடாமல் தானே வைத்தகண் வாங்காமல் ஆதரித்து வளர்ப்பதனால்தான் அவளது கண்ணின் நிறமெல்லாம் கண்ணனது திருமேனியில் ஏறி, திருமேனி நிறம் கறுத்திருக்கின்றதோ! என்று தோன்றும்படியிருக்கிற பிள்ளையென்பது முன்னடிகளின் உட்கருத்து. யசோதைப்பிராட்டிக்குச் சிற்சில ஸமயங்களில் சங்கு சங்கரங்களைக் காட்டுதலால் "நேமியும் சங்கும் நிலாவிய கைத்தலங்கள் என்றும் கொள்ளலாம்: இப்பொருளில் செய்த்தலை என்ற விசேஷணம் சக்கரத்திற்கு இயற்கையடைமொழியாகவேணும். கைத்தலத்தில் சங்க சக்ர ரேகைகள் அமைவது மஹாபுருஷலக்ஷணம். ... ... ... ... (கஉ)

35. வண்டமர்பூங்குழல் ஆய்ச்சிமகனாக * கொண்டுவளர்க்கின்ற கோவலக்குட்டற்கு *
அண்டமுமநாடும் அடங்கவிழுங்கிய * கண்டமிருந்தவாகாணீரே காரிகையீர்
வந்துகாணீரே. (கந)

வண்டு அமர் பூ குழல் ஆய்ச்சி — வண்டுகள் படிந்திருக்கிற பூ அணிந்த குழலையுடையவளானயசோதையானவள்
மகனாக கொண்டு வளர்க்கின்ற — புத்ரனாகஸ்வீகரித்து வளர்க்கப்பெற்றவனாய்
கோவலர்குட்டற்கு — ஸ்ரீநந்தகோபருடைய பிள்ளையான கண்ணபிரானுடைய,
அண்டமும் நாடும் அடங்க விழுங்கிய — அண்டங்களை (அவற்றினுள்ளே கிடக்கிற) சேதநாசேதநங்களையும் முழுதும் (ப்ரளயகாலத்தில்) கபளீகரித்த
கண்டம் இருந்த ஆ — கழுத்திருந்தபடியை
காணீர்!—;
காரிகையீர்! வந்து காணீர்!!—.

* * *—பிள்ளைகளுக்கு அனுக்கூலமுண்டாகாமைக்காகத் தாய்மார் தங்களை அலங்கரித்துக்கொண்டிருப்பர்களாகையாலே "வண்டமர் பூங்குழலாய்ச்சி" எனப்பட்டது. யசோதையானவள் கண்ணபிரானைத் தன் மகனென்றே நினைத்திருந்தாலும் ஆழ்வார் உண்மையையறிந்தவராதலால் மகனாகக்கொண்டு வளர்க்கின்ற என்றார். அண்டமும் நாடு மடங்க விழுங்கியது—ப்ரளயகாலத்தில்: "அண்டரண்ட பகிரண்டத்தொருமாநில மெழுமால்வரை முற்றுமுண்ட கண்டம்" என்றார் திருப்பாணாழ்வாரும். கண்டம—வடசொல். ... (கந)

36. எந்தொண்டைவாய்ச்சிங்கம் வாவென்றெடுத்துக்கொண்டு * அந்தொண்டைவாய் அமுதாதரித்து * ஆய்ச்சியர், தந்தொண்டைவாயால் தருக்கிப்பருகும் * இச்செந்தொண்டைவாய்வந்துகாணீரே சேயிழையீர்வந்துகாணீரே. (கச)

ஆய்ச்சியர் — இடைப்பெண்கள்
தொண்டை வாய் எம் சிங்கம் வா என்று எடுத்துக்கொண்டு — "கொவ்வைக் கனிபோன்ற அதரத்தையுடைய எமது சிங்கக்குருகே! (எம்மிடம்) வா" என்று (இடுப்பில்) எடுத்துக்கொண்டு
அம் தொண்டை வாய் அமுது ஆதரித்து — அழகிய கொவ்வைபோன்ற (கண்ணனுடைய) அதரத்தில் (ஊறுகிற அம்ருதத்தை விரும்பி,
தம் தொண்டை வாயால் தருக்கி பருகும் — தங்களுடைய கோவை வாயை (கண்ணன் வாயோடே) நெருக்கிப் பானம் பண்ணப்பெற்ற
இ செம் தொண்டை வாய் — இந்தச்சிவந்த கோவை வாயை
வந்து காணீர்!!—,
சேயிழையீர்! வந்து காணீர்!!—.

* * *—வாயினழகைக் காட்டுகின்றாள். இடைச்சிகள் ஒவ்வொருத்தியும் 'என் சிங்கக்குட்டியே! என் யானைக்குட்டியே!' என்று பலபடியாகச் சீராட்டி ஸ்ரீகிருஷ்ணகுமாரனை யெடுத்துக்கொண்டு அவனது வாயில் ஊறுகின்ற அமுதம்போல் போக்யமான நீரைப் பானம்பண்ணுவர்களாம். அப்படி அவர்களால் பானம்பண்ணப்பெற்ற அதரத்தினழகை வந்துபாருங்களென்கை. ... ... ... (கச)

**37.** நோக்கியசோதை நுணுக்கியமஞ்சளால் * நாக்குவழித்து நீராட்டுமிந்நம்பிக்கு *
வாக்கும்நயனமும் வாயும்முறுவலும் * மூக்குமிருந்தவாகாணீரே மொய்குழலீர்
வந்துகாணீரே. (கரு)

அசோதை — யசோதையாகிய தான்
நோக்கி நுணுக்கிய மஞ்சளால் — (கண்ணபிரானது திருமேனியின் மென்மைக்குத் தக்கபடி) பார்த்து ஆராய்ந்து அரைத்த மஞ்சட்காப்பாலே,
நாக்கு வழித்து—;
நீராட்டும் இந்நம்பிக்கு — ஸ்நாநம் செய்விக்கப்பெறுகின்ற இக்கண்ணபிரானுடைய
வாக்கும் நயனமும் வாயும் முறுவலும் மூக்கும் இருந்த ஆ — திருவாக்கும் திருக்கண்களும் அதரஸ்புரணமும் புன்சிரிப்பும் மூக்குமிருந்த படியை
காணீர்!—;
மொய் குழலீர் — செறிந்த குழலையுடைய பெண்காள்!—.
வந்து காணீர்!!—

* * *—கண்ணபிரானுடைய திருமேனியின் ஸௌகுமார்யத்தை யறியும் யசோதையானவள் தான் அத்திருமேனிக்குத் தகுதியாக அரைத்த மஞ்சட்காப்பாலே நாக்கை வழித்துத் திருமஞ்சனஞ் செய்யும்படி அடங்கியிருப்பன் கண்ணன்; அவனுடைய வாக்கும் நயனமும் வாயும் முறுவலும் மூக்கும் இருக்கிறபடியைப் பாருங்களென்கிறது. வாக்கும் என்றது—தாய் தந்தை முதலானோருடைய நாமங்களைச்சொல்லுகிற வாக்கிந்திரியத்தைச் சொன்னபடி. வாயும் என்றது அதரத்தைச்சொன்னபடி. இனி, வாயும் என்பதை முறுவலுக்கு விசேஷணமாக்கி, வாய்த்திருக்கின்ற புன்சிரிப்பு என்றும் உரைக்கலாம். ... (கரு)

**38.** விண்கொளமரர்கள் வேதனைதீர * முன், மண்கொள்வசுதேவர்தம் மகனாய்வந்து *
திண்கொளசுரரைத் தேயவளர்கின்றான் * கண்களிருந்தவாகாணீரே கனவளையீர்
வந்துகாணீரே. (கசு)

விண் கொள் அமரர்கள் வேதனை தீர — ஸ்வர்க்காதி லோகங்களை இருப்பிடமாகக் கொண்ட தேவதைகளுடைய துன்பங்கள் தீரும்படி
முன் — முன்னே
மண் கொள் வசுதேவர் தம் மகனாய் வந்து — பூமியை இருப்பிடமாகக் கொண்ட வஸுதேவர்க்கு பிள்ளையாய்வந்து பிறந்து
திண் கொள் அசுரர் தேய வளர்கின்றான் — வலிமைகொண்ட அஸுரர்கள் க்ஷயிக்கும்படிவளரா நின்ற கண்ணனுடைய
கண்கள் இருந்த ஆ காணீர்!—,
கனம் வளையீர் — கநக கங்கணத்தையுடைய பெண்காள்!
வந்து காணீர்!—

* * *—கீழ்ப்பாட்டில் நயனமும் என்று கண்ணழகைக் காட்டியிருந்தாலும் அங்கு முகஸமுதாய சோபையைக் காட்டின மாத்திரமேயுள்ளது; இப்பாட்டில் விசேஷித்துத் திருக்கண்களினழகைக் காட்டுகின்றாள். கண்ணபிரான் சிறுகுழந்தையான பருவத்திலேயே பலபல அசுரர்களை அழித்ததனால் "திண்கொளசுரரைத் தேயவளர்கின்றான்" என்கிறார். "பரித்ராணாய ஸாதூநாம் விநாசாய ச துஷ்க்ருதாம்" என்ற அர்த்தம் முதலடியிலும் மூன்றாமடியிலும் விளங்க நின்றமை காண்க. அசுரரை என்றவிடத்து, ஐ—சாரியை. வேதநா என்னும் வடசொல் 'வேதனை' என்று ஐயீறாகத்திரிந்தது. .... .... .... (கசு)

**39.** பருவம்நிரம்பாமே பாரெல்லாமுய்ய * திருவின்வடிவொக்கும் தேவகிபெற்ற *
உருவுகரிய ஒளிமணிவண்ணன் * புருவமிருந்தவாகாணீரே பூண்முலையீர்
வந்துகாணீரே.

பருவம் நிரம்பாமே — வயது முதிருவதற்கு முன்னமே,
பார் எல்லாம் உய்ய — பூமியிலுள்ளாரெல்லாரும் உஜ்ஜீவிக்கும்படியாக
திருவின் வடிவு ஒக்கும் தேவகி பெற்ற — பிராட்டியின் வடிவுபோன்ற வடிவையுடையவளான தேவகிப் பிராட்டியாலே பெறப்பட்டவனும்
உருவு கரிய ஒளி மணி வண்ணன் — உருவால் கறுத்ததாய் உஜ்ஜ்வலமான மணி போன்ற வடிவையுடையனை கண்ணபிரானுடைய
புருவம் இருந்த ஆ காணீர் !—.
பூண் முலையீர் — ஆபரணம்பூண்ட முலையையுடைய பெண்காள் !
வந்து காணீர்!!—.

* * *—முதலடியால், சக்ரவர்த்தித்திருமகனிற்காட்டில் கண்ணபிரானுக்கு வாசி சொல்லுகிறது; அவன் பருவம் நிரம்பின பின்பிறே விரோதிகளைமுடித்து அநுகூலரை வாழ்வித்தது. பருவம் - 'பர்வ' என்னும் வடசொல். ... ... (கஎ)

**40.** மண்ணும்மலையும் கடலுமுலகேழும் * உண்ணுந்திறத்து மகிழ்ந்துண்ணும்பிள்ளைக்கு *
வண்ணமெழில்கொள் மகரக்குழையிவை * திண்ணமிருந்தவாகாணீரே சேயிழையீர்
வந்துகாணீரே. (கஅ)

மண்ணும் மலையும் கடலும் உலகு ஏழும் உண்ணும் திறத்து — பூமியையும் மலைகளையும் கடல்களையும் ஸப்தலோகங்களையும் திருவயிற்றிலே வைக்கிறவளவில
மகிழ்ந்து உண்ணும் பிள்ளைக்கு — உகந்து திருவயிற்றிலே வைத்த (இக்) கண்ணபிரானுடையதான
எழில் வண்ணம் கொள் — அழகிய நிறங்கொண்ட
மகரம் குழை இவை — இம்மகரகுண்டலங்களின்
திண்ணம் இருந்த ஆ — திண்மை இருந்தபடியை காணீர்!—;
சேயிழையீர் ! வந்து காணீர்!!—.

* * *—மலையேழும், கடலேழும், உலகேழும் என்றுமியைக்கலாம். மகிழ்ந்து—'இவற்றை ப்ரளயங்கொள்ளாதபடி காக்கப்பெற்றோமே' யென்று மகிழ்ச்சி. மகரம்—வடசொல். சுறுமீன்வடிவமாகச் செய்யப்படும் காதணிக்கு மகரகுண்டலமென்றுபெயர். திண்ணம் - 'அம்' விகுதிபெற்ற பண்புப்பெயர். கண்டார் கண்ணையும் நெஞ்சையும் கவரும்படியான திண்மை. ... ... ... ... (கஅ)

**41.** முற்றிலுந்தூதையும் முன்கைம்மேல்பூவையும் * சிற்றிலிழைத்துத் திரிதருவோர்களை *
பற்றிப்பறித்துக் கொண்டோடும்பரமன்றன் * நெற்றியிருந்தவாகாணீரே நேரிழையீர்
வந்துகாணீரே. (கசு)

சிற்றில் இழைத்து திரிதருவோர்களை — சிறுவீடுகளை (மணலினால்) செய்துகொண்டு விளையாடித்திரியும் சிறு பெண்களை
பற்றி — (வலியக்) கையைப்பிடித்துக் கொண்டு (அவர்களுடைய)
முற்றிலும் — (மணலைகொழிக்கிற) சிறு சுளகுகளையும
தூதையும் — (மணற்சோறுக்குகிற) சிறு பானைகளையும்
முன்கைமேல்பூவையும் — முன்கைமேல் (வைத்துக் கொண்டுபேசிகிற) நாகணவாய்ப்புள்ளையும்
பறித்துக்கொண்டு ஓடும் — அபஹரித்துக்கொண்டு ஓடுகின்ற
பரமன் தன் — (நிகரில) சிறந்தவனான கண்ணபிரானுடைய
நெற்றி இருந்த ஆ காணீர் !—;
நேர் இழையீர் — நேர்த்தியையுடைய ஆபரணங்களணிந்த பெண்காள்;
வந்து காணீர்!—.

* * *—கண்ணபிரான் அவதரித்த பதின்மூன்று பதினான்கு நாள்களுக்குள் ஊர்ப்பெண்களையழைத்து அவயவ ஸௌந்தரியத்தை யசோதைப்பிராட்டி காட்டின பாசுரமாக இத்திருமொழி அமைந்ததாயினும், பிறகு நடந்த பால சேஷ்டிதங்களையும் இவ்வாழ்வார் அறிந்தவராகையாலே அவற்றையும் கண்ணபிரானுக்கு விசேஷணமாக்கி யருளிச்செய்கிறார். சிறுபெண்கள் விளையாட்டாகச் சிற்றிலிழைப்பது வழக்கம்; அதாவது தெருக்களில் கொட்டி

யிருக்கும் மண்ணையும் கல்லையுங்கொண்டு வீடுகட்டுவதுபோற் செய்து விளையாடுகை, அதற்கு மணல்கொழிக்கச் சிறுமுறம் வைத்துக்கொண்டிருப்பர்கள்; மணற்சோறு சமைக்கச் சிறு பானையையும் வைத்துக்கொண்டிருப்பர்கள்; தவிரவும், அப்பெண்கள் கொஞ்சி விளையாடும் பொருட்டுத் தங்களது முன்னங்கைமேல் காகணவாய்ப்பக்ஷியையும் வைத்துக்கொண்டிருப்பர்கள். இவற்றையெல்லாம் பலாத்காரமாகப் பறித்துக்கொண்டு பிடிகொடாமல் ஓடுகின்ற தீம்பனும் கண்ணபிரான்; அப்படிப்பட்ட இவனுடைய நெற்றியானது அங்ஙனம் ஓடுகின்ற ஆயாஸத்தினால் குறுவியர்ப்புததோன்றி அழகாயிருப்பதைக் காணுங்கோளென்று காட்டுகிற படி. முற்றில்—சிறு முறம். 'முச்சல்' என்று சிறுவர்களின் வழக்கச்சொல். ... (கக)

**42.** அழகியபைம்பொன்னின் கோலங்கைக்கொண்டு* கழல்கள்சதங்கை கலந்தெங்குமார்ப்ப* மழகன்றினங்கள் மறித்துத்திரிவான்* குழல்களிருந்தவாகாணீரே குவி முலையீர் வந்துகாணீரே. (உ௰)

அழகியபைம்பொன்னின் கோல — அழகியதும் பசும்பொன்னால் செய்யப்பட்டதுமான மாடுமேய்க்குங்கோலை
அம் கை கொண்டு — அழகிய கையிலே பிடித்துக்கொண்டு
கழல்கள் சதங்கை கலந்து எங்கும் ஆர்ப்ப — (கால்களிலுள்ள) வீரக்கழல்களும் சதங்கைகளும் தன்னிலே சேர்ந்து போமிடமெல்லாம் ஒலிக்க
மழ கன்று இனங்கள் — இளமை பொருந்திய கன்றுகளின் திரள்களை
மறித்து திரிவான் — மடக்கித் திரியுமவனை கண்ணபிரானுடைய
குழல்கள் — திருக்குழல்களானவை
இருந்த ஆ காணீர்!!—.
குவி முலையீர்! வந்து காணீர்!!—.

* * *—கண்டவர்கள் கண்ணுக்கு அழகியதாய்ப் பசும்பொன்னாலே செய்யப்பட்டதான கோலை, கன்றுகளைமடக்கிமேய்ப்பதற்குக் கருவியாகக் கையிலே கொண்டும், கன்றுகளை மடக்குவதற்காக ஓடுகையாலே திருவடிகளிலே சாத்தியிருக்கிற வீரத்தண்டைகளும் சதங்கைகளும் ஒன்றோடொன்று கலந்து எங்கும் ஒலிக்கவும், இளங்கன்றுகளின் கூட்டங்களைச் சிதறிப்போகவொட்டாமல் மடக்கி மேய்க்கின்ற கண்ணபிரானுடைய அசைந்தலைந்து விளங்குகின்ற திருக்கேச பாசங்களின் அழகைக் காணுங்கள் என்று—பாதாதிகேசாந்தமாகக் காட்டித் தலைகட்டிற்றாயிற்று. ... ... ... (உ௦)

**43.** கருப்பார்குழலி அசோதைமுன்சொன்ன* திருப்பாதகேசத்தைத் தென்புதுவைப்பட்டன்* விருப்பாலுரைத்த இருபதோடொன்றுமுரைப்பார்போய்* வைகுந்தத்தொன்றுவர்தாமே. (உக)

கரும்பு ஆர் குழலி அசோதை முன் சொன்ன — வண்டுகள் படிந்து நிறைந்த கூந்தலையுடையளான யசோதைப் பிராட்டியால் க்ருஷ்ணாவதார ஸமயத்தில் சொல்லப்பட்ட
திரு பாத கேசத்தை — பாதாதிகேசாந்த வர்ணநப் பாசுரங்களை
தென் புதுவை பட்டன் — அழகிய ஸ்ரீ வில்லிபுத்தூருக்கு (நிர்வாஹகரான) ஆழ்வார்
விருப்பால் உரைத்த — மிக்க ஆதரத்தோடு அருளிச்செய்த
இருபதோடு ஒன்றும் உரைப்பார் தாம் — (இவ் விருபத்தொரு பாட்டுக்களையும் ஓதுமவர்கள
போய் வைகுந்தத்து ஒன்றுவர் — (இம்மண்டலத்தைக்கடந்து) போய் ஸ்ரீ வைகுண்டத்திலே பொருந்தப் பெறுவர்கள்.

* * *—க்ருஷ்ணாவதார ஸமயத்தில் யசோதைப்பிராட்டியானவள் ஊர்ப்பெண்டுகளையெல்லாம் அழைத்துக் கண்ணபிரானுடைய பாதாதிகேசாந்த அவயவங்களின் அழகைக் காட்டின பாசுரங்களையே நான் பேசியிருக்கிறேன்; இப்பாசுரங்களை ஓதவல்லவர்கள் எம்பெருமானை நித்யாநுபவம் பண்ணுவதற்குப் பாங்கான திருநாட்டில் சென்று இன்புறுவர்—என்று இத்திருமொழி கற்றார்க்குப் பலனசொல்லித் தலைக்கட்டினாராயிற்று.

கரும்பு+ஆர், கருப்பார். பாதகேசம்—வடசொல்தொடர். பாதகேசமென்றது—பாதாதிகேசாந்த வர்ணனை என்றபடி. ... ... ... ... (உக)

இரண்டாந் திருமொழி உரை முற்றிற்று.

## முதற்பத்து—மூன்றாந்திருமொழி: மாணிக்கங்கட்டி.

அவதாரிகை:—யசோதைப்பிராட்டியானவள் வளர்பிள்ளையான கண்ணபிரானைத் தொட்டிலிலே கண்வளர்த்தித் தாலாட்டினபடியை அவளைப்போலவே தாமும் அநுபவித்துப் பேசும் திருமொழி இது. எம்பெருமான் எந்த இடத்தில் எந்தத் திருமேனியோடு அவதரித்தாலும் அவனுடைய நிற்றல் இருத்தல் கிடத்தல் நடத்தல் முதலிய செய்கைகளைக்கண்டால் பிரமன் சிவனிந்திரன் முதலான தேவர்கட்கும் தங்களாலியன்றவளவு கைங்கரியம் செய்யாமல் நிற்க முடியாதாகையாலே, அத்தேவர்கள் அவ்வாறே சில கிஞ்சித்காரங்கள் செய்ததாக யசோதைப்பிராட்டி எண்ணமிட்டு, ஒவ்வொருபாட்டிலும் ஒவ்வொரு தேவதையின் கிஞ்சித்காரத்தைச் சொல்லிச் சீராட்டித் தாலாட்டின படி இது.

**44.** மாணிக்கங்கட்டி வயிரமிடைகட்டி * ஆணிப்பொன்னாற்செய்த வண்ணச்சிறுத்தொட்டில் *
பேணியுனக்குப் பிரமன்விடுதந்தான் * மாணிக்குறளனே தாலேலோ
வையமளந்தானே தாலேலோ. (க)

| | | | |
|---|---|---|---|
| மாணிக்கம் கட்டி | மாணிக்கத்தை (இரண்டருகும்) கட்டியும் | பேணி உனக்கு விடுதந்தான் | விரும்பி உனக்கு அனுப்பினான்; |
| இடை வயிரம் கட்டி | நடுவில் வயிரத்தைக்கட்டியும் | மாணி குறளனே | ப்ரஹ்மசாரி வாமநாவதாரம் பண்ணின கண்ணனே! தாலேலோ!—; |
| ஆணி பொன்னால் செய்த | மாற்றுயர்ந்த பொன்னால் செய்யப்பட்ட | வையம் அளந்தானே | உலகங்களை (த்ரிவிக்ரமனாய்) அளந்தவனே! தாலேலோ—. |
| வண்ணம் சிறு தொட்டில் | அழகிய சிறியதொட்டிலை | | |
| பிரமன் | சதுர்முகனானவன் | | |

* * *—திவ்யமான தொட்டிலைப் பிரமன் கொணர்ந்து ஸமர்ப்பித்தானென்கிறாள். மாணிக்கம்—நவரத்நங்களுள் ஒன்று; இது செந்நிறமுடையது; [நூல்களில் கருமாணிக்கமெனவருதல் இல்பொருளுவமையாம்.] ஆணிப்பொன்—மாற்றறிதற்குக்கொள்ளும் உயர்தரப் பொன்; இதுக்குமேலே மாற்றில்லையென்னும்படியான சிறந்த பொன் என்றுமுரைப்பர். தால் ஏல் ஓ=தால்-"தாலு" என்றவடசொல் விகாரம், தாடையென்றுபொருள்; ஏல் ஓ—அசைச்சொற்கள்; குழந்தைகளைத் தொட்டிலிலிட்டுப் பெண்கள் 'உளு உளு உளு ஆயி இ!' என்று உள் தாடையை நாவாலே ஒலித்துச் சீராட்டுதலைத் 'தாலேலோ' என்று வழங்குதல் மரபு. மாணிக்கம், வயிரம், வண்ணம், பிரமன்—வடசொல் விகாரங்கள் ... ... (க)

**45.** உடையார்கனமணியோடு ஒண்மாதளம்பூ * இடைவிரவிக்கோத்த எழில்தெழ்கினோடு *
விடையேறுகாபாலி யீசன்விடுதந்தான் * உடையாயழேலழேல்தாலேலோ
உலகமளந்தானே தாலேலோ. (உ)

| | | | |
|---|---|---|---|
| உடை ஆர் கனம் மணியோடு | திருவரைக்குச் சேரும்படியான பொன் மணியையும் | விடை ஏறு காபாலி ஈசன் விடுதந்தான்; | ரிஷபவாஹநனாய் கபாலதாரியாய் ஸ்வவ்யூஹத்துக்கு நியாமகனான ருத்ரன் அனுப்பியுள்ளான்; |
| இடை விரவி கோத்த எழில் தெழ்கினோடும் | நடுநடுவே கலந்து கோக்கப்பட்ட அழகிய இடைச் சரிகையையும், | உடையாய் | ஸ்வாமியான கண்ணனே |
| ஒண் மாதளம் பூ | அழகிய மாதளம்பூக் கோவையான அரை வடத்தையும் | அழேல் அழேல் | அழாதே அழாதே தாலேலோ—; |
| | | உலகம் அளந்தானே! தாலேலோ—. | |

* * *—சிவபிரான் மாதளம்பூக் கோவையென்கிற அரைவடம் முதலியவற்றை அனுப்பியிருக்கிறான் (அவற்றைச் சாத்திக்கொள்) என்று சொல்லித் தாலாட்டுகிறாள். உடை என்பது வஸ்திரத்துக்கு வாசகமாயினும் இங்குத் தானியாகுபெயராய் இடையைக் காட்

டிற்று. தேழ்கு—அரையில் சொருகும் கத்தி. சிவன் ரிஷபவாஹனனுதலால் விடையேறு என்றும், பிரமனுடைய ஐந்து தலைகளிலொன்றைப் பறித்துவிட்டதனால் அக்கபாலம் அப்படியே கையிலொட்டிக் கொண்டதுபற்றிக் காபாலி என்றும், அணிமா மஹிமா கரிமா லகிமா ப்ராப்தி ப்ராகாம்யம் ஈசத்வம் வசித்வம் என்று சொல்லப்படுகிற அஷ்டைச்வரியங்களையுடையனுகையாலே ஈசன் என்றும் சொல்லப்பட்டான். கனகம் என்றவடசொல் கனம் எனக் குறைந்தது. உடையாய்—'உடையான்' என்பதன் ஈறுதிரிந்த விளி. ... ... (௨)

**46.** எந்தம்பிரானார் எழில்திருமார்வர்க்கு * சந்தமழகிய தாமரைத்தாளர்க்கு *
இந்திரன்றானும் எழிலுடைக்கிண்கிணி * தந்துவனாய்நின்றான்தாலேலோ தாமரைக்
கண்ணனேதாலேலோ. (௫)

| | | | |
|---|---|---|---|
| எம் தம்பிரானார் | எமக்கு ஸ்வாமியாய் | எழில் உடை கிண் கிணி | அழகையுடைய கிண்கிணியை |
| எழில் திரு மார் வர்க்கு | அழகிய திருமார்பை யுடையராய் | தந்து உவனாய் நின்றான் | கொணர்ந்து ஸமர்ப்பித்து அதோ இராநின்றான்; |
| சந்தம் அழகிய தாமரை தாளர்க்கு | நிறத்தாலழகிய தாமரை போன்ற திருவடிகளை யுடையரான தேவர்க்கு | | தாலேலோ!—; |
| இந்திரன் தானும் | தேவேந்த்ரனானவன் | | தாமரைக் கண்ணனே! தாலேலோ—. |

* * *—இந்திரன் அரைச்சதங்கையைக்கொண்டுவந்து ஸமர்ப்பித்து அதோ நிற்கிறான் காண் என்று சொல்லித் தாலாட்டுகின்றாள். முன்னிரண்டடிகளும் படர்க்கையாயிருந்தாலும் முன்னிலைப் படர்க்கையெனக் கொள்க. எழில் திருமார்வனும் தாமரைத்தாளனுமான உனக்கு என்றபடி. 'கிண் கிண்' என்று ஒலிப்பதுபற்றிச் சதங்கைக்குக் கிண்கிணி யென்று காரணப்பெயராயிற்று. உவன்—நடுவிலிருப்பதைக் காட்டுஞ் சுட்டெழுத்தான 'உ' என்பதனடியாய்ப் பிறந்த ஆண்பாற்பெயர்; அதிக தூரத்திலும் அதிக ஸமீபத்திலுமில்லாமல் நடுத்தரமாயிருப்பவனென்று பொருள். ... ... ... (௫)

சங்கின்வலம்புரியுஞ் சேவடிக்கிண்கிணியும் * அங்கைச்சரிவளையும் நாணுமரைத்தொடரும் *
அங்கண்விசும்பில் அமரர்கள்போத்தந்தார் * செங்கட்கருமுகிலேதாலேலோ
தேவகிசிங்கமேதாலேலோ. (௬)

| | | | |
|---|---|---|---|
| சங்கில் வலம்புரியும் | சங்குகளில் (சிறந்த) வலம்புரிச்சங்கையும் | அம் கண் விசும்பில் அமரர்கள் போத்தந்தார் | அழகிதாய் விசாலமான ஸ்வர்க்கத்திலுள்ள தேவர்கள் அனுப்பினார்கள்; |
| சே அடி கிண்கிணியும் | செவ்விய திருவடிகளில (சாத்தத்தகுந்த) சதங்கையையும் | செம் கண் கரு முகிலே | சிவந்த கண்களையுடையையாய் காளமேகம்போன்ற வடிவையு முடையையான கண்ணனே!, |
| அம் கை சரிவளையும் | அழகிய கைகளுக்கு உரிய முன்கை வளைகளையும் தோள்வளைகளையும் | | தாலேலோ—; |
| நாணும் | பொன்னரை நாணையும் | தேவகி சிங்கமே | தேவகியின் வயிற்றிற்பிறந்த சிங்கக் குருகே!; தாலேலோ—. |
| அரை தொடரும் | அரைவடத்தையும் | | |

* * *—தேவதைகள் பலர் கூடிப் பல திருவாபரணங்களை அனுப்பியிருக்கிறார்களென்று சொல்லித் தாலாட்டுகிறாள்.

சங்கில்+வலம்புரி, சங்கின் வலம்புரி; "குறில்செறியாலள அல்வழிவந்த..." என்ற நன்னூற்சூத்திரத்தினிறுதியில் 'பிற' என்றமிகையை நோக்குக. நாண்—திருமார்வுக்கு அலங்காரமாகச் சாத்தத்தக்க நாணுகவுமாம். செங்கண்+கருமுகில், செங்கட்கருமுகில். கருமுகிலே!—முற்றுவமை. .... .... ... (௬)

**48.** எழிலார்திருமார்பிற்கு ஏற்குமிவையென்று * அழகியவைம்படையும் ஆரமுங்கொண்டு *
வழுவில்கொடையான் வயிச்சிரவணன் * தொழுதுவனாய்நின்றான்தாலேலோ தூமணி
வண்ணனேதாலேலோ. (ரு)

| | | | |
|---|---|---|---|
| எழில் ஆர் திருமார்பிற்கு இவை ஏற்கும் என்று | "அழகு மிக்கிருந்துள்ள வக்ஷஸ்ஸ்தலத்துக்கு இவை பொருந்தும்" என்று | தொழுது | (இவற்றைத் திருவுள்ளம் பற்ற வேணுமென்று) அஞ்ஜலி பண்ணிக் கொண்டு |
| அழகிய ஐம்படையும் ஆரமும் கொண்டு | அழகியவையான பஞ்சாயுதங்களையும் முத்துவடத்தையும் எடுத்துக்கொண்டு, | உவனாய் நின்றான், தாலேலோ—; | |
| வழு இல் கொடையான் வயிச்சிரவணன் | குற்றமற்ற ஔதார்யத்தையுடையவனான குபேரனானவன் | தூமணிவண்ணனே | பழிப்பற்ற நீலமணிபோன்ற வடிவையுடைய கண்ணனே! தாலேலோ—. |

* * *—சிறுகுழந்தைகளுக்கு அணுக்கம் வாராமலிருப்பதற்காக எம்பெருமானுடைய பஞ்சாயுதங்களையமைத்துக் கழுத்திலணியும்படி ஓர் ஆபரணஞ்செய்து அணியச்செய்வது வழக்கம்; அவ்வாபரணமே இங்கு ஐம்படை என்கிறது; அதனைக் குபேரன் கொணர்ந்து ஸமர்ப்பித்து அதோ நிற்கிறான்காண் என்று சொல்லித் தாலாட்டுகிறாள். "திருமார்பிற்கு," "திருமார்வுக்கு" என்பன பாடபேதங்கள் ஹாரமென்ற வடசொல் ஆரமெனத்திரிந்தது.

வழுவில் கொடையான்—அரைகுறையாகக் கொடுப்பது, அஹங்காரத்தோடு கொடுப்பது, கைம்மாறு கருதிக்கொடுப்பது, கேட்டபின்பு கொடுப்பது, புகழை விரும்பிக்கொடுப்பது ஆகிய இவையெல்லாம் தானத்திற்குக் குற்றங்கள்; அவ்வகைக் குற்றமொன்றுமில்லாதபடி கொடுப்பவனும் குபேரன். 'வைச்ரவணன்' என்ற வடசொல் வயிச்சிரவணனென விகாரப்பட்டது. ப்ரஹ்மபுத்ரனான புலஸ்த்யப்ரஜாபதியினுடைய புத்திரனாகிய விச்ரவ முனிவனுக்கு பரத்வாஜ புத்திரியினிடம் பிறந்தவனான குபேரனைச் சொல்லுகிறது. ... (ரு)

**49.** ஓதக்கடலில் ஒளிமுத்தினாரமும் * சாதிப்பவளமுஞ் சந்தச்சரிவளையும் *
மாதக்கவென்று வருணன்விடுதந்தான் * சோதிச்சுடர்முடியாய்தாலேலோ சுந்தரத்
தோளனேதாலேலோ. (சா)

| | | | |
|---|---|---|---|
| ஓதம் கடலில் ஒளி முத்தின் ஆரமும் | அலையெறிப்பையுடைய ஸமுத்திரத்தில் (உண்டாய்) ஒளியையுடைத்தாய் முத்துக்களால் கோக்கப்பட்ட ஹாரத்தையும் | மா தக்க என்று | 'விலையில் சிறந்து தகுதியாயிருந்துள்ளவை' என்று |
| | | வருணன் விடுதந்தான்; | வருணதேவனானவன் அனுப்பியுள்ளான் |
| சாதி பவளமும் | நல்ல ஜாதியிலுண்டான பவழவடத்தையும் | சோதி சுடர் முடியாய் | மிக்கஜ்யோதிஸ்ஸை யுடைய கிரீடத்தையணிந்த கண்ணனே! தாலேலோ—; |
| சந்தம் சரி வளையும் | அழகுபொருந்திய முன்கை வளைகளையும் தோள்வளைகளையும் | சுந்தரம் தோளனே | அழகிய திருத்தோள்களையுடைய கண்ணனே! தாலேலோ—. |

* * *—வருணதேவன் கருங்கடற் கடவுளாதலால் அக்கடலில் நின்றுந்தோன்றின முத்துக்களினாலும் பவழங்களினாலும் ஆகிய ஹாரங்களையும் முன்கைச்சரிகளையும் சங்குவளையல்களையும் அனுப்பினான்; அதைச்சொல்லித் தாலாட்டுகிறாள். அரக்கு முதலியவற்றால் செய்யப்பட்ட க்ருத்ரிமப்பவழங்களும் உண்டாதலால் அப்படியல்லாமல உண்மையான சிறந்த பவளமென்கைக்காகச் சாதிப்பவள மெனப்பட்டது. சோதிச்சுடர்—ஒருபொருட்பன்மொழி. தக்க—வினைமுற்று. ... ... ... (சா)

கானார்நறுந்துழாய் கைசெய்தகண்ணியும் * வானார்செழுஞ்சோலைக் கற்பகத்தின் வாசிகையும் *
தேனார்மலர்மேல் திருமங்கைபோத்தந்தாள் * கோனேயழேலழேல்தாலேலோ
குடந்தைக்கிடந்தானேதாலேலோ. (எ)

| | |
|---|---|
| தேன் ஆர் மலர் மேல் திருமங்கை | தேன் நிறைந்துள்ள (செந்தாமரை) மலரிலுறைகின்ற பெரிய பிராட்டியார், |
| கான் ஆர் நறு துழாய் கைசெய்த கண்ணியும் | காட்டிலுண்டான பரிமளம் மிக்க துளவினாலே தொடுத்த மாலையையும் |
| வான் ஆர் | சுவர்க்கலோகத்தில் நிறைய வளர்ந்துள்ள |
| செழு சோலை | செழுமைதங்கிய சோலையாய்த்தழைத்த |
| கற்பகத்தின | கல்பவ்ருக்ஷத்தின் பூக்களால் தொடுத்த |
| வாசிகையும் | திருநெற்றிமாலையையும் |
| போத்தந்தாள | அனுப்பினாள்; |
| கோனே | ஸர்வஸ்வாமியான கண்ணனே! |
| | அழேல் அழேல் தாலேலோ!—; |
| குடந்தை கிடந்தானே | திருக்குடந்தையிலே கண் வளர்ந்தருளுகிற ஸர்வேச்வரனே! |
| | தாலேலோ—. |

* * *—நல்ல திருத்துழாய்மாலை முதலியவற்றைப் பெரிய பிராட்டியார் கொடுத்தனுப்பினளென்று சொல்லித் தாலாட்டுகிறாள். கானனம் என்ற வடசொல் கான் எனச்சிதைந்தது: தன்னிலத்தில் வளர்ந்ததனால் மணங்குன்றாத திருத்துழாய் என்றபடி. கைசெய்த என்றவிடத்து, கை—தமிழுபசர்க்கம். (எ)

51. கச்சொடுபொற்சுரிகை காம்புகனவளை * உச்சிமணிச்சுட்டி ஒண்டாள்நிரைப்பொற்பூ *
அச்சுதனுக்கென்று அவனியாள்போத்தந்தாள் * நச்சுமுலையுண்டாய்தாலேலோ
நாராயணாவழேல்தாலேலோ. (அ)

| | |
|---|---|
| கச்சொடு | கச்சுப்பட்டையையும் |
| பொன் சுரிகை | பொன்னாற்செய்த உடைவாளையும் |
| காம்பு | கரைகட்டிய சேலையையும் |
| கனம் வளை | கனகமயமான தோள்வளைகளையும் |
| மணி உச்சி சுட்டி | ரத்னமிழைத்துச் செய்யப்பட்டதாய் உச்சியிலேசாத்தத்தக்கதான சுட்டியையும் |
| ஒண் தாள் நிரை பொற்பூ | அழகிய காம்புகளையுடைத்தாய் ஒழுங்கான பொற்பூவையும் |
| அச்சுதனுக்கென்று | 'கண்ணபிரானுக்கு (க்கொடுக்கோள்)' என்று |
| அவனியாள் | பூமிப்பிராட்டியானவள் |
| போத்தந்தாள் | அனுப்பினாள்; |
| நஞ்சு முலை உண்டாய் | விஷமேற்றின (பூதனையின்) முலையின் பாலை உண்ட கண்ணனே! |
| | தாலேலோ—; |
| | நாராயணா! அழேல்! தாலேலோ— |

* * *—ஸ்ரீபூமிப்பிராட்டியார் சில ஆபரணங்களையும் ஆடையையும் கொடுத்தனுப்பினதைச்சொல்லித் தாலாட்டுகிறாள். அச்சுதனுக்கு என்றது முன்னிலைப்படர்க்கை; அச்சுதனாகவுனக்கு என்றவாறு. அவநி—வடசொல்; பூமி. 'ச்சுரிகா' என்ற வடசொல் சுரிகையெனத்திரிந்தது; கத்தி. ... ... ... ... (அ)

மெய்திமிருநானப் பொடியோடுமஞ்சளும் * செய்யதடங்கண்ணுக்கு அஞ்சனமும் சிந்துரமும்*
வெய்யகலைப்பாகி கொண்டுவளாய்நின்றாள் * ஐயாவழேலழேல்தாலேலோ
அரங்கத்தணையானேதாலேலோ. (கூ)

| | |
|---|---|
| மெய்திமிரும்நானம் பொடியோடு | திருமேனியிலே பூசுகைக்குரிய கஸ்தூரி, கருப்பூரம், சந்தனம் முதலிய ஸுகந்தப் பொடிகளையும |
| மஞ்சளும் | மஞ்சள்பொடியையும், |
| செய்ய தட கண்ணுக்கு | சிவந்ததாய் விசாலமாயுள்ள கண்களில் (சாத்த) |
| அஞ்சனமும் | மையையும், |
| | (திருநெற்றியில் சாத்துகைக்கு) |
| சிந்தூரமும் | ஸிந்தூரத்தையும, |
| வெய்ய கலை பாகி | கொடிய ஆண்மானைவாஹனமாகவுடைய துர்க்கையானவள் |
| கொண்டு | எடுத்துக்கொண்டு வந்து |
| உவளாய் நின்றாள | அதோ இராநின்றாள்; |
| ஐயா | ஸ்வாமியான கண்ணனே |
| | அழேல் அழேல் தாலேலோ—; |
| அரங்கத்து அணையானே | ஸ்ரீரங்கத்தில் (திருவனந்தாழ்வானைப்) படுக்கையாகவுடையவனே! |
| | தாலேலோ—. |

***—தூர்க்காதேவியானவள் வாசனைப்பொடி முதலியவற்றைக்கொண்டு ஸமர்ப்பிக்க வந்திருக்கிறாளென்றுசொல்லித் தாலாட்டுகின்றாள். தூர்க்கைக்கு மான் வாஹனமாகையால் கலைப்பாகி எனப்பட்டது. 'பாகன்' என்பதன் பெண்பால் பாகி என்பது; மானின்மேல் ஏறிக்கொண்டு அதனைச்செலுத்துபவள். கலா என்ற வடசொல் 'கலை' என ஐயீறுகத் திரிந்ததென்று கொண்டு நூற்கலைகளை நடத்துகிற ஸரஸ்வதி என்று பொருள்கொள்வதும் ஏற்கும்; இப்பொருளில் வெய்ய என்பதற்கு—விரும்பப்படுகின்ற என்று பொருள். இத்திருமொழியில் முதற்பாட்டில் பிரதானனாகப் பிரமதேவன் சொல்லப்பட்டபடியால் அவனுக்குப் பத்தினியான ஸரஸ்வதியை இப்பாட்டிற் சொல்லிமுடிக்கிறதென்று கொள்வது மிகவுமிணங்கும்...(௯)

53\. வஞ்சனையால்வந்த பேய்ச்சிமுலையுண்ட * அஞ்சனவண்ணனை ஆய்ச்சிதாலாட்டிய *
செஞ்சொல்மறையவர் சேர்புதுவைப்பட்டன்சொல் * எஞ்சாமைவல்லவர்க்கு
இல்லையிடர்தானே. (௰)

| | | | |
|---|---|---|---|
| வஞ்சனையால் வந்த பேய்ச்சி முலை உண்ட | வஞ்சகவேஷத்தோடே வந்த பூதனையினுடைய முலையை அமுதுசெய்தவனாய் | செம் சொல் மறையவர் சேர் புதுவை | செவ்விய சொற்கள்நிறைந்த வேதங்களில் வல்லவரான ஸ்ரீவைஷ்ணவர்கள் நித்யவாசம் பண்ணப்பெற்ற |
| அஞ்சனம் வண்ணனை | மைபோன்ற நிறத்தையுடையனான கண்ணபிரானை | பட்டன் சொல் | ஸ்ரீ வில்லிபுத்தூரிலவதரித்த பெரியாழ்வார் அருளிச்செய்த இப்பாசுரங்களை |
| ஆய்ச்சி | யசோதைப்பிராட்டி | எஞ்சாமை | குறைவுபடாமல் |
| | | வல்லவர்க்கு | ஓதவல்லவர்களுக்கு |
| தாலாட்டிய | தாலாட்டினபடிகளை, | இடர் இல்லை | துன்பமொன்றுமில்லையாம்.; |

***—கண்ணபிரானைத் தொட்டிலிற் கண்வளர்த்தித் தாலாட்டாக யசோதைப்பிராட்டி அன்று சொன்ன பாசுரங்களை உட்கொண்டு நான் இத்திருமொழி பாடினேன்; இதை நன்றாகக் கற்பவர்கள் ஒருவகைத் துன்பமுமடையாமல் நித்யாநந்தம பெறுவரென்று இத்திருமொழி கற்றார்க்குப்பலன் சொல்லித் தலைக்கட்டினாராயிற்று. தாலாட்டிய என்றது விசேஷணமன்று; இறந்தகாலப் பலவின்பால் வினையாலணையும் பெயர். இரண்டாம் வேற்றுமையுருபும் பயனுமுடன்தொக்க தொகை. ... ... ... (௧௦)

மூன்றாம் திருமொழி உரை முற்றிற்று.

---

## முதற்பத்து—நான்காந் திருமொழி. தன்முகத்துச்சுட்டி

அவதாரிகை:—கண்ணபிரானுக்குத் தொட்டில பருவம்போய்த் தவழ்ந்து விளையாடத் தக்க பருவமானபின்பு, அவன் நீணிலாமுற்றத்தே போந்துதவழ்ந்து புழுதி யளைவது, சந்திரனை யழைப்பதானபடியை யசோதைப்பிராட்டி அநுபவித்து, அவனுக்கு உகப்பாகச் சந்திரனை வரச்சொல்லித் தான்பலகாலுமழைத்த ப்ரகாரத்தை ஆழ்வார்தாமும் அநுபவபூர்வமாகப்பேசி இனியராகிறார்.

54\. தன்முகத்துச்சுட்டி தூங்கத்தூங்கத்தவழ்ந்துபோய் *
பொன்முகக்கிண்கிணியார்ப்பப் புழுதியளைகின்றான் *
என்மகன்கோவிந்தன் கூத்தினையிளமாமதீ *
நின்முகங்கண்ணுளவாகில் நீயிங்கேநோக்கிப்போ. (௧)

| | | | |
|---|---|---|---|
| இளமாமதி | இளமைதங்கிய அழகிய சந்திரனே! | புழுதிஅளைகின்றான் | தெருப்புழுதிமண்ணை அளைவாநிற்பவனும் |
| தன் முகத்து சுட்டி தூங்க தூங்க | தன்முகத்தில (விளங்குகிற) சுட்டியானது பலகாலும் தாழ்ந்து அசையவும் | என் மகன் கோவிந்தன் கூத்தினை | எனக்குப் பிள்ளையுமான கண்ணபிரானுடைய சேஷ்டைகளை, |
| பொன் முகம் கிண் கிணி ஆர்ப்ப | அழகிய முகத்தையுடைய சதங்கைகளானவை கிண் கிண் என்றொலிக்கவும் | நின் முகம் கண் உள ஆகில் | உன்முகத்தில் கண் உண்டேயானால் |
| தவழ்ந்து போய் | (முற்றத்தில்) தவழ்ந்து போய் | நீ இங்கே நோக்கி போ | நீ இங்கே பார்த்துப்போ. |

* * *—சந்திரா! எனது குழந்தையாகிய இக்கோபாலக்ருஷ்ணன் தனது நெற்றியிலே சுட்டி அசையவும், அரையிலே சதங்கை கிண்கிண் என்று சப்திக்கவும் தவழ்ந்துவந்து புழுதி யளைகின்றான்; இந்த விளையாட்டைக் கண்டால்தான் நீ கண்படைத்த பயன் பெறுவாய்; ஆகையாலே இவ்விளையாட்டைக் காண்கிற வியாஜமாக நீ இங்கே வந்து இக்குழந்தையின் கண்ணிலே தென்படுவாயாக என்று யசோதைப்பிராட்டி சந்திரனை யழைக்கிறாள். (க)

**55.** என்சிறுக்குட்டன் எனக்கோரின்னமுதெம்பிரான் *
தன்சிறுக்கைகளால் காட்டிக்காட்டியழைக்கின்றான் *
அஞ்சனவண்ணனோடு ஆடலாடவுறுதியேல் *
மஞ்சில்மறையாதே மாமதீமகிழ்ந்தோடிவா. (உ)

| | | | |
|---|---|---|---|
| மா மதி!—;. | | காட்டி காட்டி அழைக்கின்றான் | பலகாலும் (உன்னை நோ) காட்டி அழையாநின்றான்; |
| எனக்கு ஓர் இன் அமுது | (தாமாகிய) விலக்ஷணமாய் மதுரமா யிருப்பதொரு அம்ருதம் போன்றவனாய் | அஞ்சனம வண்ணனோடு | மைபோன்ற வடிவுடையவிக் கண்ணபிரானோடு |
| எம் பிரான் | எனக்கு உபகாரகனான | ஆடல் ஆட உறுதியேல் | விளையாடக் கருதினாயாகில் |
| என் சிறுக் குட்டன் | என் மகனான கண்ணன் | மஞ்சில் மறையாது | மேகத்தில் சொருகிமறையாமல் |
| தன் சிறுகைகளால் | தன்னுடைய சிறிய கைகளால் | மகிழ்ந்து ஓடி வா | உகந்து ஓடிவா. |

* * *—சிறு குழந்தைகளை மாதா முதலாயினோர் மாலைப்பொழுதில் இடுப்பிலெடுத்துக் கொண்டு 'சந்த மாமா! வா வா வா' என்று சொல்லக் கற்பித்துக் கையால் அழைக்கும்படி செய்வதும் உலக வழக்கமாதலால் அப்படியே கண்ணபிரானும் அழைக்கிறானென்க. சந்திரன் மேகத்தில் மறைந்து போவது இயல்பாதலால், அப்படி மறைந்து போகவேண்டா வென்கிறாள். மறையாதே என்பதை எதிர்மறை வினைமுற்றாகவும் கொள்ளலாம். ... (உ)

**56.** சுற்றுமொளிவட்டம் சூழ்ந்துசோதிபரந்தெங்கும் *
எத்தனைசெய்யிலும் என்மகன்முகம்நேரொவ்வாய் *
வித்தகன்வேங்கடவாணன் உன்னைவிளிக்கின்ற *
கைத்தலம்நோவாமே அம்புலீகடிதோடிவா. (ங)

| | | | |
|---|---|---|---|
| அம்புலீ | சந்த்ரனே! (உன்னுடைய) | முகம் நேர் ஒவ்வாய் | திருமுகமண்டலத்துக்குப் பூர்ணமாக ஒப்பாகமாட்டாய்; |
| ஒளி வட்டம் | ஒளிபொருந்திய மண்டலமானது (எப்போதும்) | வித்தகன் | ஆச்சர்யப்படத்தக்கவனாய் |
| சுற்றும் சூழ்ந்து | நாற்புறமும் சுழன்று | வேங்கடம் வாணன் | திருவேங்கடமலையிலே நன்றாக வாழுமவனான இக் கண்ணபிரான் |
| எங்கும் | எல்லாத்திசைகளிலும் | | |
| சோதி பரந்து | ஒளிநிரம்பி யிருக்குமாறு | | |
| எத்தனை செய்யிலும் | இப்படி உன்னை எவ்வளவு அழகுசெய்து கொண்டாலும் | உன்னை விளிக்கின்ற கை தலம் நோவாமே | உன்னை அழைக்கிற திருக்கைத்தலத்தில நோவு மிகாதபடி |
| என் மகன் | என் மகனான கண்ணபிரானுடைய | கடிது ஓடி வா | சீக்கிரமாய் ஓடிவா. |

* * *—"மாமதி! மகிழ்ந்தோடிவா" என்று அழைக்கச்செய்தேயும் சந்திரன் ஓடி வரக் காணாமையாலே 'அழகில் தன்னோடொப்பா ரொருவருமில்லை' என்கிற கர்வத்தினால் இவன் வாராமலிருக்கிறானென்றுகொண்டு அந்தச் செருக்கு அடங்கப் பேசுகிறாள். சந்திரா! நீ இப்போது நாள்தோறும் தேய்வதும் வளர்வதுமா யிருக்கின்றாய்; களங்கமுடையனாயு மிருக்கின்றாய்; இப்படி யில்லாமல் நீ எப்போதும் க்ஷயமென்பதே யில்லாமல் பூர்ண மண்டலமாகவே யிருந்து களங்கமும் நீங்கிச் செயற்கையழகு செய்துகொண்டு விளங்கினாலும் என் குழந்தையினுடைய முகத்திற்குச் சிறிதும் ஒப்பாக மாட்டாய். ஆகையாலே நாமே அழகிற் சிறந்துள்ளோமென்கிற செருக்கையொழித்து, உன்னைக் காட்டிலும் மிக அழகிய முகமண்டலத்தை யுடையவனான இவன் உன்னைக் கைகளாலழைப்பதைப் பரமபாக்யமாக

அநுஸந்தித்து விரைந்தோடிவா; வராவிட்டால் வெகுகாலமாக உன்னை யழைக்கிற இக்குழந்தைக்குக் கைநோவு ஒன்றே மிகும்; இவ்வபசாரத்தை நீ அடைந்திடாதே என்றவாறு. "வாழ்நன்" என்பது வாணனென மருவிற்று. ... .... ... (ரு)

57\. சக்கரக்கையன் தடங்கண்ணால்மலரவிழித்து *
ஒக்கலைமேலிருந்து உன்னையேசுட்டிக்காட்டுங்காண் *
தக்கதறிதியேல் சந்திராசலஞ்செய்யாதே *
மக்கட்பெறாத மலடனல்லையேல்வாகண்டாய். (சு)

| | | | |
|---|---|---|---|
| சந்திரா | சந்திரனே! | உன்னையே சுட்டி காட்டும் | உன்னையேகுறித்துக் காட்டுகின்றான்; |
| சக்கரம் கையன் | திருவாழியாழ்வானைத் திருக்கையிலணிந்த கண்ணபிரான் | தக்கது அறிதியேல் | (உனக்குத்) தகுதியானதை அறிவாயாகில் (அன்றியும்) |
| ஒக்கலை மேல் இருந்து | (என்) இடுப்பின்மேலிருந்து கொண்டு | மக்கள் பெறாத மலடன் அல்லையேல் | பிள்ளைபெறாத மலடன் அல்லையாகில் |
| தடம் கண்ணால் மலர விழித்து | விசாலமான கண்களாலே மலரப்பார்த்து | சலம் செய்யாதே வா கண்டாய் | கபடம் பண்ணாமல் வந்து நில்கிடாய். |

* * *—சந்திரா! இவனை வெறுங்குழந்தையாக நினைத்து அலட்சியஞ் செய்திடாதே; இவன் சக்கரக்கையன்காண்; நீ வராமலிருப்பாயானால் உன்மேல் சக்கரத்தைப் பிரயோகித்துத் தண்டித்துவிடுவன் என்னும் கருத்தை யடக்கி சக்கரக்கையன் என்கிறாள். "ஆழிகொண்டுன்னை யெறியும் ஐயுறவில்லை காண்" என்று மேலே ஸ்பஷ்டமாகவுங் கூறுவள்.

மக்கள்பெறாத மலடனல்லையேல் வா=குழந்தையை நீ இப்படி துடிக்க விடுவது தகுதியன்று; மக்கள் பெறாதவர்களன்றோ மக்களின் வருத்தமறியார்கள்; அப்படி நீ மலடனல்லையே; பிள்ளைகளை வருத்தப்படுத்தக்கூடாதென்பது உனக்குத் தெரியுமே என்றவாறு. ...(சு)

58\. அழகியவாயில் அமுதவூறல்தெளிவுற *
மழலைமுற்றாத இளஞ்சொல்லாலுன்னைக்கூவுகின்றான் *
குழகன்சிரீதரன் கூவக்கூவநீபோதியேல் *
புழையிலவாகாதே நின்செவிபுகர்மாமதீ! (எ)

| | | | |
|---|---|---|---|
| புகர் மா மதி | தேஜஸ்வியாய் பெருமை பொருந்தியிராநின்ற சந்திரனே!, | குழகன் | எல்லாரோடும் கலந்திருப்பவனாய் |
| அழகிய வாயில் | அழகிய திருப்பவளத்திலே | சிரீதரன் | ச்ரிய: பதியான இக்கண்ணபிரான் |
| ஊறல் | ஊறுகின்ற ஜலமாகிய | கூவக்கூவ நீ போதியேல் | (இப்படி) பலகாலுமழையாநிற்கச்செய்தேயும் நீ போவாயேயானால் |
| அமுதம் | அம்ருதத்தோடேகூடி | | |
| தெளிவுறு | உருத்தெரியாததாய் | | |
| மழலை முற்றாத | மழலைத்தனத்துக்குள்ள முற்றுதலுமில்லாதிருக்கிற | நின் செவி | உன் காதுகளானவை |
| இள சொல்லால் | இளமைபேச்சாலே உன்னை கூவுகின்றான்—; | புழை இல ஆகாதே | துளையில்லாதவையாக ஆகாதோ? [ஆகவே ஆகும்.] |

* * *—சந்திரா! உன்னைக் கூவியழைக்கிற இக்குழந்தையின் இனிய மழலைச்சொல் உன் காதில் விழவில்லையா? செவிடனோ நீ? உன் காதில் துளையில்லையோ? இக்குழந்தை இனிய முற்றாமழலைச் சொல்லினால் உன்னை யழைக்கவும் நீ காது கேளாதாரைப்போலே போய்விட்டாயானால் நீ காது படைத்தது பயனற்றதாகுமன்றோ என்கிறாள். இப்படிப்பட்ட இளஞ்சொல்லைக் கேட்டு உடனே ஓடி வருதலே செவிபடைத்ததற்குப் பலன் என்று காட்டினவாறு. மழலை—எழுத்துக்கள் ஸ்பஷ்டமாகத் தெரியாதே மதுரமாயிருக்குமது. மழலைமுற்றாத இளஞ்சொல் என்றது—மழலைத்தனத்துக்குள்ள முற்றுதலுமில்லாத மிக இளஞ்சொல் என்றபடி. குழகன்—"கொடுத்தார் கொடுத்தார் முலைகளெல்லாமுண்டு எத்தாரெடுத்தாரோடெல்லாம் பொருந்தியிருக்கும் கலப்புடையவன்" என்பது வியாக்கியான வாக்கியம் ...(எ)

59 தண்டொடுசக்கரம் சார்ங்கமேந்துந்தடக்கையன் *
சுண்டுயில்கொள்ளக்கருதிக் கொட்டாவிகொள்கின்றான் *
உண்டமுலைப்பாலறுகண்டாய் உறங்காவிடில் *
விண்டனில்மன்னிய மாமதீவிரைந்தோடிவா. (6)

விண் தனில் மன்னிய மா மதீ! — ஆகாசத்திலே பொருந்திய பெருமை தங்கிய சந்திரனே!
தண்டொடு சக்கரம் சார்ங்கம் ஏந்தும் — 'கௌமோதகி' யென்னும் கதையையும் திருவாழியாழ்வானையும் ஸ்ரீ சார்ங்கமென்னும் வில்லையும் எந்தி
தட கையன் — யிராநின்றுள்ள விசாலமான கைகளையுடைய இக்கண்ணபிரான்
கண் துயில் கொள்ள கருதி — திருக்கண் வளர்ந்தருள நினைத்து
கொட்டாவி கொள்கின்றான் — கொட்டாவி விடாநின்றான்
உறங்காவிடில் — (இப்போது இவன்) உறங்காதொழிந்தால்
உண்ட முலைப்பால் அறும் — அமுது செய்யப்பட்டிருக்கிற ஸ்தந்யமானது ஜரிக்கமாட்டாது;
(ஆகையால்,)
விரைந்து ஓடிவா—.

***—உலகத்தில் மனிதர்களுக்கு அதிகமாகக் கொட்டாவி வந்தால் உடனே உறக்கம் வருமென்பது அநுபவஸித்தமாதலால் ' சண்டுயில் கொள்ளக்கருதிக் கொட்டாவி கொள்கின்றான்" என்கிறாள். இவன் இப்போது கொட்டாவி விடுகிறபடியாலே இனித் தூங்கி விடுவன்; தூங்காவிட்டாலோ உண்ட முலைப்பால் ஜரியாது; ஆதலால் இவன் உறங்கிப்போவதற்கு முன்னமே விரைந்து ஓடிவா என்றழைக்கிறாள். முதலடியில் மூன்று ஆயுதங்களைச் சொன்னது பஞ்சாயுதங்கட்கும் உபலக்ஷணம். இவ்வாயுதங்களின் அழகை ஸேவித்துப் போக வேண்டுவது உனக்கு உரியதேயன்றி இவற்றின் பராக்கிரமத்திற்கு இலக்காகி முடிந்து போகப் பாராதே என்றுணர்த்தியவாறு. அறு—அறுது; ஜரியாது. .... ... (6)

60 பாலகனென்று பரிபவஞ்செய்யேல் * பண்டொருநாள்
ஆலினிலைவளர்ந்த சிறுக்கனவனிவன் *
மேலெழப்பாய்ந்து பிடித்துக்கொள்ளும்வெகுளுமேல் *
மாலைமதியாதே மாமதீமகிழ்ந்தோடிவா. (7)

மா மதீ!—;
பாலகன் என்று — 'இவனொரு சிறுபயலன்றோ' என்று
பரிபவம் செய்யேல் — திரஸ்கரியாதே;
பண்டு ஒருநாள் ஆலின் இலை வளர்ந்த — முன்பொருகாலத்திலே ஆலந்தளிரிலே கண்வளர்ந்தவனாகப் புராணங்களிலே சொல்லப்படுகிற
சிறுக்கன் அவன் — அந்தசிறுபிள்ளையானவன்
இவன் — இவனாகிறான் காண்;
வெகுளும் ஏல் — (இவன்) சீறினானாகில்
மேல் எழ பாய்ந்து பிடித்துக்கொள்ளும் — (உன்மேல்) ஒரு பாய்ச்சலாகப் பாய்ந்து (உன்னைப்) பிடித்துக் கொள்வான்,
(ஆகையால்,)
மாலை மதியாதே — இம்மஹாபுருஷனை அவமதியாமல்
மகிழ்ந்து ஓடிவா—.

***—சந்திரா! ஓயாமல் உன்னை யழைக்கச்செய்தேயும் நீ வாராமையினால் 'இவனொரு சிறுபிள்ளைதானே, இவனுக்காக ஓடிவரவேணுமோ' என்று அலட்சியமாக நினைக்கிறாயென்பது தெரிகின்றது; இவனைச் சிறியவனென்று நீ குறைவாக நினைக்கலாகாது; இவன் முன்னொருகாலத்தில் உலகங்களையெல்லாம் பிரளயங்கொள்ளாதபடி வயிற்றிலே வைத்துக் கொண்டு சிறு பசுங்குழந்தையாயிருந்தவன்காண்; இப்படிப்பட்ட இவனை நீ அலட்சியஞ்

செய்தால் இவன் உன்மேற் கோபங்கொண்டு பாய்ந்தெழுந்து உன்னைப் பிடித்துக்கொள்ளவுங்கூடும்; ஆகையால் இவனை அவமதியாமல் உடனே விரைந்தோடி வா என்கிறாள். (7)

61 சிறியனென்றென்னிளஞ்சிங்கத்தை யிகழேல்கண்டாய் *
சிறுமையின்வார்த்தையை மாவலியிடைச்சென்றுகேள் *
சிறுமைப்பிழைகொள்ளில் நீயுமுன்தேவைக்குரியைகாண் *
நிறைமதி! நெடுமால் விரைந்துன்னைக்கூவுகின்றான். (8)

நிறை மதி — பூர்ணசந்திரனே!
என் இள சிங்கத்தை — எனக்குச் சிங்கக்குருகுபோன்ற கண்ணபிரானை
சிறியன் என்று இகழேல் — (உபேக்ஷிக்கைக்கு உறுப்பான) சிறுமையை யுடையவனாக நினைத்து அவமதியாதே;
சிறுமையின் வார்த்தையை — (இவனுடைய) பால்யத்தில் நடந்த செய்கையை
மாவலி இடை சென்று கேள் — மஹாபலியிடம் போய்க் கேட்டுக் கொள்;
(இப்படியுள்ளவன் விஷயத்தில்)
சிறுமை பிழை கொள்ளில் — சிறுமை நினைத்தவிது மஹாபாரதம் என்று நினைத்தாயாகில்
(அப்போது,) நீயும்—;
உன் தேவைக்கு — (அவன் விஷயத்தில்) நீ பண்ணக் கூடிய அடிமைக்கு
உரியை — தகுந்தவனாவாய்;
(அதெல்லாமப்படி நிற்க;)
நெடு மால் — ஸர்வஸ்மாத்பரனான இவன்
விரைந்து உன்னை கூவுகின்றான்—.
['மகிழ்ந்து ஓடிவா' என்று வருவிக்க.]

***—சந்திரா! என் குழந்தையை 'மற்றுள்ள ஊர்ப்பிள்ளைகளைப்போலே இவனும் ஒரு சிறியவன்தானே' என்று இகழ்ச்சியாக நினைக்கிறாய்போலும்; அப்படி நினையாதே; இவன் முன்பொருகால் மாணிக்குறளுருவாய் மாவலியிடஞ் சென்று செய்த காரியங்களை அந்த மஹாபலியையே கேட்டுத்தெரிந்துகொள்; மிகப்பெரியவனான இவனைச் சிறியவனென்று நினைத்து அலட்சியஞ் செய்தவிது மஹத்தான அபசாரம் என்று தாடைமேல் அறைந்துகொள்வாயாகில் பிறகுதான் நீ இவனருகில் வந்து ஏதேனும் அடிமை செய்வதற்கு யோக்யதைபெறுவாய் என்கிறாள். "மாவலியிடைச் சென்றுகேள்" என்றதன் கருத்தாவது—மாவலியின் கொழுப்பை யடக்கின கதையைக்கொண்டே நீ அவனது பெருமையை அறுதியிடலாமென்கை. .... .... .... .... (8)

62 தாழியில்வெண்ணெய் தடங்கையாரவிழுங்கிய *
பேழைவயிற்றெம்பிரான் கண்டாயுன்னைக்கூவுகின்றான் *
ஆழிகொண்டுன்னையெறியும் ஐயுறவில்லைகாண் *
வாழவுறுதியேல் மாமதீமகிழ்ந்தோடிவா. (9)

மா மதி!—;
தாழியில் வெண்ணெய் — தாழியிலே (சேமித்திருக்கிற) வெண்ணெயை
தட கை ஆர விழுங்கிய — பெரிதான கைநிறைய (அள்ளி) அமுதுசெய்த
பேழை வயிறு எம்பிரான் — பெருவயிற்றையுடையவனான என் கண்ணபிரான்
உன்னை கூவுகின்றான்—;
(இப்படி அழைக்கச்செய்தேயும் நீ வராதிருந்தால,)
ஆழிகொண்டு — திருவாழியாலே
உன்னை எறியும் — உன்னை வெட்டிவிடுவன்;
ஐயுறவு இல்லை — ஸம்சயமேயில்லை;
(இதில் நின்றுந்தப்பி)
வாழ உறுதியேல் — வாழக்கருதினாயாகில்
மகிழ்ந்து ஓடிவா—.

***—சந்திரா! இவன் உன்னை விரும்பி அழைக்கின்றவிது வெண்ணெயை வாரிவிழுங்கின செய்திபோலே ஆசையின் கனத்தினாலனது என்னுங்கருத்துப்பட முன்னடிகளருளிச் செய்தபடி. அவ்வெண்ணெய்த்தாழியை இவனுக்கு எட்டாதபடி வைக்கால் கல்லவிட்

டெறிந்த அந்தத்தாழியை உடைப்பதுபோல, நீயும் வராதிருந்தால் இவன் சக்கராயுதத்தை உன்மீது பிரயோகித்து உன் தலையையறுத்திடுவன்; இப்படி இவனுடைய நிக்ரஹத்துக்கு இலக்காகி முடிந்துபோகாமல் பிழைத்திருக்க விரும்புவாயாகில் பெருந்தன்மையாய் வந்துவிடு என்கிறாள். ... .... .... .... (9)

63 மைத்தடங்கண்ணி அசோதைதன்மகனுக்கு * இவை
ஒத்தனசொல்லி உரைத்தமாற்றம் * ஒளிபுத்தூர்
வித்தகன்விட்டுசித்தன் விரித்ததமிழிவை *
எத்தனையுஞ்சொல்லவல்லவர்க்கு இடரில்லையே. (10)

| | | | |
|---|---|---|---|
| மை தட கண்ணி அசோதை | மையணிந்த விசாலமாயிராநின்ற கண்களையுடையளான யசோதை யானவள் | புத்தூர் | ஸ்ரீவில்லிபுத்தூரில் உதித்தவராய் |
| | | வித்தகன் | (மங்களாசாஸந) ஸமர்த்தரான |
| | | விட்டுசித்தன் | பெரியாழ்வாராலே |
| தன மகனுக்கு | தன்மகனான கண்ணனுக்கு | விரித்த | விரித்து அருளிச்செய்யப்பட்ட |
| ஒத்தன சொல்லி | நினைவுக்கும் சொலவுக்கும் சேர்ந்திருப்பவற்றைச்சொல்லி | தமிழ் | த்ராவிட பாஷாரூடமான |
| | | இவை | இப்பாசுரங்கள் பத்தையும் |
| | | எத்தனையும் | ஏதேனுமொருபடியாக [சக்தியுள்ளவளவு] |
| உரைத்த | (சந்திரனைநோக்கிச்) சொன்ன | | |
| இவை மாற்றம் | இப்பாசுரத்தை | சொல்ல வல்லவர்க்கு | ஓதவல்லவர்களுக்கு |
| ஒளி | ஒளிபொருந்திய | இடர் இல்லை | துன்பமொன்றுமிராது. |

அடிவரவு:—தன் என் சுற்றும் சக்கரம் அழகிய தண்டு பாலகன் சிறியன் தாழி மை உய்ய.

---

## முதற்பத்து—ஐந்தாந்திருமொழி, உய்யவுலகுபடைத்து.

இளமைப்பருவத்து விளையாடல்களில் செங்கீரையாடுவது என்பது ஒன்று; அதாவது—தாய்மார் முதலானோர் குழந்தைகளைத் தாமே ஆட்டுவிப்பதொரு கூத்து; பிள்ளை தனது இரண்டு கைகளையும் முழந்தாளையுமூன்றித் தலையை நிமிர்த்துக்கொண்டு ஆடுதல் என்பாரு முண்டு இவ்விளையாட்டைக் காணவேணுமென்று விரும்பிய யசோதைப்பிராட்டி "எனக் கொரு காலாடுக செங்கீரை ஆடுக ஆடுக" என்று பிரார்த்தித்து அதனை அநுபவித்தாப் போலவே ஆழ்வார் தாமும் அநுபவித்துப்பேசி மகிழ்கின்றார். (*)

64 உய்யவுலகுபடைத்துண்டமணிவயிறா ஊழிதோறூழிபலவாலினிலையதன்மேல் *
பையவுயோகுதுயில்கொண்டபரம்பரனே பங்கயநீணயனத்தஞ்சனமேனியனே *
செய்யவள்நின்னகலஞ்சேமமெனக்கருதிச் செல்வுபொலிமகரக்காதுதிகழ்ந்திலக *
ஐயவெனக்கொருகாலாடுகசெங்கீரை ஆயர்கள்போரேறேயாடுகவாடுகவே. (1)

| | | | |
|---|---|---|---|
| உய்ய | (ஆத்மாக்கள்) உஜ்ஜீவிக்கைக்காக | பைய | மெள்ள |
| உலகு படைத்து | லோகங்களை ஸ்ருஷ்டித்து, (பின்பு ப்ரளயம்வந்தபோது, அவற்றை) | உயோகு துயில் கொண்ட | யோகநித்திரை செய்தருளின |
| உண்ட | உள்ளேவைத்து ரக்ஷித்த | பரம்பரனே | பரஸ்மாத்பரனானவனே! |
| மணி வயிறா | அழகிய வயிற்றையுடையவனே! | பங்கயம் நீள் நயனம் | தாமரைமலர்போன்று நீண்டிருக்கின்ற திருக்கண்களையும் |
| பல ஊழிஊழிதொறு | —பலகல்பங்கள் தோறும் | | |
| ஆலின் இலை அதன் மேல் | ஆலிலையின்மேல் | அஞ்சனம் மேனியனே ஐய | மைபோன்ற திருமேனியையுமுடைய ஸர்வேச்வரனே! |

| | | | |
|---|---|---|---|
| செய்யவள் நின் அகலம் | செந்தாமரைமலரிற் பிறந்த பிராட்டிக் கிருப்பிடமான உன் திருமார்வானது (இந்த நர்த்தநத்தால் அசையாமல்) | எனக்கு ஒருகால் செங்கீரை ஆடுக | எனக்காக ஒருவிசை செங்கீரை யாடியருளவேணும்; |
| சேமம் என கருதி | —ரக்ஷையை உடைத்தாக வேணுமென்று நினைத்துக்கொண்டு, | ஆயர்கள் போர் ஏறே | இடையர்களுக்கு விதேயனாய் போர் செய்ய நின்ற ரிஷபம்போலே செருக்கியிராநின்ற கண்ணனே! |
| செல்வு பொலி மகரம் காது திகழ்ந்து இலக | ஐச்வர்யஸம்ருத்திக்கு ஸூசகங்களான திருமகரக் குழைகளோடு கூடின திருக் காதுகளானவை மிகவும் விளங்கும்படி | | ஆடுக! ஆடுக!! |

செங்கீரையாடும்போது திருமார்விலுறையும் பிராட்டிக்கு அசைதல் உண்டாகாதபடி ஸாவதாநனாய் ஆடவேணுமென்பாள் செய்யவள்நின்னகலஞ் சேமமெனச்சருதி என்றாள் ஸாக்ஷாத் திருமகள் கொழுநனே கண்ணபிரானாக வந்து பிறந்திருக்கின்றமை நன்கு வெளியிடப்பட்டதென்க. சேமம்—க்ஷேமமென்னும் வடசொல் விகாரம். மகரக்காது என்(... )விடத்து மகரமென்னுஞ் சொல் அதன் வடிவத்தையுடைய குண்டலத்திற்கு ஆகுபெயர். (...

65 கோளரியின்னுருவங்கொண்டவுணனுடலம் குருதிகுழம்பியெழக்கூருகிராற்குடைவாய் *
மீளவவன்மகனைமெய்ம்மைகொளக்கருதி மேலையமரர்பதிமிக்குவெகுண்டுவர *
காளநன்மேகமவைகல்லொடுகார்பொழியக் கருதிவரைக்குடையாக்காலிகள்காப்பவனே *
ஆளவெனக்கொருகாலாடுகசெங்கீரை ஆயர்கள்போரேறேயாடுகவாடுகவே. (2)

| | | | |
|---|---|---|---|
| கோள் அரியின் உருவம் கொண்டு | வலிமையையுடைய நரஸிங்கத்தின் வேஷங்கொண்டு | காளம் நல் மேகம் அவை | கறுத்த சிறந்த மேகங்களானவை |
| அவுணன் உடலம் குருதி குழம்பி எழ | ஹிரண்யாஸுரனுடைய சரீரத்தில் ரத்தமானது குழம்பிக் கிளரும்படியாகவும் | கல்லொடு கார் பொழிய | கல்லோடுகூடின வர்ஷத்தைச் சொரிய |
| அவன் மீள மகனை மெய்ம்மை கொள கருதி | அவ்வஸுரனானவன் மறுபடியும் தன் மகனை ப்ரஹ்லாதனை ஸத்யவாதியென்று நினைக்கும்படியாகவும் திருவுள்ளம்பற்றி | கருதி | ‘இம்மலையே உங்களுக்கு ரக்ஷகம் இச்சோற்றை இதுக்கிடுங்கோள’ என்று முன்பு இடையர்க்குத் தான் உபதேசித்ததை) நினைத்து |
| கூர் உகிரால் குடைவாய் | கூர்மையான நகங்களாலே (அவ்வஸுரனுடலைக் கிழித்தருளினவனே!, | வரை குடையா காலிகள் காப்பவனே | (அந்த) கோவர்த்தனகிரியை குடையாகக்கொண்டு பசுக்களை ரக்ஷித்தருளினவனே! |
| மேலை அமரர் பதி | மேன்மை பொருந்திய தேவேந்திரன் | ஆள | (இப்படி ரக்ஷிக்கைக் குறுப்பான) ஆண்பிள்ளைத்தனமுடையவனே! |
| மிக்கு வெகுண்டு வர | மிகவும் கோபித்துவர (அதனால்) | | எனக்கு.........ஆடுக—. |

* * *—“எங்குமுளன்” என்றுசொன்ன ப்ரஹ்லாதனுடைய சொல்லை யதார்த்தமாக்கும்பொருட்டுத் தூணில் நரசிங்கமூர்த்தியாய்த் தோன்றி இரணியனுடலைப் பிளந்தொழித்தவனே! பசிக்கோபத்தினால் ஏழுநாள் விடாமழைபெய்வித்த இந்திரன் பங்கமடையும்படி கோவர்த்தன மலையைக் குடையாகவெடுத்து ஆய்ப்பாடியைக் காத்தவனே! எனக்கொருகால் செங்கீரையாடியருள். .... .... .... .... (2)

66 நம்முடைநாயகனேநான்மறையின்பொருளே நாபியுள்நற்கமலநான்முகனுக்கொருகால் *
தம்மனையானவனேதரணிதலமுழுதும் தாரகையின்னுலகுந்தடவிஅதன்புறமும் *
விம்மவளர்ந்தவனேவேழமுமேழ்விடையும விரவியவேலைதனுள்வென்றுவருமவனே *
அம்மவெனக்கொருகாலாடுகசெங்கீரை ஆயர்கள்போரேறேஆடுகவாடுகவே. (3

| | |
|---|---|
| நம்முடை நாயகனே | எங்களுக்கு நாதனானவனே! |
| நால் மறையின் பொருளே | நாலுவேதங்களுடைய பொருளாயிருப்பவனே! |
| நாபியுள் நற் கமலம் நான்முகனுக்கு | திருநாபியில் முளைத்திராநின்ற நல்ல தாமரை மலரிற் பிறந்த பிரமனுக்கு |
| ஒருகால் தம்மனை ஆனவனே | அவன் வேதத்தைப் பறிகொடுத்துத் திகைத்த காலத்தில் தாய் போலே பரிந்து அருளினவனே! |
| தரணிதலம் முழுதும் | பூமியடங்கலும் |
| தாரகையின் உலகும் | நக்ஷத்ரலோக மடங்கலும் |
| தடவி | திருவடிகளால் ஸ்பர்சித்து |
| அதன் புறமும் விம்ம வளர்ந்தவனே | அதற்குப் புறம்பாயுள்ள தேசமும் பூர்ணமாம்படி த்ரிவிக்ரமனாய் வளர்ந்தவனே! |
| வேழமும் | குவலயாபீடமென்ற யானையும் |
| ஏழ் விடையும் | ஏழு ரிஷபங்களும் |
| விரவிய வேலைதனுள் | (உன்னை ஹிம்ஸிப்பதாக) உன்னோடு வந்து கலந்த ஸமயத்திலே |
| வென்று வருமவனே | (அவற்றை) ஜயித்து வந்தவனே! |
| அம்ம | ஸ்வாமியானவனே! |
| | எனக்கு......ஆடுக—. |

* * *—மதுகைடபர்கள் நான்முகனிடத்திலிருந்து வேதங்களைப் பறித்துக்கொண்டு போனபோது, அப்பிரமன் வேதங்களையிழந்ததற்காக 'கண்ணிழந்தேன், பொருளிழந்தேன்' என்று கதறிக்கதறியழ, அவ்வேதங்களை எம்பெருமான் மீட்டுக் கொணர்ந்து கொடுத்துத் துயர் தீர்த்ததனால் "நான்முகனுக்கோருகால் தம்மனையானவனே!" என்றார். .... (3)

67 வானவர்தாம்மகிழவன்சகடமுருள வஞ்சமுலைப்பேயின்நஞ்சமுதுண்டவனே *
கானகவல்விளவின்காயுதிரக்கருதிக் கன்றதுகொண்டெறியுங்கருநிறவென்கன்றே *
தேனுகனும்முரனுந்திண்டிறல்வெந்நரகன் என்பவர்தாம்மடியச்செருவதிரச்செல்லும் *
ஆனையெனக்கொருகாலாடுகசெங்கீரை ஆயர்கள்போரேறேயாடுகவாடுகவே. (4)

| | |
|---|---|
| வானவர்தாம் மகிழ | தேவர்கள் மகிழும்படியாகவும் |
| வன் சகடம் உருள | வலியுள்ள சகடாஸுரன் உருண்டு உருமாய்ந்து போம்படியாகவும் (செய்து) |
| வஞ்சம் பேயின் முலை நஞ்சு அமுது உண்டவனே | வஞ்சனையை யுடையளான பூதனையினுடைய முலைமேல் தடவிக்கிடந்த விஷத்தை அம்ருதத்தை அமுது செய்யுமாபோலே அமுது செய்தருளினவனே! |
| கானகம் வல் விளவின் காய் உதிரக் கருதி | காட்டிலுள்ளதான வலிமை பொருந்திய விளாமரத்தினுடைய காய்களானவை உதிரும்படி திருவுள்ளத்திற்கொண்டு |
| கன்று அது கொண்டு | கன்றான அந்த வத்ஸாஸுரனைக் கையிலேகொண்டு |
| எறியும் | (விளவின்மேல்) எறிந்தவனாய் |
| கரு நிறம் | கருத்த நிறத்தையுடையனாய |
| என் கன்றே | என்னுடைய கன்றானவனே! |
| தேனுகனும் முரனும் திண் திறல் வெம் நரகன் | தேநுகாஸுரனும் முராஸுரனும் திண்ணிய வலிவை யுடையனாய் கொடுமையுமுடையனான நரகாஸுரனும் |
| என்பவர்தாம் மடிய | என்றிப்படி சொல்லப்படுகிற தீயபூண்டுகளடங்கலும் மாளும்படியாக |
| செரு அதிரச்செல்லும் | யுத்தத்திலே மிடுக்கையுடையவனாய்க்கொண்டு எழுந்தருளுமவனான |
| ஆனை | ஆனைபோன்ற கண்ணனே! |
| | எனக்கு......ஆடுக—. |

* * *—" நஞ்சமதுண்டவனே " என்றும் பாடமுண்டு; முலையில் தடவிக்கிடந்த அந்தக் கொடியவிஷத்தை உண்டவனே! என்று பொருளாம். ஆனை—அண்மைவிளி. (4)

68 மத்தளவுந்தயிரும்வார்குழனன்மடவார் வைத்தனநெய்களவால்வாரிவிழுங்கி * ஒருங்
கொத்தவிணைமருதமுன்னியவந்தவரை ஊருகரத்தினொடுமுந்தியவெந்திறலோய் *
முத்தினிளமுறுவல்முற்றவருவதன்முன் முன்னமுகத்தணியார்மொய்குழல்களலைய *
அத்தவெனக்கொருகாலாடுகசெங்கீரை ஆயர்கள்போரேறேயாடுகவாடுகவே. (5)

| | |
|---|---|
| வார் குழல் நல் மடவார் வைத்தன | நீண்ட மயிர்முடியையுடையராய் நன்மையையும் மடப்பத்தையுமுடையரான ஸ்த்ரீகளாலே சேமித்துவைக்கப்பட்ட |
| மத்து அளவும் தயிரும் நெய் | மத்தாலே அளாவிக் கடைகைக்கு உரிய தயிரையும் நெய்யையும் |
| களவால் வாரி விழுங்கி | திருட்டு வழியாலே கைகளால் அள்ளி வயிறார உண்டு, |

| | |
|---|---|
| உன்னிய | உன்னை நலியவேணுமென்னும் நினைவையுடையராய் |
| ஒருங்கு | ஒருபடிப்பட |
| ஒத்த | மனம் ஒத்தவர்களாய் |
| இணை மருதம் | இரட்டை மருதமரமாய்க்கொண்டு |
| வந்தவரை | வந்துநின்ற அஸுரர்களை |
| ஊரு கரத்தினொடும் | தொடைகளாலும் கைகளாலும் |
| உந்திய | இரண்டு பக்கத்திலும் சரிந்துவிழும்படி தள்ளின |
| வெம் திறலோய் | வெவ்வியவலிவை யுடையவனே! |
| அத்த | அப்பனே! |
| முத்து இன் இள முறுவல் முற்ற வருவதன் முன் | திருமுத்துக்கள் தோன்றும்படி இனிதான மந்தஹாஸமானது பூர்ணமாக வெளி வருவதற்கு முன்னே |
| முன்னம் முகத்து | முன் முகத்திலே |
| அணி ஆர் மொய் குழல்கள் அலைய | அழகு மிகப்பெற்று நெருங்கியிரா நின்ற திருக்குழல்களானவை தாழ்ந்து அசையும்படி |

எனக்கு......ஆடுக—.

* * *—நாரதசாபத்தினால் மரங்களானவற்றில் கம்ஸனால் ஏவப்பட்ட இரண்டு அசுரர்களும் ஆவேசித்திருந்தனரென்பதும் சில புராணங்களிலுள்ளது, "ஒருங்கொத்த விணைமருத முன்னியவந்தவரை" என்று இவ்விடத்திலும "பொய்ம்மாயமருதான வசுரரை" என்று மேல் மூன்றும்பத்திலும் இவ்வாழ்வாரருளிச் செய்வனவுங்காண்க. ஊரு, கரம் — வடசொற்கள்.

பருவம் ஏறினால் புன்சிரிப்பு முற்றிப் பெருஞ்சிரிப்பாக மாறிவிடுமாதலால "முத்தினிளமுறுவல் முற்ற வருவதன்முன்" என்றார். 'பற்கள்' என்றுவது 'முத்துப்போன்ற பற்கள்' என்றுவது சொல்லவேண்டுமிடத்து முத்து என்றே இங்குச் சொல்லியிருப்பது—உவமையாகு பெயர். .... .... .... .... (5)

69 காயமலர்நிறவாகருமுகில்போலுருவா கானகமாமடுவிற்காளியனுச்சியிலே *
தூயநடம்பயிலுஞ்சுந்தரவென்சிறுவா துங்கமதக்கரியின்கோம்புபறித்தவனே *
ஆயமறிந்துபோருவானெதிர்வந்தமல்லை அந்தரமின்றியழித்தாடியதாளிணையாய் *
ஆயவெனக்கோருகாலாடுகசெங்கீரை ஆயர்கள்போரேறேயாடுகவாடுகவே. (6)

| | |
|---|---|
| காயமலர் நிறவா | காயாம்பூப்போன்ற நிறத்தையுடையவனே! |
| கரு முகில் போல் உருவா | காளமேகம்போன்ற ரூபத்தையுடையவனே! |
| கானகம் மா மடுவில் காளியன் உச்சியிலே | காட்டிலே பெரிய மடுவினுள்ளே கிடந்த காளிய நாகத்தினுடைய தலையின்மீது |
| தூய நடம் பயிலும் சுந்தர | மனோஹரமான நர்த்தனத்தைச் செய்தருளின அழகையுடையவனே |
| என் சிறுவா | எனக்குப் பிள்ளையானவனே! |
| துங்கம் மதம் கரியின் கொம்பு பறித்தவனே | உன்னதமாய் மதத்தையுடைத்தான குவலயாபீடமென்னும் யானையினது தந்தங்களை முறித்தருளினவனே! |
| ஆயம் அறிந்து பொருவான் எதிர் வந்த மல்லை | (மல்லயுத்தம்) செய்யும் வகையறிந்து யுத்தம் செய்வதற்கு எதிர்த்து வந்த மல்லர்களை |
| அந்தரம் இன்றி அழித்து ஆடிய தாள் இணையாய் | (உனக்கு ஒரு அபாயமில்லாதபடி த்வம்ஸம் செய்து (இன்னம் வருவாருண்டோ என்று) கம்பீரமாய ஸஞ்சரித்த திருவடிகளையுடையவனே! |
| ஆய | ஆயனே! |

எனக்கு......ஆடுக—.

***—மூன்றுமடியில், ஆயம்—வேலைத்திறம். அந்தரமின்றி என்பதற்கு – மல்லயுத்த செய்யும்போது ஒருடலுக்கும் மற்றொருடலுக்கும் இடைவெளியில்லாமல் நெருங்கிப் பொருத என்றும், உனக்கொரு அபாயமின்றிப் பொருது என்றும உரைக்கலாம. "காயாமலர்" என்பது காயமலரென்று குறுக்கல் விகாரம் பெற்றது. .... .... .... (6)

70 துப்படையாயர்கள்தம்சோல்வழுவாதோருகால் தூயகருங்குழனற்றேசைமயிலனைய*
நப்பினைதன்திறமாநல்விடையேழவிய நல்லதிறலுடையநாதனுமானவனே*

தப்பினபிள்ளைகளைத்தனமிகுசோதிபுகத் தனியொருதேர்கடவித்தாயொடுகூட்டிய*என்
அப்பவெனக்கொருகாலாடுகசெங்கீரை ஆயர்கள்போரேறேயாடுகவாடுகவே. (7)

தப்பு உடை ஆயர்கள் தம் சொல் வழுவாது — நெஞ்சில் கடினத்தன்மையுடையரான இடையர்களுடைய வார்த்தையைத்தப்பாமல்
ஒருகால் — ஒரு காலத்திலே
தூய கரு குழல் நல் தோகை மயில் அனைய நப்பினை தன் திறமா — அழகியதாய் கறுத்திராநின்றுள்ள கூந்தலையுடையவளாய், நல்ல தோகையை யுடைய மயில் போன்ற சாயலையுடையவளான நப்பின்னைப் பிராட்டிக்காக
நல விடை ஏழ் அவிய — (கொடுமையில்) நன்றான ரிஷபங்களேழும் முடியும்படியாக
நல்ல திறல் உடைய நாதன் ஆனவனே — நன்றான மிடுக்கையுடையவனாய் அவ்விடையர்களுக்கு ஸ்வாமியானவனே!
தன மிகு சோதி புக — தன்னுடைய நிரவதிக தேஜோரூபமான பரமபதத்திலே செல்லும்படியாக
தன் ஒரு தேர் கடவி — தனியே ஒப்பற்ற தேரை நடத்தி
தப்பின பிள்ளைகளை தாயொடு கூட்டிய — கைதப்பிப்போன வைதிகன் பிள்ளைகளைத் தாயோடு கூட்டின
என் அப்ப — என் அப்பனே!
எனக்கு......ஆடுக—.

71 உன்னையுமொக்கலையிற்கொண்டுதமில்மருவி உன்னொடுதங்கள்கருத்தாயினசெய்துவரும்
கன்னியருமகிழக்கண்டவர்கண்குளிரக் கற்றவர்தெற்றிவரப்பெற்றவெனக்கருளி*
மன்னுகுறுங்குடியாய்வெள்ளறையாய்மதிள்சூழ் சோலைமலைக்கரசேகண்ணபுரத்தமுதே *
என்னவலங்களைவாயாடுகசெங்கீரை ஏழுலகுமுடையாயாடுகவாடுகவே. (8)

மன்னு குறுங் குடியாய் — (ப்ரளயத்துக்கு மழியாமல், பொருந்தியிருக்குமதான திருக்குறுங்குடியிலே எழுந்தருளியிருக்குமவனே
வெள்ளறையாய் — திருவெள்ளறையிலே வர்த்திக்குமவனே!
மதிள் சூழ் சோலை மலைக்கு அரசே — மதிளாலே சூழப்பட்ட திருமாலிருஞ்சோலை மலைக்கு அதிபதியானவனே!
கண்ண புரத்து அமுதே — திருக்கண்ணபுரத்திலே நிற்கிற அம்ருதம் போன்றவனே!
என் அவலம் களைவாய் — என் துன்பங்களை நீக்குமவனே!
உன்னை ஒக்கலையில் கொண்டு தம் இல் மருவி — (மனோஹரனான உன்னை, இடுப்பிலே எடுத்துக் கொண்டு தங்கள் தங்கள அகங்களிலே சேர்ந்து
உன்னொடு தங்கள் கருத்து ஆயின செய்துவரும் கன்னியரும் மகிழ — உன்னோடு தங்களுடைய நினைவுக்குத் தக்கபடி பரிமாறி மறுபடியுங் கொண்டுவாரா நிற்கிற இளம்பெண்களும் (இச்செங்கீரையைக்கண்டு) ஸந்தோஷிக்கும் படியாகவும்
கண்டவர் கண்குளிர — (மற்றும்) பார்த்தவர்களுடைய கண்களானவை குளிரும்படியாகவும்
கற்றவர் தெற்றி வர — (கவிசொல்லக்) கற்றவர்கள் பிள்ளைக் கவிகள் தொடுத்து வரும்படியாகவும்,
பெற்ற எனக்கு அருளி — உன்னை மகனாகப்பெற்ற என் விஷயத்திலே க்ருபை செய்து
செங்கீரை ஆடுக—;
ஏழ் உலகும் உடையாய் — ஸப்தலோகங்களுக்கும் ஸ்வாமியானவனே!
ஆடுக ஆடுக—.

***—பிரானே! நீ எப்படி செங்கீரையாடவேணுமென்றால், உன்னை இடுப்பிலெடுத்துக் கொண்டு தங்கள் தங்கள் வீட்டுக்குச்சென்று தங்களிஷ்டப்படி உன்னை யநுபவித்து வருகின்ற இளம் பெண்களும் மனமகிழும்படி ஆடவேணும்; ஸாமன்யமாகப் பார்க்கிறவர்களெல்லாருடையவும் கண்கள் குளிரும்படி ஆடவேணும்; கவிதொடுக்கக்கற்றவர்கள் பிள்ளைக் கவிகள் பாடிக்கொண்டு வரும்படி ஆடவேணும். ... .... ... (8)

72 பாலொடுநெய்தயிரொண்சாந்தொடுசெண்பகமும் பங்கயநல்லகருப்பூரமுநாறிவர*
கோலநறும்பவளச்செந்துவர்வாயினிடைக் கோமளவெள்ளிமுளைப்போல்சிலப்பல்லிலக
நீலநிறத்தழகாரைம்படையின்நடுவே நின்கனிவாயமுதமிற்றுமுறிந்துவிழ*
ஏலுமறைப்பொருளேயாடுகசெங்கீரை ஏழுலகுமுடையாயாடுகவாடுகவே. (9)

| | |
|---|---|
| மறை எனும் பொருளே | வேதத்திலுடைய தகுதியான அர்த்தமானவனே ! |
| பாலோடு நெய் தயிர் | பாலோடேகூட நெய்யும் தயிரும் |
| ஒண் சாந்தொடு | அழகிய சந்தனமும் |
| செண்பகமும் | செண்பகம் முதலிய மலர்களும் |
| பங்கயம் | தாமரைப்பூவும் |
| நல்ல | உத்தமமான |
| கருப்பூரமும் | பச்சைக் கற்பூரமுமாகிய இவை |
| நாறி வர | கலந்து பரிமளிக்க, |
| கோலம் நறு பவளம் செம் துவர் வாயின் இடை | அழகிய நற்பவளம்போல் அழகிய தாய் சிவந்திருக்கிற திருவதரத்தினுள்ளே |
| கோமளம் வெள்ளி முளைபோல் | இளையதான வெள்ளி முளைபோலே |
| சில பல் இலக | சில திருமுத்துக்கள்விளங்க, |
| நீலம் நிறத்து அழகு ஆர் ஐம்படையின் நடுவே | நீலநிறத்தையுடைத்தாய் அழகு நிறைந்திராநின்ற பஞ்சாயுதத்தின் நடுவே |
| நின் கனி வாய் அமுதம் இற்று முறிந்து விழ | உன்னுடைய கொவ்வைக் கனி போன்ற அதரத்தில் ஊறுகின்ற அம்ருத ஜலமானது இற்றிற்று விழ |

ஆடுக—.

***—கண்ணபிரான் நெய் பால் தயிர் முதலியவற்றைப் பலகாலும் அமுதுசெய்த தாலும், சந்தனம் செண்பகம் முதலியவற்றைப் பலகாலும் திருமேனியிலே சாத்திக்கொள் வதினாலும் செங்கீரையாடும்போது அவைகள் நல்ல பரிமளம கமழுநிற்கும். அப்படிச் செங்கீரையாடுகையில் வாயைத் திறந்து சிறிது சிரிக்கும்போது "கருப்பூரம் நாறுமோ கமலப்பூ நாறுமோ? திருப்பவளச் செவ்வாய்" என்றபடி இயற்கையாகவே தாமரைப்பூ பச்சைகற்பூரங்களின் நறுமணமுடைய திருப்பவளத்தின் பரிமளமும வீசும. வாயினுள்ளே வெள்ளியரும்புகள் போன்ற சில பற்கள் பிரகாசிக்கும்; திருமார்விலணிந்த ஆபரணங்களின் மேல் வாயிலூறுகிற அம்ருதஜலம் இற்றிற்றுவிழும். இப்படிப்பட்ட நிலைமைகளுடனே செங்கீரையாடவேணுமென்றதாயிற்று. ... ... .... ... (9

73 செங்கமலக்கழலிற்சிற்றிதழ்போல்விரலில் சேர்திகழாழிகளுங்கிண்கிணியும் * அரையில்
தங்கியபொன்வடமுந்தாளநன்மாதுளையின் பூவொடுபொன்மணியும்மோதிரமுங்கிரியும *
மங்கலவைம்படையுந்தோள்வளையும்குழையும் மகரமும்வாளிகளுஞ்சுட்டியுமொத்திலக *
எங்கள்குடிக்கரசேயாடுகசெங்கீரை ஏழுலகுமுடையாயாடுகவாடுகவே. (10)

| | |
|---|---|
| எங்கள் குடிக்கு அரசே | எங்கள் வம்சத்துக்கு ராஜாவானவனே! |
| செம் கமலம் கழலில் | செந்தாமரைப் பூப்போன்ற திருவடிகளில் |
| சிறு இதழ் போல் விரலில் | (அந்தப் பூவினுடைய) உள்ளிதழ் போலே சிறுத்திருக்கிற திருவிரலகளில் |
| சேர் திகழ் | சேர்ந்து விளங்காநின்ற |
| ஆழிகளும் கிண் கிணியும் | திருவாழி மோதிரஙகளும் சதங்கைகளும் |
| அரையில் தங்கிய பொன்வடமும் | அரையில் சாத்தியிருக்கிற பொன் அரைநாணும் |
| (பொன்) தாள நல் மாதுளையின் பூவொடு | பொன்னால் செய்த காம்பையுடைய நல்லதான மாதுளம்பூக் கோவையும் |
| பொன் மணியும் | (நடுநடுவே கலந்து கோத்த) பொன மணிக் கோவையும் |
| மோதிரமும் | திருக்கை மோதிரஙகளும் |
| கிறியும | (மணிக்கட்டில் சாத்தின) சிறுப்பவளவடமும் |
| மஙகலம் ஐம்படையும் | மங்களாவஹமான பஞ்சாயுதமும் |
| தோள் வளையும | திருத்தோள் வளைகளும் |
| குழையும | காதணிகளும் |
| மகரமும் | மகர குண்டலங்களும் |
| வாளிகளும் | (திருச்செவி மடல்மேல் சாத்தின) வாளிகளும் |
| சுட்டியும் | திருநெற்றிச் சுட்டியும் |
| ஒத்து இலக | அமைந்து விளஙகும்படி |

ஆடுக......ஆடுக.

***—கண்ணபிரான் திருமேனியிலணிந்துள்ள திவ்யாபரணங்களை வாயாரப்பேசி யநுபவிக்கிறார். செங்கீரையாடும்போது ஆபரணங்களெல்லாம் அசையுமாதலால் இவ்வாறு அருளிச்செய்தனர். செந்தாமரைப்பூவில் சிறிய இதழ்கள் தோன்றுவதுபோல் திருவடிகளில் சிறுவிரல்கள் தோன்றுகின்றனவென்பது செங்கமலக்கழலில் சிற்றிதழ்போல்விரலில் என்றதன் கருத்து. கிண்கிணி—அரைச்சதங்கையுமாகலாம், பாதச்சதங்கையுமாகலாம். (10)

74 அன்னமுமீனுருவுமாளரியுங்குறளும் ஆமையுமானவனேயாயர்கணாயகனே *
என்னவலங்களைவாயாடுகசெங்கீரை யேழுலகுமுடையாயாடுகவாடுகவென்று *
அன்னநடைமடவாளசோதையுகந்தபரிசு ஆனபுகழ்ப்புதுவைப்பட்டனுரைத்ததமிழ் *
இன்னிசைமாலைகளிப்பத்தும்வல்லார் உலகிலெண்டிசையும்புகழ்மிக்கின்பமதெய்துவரே. (11)

| | |
|---|---|
| அன்னமும் மீன் உருவும் ஆள் அரியும் குறளும் ஆமையும் ஆனவனே | "ஹம்ஸரூபியாயும் மத்ஸ்யரூபியாயும் நாரஸிம்ஹரூபியாயும் வாமனரூபியாயும் கூர்மரூபியாயும் அவதரித்தவனே! |
| ஆயர்கள் நாயகனே! | இடையர்களுக்கு தலைவனானவனே! |
| என் அவலம் களைவாய் | எனது துன்பங்களை தீர்த்தருள்பவனே! |
| செங்கீரை ஆடுக | செங்கீரை ஆடவேணும்; |
| ஏழ் உலகும் உடையாய் | ஸப்த லோகங்களுக்கும் ஸ்வாமியானவனே! |
| ஆடுக ஆடுக என்று | பலகாலும் ஆடவேணும்" என்று |
| அன்னம் நடை மடவாள் அசோதை உகந்த பரிசு | ஹம்ஸகதியை யுடையவளாய் மடப்பமுடையவளான யசோதைப் பிராட்டியாலே உகந்து சொல்லப்பட்ட ப்ரகாரத்தை |
| ஆன புகழ் புதுவை பட்டன் | பொருந்திய புகழையுடையரான பெரியாழ்வார் |
| உரைத்த இன் இசை தமிழ் மாலைகள் இ பத்தும் வல்லார் | அருளிச்செய்த இனிய இசையையுடைய தமிழ்த்தொடைகளான இப் பத்துப் பாசுரங்களையும் ஓதவல்லவர்கள் |
| உலகில் எண் திசையும் புகழ் | இந்த லோகத்திலே எட்டுத்திசைகளிலும் (பரந்த) கீர்த்தியையும் |
| மிகு இன்பமது எய்துவர் | மிக்க இன்பத்தையும் பெறுவர்கள். |

மிக்கின்பம் = தொகுத்தல் விகாரமெனக்கொண்டு, மிக்க + இன்பம், என்றும் பிரிக்கலாம். (11)

அடிவரவு—உய்யக் கோளரி நம் முனை வான் மத்தக் காய் துப்புன்னைப் பால் செங் கமலமன்ன மாணிக்கம்.

---

## முதற்பத்து—ஆறாந்திருமொழி, மாணிக்கக்கிண்கிணி.

(இரு கைகளையும் சேர்த்துக் கொட்டுதலாகிய விளையாட்டைச் செய்யும்படி யசோதை கண்ணனை வேண்டுதல்.)

---

75 மாணிக்கக்கிண்கிணியார்ப்ப மருங்கின்மேல் *
ஆணிப்பொன்னாற்செய்த ஆய்பொன்னுடைமணி *
பேணிப்பவளவாய் முத்திலங்க * பண்டு
காணிகொண்டகைகளாற்சப்பாணி கருங்குழற்குட்டனேசப்பாணி. (1)

| | |
|---|---|
| ஆணி பொன்னால் செய்த | மாற்றுயர்ந்த பொன்னால் செய்த |
| ஆய் பொன் மணி உடை மருங்கின் மேல் | (வேலைப்பாட்டிற் குறைவில்லாத படி) ஆராய்ந்து செய்த பொன் மணிக் கோவையை உடைய இடுப்பின்மேலே |
| மாணிக்கம் கிண்கிணி ஆர்ப்ப | (உள்ளே) மாணிக்கத்தையிட்ட அரைச்சதங்கை ஒலிசெய்யவும் |
| பவளம் வாய் முத்து | பவளம்போன்ற வாயிலே முத்துப் போன்ற பற்கள் |
| இலங்க | விளங்கவும், |
| பண்டு காணி கொண்ட கைகளால் | முற்காலத்திலே பூமியை (மஹாபலிச்சக்ரவர்த்தியினிடத்தில் நின்றும்) வாங்கிக்கொண்ட திருக்கைகளாலே |
| பேணி | விரும்பி |
| சப்பாணி | சப்பாணிகொட்டியருளவேணும்; |
| கரு குழல் குட்டனே | கருநிறமான கூந்தலையுடைய பிள்ளாய் |
| சப்பாணி | சப்பாணிகொட்டியருள். |

***—அரைச்சதங்கைகள் தொனிக்கவும வாயிலே முத்துப்போன்ற பற்கள் விளங்கவும் திருக்கைகளாலே சப்பாணி கொட்டவேணுமென்கிறது. பிறருடைய காரியம் செய்வதே யன்றோ உன் கைகளுக்குத் தொழில் என்கைக்காக 'பண்டு காணிகோண்ட கைகளால்' என்றார். சப்பாணிகொட்டுதல்—ஸஹ பாணிகொட்டுதல். ஒரு கையோடுகூட மற்றொரு கையைச்சேர்த்துத் தட்டுதல். .... .... .... .... (1)

76 பொன்னரைநாணொடு மாணிக்கக்கிண்கிணி *
தன்னரையாடத் தனிச்சுட்டிதாழ்ந்தாட *
என்னரைமேல்நின்றிழிந்து உங்களாயர்தம் *
மன்னரைமேற்கொட்டாய்சப்பாணி மாயவனேகொட்டாய்சப்பாணி. (2)

| | |
|---|---|
| பொன் அரை நாணோடு | ஸ்வர்ணமயமான அரை நாணோடு கூட |
| மாணிக்கம் கிண்கிணி | உள்ளே மாணிக்கமிட்ட அரைச் சதங்கையும் |
| தன் அரை ஆட | தனக்கு உரிய இடமாகிய அரையிலே அசைந்து ஒலிக்கவும் |
| தனி சுட்டி தாழ்ந்து ஆட | ஒப்பற்ற சுட்டியான (திருநெற்றியில்) [illegible] அசையவும் |
| என் அரை மேல் நின்று இழிந்து | என்னுடைய மடியிலிருந்து இறங்கிப்போய் |
| உங்கள் ஆயர் தம் மன் அரை மேல் | உன்னுடைய (பிதாவான) இடையர்கட்கெல்லாம் தலைவரான நந்தகோபருடைய மடியிலிருந்து |
| | சப்பாணி கொட்டாய்—; |
| மாயவனே | அற்புதமான செயல்களை யுடையவனே! |
| | சப்பாணி கொட்டாய்—; |

***—கண்ணபிரான், தன்மடியிலிருந்து சப்பாணி கொட்டுவதைப் பார்ப்பதைக் காட்டிலும் தகப்பனார் மடியிலிருந்து சப்பாணி கொட்டுவதைப்பார்த்தால் அவனுடைய ஸர்வாங்க ஸௌந்தர்யங்களையும கண்ணாரக் கண்டு உகக்கலாமென்பது பற்றி இங்ஙனம் வேண்டினாள். .... .... .... .... (2)

77 பன்மணிமுத்தின் பவளம்பதித்தன்ன *
என்மணிவண்ணன் இலங்குபொற்றோட்டின்மேல் *
நின்மணிவாய்முத்திலங்க நின்னம்மைதன் *
அம்மணிமேற்கொட்டாய்சப்பாணி ஆழியங்கையனேசப்பாணி. (3)

| | |
|---|---|
| என் மணிவண்ணன் | என்னுடைய நீலமணிபோன்ற நிறமுடையவனே! |
| பல் மணி முத்து இன் பவளம் பதித்த | பலவகைப்பட்ட ரத்நங்களையும் முத்துக்களையும் இனிய பவழத்தையும் அழுத்திச்செய்யப்பட்டதும் |
| அன்ன | அப்படிப்பட்டதுமான [அழகியதுமான] |
| இலங்கு பொன் தோட்டின் மேல் | விளங்குகின்ற பொன்னாற்செய்த தோடென்னுங் காதணியின்மேலே |
| நின் மணி வாய் முத்து இலங்க | உன்னுடைய அழகியவாயிலே முத்துப்போன்ற பற்கள் விளங்கும்படி (சிரித்துக்கொண்டு) |
| நின் அம்மை தன் அம்மணி மேல் | உன்தாயாகிய என்னுடைய இடையிலிருந்து |
| | சப்பாணி கொட்டாய்—; |
| ஆழி அம் கையனே | திருவாழிமோதிரத்தை அழகிய கையிலுடையவனே! |
| | சப்பாணி—. |

***—கீழ்ப்பாட்டில் ப்ரார்த்தித்தபடி நந்தகோபர் மடியிலிருந்துகொண்டு சப்பாணி கொட்டின கண்ணனைத் தன் மடியிலே வரவழைக்க யசோதைப்பிராட்டி அழைக்கிறாள். அம்மைதன்-தன்னையரிப்பாட்டிக்கை. பதித்த+அன்ன=பதித்தன்ன; பெயரெச்சத்தின் அகரவிறு தொகுத்தல்; பதித்து அன்ன என்றும் பிரிக்கலாம். ஆழி—ஸ்ரீஸுதர்சநாழ்வானுமாம். (3)

78 தூநிலாமுற்றத்தே போந்துவிளையாட *
வானிலாவம்புலீ சந்திராவாவென்று *
நீநிலாநின்புகழாநின்ற ஆயர்தம் *
கோநிலாவக்கொட்டாய்சப்பாணி குடந்தைக்கிடந்தானே சப்பாணி. (4)

வான் நிலா அம்புலீ — 'ஆகாசத்திலே விளங்குகின்ற அம்புலியே!
சந்திரா — சந்திரனே!
தூ நிலா முற்றத்தே போந்து விளையாட — வெண்மையான நிலாவையுடைய முற்றத்திலே வந்து (நான்) விளையாடும்படி
நீ வா என்று — நீ வருவாயாக என்று (சந்திரனை அழைத்து)
நிலா — நின்றுகொண்டு
நின் புகழாநின்ற — உன்னைப் புகழ்கின்ற
ஆயர்தம் கோ நிலாவ — இடையர்களுடைய தலைவராகிய நந்தகோபர் மனமகிழும்படி
சப்பாணி கொட்டாய்—;
குடந்தை கிடந்தானே! சப்பாணி—.

***—சந்திரனே! நான் விளையாடும்படி நீ சற்று இப்படி வருவாயாக, என்று அழைத்துக்கொண்டே முற்றத்தில் நின்றுகொண்டு நந்தகோபரது மனம் மகிழுமாறு சப்பாணிகொட்டு என்றவாறு.

நின்புகழாநின்ற—உன் சேஷ்டைகளைக்கண்டு மனமகிழ்ந்து உன்னைக் கொண்டாடுகின்ற இடையர். 'நிலா' என்ற சொல்மூன்றனுள், முதலது—பெயர்ச்சொல்; இரண்டாவது—வினைத்தொகை; மூன்றாவது – 'செய்யா' என்னும் வாய்பாட்டு உடன்பாட்டிறந்தகாலவினையெச்சம்; 'நில்லா' என்பதன் தொகுத்தல். நிலாவுதல்—விளங்குதல். .... (4)

79 புட்டியிற்சேறும் புழுதியுங்கொண்டுவந்து *
அட்டியமுக்கி அகம்புக்கறியாமே *
சட்டித்தயிரும் தடாவினில்வெண்ணெயுமுண் *
பட்டிக்கன்றேகொட்டாய்சப்பாணி பற்பநாபா கொட்டாய் சப்பாணி. (5)

புட்டியில் சேறும் புழுதியும் கொண்டு வந்து — திருவரையிற் படிந்த சேற்றையும் புழுதிமண்ணையும் கொணர்ந்து வந்து
அட்டி அமுக்கி — (என்மேல்) இட்டு உறைக்கப்பூசி
அகம் புக்கு — வீட்டினில் புகுந்து
அறியாமே — (எனக்குத்) தெரியாதபடி
சட்டி தயிரும் — சட்டியில் வைத்திருக்கும் தயிரையும்!
தடாவினில் வெண்ணெயும் உண் — மிடாக்களிலிருக்கிற வெண்ணெயையும் உண்ணுகின்ற
பட்டி கன்றே — பட்டி மேய்ந்து திரியும் கன்று போன்றவனே!
சப்பாணி கொட்டாய்—;
பற்பம் நாபா — ப்ரஜாபதி பிறப்பதற்குக் காரணமான தாமரைப்பூவைக்கொண்ட நாபியையுடையவனே!
சப்பாணி கொட்டாய்—.

***—கண்ணன் புழுதியில் விளையாடும்போது, உடம்பில் வியர்வை நீருண்டாக, அவ்வேர்வை நீரால் நனைந்து புழுதிபடிந்த இடம் சேறாகவும் நனையாதவிடம் புழுதிமண்ணாகவுமிருக்கும். அப்படியே வந்து தன்மேலணைந்தால் அந்தச்சேறும் புழுதியும் தன்மேலும் படிந்துவிடுமாதலால் 'அட்டி அமுக்கி' எனப்பட்டது. பட்டிக்கன்றே—பட்டிதின்றுதிரியுங் கன்றுபோலே நெய் பால் தயிர்களைக் களவினால் தின்று திரிவதையே பொழுதுபோக்காகவுடையவனே! என்றவாறும். .... .... .... .... .... (5)

80 தாரித்துநூற்றுவர் தந்தைசொற்கொள்ளாது *
போருய்த்துவந்து புகுந்தவர்மண்ணாள *

பாரித்தமன்னர்படப் பஞ்சவர்க்கு * அன்று
தேருய்த்தகைகளாற்சப்பாணி தேவகிசிங்கமேசப்பாணி. (6)

தந்தைசொல் தாரித்துக்கொள்ளாது — (எல்லார்க்கும்) பிதாவாகிய உனது பேச்சை (மனதிற்) கொண்டு அங்கீகரிக்காமல்

போர் உய்த்து வந்து புகுந்தவர் — யுத்தத்தை நடத்துவதாக (க்கருவத்துடன்) வந்து (போர்க்களத்தில்) ப்ரவேசித்தவரும்

மண் ஆள பாரித்த மன்னர் — ராஜ்யத்தை (தாமே) அரசாளுவதற்கு முயற்சி செய்த அரசர்களுமாகிய

நூற்றுவர் — நூற்றுக்கணக்காயிருந்த துர்யோதநாதிகள

பட — மாண்டுபோகும்படி

அன்று பஞ்சவர்க்கு தேர் உய்த்த கைகளால் — (பாரத யுத்தம் நடந்த) அக்காலத்திலே பஞ்சபாண்டவர்களுக்கு (வெற்றி உண்டாகப் பார்த்தசாரதியாய் நின்று) தேரையோட்டின திருக்கைகளாலே

சப்பாணி—;

தேவகி சிங்கமே — தேவகியின் வயிற்றிற்பிறந்த சிங்கக்குட்டி போன்றவனே!

சப்பாணி—.

***—"தந்தைசொல் கொள்ளாது" என்றது—தந்தையாகிய உன்னுடைய சொல்லைக் கேளாமல் என்று பொருள்படுதலால் முன்னிலைப்படர்க்கை. எல்லாவுலகத்துக்கும் தந்தையாகையாலே தங்களுக்கும் தந்தையாகிய நீ பாண்டவர் துரியோதநாதியர் என்ற இருவகுப்பினரையும் ஸந்தி செய்விக்கைக்காகத் துரியோதநாதியரிடம் தூதுசென்று 'பாண்டவர்களும் நீங்களும் பகைமை கொள்ளவேண்டாம்; ராஜ்யத்தில் இருவர்க்கும் பகுதியுண்டாகையால் ராஜ்யத்தை ஸமபாகமாகப் பிரித்து ஸமாதாநமாக அரசாட்சிசெய்து வாழுங்கள்; அதற்கு ஸம்மதமில்லையாயின், தலைக்கு இரண்டிரண்டு ஊராகப் பாண்டவர் ஐவர்க்கும் பத்து ஊரைக் கொடுங்கள்; அதற்குமிஷ்டமில்லாதிருந்தால் பாண்டவர்கள் குடியிருக்கும்படி ஒரூரையாவது கொடுங்கள்' என்று பலபடியாக அருளிச்செய்ய, அந்தச் சொல்லுக்குச் சிறிதும் இசையாமல் 'பராக்ரமமிருந்தால் போர்செய்து ஜயித்துக்கொள்ளட்டும், இந்தப் பூமி வீரர்க்கே உரியது' என்று இப்படி அஹங்காரம் கொண்டு மறுத்துச்சொல்லி, போர்செய்து பாண்டவர்களையழித்துத் தாங்களே பூமண்டலத்தையெல்லாம் ஆளுவதாக நினைத்துத் துரியோதநாதியர் போர்க்களத்தில் ஸேனையைத் திரட்டிக்கொண்டுவர, அர்ஜுநஸாரதியாய் நின்று எதிரிகளுடங்கலும் தேர்க்காலிலே நெரிந்துபோம்படி தேரை நடத்தினாய்; அப்படி தேரை நடத்தின கைகளாலே சப்பாணிகொட்டவேணும் என்றுளாயிற்று.

தரித்து என்பது 'தாரித்து' என நீட்டல் விகாரம் பெற்றுக்கிடக்கிறது. நூற்றுவர், பஞ்சவர்—தொகைக்குறிப்பு. உய்த்து—உய்க்க: எச்சத்திரிபு. ... .... (6)

81 பரந்திட்டுநின்ற படுகடல்தன்னை *
இரந்திட்டகைம்மேல் எறிதிரைமோத *
கரந்திட்டுநின்ற கடலைக்கலங்க *
சரந்தொட்டகைகளாற்சப்பாணி சார்ங்கவிற்கையனேசப்பாணி. (7)

பரந்திட்டு நின்ற படுகடல் — (எல்லைகாணவொண்ணாதபடி) பரவியிருப்பதாய் ஆழமான சமுத்ரமானது

தன்னை இரந்திட்ட கைம்மேல் எறி திரை மோத — (வழிவிடுவதற்காகத்) தன்னையாசித்த கையின்மேலே வீசுகின்ற அலைகளினால் மோதியடிக்க,

கரந்திட்டு நின்ற — (முகங்காட்டாமல்) மறைந்து கிடந்த

கடலை — அக்கடலுக்கு உரிய தேவதையான வருணன்

கலங்க — கலங்கிவிடும்படி

சரம் தொட்ட — அம்புகளைத் தொடுத்துவிட்ட கைகளால் சப்பாணி—,

சார்ங்கம் விற் கையனே — ஸ்ரீசார்ங்கமென்னும் தநுஸ்ஸை (அப்போது) கையில் தரித்தவனே!

சப்பாணி—.

***—'பரந்திட்டு' 'இரந்திட்டு' 'கரந்திட்டு' என்ற மூன்றிடங்களிலும், இடு—துணை வினை. படு—(ரத்னம் முதலியவை) உண்டாகின்ற என்றுமாம். கடலை=ஐகாரம்—அசை; இனி உருபுமயக்கமாகக் கொண்டு, கடல்மேல் என்றுரைத்து, 'கடலைச் சரந்தொட்ட' என்று இயைப்பினுமாம். .... .... .... .... .... (7)

82 குரக்கினத்தாலே குரைகடல் தன்னை *
நெருக்கியணைகட்டி நீணீரிலங்கை *
அரக்கரவிய அடுகணையாலே *
நெருக்கியகைகளாற்சப்பாணி நேமியங்கையனேசப்பாணி. (8)

குரை கடல் தன்னை நெருக்கி — கோஷியாநின்ற ஸமுத்ரத்தை (இரண்டு பக்கத்திலும்) தேங்கும்படி செய்து
குரங்கு இனத்தாலே அணை கட்டி — குரங்குகளினுடைய கூட்டங்களைக் கொண்டு சேதுவைக் கட்டி முடித்து
நீள் நீர் இலங்கை — பரந்துள்ள ஸமுத்ரத்தினால் சூழப்பட்ட லங்கையிலுள்ள
அரக்கர் அவிய — ராக்ஷஸர்களெல்லாம் அழிந்துபோம்படி
அடு கணையாலே — கொல்லுந்தன்மையையுடைய அம்புகளைக்கொண்டு
நெருக்கிய — நெருக்கப்போர்செய்த
கைகளால் சப்பாணி—;
நேமி அம் கையனே — திருவாழியாழ்வானை அழகிய கையிலேந்தினவனே!
சப்பாணி—.

***—குரங்கு+இனம்=குரக்கினம்; வேற்றுமைப் புணர்ச்சியில் மென்றொடர் வன்றொடராயிற்று; "மென்றொடர் மொழியுட் சிலவேற்றுமையில், தம்மினவன்றொடர்" என்னுஞ் சூத்திர விதி அறிக. நீர்—கடலுக்கு ஆகுபெயர். .... .... .... (8)

83 அளந்திட்டதூணை அவன்தட்ட * ஆங்கே
வளர்ந்திட்டு வாளுகிர்ச்சிங்கவுருவாய் *
உளந்தொட்டிரணியன் ஒண்மார்புகலம் *
பிளந்திட்டகைகளாற்சப்பாணி பேய்முலையுண்டானேசப்பாணி. (9)

அளந்திட்ட தூணை அவன் தட்ட — தானே அளந்துகட்டின கம்பத்தை அந்த ஹிரண்யாசுரன் (தானே) புடைக்க
ஆங்கே — (அவன்புடைத்த) அந்த இடத்திலேயே
வாள் உகிர் சிங்கம் உரு ஆய் வளர்ந்திட்டு — கூர்மையான நகங்களையுடைய நரஸிம்ஹ மூர்த்தியாய் வளர்ந்த வடிவத்துடன் தோன்றி, (நாநாகா இவ்விரணியனும் அநுகூலனாகக் கூடுமோ! என்று)
உளம் தொட்டு — (அவ்விரணியனது) மனஸ்ஸைப் பரிசோதித்துப்பார்த்து (பின்பு)
இரணியன் ஒள் மார்பு அகலம் பிளந்திட்ட — அவ்விரணியனுடைய ஒளிபொருந்திய மார்பின் பரப்படங்கலும் (நகத்தாற்) பிளந்த
கைகளால் சப்பாணி—;
பேய் முலை உண்டானே — பேய்மகளான பூதனையின் முலையை உண்டவனே!
சப்பாணி—.

***—அளந்திட்ட தூணவது—முன்பே நரசிங்கமூர்த்தியை உள்ளே வைத்துக்கட்டிய தூண் என்று சொல்லமுடியாதபடி தானே தனக்குப் பொருந்தப்பார்த்துக் கட்டினது. அவன்தட்ட—'கையிலே நரசிங்கத்தை அடக்கிக்கொண்டுவந்து பாய்ச்சினார்கள்' என்ன வொண்ணாதபடி, தானே அழன்று புடைக்கவென்கை. உளம்—'உள்ளம்' என்பதன் தொகுத்தல். ஒண்மார்பென்றது – நரஸிம்ஹத்தினுடைய கோபாக்னியாலும் தன் வயிற்றிலுள்ள பயாக்னியாலும் பிறந்த பரிதாபத்தாலே பொன்மயமான மார்பு உருகி ஒளிவிட்டு உகிரால் எளிதாகக் கிழிக்கும்படியாயிற்றென்ற கருத்தைக் காட்டும். மார்பு அகலம்—அகலமான மார்பு என்றுமாம். .... .... .... .... (9)

84 அடைந்திட்டமரர்கள் ஆழ்கடல்தன்னை *
மிடைந்திட்டுமந்தரம் மத்தாகநாட்டி *
வடஞ்சுற்றி வாசுகிவன்கயிறாக *
கடைந்திட்டகைகளாற்சப்பாணி கார், (10)

(துர்வாசமுநி சாபத்தினால் தாம் இழந்த ஐச்வர்யத்தைப் பெறுதற்காக)
அமரர்கள் அடைந்திட்டு — தேவர்கள் (உன்னைச்) சரணமடைய (2)
ஆழ் கடல் தன்னை மிடைந்திட்டு — ஆழமான க்ஷீராப்தியை உன்னுடைய படுக்குமிடமென்று பாராமல் நெருக்கி
மந்தரம் மத்து ஆக நாட்டி — மந்தர பர்வதத்தை (கடைவதற்குரிய) மத்தாகும்படி நேராக நிறுத்தி
வாசுகி வல் வடம் — வாசுகியென்னும் பாம்பாகிய வலிய கயிற்றை
(அந்த மந்தரமலையாகிற மத்திலே)
கயிறு ஆக சுற்றி கடைந்திட்ட — கடைகயிறாகச் சுற்றிக் கடைந்த
கைகளால் சப்பாணி—;
கார் முகில் வண்ணனே — காளமேகம்போன்ற நிறமுடையவனே!

*** —அடைந்திட்டு – அடைந்திட; எச்சத்திரிபு. மிடைந்திட்டு – மிடைத்திட்டு [நெருக்கி] எனப் பிறவினைப் பொருள்கொள்க; எதுகை நோக்கிவந்த வழுவமைதி. (10)

85 ஆட்கொள்ளத்தோன்றிய ஆயர்தங்கோவினை *
நாட்கமழ்பூம்பொழில் வில்லிபுத்தூர்ப்பட்டன் *
வேட்கையினாற்சொன்ன சப்பாணியீரைந்தும் *
வேட்கையினாற்சொல்லுவார் வினைபோமே. (11)

ஆள்கொள்ள தோன்றிய ஆயர் தம் கோவினை — (அனைவரையும்) அடிமை கொள்வதற்காகத் திருவவதரித்த இடையர்களுக்குத் தலைவனான கண்ணனைக்குறித்து,
நாள் கமழ் பூ பொழில் வில்லிபுத்தூர் பட்டன் — எக்காலமும் மணம் வீசுகின்ற புஷ்பங்கள் நிறைந்த சோலைகளையுடைய ஸ்ரீவில்லிபுத்தூரில் அவதரித்த பெரியாழ்வார்
வேட்கையினால் சொன்ன — ஆசையோடு அருளிச்செய்த
சப்பாணி ஈர் ஐந்தும் — சப்பாணி கொட்டுதலைக் கூறிய பத்துப் பாசுரங்களையும்
வேட்கையினால் சொல்லுவார் — இஷ்டத்தோடு ஓதுகிறவர்களுடைய
வினை போம் — பாபங்கள் அழிந்துபோம்.

*** —மூன்றாமடியில் "வேட்கையால்" என்றும் ஓதுவர்கள். .... .... (11)

அடிவரவு:—மாணி பொன் பன் தூவா புட்டி தாரித்து பரந்து குரக்கு அளந்து அடைந்து ஆட்கொள்ளத் தொடர்.

---

முதற்பத்து—ஏழாந்திருமொழி, தொடர்சங்கிலிகை.

(கட்டிலத்தைவிட்டு நடக்கும்படி கண்ணனை யசோதை வேண்டுதல்.)

---

86 தொடர்சங்கிலிகைசலார்பிலாரென்னத் தூங்குபொன்மணியொலிப்ப *
படுமும்மதப்புனல்சோர வாரணம்பையநின்றூர்வதுபோல் *
உடன்கூடிக்கிண்கிணியாரவாரிப்ப உடைமணிபறைகறங்க *
தடந்தாளிணைகொண்டுசார்ங்கபாணி தளர்நடைநடவானோ. (1)

| | | | |
|---|---|---|---|
| சங்கிலிகை தொடா சலார் பிலார் என்ன | இரும்புச்சங்கிலியின் தொடர் 'சலார் பிலார்' என்று சப்திக்கவும் | கிண்கிணி உடன் கூடி ஆரவாரிப்ப | கால்சதங்கைகள் தம்மிலே தாம் கூடி சப்திக்கவும் |
| தூங்கு பொன் மணி ஒலிப்ப | தொங்குகின்றனவும் பொன் கயிற்றிற் கட்டியிருப்பனவுமான மணிகள் ஒலிக்கவும் | உடை மணி பறை கறங்க | திருவரையிற் கட்டிய சிறு மணிகள் பறைபோல் சப்திக்கவும் |
| படு மும்மதம் புனல் சோர | உண்டான மூன்று வகையான மதநீர் பெருகவும் | சார்ங்கபாணி | சார்ங்கமெனனும் வில்லைக் கையிலேந்திய பிள்ளையாகிய இவன் |
| நின்று | இருந்துகொண்டு | தட தாள் இணை கொண்டு | (தன்னுடைய) பெரிய பாதங்களிரண்டினால் |
| வாரணம் பைய ஊர்வது போல் | யானை மெல்ல நடந்து போவது போல, | தளர் நடை நடவானோ | இளநடையை நடக்கமாட்டானோ? [நடக்கவேணும்] |

***—கண்ணபிரான் தளர்நடை நடக்கும்போது, காலிலணிந்துள்ள பாதச் சதங்கை கிண்கிணியென்று சப்திக்கவும், இடையிற் கட்டிய சிறு மணிகள் பறைபோலொலிக்கவும், நடக்கின்ற ஆயாசத்தினால் உடலில் வேர்வைநீர் பெருகவும் நேருமாதலால் இதற்கு ஓர் ஏற்ற உபமானம் கூறுகின்றார் முன்னடிகளில்; யானையானது மதத்தின் மிகுதியால் கட்டுத்தறியை முறித்துவிட்டுக் காலிலிட்ட இருப்புச்சங்கிலியை யிழுத்துக்கொண்டு நடக்கையாலே அந்தச்சங்கிலித்தொடர் சலார்பிலாரென்று சப்திக்கவும், பொன் கயிற்றினால் கட்டித் தனது இருபுறத்திலும் தொங்கவிட்ட மணிகள் ஒலிக்கவும், மதநீர் பெருகவும் மெல்ல நடக்கும் யானை ஏற்ற உவமையாம். தளர்நடை—(திருவடிகளை நன்றாகப்பதியவைத்து நடக்கும் பருவமன்றாகையாலே) தட்டித்தடுமாறி நடக்கும் நடை. .... .... .... (1)

87 செக்கரிடைநுனிக்கொம்பில்தோன்றுஞ் சிறுபிறைமுளைப்போல *
நக்கசெந்துவர்வாய்த்திண்ணைமீதே நளிர்வெண்பல்முளையிலக *
அக்குவடமுடுத்தாமைத்தாலிபூண்ட அனந்தசயனன் *
தக்கமாமணிவண்ணன்வாசுதேவன் தளர்நடைநடவானோ. (2)

| | | | |
|---|---|---|---|
| செக்கரிடை | செவ்வானத்திலே | ஆமைத் தாலி | ஆமையின் வடிவமாகச் செய்யப்பட்ட தாலியை |
| நுனி கொம்பில் | கொம்பின் நுனியிலே | பூண்ட | கழுத்திலணிந்து கொண்டவனும் |
| தோன்றும் சிறு பிறை முளை போல | காணப்படுகிற சிறியபிறைச் சந்திரனாகிய முளையைப்போல, | அனந்த சயனன் | திருவனந்தாழ்வான் மேலே படுப்பவனும் |
| நக்க செம் துவர் வாய் திண்ணை மீது | சிரிக்கும் மிகவுஞ் சிவந்த வாயாகிய மேட்டிடத்தில் | தக்க மா மணி வண்ணன் | தகுதியான நீலமணிபோன்ற நிறத்தை யுடையவனும் |
| நளிர் வெண் பல் முளை இலக | குளிர்ந்த வெண்மையாகிய பல்லின முளைகள் விளங்க | வாசுதேவன் | வஸுதேவ புத்திரனான இவன் தளர்நடை நடவானோ—. |
| அக்கு வடம் உடுத்து | சங்குமணி வடத்தை (திருவரையில்) தரித்து | | |

***—புன்முறுவல் செய்துகொண்டே தளர்நடை நடக்கவேணுமென்று இதனால் பிரார்த்திக்கிறபடி. கண்ணபிரானது மிகவுஞ் சிவந்த வாயாகிய மேட்டிடத்தில் வெளுத்த பல்லின் முளைகள் பிரகாசிப்பதானது—செவ்வானத்தில் தோன்றுகின்ற குளிர்ந்த வெள்ளிய சிறு பிறைபோல இருக்குமென்க. 'நக்க' என்றது வாய்க்கு விசேஷணம். "வெண்பல் முளையிலகத் தளர்நடை நடவானோ" என்று அந்வயம். சிறுபிறை முளையென்றது—மூன்றாம் பிறையை யென்பர். மாமணி – நீலரத்நம்; மா – கறுப்பு. .... .... (2)

88 மின்னுக்கொடியுமோர்வெண்டிங்களுஞ் சூழ்பரிவேடமுமாய் *
பின்னல்துலங்குமரசிலையும் பீதகச்சிற்றாடையொடும் *
மின்னிற்பொலிந்ததோர்கார்முகில்போலக் கழுத்தினிற்காறையொடும் *
தன்னிற்பொலிந்தவிருடீகேசன் தளர்நடைநடவானோ. (3)

| | |
|---|---|
| மின் கொடியும் | கொடிமின்னலும் |
| ஓர் வெண் திங்களும் | அதனோடு சேர்ந்திருப்பதும் களங்கமில்லாததுமான (முழுவதும்) வெண்மையாயுள்ள ஒரு சந்த்ரனும் |
| சூழ் | (அவ்விரண்டையுஞ்) சுற்றிக்கொண்டிருக்கும் |
| பரிவேடமும் ஆய் | பரிவேஷத்தையும்போல |
| பின்னல் | (திருவரையில் சாத்தின) பொற்பின்னலும் |
| துலங்கும் அரசு இலையும் | விளங்குகின்ற அரசிலைபோல வேலை செய்த திருவாபரணமும் |
| பீதகம் சிறு ஆடையொடும் | (இவ்விரண்டையுஞ் சூழ்ந்த) பொன்னுலாகிய சிறிய வஸ்த்ரமும் ஆகிய இவற்றோடும், |
| மின்னில் | மின்னலினால் |
| பொலிந்தது | விளங்குவதாகிய |
| ஓர் | ஒப்பற்ற |
| கார் முகில் போல | காளமேகம்போல |
| கழுத்தினில் காறையொடும் | கழுத்தினிலணிந்த காறையென்னும் ஆபரணத்தோடும் (கூடிய) |
| தன்னில் பொலிந்த | (இவ்வாபரணங்கள் திருமேனிச் சுமை என்னும்படி இயற்கையான) தனது அழகினால் விளங்குகின்ற |
| இருடீகேசன் | 'ஹ்ருஷீகேசன்' என்ற திருநாமமுடைய இவன் |
| | தளர்நடை நடவானோ—. |

***—மின்+கொடி: "மின் பின் பன் கன் தொழிற்பெயரனைய" எனச் சிறப்புவிதி காண்க. பரிவேடம்—'பரிவேஷம்' என்ற வடசொற்றிரிபு; சந்த்ரனைச் சுற்றிச் சில காலங்களில் காணப்படும் ரேகை; இது ஊர்கோள் எனவும்படும். பொற்பின்னலும் அதைச் சேர்ந்து விளங்குகின்ற அரசிலைப்பணியும் இவ்விரண்டையுஞ் சூழ்ந்துகொண்டு விளங்குகின்ற பீதகச்சிற்றாடையும் - முறையே, மின்னற்கொடியையும் அதைச்சார்ந்து விளங்கும் களங்கமற்ற சந்திரனையும் இவ்விரண்டையுஞ் சூழ்ந்துகொண்டிருக்கும் ஊர்கோளையும் போலுமென்க; இல்பொருளுவமை. அரசிலைப்பணிக்கு வெண்திங்களை உவமையாகச் சொன்னதனால், அவ்வாபரணம் வெள்ளியினால் செய்யப்பட்டதென விளங்கும். கருநிறக் கழுத்திற் பொற்காறை விளங்குவது - காளமேகத்தில் செந்நிறமின்னற்கொடி விளங்குவது போலும். .... .... .... .... (3)

89 கன்னற்குடந்திறந்தாலொத்தூறிக் கணகணசிரித்துவந்து *
முன்வந்துநின்றுமுத்தந்தரும் என்முகில் வண்ணன்திருமார்வன் *
தன்னைப்பெற்றேற்குத்தன்வாயமுதந்தந்து என்னைத்தளிர்ப்பிக்கின்றான் *
தன்னேற்றுமாற்றலர்தலைகள்மீதே தளர்நடைநடவானோ. (4)

| | |
|---|---|
| கன்னல் குடம் | கருப்பஞ்சாறு நிறைந்த குடம் |
| திறந்தால் ஒத்து | பொன்னல் விட்டால் அப்பொள்ளலை வழியாகச் சாறு பொசிவதைப் போன்று |
| ஊறி | வாயில் நின்றும் நீர் சுரந்து வடிய |
| கணகண சிரித்து | கணகணவென்று சப்தமுண்டாகும்படி சிரித்து |
| உவந்து | வந்தோஷித்து |
| முன்வந்து நின்று | என்முன்னே வந்து நின்று |
| முத்தம் தரும் | (எனக்கு) முத்தங்கொடுக்குந்தன்மையுள்ளவனும் |
| என் முகில் வண்ணன் | எனது முகில்போன்ற திருநிறத்தையுடையவனும் |
| திரு மார்வன் | பெரியபிராட்டியாரை மார்பிற்கொண்டிருப்பவனுமான இவன் |
| தன்னை பெற்றேற்கு | தன்னைப்பெற்ற எனக்கு |
| தன் வாய் அமுதம் தந்து | தன்னுடைய அதராம்ருதத்தைக் கொடுத்து |
| என்னை தளிர்ப்பிக்கின்றான் | (தன்னைப் பிள்ளையாகப் பெற்றபாக்யத்தையுடைய) என்னைத் தழைக்கச்செய்கிறான்; (இவன்) |
| தன் எற்று மாற்றலர் தலைகள் மீதே | தனனோடு எதிர்க்கிற சத்ருக்களுடைய தலைகளின்மேலே (அடியிட்டு) |
| | தளர்நடை நடவானோ—. |

***—தன்வாயில் நின்றும் கருப்பு ரஸம்போல் இனிமையான நீர் வெளிப்பட்டு வடியும்படி சிரித்துக்கொண்டுவந்து எனக்கு முத்தங்கொடுக்குந் தன்மையுள்ளவன் கண்ணனென்பது-முன்னிரண்டடிகளின் கருத்து. கணகண—வாய்விட்டுச் சிரிக்கும்போது உண்

டாகின்ற ஒலிக்குறிப்பு. இவன் நடக்கிற நடையழகுகண்டே சத்துருக்கள் சாகவேணு மென்பது ஈற்றடியின் கருத்து. .... ... ... .... (4)

90 முன்னலோர்வெள்ளிப்பெருமலைக்குட்டன் மொடுமொடுவிரைந்தோட *
பின்னைத்தொடர்ந்ததோர்கருமலைக்குட்டன் பெயர்ந்தடியிடுவதுபோல் *
பன்னியுலகம்பரவியோவாப் புகழ்ப்பலதேவனென்னும் *
தன்னம்பியோடப்பின்கூடச்செல்வான் தளர்நடைநடவானோ. (5)

முன் நல் ஓர் வெள்ளி பெருமலை குட்டன் } முன்னே அழகிய ஒப்பற்ற பெரிய வெள்ளிமலைபெற்ற குட்டி
மொடுமொடு விரைந்து ஓட } திடுதிடென்று வேகங்கொண்டு ஓடிக்கொண்டிருக்க,
பின்னை (அந்தப்பிள்ளையின்) பின்னே (தன்சொருக்காலே அப்பிள்ளையைப் பிடிப்பதற்காக)
தொடர்ந்தது தொடர்ந்ததாகிய
ஓர் கரு மலை குட்டன் } ஒப்பற்ற கருநிறமான மலை பெற்ற குட்டி
பெயர்ந்து அடி இடுவது போல் } தானிருக்கு மிடத்தைவிட்டுப் புறப்பட்டு அடியிட்டுப்போவதுபோல்,—
உலகம் பன்னி பரவி ஓவா புகழ் } லோகமெல்லாங்கூடி (தங்களாலான வரையிலும்) ஆராய்ந்து ஸ்தோத்ரஞ்செய்து முடிவுகாண முடியாத கீர்த்தியையுடைய
பலதேவன் என்னும் —பலராமன் என்கிற
தன் நம்பி ஓட தன்னுடைய தமையன் (முன்னே) ஓடிக்கொண்டிருக்க
பின் கூட செல்வான் { (அவனைப் பிடிக்கவேணுமென்ற எண்ணத்தினால் அவன்) பின்னே உடன் செல்பவனான இக்கண்ணபிரான்
தளர்நடை நடவானோ—.

* * *—பலராமன் வெண்மை நிறமுள்ளவனாதலால் அவன் ஓடுதற்கு வெள்ளிமலையீன்ற குட்டியோடுவதையும், கண்ணன் கருநிறமுள்ளவனாதலால் அவன் பின்னே தொடர்ந்தோடுதற்குக் கருமலையீன்ற குட்டி தொடர்ந்தோடுவதையும் உவமை குறித்தார். காரியம் காரணத்தை ஒத்திருக்கும் என்ற கொள்கையை அநுஸரித்து இங்ஙனருளிச்செய்தனரென்க. நம்பி—ஆண்பாற்சிறப்புப்பெயர்; இங்கு, தமையனென்ற பொருளைக்காட்டிற்று. அன்றி, பலராமனுக்கு 'நம்பி மூத்தபிரான்' என்று ஒரு பெயர் ஸம்ப்ரதாயத்தில் வழங்குதலால், அதன் ஏகதேசமாகிய 'நம்பி' என்கிற வித்தால் அப்பெயர் முழுவதையுங் குறித்தாருமாம். மொடுமொடு—நடக்கும்போது தோன்றும் ஒலிக்குறிப்பு; விரைவுக்குறிப்புமாம். .... (5)

91 ஒருகாலிற்சங்கொருகாலிற்சக்கர முள்ளடிபொறித்தமைந்த *
இருகாலுங்கொண்டங்கங்கெழுதினாற்போ லிலச்சினைபடநடந்து *
பெருகாநின்றவின்பவெள்ளத்தின்மேற் பின்னையும் பெய்துபெய்து *
கருகார்க்கடல்வண்ணன் காமர்தாதை தளர்நடைநடவானோ. (6)

கரு கார் கடல் வண்ணன் } மிகவும் கருநிறமுள்ள ஸமுத்ரம போன்ற திருநிறமுடையவனும்
காமர் தாதை காமதேவனுக்குப் பிதாவுமான இப்பிள்ளை,—
ஒரு காலில் சங்கு ஒருபாதத்திலே சங்கமும்
ஒருகாலில் சக்கரம் மற்றொருபாதத்தில் சக்கரமும்
உள் அடி பொறித்து அமைந்த } பாதங்களின் உட்புறத்திலே ரேகையின் வடிவத்தோடு கூடிப் பொருந்தியிருக்கப்பெற்ற
இருகாலும் கொண்டு—இரண்டு திருவடிகளினாலும்
அங்கு அங்கு எழுதினால் போல் } அடிவைத்த அவ்வவ்விடங்களிலே சித்தரித்ததுபோல
இலச்சினை பட நடந்து } அடையாள முண்டாம்படி அடிவைத்து
(தனது வடிவழகைக்கண்டு)
பெருகாநின்ற இன்பம் வெள்ளத்தின் மேல் } பொங்குகிற ஆனந்தமாகிற ஸமுத்ரத்துக்கு மேலே
பின்னையும் பெய்து பெய்து } பின்னும் (ஆனந்தத்தை) மிகுதியாக உண்டாக்கிக்கொண்டு
தளர்நடை நடவானோ!

னாது திருநெற்றியி லசைந்துகொண்டு விளங்குஞ்சுட்டிக்கு, கருநிறமானகடலின் நடுவில் அசைந்துகொண்டு தோன்றும் சந்த்ர ப்ரதிபிம்பம் ஏற்ற உவமையாம். சண்ணம்—ஆண்குறி.

96 ஆயர்குலத்தினில் வந்துதோன்றிய வஞ்சன வண்ணன்றன்னை *
தாயர்மகிழ வொன்னார்தளரத் தளர்நடை நடந்ததனை *
வேயர்புகழ்விட்டுசித்தன் சீரால் விரித்தன வுரைக்கவல்லார் *
மாயன்மணி வண்ணன்றாள்பணியும் மக்களைப் பெறுவர்களே. (11)

| | | | |
|---|---|---|---|
| ஆயர் குலத்தினில் வந்து தோன்றிய | இடையர் குலத்திலே வந்து அவதரித்த | விட்டுசித்தன் | பெரியாழ்வார் |
| அஞ்சனம் வண்ணன் | மைபோன்ற கருநிறமுடையனான கண்ணன் | சீரால் விரித்தன | சிறப்பாக விரித்துச்சொன்ன பாசுரங்களை |
| தன்னை | தன்னை(க் கண்டு) | உரைக்க வல்லார் | சொல்ல வல்லவர்கள் |
| தாயர் மகிழ ஒன்னார் தளர | தாய்மார்கள் மனமுகக்கவும் சத்ருக்கள் வருத்தமடையவும் | மாயன் மணி வண்ணன் தாள் பணியும் மக்களை பெறுவர்கள் | ஆச்சர்யமான குணங்களை யுடையவனும் நீலமணிபோன்ற நிறமுடையனுமான எம்பெருமானுடைய திருவடிகளை வணங்கவல்ல பிள்ளைகளை அடைவார்கள். |
| தளர் நடை நடந்ததனை | தளர்நடை நடந்ததை | | |
| வேயர் புகழ் | வேயர்குடியிலிருப்பவரெல்லாராலும் புகழப்பெற்ற | | |

* * *—'தாயர்' எனப் பன்மையாகக் கூறியது—பாராட்டுந்தாய், ஊட்டுந்தாய், முலைத்தாய், கைத்தாய், செவிலித்தாய் எனத் தாய்மார் ஐவராதலாலும், சிறுதாய் முதலியோரும் தாய்மாரே யாவராதலாலுமாம். தொட்டிற் பருவத்திலேயே பூதனை சகடாஸுரன் முதலியோர்களை முடித்ததனால், கண்ணபிரான் மெல்ல அடியிட்டு நடக்கத்தொடங்கியபோதே 'இனி இவனால் நமக்கு என்ன தீங்கு நேரிடுமோ" என்று கம்ஸாதிகள் நடுங்கி ஒடுங்கினராதலால் 'ஒன்னார்தளர' என்றருளினர். ஒன்னார்—ஒன்றார்; (தம்மோடு மனம்) பொருந்தாதவர்; எனவே, பகைவராவர். பெரியாழ்வார் பிறந்தகுடி—வேயர்குடி எனப்படும். (11)

அடிவரவு:—தொடர் செக்கர் பின்னும் கன்னல் முன்னல் ஒருகால் படர் பங்கம் வெண் திரை ஆயர் பொன்.

ஏழாந்திருமொழி உரை முற்றுப்பெற்றது,

---

## முதற்பத்து—எட்டாந்திருமொழி - பொன்னியற் கிண்கிணி.

அவதாரிகை:—கண்ணபிரான் குழந்தைப் பருவத்துக்குத் தகுதியாக ஓடி வந்து தன்னை அணைத்துக்கொள்ளவேணுமென்று யசோதைப்பிராட்டி வேண்டி அநுபவித்தாப்போலே ஆழ்வாரும் தம்மை அந்த யசோதைப் பிராட்டியாகப் பாவித்து, அந்த கண்ணபிரான் தம்மை அணைத்துக்கொள்ளவேணுமென்று விரும்பி அநுபவித்து இனியராகிறார்—இத்திருமொழியில்.

97 பொன்னியற் கிண்கிணி சுட்டி புறங்கட்டி *
தன்னிய லோசை சலன்சல னென்றிட *
மின்னியல் மேகம் விரைந்தெதிர் வந்தாற்போல் *
என்னிடைக்கோட்டரா வச்சோவச்சோ வெம்பெருமான்வாரா வச்சோவச்சோ. (1

102 போரொக்கப் பண்ணியிப் பூமிப் பொறைதீர்ப்பான் *
தேரொக்க வூர்ந்தாய் செழுந்தார் விசயற்காய் *
காரொக்கு மேனிக் கரும்பெருங் கண்ணனே *
ஆரத்தழுவாவந் தச்சோவச்சோ வாயர்கள்போரேறே யச்சோவச்சோ. (6)

இ பூமி பொறை தீர்ப்பான் — இந்தப்பூமியினுடைய பாரத்தைத் தீர்ப்பதற்காக
போர் ஒக்க பண்ணி — யுத்தத்தை (துர்யோதநாதிகளோடு) சமமாகச்செய்து,
செழு தார் விசயற்கு ஆய் — அழகிய மாலையையுடைய அர்ஜுனனுக்காக
தேர் ஒக்க ஊர்ந்தாய் — (அவனுடைய) தேரை (எதிரிகள் தேர் பலவற்றிற்கும் இது ஒன்றுமே) ஸமமாம்படி பாகனாய்ச் செலுத்தினவனே!
கார் ஒக்கும் மேனி — மேகத்தோடு ஒத்த திருமேனியையும்
கரும்பெருங் கண்ணனே — கரியவாகிப் புடைபரந்த கண்களையுமுடையவனே!
வந்து ஆர தழுவா — ஓடிவந்து நன்றாகத் தழுவிக்கொண்டு
அச்சோ அச்சோ—;
ஆயர்கள் போர் ஏறே — இடையர்களுக்கு (அடங்கி நிற்கின்ற) போர்செய்யுந் தன்மையுள்ள ரிஷபம் போன்றவனே!
அச்சோ அச்சோ—.

* * *—துர்யோதனாதிகளுக்குப் பதினொரு அக்ஷௌஹிணிசேனையும் பாண்டவர்களுக்கு எழு அக்ஷௌஹிணி சேனையுமாயிருக்கவும். இவ்விருதிறத்தாரும் போர்செய்யும்போது இருவரும் சரிசமமாகவே யுத்தஞ் செய்பவர்களாகவே நிற்குமாறு செய்தனன் கண்ணபிரானென்க. பகைவர்களோடு போர்புரியும்போது தும்பைப்பூமாலையும், வெற்றிகொண்டபோது வாகைப்பூமாலையும் வீரர் சூடுவரெனக் கூறுதல் தமிழர் வழக்கமாதலால் இவ்விரு பூமாலையையும் அவ்வப்போது அர்ஜுனன் அணிவனென்பதைத் தெரிவிக்க, பொதுவாகச் 'செழுந்தார்விசயன்' என்றார். விசயன் – அர்ஜுனனுக்கு, 'விஜயன்' என்ற வடமொழி நாமம். .... .... .... .... (6

103 மிக்க பெரும்புகழ் மாவலிவேள்வியில் *
தக்கதிதன்றென்று தானம் விலக்கிய *
சுக்கிரன் கண்ணைத் துரும்பாற் கிளறிய *
சக்கரக்கையனே யச்சோவச்சோ சங்கமிடத்தானே யச்சோவச்சோ. (7

மிக்க பெரும்புகழ் மாவலி வேள்வியில் — (ஔதார்யத்தால்) மிகுந்த கீர்த்தியையுடைய மஹாபலி செய்த யாகத்திலே
(வாமனனாய்ச்சென்ற உனக்கு அந்த மஹாபலி நீ கேட்டதைக்கொடுக்க முயன்றவளவிலே.)
இது தக்கது அன்று என்று — 'நீ கொடுக்கிற இது தகுதியான தன்று' என்று முறையிட்டு
தானம் விலக்கிய சுக்கிரன் கண்ணை — பூமிதானத்தை (அவன் தத்தம் பண்ணும்போது நீர் விழவொட்டாமல்) தடுத்த சுக்கிராசாரியனுடைய ஒரு கண்ணை
துரும்பால் கிளறிய — (உன் கையிலணிந்திருந்த) தர்ப்பபவித்ரத்தின் நுனியால் கலக்கின
சக்கரம் கையனே — சக்ராயுதமேந்திய கையையுடையவனே!
அச்சோ அச்சோ—;
சங்கம் இடத்தானே — பாஞ்சஜந்யத்தை இடக்கையிலேந்தினவனே!
அச்சோ அச்சோ—.

* * *—சுக்கிரன் – மஹாபலியின் ஆசார்யன். வாமநமூர்த்தியின் வடிவழகாலும் மழலைச்சொல்லாலும் மனமகிழ்ந்த மஹாபலி மூவடிமண்ணைக் கொடுக்க யத்நித்தவளவிலே, சுக்ராசார்யன் எம்பெருமானது வடிவையும் வந்தவகையையும் பேச்சையும் ஊன்றிப்பார்த்து 'இவன் ஸர்வேச்வரன், தேவகார்யம் செய்யும்பொருட்டு உன் செல்வத்தை யெல்லாம் பறித்துப்போகவந்தான்; ஆகையால் நீ இவனுக்கொன்றும் தரத்தகாது' என்று தானத்தைத்

தடுக்க, அவன் அதை ஆதரியாமல் தாரைவார்த்து தத்தம் செய்யப்புக, ஜலபாத்ரத்தின் [திருக்காவிரி] த்வாரத்திலே அந்த சுக்ரன் புகுந்துகொண்டு நீர் விழவொட்டாமல் தடுக்க, ஸ்ரீ விஷ்ணு, த்வாரம் சோதிப்பவன்போலத் தன்னுடைய திருக்கையிலணிந்த தர்ப்ப பவித்ரத்தின் நுனியால் அவன் கண்ணைக் குத்திக்கலக்க, அவனும் கண்கெட்டு அங்குநின்றும் வெளிப்பட, பின்பு மாவலியினிடத்தில் நீரேற்றுப் பேறுபெற்றனனென்க. 'தருமபாற் கிளறிய சக்கரம்' என்றதனால், "கருதுமிடம் பொருது-கைந்நின்ற சக்கரத்தன்" என்றபடியே திருமால் விரும்பிய இடங்களில் விரும்பின வடிவங்கொண்டு செல்லுந் தன்மையையுடைய திருச்சக்கரமே பவித்ரத்தின் வடிவத்துடன் நின்று சுக்ரன் கண்ணைக் கலக்கிற்றென்பது பெறப்படும். ஸுதர்சநசதகத்திலும் "ச்ரு ச நய ந நயவஜ்ர ஹதிஹ ... " என்றதுகாண்க. (7)

104 என்னிதுமாய மேன்னப்பனறிந்திலன் *
முன்னையவண்ணமே கொண்டளவாயென்ன *
மன்னுநமுசியை வானிற்சுழற்றிய *
மின்னுமுடியனேயச்சோவச்சோ வேங்கடவாணனேயச்சோவச்சோ. (8)

(மாவலியைச்சென்ற திருமால் மாவலியிடத்தில் நீரேற்று த்ரிவிக்ரமனாய் வளர்ந்து அளக்கப்புகும்போது, அதுகண்ட மஹாபலிபுத்ரனான நமுசி ஓடிவந்து.)
இது என மாயம் — ('யாசிக்கும்போதிருந்த வடிவம் மாறியளக்கிற) இது என்ன மாயச் செய்கை!;
என் அப்பன் அறிந்திலன் — என் தகப்பன் (நீ செய்யும் இந்த மாயத்தை) அறியவில்லை.
முன்னைய வண்ணமே கொண்டு — நீ யாசிக்கவந்தபோதிருந்த வடிவத்தையே கொண்டு
அளவாய் — அளப்பாயாக'
என்ன — என்று சொல்ல.
மன்னு நமுசியை — (இப்படி) பிடிவாதமாய்நின்ற (அந்த) நமுசியென்பவனை
வானில் சுழற்றிய — ஆகாயத்திலே சுழலச்செய்த
மின்னு முடியனே — விளங்குகின்ற கிரீடத்தை யுடையவனே!
அச்சோ அச்சோ—;
வேங்கடம் வாணனே — திருமலையிலே வாழுமவனே!
அச்சோ அச்சோ—.

* * *—நமுசி, த்ரிவிக்ரமனோடு வெகு நாழிகை வழக்காடி, எம்பெருமான் சொன்ன ஸமாதாநங்களைக் கேளாமல் தான் பிடித்த திருவடியின் பிடியை விடாமல் உறுதியாயிருக்க, எம்பெருமான் வளர்ந்த திருவடியினால் அவனை ஆகாசத்திலே கொண்டுபோய்ச் சுழன்று விழும்படிசெய்த வரலாறு காண்க. 'சுழற்றிய' என்ற பெயரெச்சம் முடியனைக்கொண்டு முடியும். .... .... .... .... (8)

105 கண்டகடலும் மலையுமுலகேழும் *
முண்டத்துக்காற்ரு முகில்வண்ணாஓஒவென்று *
இண்டைச்சடைமுடி யீசனிரக்கொள்ள *
மண்டைநிறைத்தானேயச்சோவச்சோ மார்வில்மறுவனேயச்சோவச்சோ. (9)

கண்ட கடலும் மலையும் — "கண்ணாற்கண்ட ஸமுத்ரங்களும் மலைகளும்
உலகு ஏழும் — கீழ் ஏழ் மேல் ஏழ் என்ற பதினாலு லோகங்களும் (ஆகிய எல்லாவற்றையுமிட்டு நிறைக்கப் பார்த்தாலும்)
முண்டத்துக்கு ஆற்ரு — (என் கையிலிருக்கிற ப்ரஹ்ம) கபாலத்துக்குப் போதாவாம்;
முகில் வண்ணா — மேகவண்ணனே!
ஓஓ! — ஓஓ! [ஹாஹா!]"
என்று — என்று கூப்பிட்டு
இண்டை சடை முடி ஈசன் இரக்கொள்ள — நெருங்கிய ஜடாபந்தத்தையுடைய சிவன் பிச்சையெடுக்க,

மண்டை நிறைத்தானே — (அவன் கையிலிருந்த ப்ரஹ்ம) கபாலத்தை (மார்பிலிருந்து உண்டான ரக்தத்தால்) நிறையச் செய்தவனே!
மார்வில் மறுவனே — திருமார்பிலே ஸ்ரீவத்ஸமென்னும் மச்சத்தையுடையவனே!
அச்சோ அச்சோ—; அச்சோ அச்சோ—.

* * *—மஹாப்ரயாஸங்கள்பட்டும் நிறைக்கமுடியாத ப்ரஹ்மகபாலத்தின் தன்மையைக் காட்டிற்று—முதலிரண்டடி. ஓலு-'ஓ' என்னும் இரக்கக் குறிப்பிடைச்சொல் அளபெடுத்துவந்தது. இனி, கண்ட கடலிலும் மலைகளிலும் உலகேழிலும் (திரிந்தும்) முண்டத்துக்கு ஆற்று என்றுமாம். 'உண்டத்துக்கு ஆற்று' என்றெடுத்து, (எங்கே திரிந்தும் மிக வருந்தியும்) கபாலத்திற்குவேண்டிய உணவையிடுதற்கு முடியாமல் ஈசன் 'முகில்வண்ணு ஓலு' என்று இரக்கொள்ள என்று முரைக்கலாம். 'முண்டத்துக்கு' என்ற பாடத்தில் மூன்றுஞ் சீரோடும், உண்டத்துக்கு என்றபாடத்தில் இறுதிச்சீரோடும் மோனைத்தொடர் காண்க. இரக்கொள்ள = இர-முதனிலைத் தொழிற்பெயர். .... ... ... (9)

106 துன்னியபேரிருள் சூழ்ந்துலகைமூட *
மன்னியநான்மறை முற்றுமறைந்திட *
பின்னிவ்வுலகினிற் பேரிருள்நீங்க * அன்
றன்னமதானுனேயச்சோவச்சோ அருமறைதந்தானேயச்சோவச்சோ. (10)

மன்னிய நால் மறை முற்றும் மறைந்திட — நித்யஸித்தமான சதுர்வேதங்களும் முழுவதும் மறைந்துவிட (அதனால்)
துன்னிய பேர் இருள் சூழ்ந்து உலகை மூட — நெருங்கிய பெரிய அஜ்ஞாநாந்தகாரம் பரவி லோகங்களை மறைத்துக்கொள்ள
பின் — பின்பு
இ உலகினில் — இந்த லோகங்களிலே
பேர் இருள் நீங்க — (அந்த) மிகுந்த அஜ்ஞாநாந்தகாரமானது நீங்கும்படி
அன்று — அக்காலத்தில்
அன்னம் அது ஆனானே — ஹம்ஸமாய் அவதரித்தவனே!
அச்சோ அச்சோ—;
அரு மறை தந்தானே — (அந்த ரூபத்தோடு) அருமையான வேதங்களை உபகரித்தவனே!
அச்சோ அச்சோ—.

* * *—முன் ஒரு கல்பத்தின் அந்தத்தில் சதுர்முகன் துயிலுகையில் அவன் முகங்களினின்று வெளிப்பட்டுப் புருஷரூபத்துடன் உலாவிக்கொண்டிருந்த நான்கு வேதங்களையும் மஹாபலிஷ்டனுய் அருந்தவங்கள் செய்து பெருவரங்கள் பெற்ற சோமுகனென்னும் அசுரன் கவர்ந்துகொண்டு ப்ரளயவெள்ளத்தினுள் மறைந்துசெல்ல, அதனையுணர்ந்து திருமால் ஒரு பெருமீனுகத் திருவவதரித்து அப்பெருங் கடலினுட்புக்கு அவ்வசுரனைத்தேடிப் பிடித்துக் கொன்று, அவன் கவர்ந்து சென்ற வேதங்களை மீட்டுக்கொணர்ந்து, ஸாரத்தையும் அஸாரத்தையும் பிரிக்குந் தன்மையுள்ள ஹம்ஸமாய்த் தோன்றிப் பிரமனுக்கு உபதேசித்த வரலாறு காண்க. நான்மறைகளாவன—ருக், யஜுஸ், ஸாமம், அதர்வணம் என்பன; இவை வேதவ்யாஸரால் பிரிக்கப்பட்ட பிரிவின் பெயர்களாதலால் அதற்கு முன்னிருந்த தைத்திரியம், தலவகாரம், பௌடியம், சாமம் என்ற நான்கும் என்று கொள்ளுதல் தகும். அன்னம்—'ஹம்ஸம்' என்பதன் விகாரம். "அருமறைதந்தானே" என்ற பாடத்தில் தளைதட்டுதலால் "ஆர்மறை தந்தானே" என்று பாடமோதுவது ஒக்குமென்று சிலர் திருத்துவர்; அது வேண்டா. .... ... .... .... (10)

107 நச்சுவார்முன்னிற்கும் நாராயணன்றன்னை *
அச்சோவருகவென் றுய்ச்சியுரைத்தன *
மச்சணிமாடப் புதுவைக்கோன்பட்டன்சொல் *
நிச்சலும்பாடுவார் நீள்விசும்பாள்வரே. (11)

| | | | |
|---|---|---|---|
| நச்சுவார் முன் நிற்கும் நாராயணன் தன்னை | (தன்னை) விரும்பிப் பக்தி பண்ணுமவர்களுடைய முன்னே வந்து நிற்கும் தன்மையுள்ள நாராயணனாகிய ஸ்ரீ கிருஷ்ணனை | அச்சோ வருக என்று உரைத்தன | 'அச்சோ வருவாயாக' என்று சொன்னவற்றை, |
| ஆய்ச்சி | இடைக்குலத்தவளான யசோதை | மச்சு அணிமாடம் புதுவை கோன் பட்டன் | பல நிலைகளால் அழகிய மாளிகைகளையுடைய ஸ்ரீ வில்லிபுத்தூர்க்கு நிர்வாஹகரான பெரியாழ்வார் |
| (அணைத்துக் கொள்ளுகையிலுண்டான விருப்பந்தோன்றும்படி) | | சொல் பாடுவார் | சொன்ன இப்பத்துப்பாசுரங்களையும் பாடுமவர்கள் |
| | | நச்சுவும் நீள் விசும்பு ஆளவர் | எப்போதும் பரமாகாசமாகிற பரமபதத்திற்கு நிர்வாஹகராவர். |

* * *—முன்பு யசோதைப் பிராட்டிக்குச் சண்ணெதிரே நின்று கண்ணபிரான் எப்படி ஸேவைதந்தருளினனோ அப்படியே இப்போது தமக்கும் ப்ரத்யக்ஷமாக ஸேவைதந்தருளினதுபற்றி "நச்சுவார் முன்னிற்கும் நாராயணன்" என்றார். ... .... (11)

அடிவரவு:—பொன் செங்கமல பஞ்சவர் நாறிய மருவ போரர் பிக்க என்னிது கண்ட துன்னிய நச்சு வட்டு.

எட்டாந்திருமொழி உரை முற்றிற்று.

---

## முதற்பத்து—ஒன்பதாந்திருமொழி, வட்டுநடுவே.

---

அவதாரிகை:—கண்ணபிரான் ஓடிவந்து தன்னை முதுகிற் கட்டிக்கொள்வதை யசோதைப்பிராட்டி அக்காலத்திலே விரும்பிக் கூறினாற்போலே ஆழ்வார் தாமும் தம்மை அவளாகப் பாவித்துத் தம்முதுகில் கண்ணன் வந்து கட்டிக்கொள்வதாகப் பாவநாப்ரகர்ஷத்தாலநுபவித்து இனியராகிறார்—இத்திருமொழியில். ... ... ... (*)

108 வட்டுநடுவே வளர்கின்ற * மாணிக்க
மொட்டுநுனையில் முளைக்கின்றமுத்தேபோல் *
சொட்டுச்சொட்டென்னத் துளிக்கத்துளிக்க * என்
குட்டன்வந்தென்னைப்புறம்புல்குவான் கோவிந்தனென்னைப்புறம்புல்குவான். (1)

| | | | |
|---|---|---|---|
| என் குட்டன் | என் பிள்ளை | சொட்டு சொட்டு என்ன | சொட்டுச் சொட்டென்று ஓசையுண்டாகும்படி (அம்மாணிக்க மொட்டு) |
| வட்டு நடுவே வளர்கின்ற | (இரண்டு நீரைத்த) வட்டுகளின் நடுவே வளர்ந்துகொண்டிருப்பதான | துளிக்க துளிக்க | பலதரம் துளியாநிற்க |
| மாணிக்கம் மொட்டு நுனையில் முளைக்கின்ற முத்தே போல் | இந்திர நீலமான அரும்பினுடைய நுனியிலே உண்டாகின்ற முத்தைப்போல | வந்து என்னை புறம் புல்குவான் | ஓடிவந்து என்னுடைய முதுகைக் கட்டிக்கொள்வான்; |
| | | | கோவிந்தன எனனை புறம்புல்குவான்—. |

* * *—'வட்டு நடுவே வளர்கின்ற மாணிக்க மொட்டு' என்றது—கண்ணபிரானது குறியை யென்க; [குறி—ஶிஶ்நாவயவம்.] நிறத்தாலும் ஆகாரத்தாலும் உவமை. 'முளைக்கின்ற முத்து' என்றது—அதில் நின்று வெளிவருகிற சிறுநீரை. உபமேயத்தைச் சொல்லாது உபமானத்தை மாத்திரம் சொல்லி அதனால் உபமேயத்தைப் பெறவைத்தது—இடக்கரை அடக்கவேணுமென்ற கருத்தினாற் போலுமென்ப. சிறுநீர்த்துளிகள் இற்று இற்று மீண்டும்

வருதலால் 'சொட்டுச் சொட்டென்னத் துளிக்கத் துளிக்க' என்றார். என்னை—உருபு மயக்கம். புல்குவான்—அணைத்துக்கொண்டபடியைச் சொல்லுகிறது; இனி, 'அணைத்துக்கொள்வானாக' என்று விரும்பினதாகவும் கொள்ளலாம். ... ... .... .... (1)

109 கிண்கிணிகட்டிக் கிறிகட்டி * கையினிற்
கங்கணமிட்டுக் கழுத்தில்தொடர்கட்டி *
தங்கணத்தாலே சதிராநடந்துவந்து *
என்கண்ணனென்னைப்புறம்புல்குவா னெம்பிரானென்னைப்புறம்புல்குவான். (2)

| | | | |
|---|---|---|---|
| என் கண்ணன் | என் கண்ணபிரான் | கழுத்தில் தொடர் கட்டி | திருக்கழுத்திலே சங்கிலியை அணிந்துகொண்டும் |
| கிண்கிணி கட்டி | அரைச்சதங்கையைக் கட்டிக் கொண்டும் | தம் கணத்தாலே | (இன்னுமணிந்துகொண்டுள்ள) திருவாபரணங்களின் திரளோடு கூட |
| கிறி கையினில் கட்டி | சிறுப்பவளத்தைக் கையிலே கட்டிக் கொண்டும் | சதிர் ஆ நடந்து வந்து | அழகாக நடந்து வந்து |
| கங்கணம் இட்டு | தோள்வளையை (தோள்களில்) சாத்திக்கொண்டும் | | என்னை புறம்புல்குவான—; எம்பிரான் என்னை புறம்புல்குவான். |

* * *—கங்கணம்-வடசொல். திருவாபரணங்களைச் சொல்லும் ப்ரகரணமாதலால், சொல்லப்படாதொழிந்த திருவாபரணங்களையுங் கூட்டித் 'தம்கணம்' என்றது. கணம்—'மணி' என்ற வடசொல் திரிபு. தன் கணத்தாலே என்று பாடங்கொண்டு, தன்னுடைய கண்ணால் (என்னைக் கடாக்ஷித்துக்கொண்டு) எனினுமமையும்; இப்பொருளில் 'கண்' என்பது-மூன்றும் வேற்றுமையுருபை ஏற்கும்போது அத்துச்சாரியை பெற்றுவந்ததெனவேண்டும். 2

110 கத்தக்கதித்துக் கிடந்தபெருஞ்செல்வம் *
ஒத்துப்பொருந்திக்கொண் டுண்ணதுமண்ணுள்வான் *
கோத்துத்தலைவன் குடிகெடத்தோன்றிய *
அத்தன்வந்தென்னைப்புறம்புல்குவா னாயர்களேறென்புறம்புல்குவான். (3

| | | | |
|---|---|---|---|
| கத்தக் கதித்து கிடந்த | மிகவும் கொழுத்து (உனக்கு எனக்கென்று பிணங்கும்படி) இருந்த | கொத்து தலைவன் | (தம்பிமார்களும் பந்துக்களும் பேனைகளுமாகிய) திரளுக்குத் தலைவனான துரியோதனன் |
| பெரு செல்வம் | மிகுந்த ஐச்வர்யத்தை | குடி கெட | (தன்) குடும்பத்தோடு பாழாம்படி |
| ஒத்து | (தன் பந்துக்களான பாண்டவர்களோடு) ஒத்து | தோன்றிய | திருவவதரித்த |
| பொருந்திக்கொண்டு | மனம் பொருந்தியிருந்து | அத்தன் | ஸ்வாமி |
| உண்ணது | அநுபவியாமல் | | வந்து என்னை புறம் புல்குவான்—. |
| மண் ஆள்வான் | பூமியை (தான் அத்விதீயனாய்) ஆளவேணுமென்று நினைத்தவனை | ஆயர்கள் ஏறு | இடையர்களுக்குள் சிறந்த கண்ணபிரா |
| | | | என் புறம் புல்குவான்—. |

* * *—கத்தக்கதித்து—"பக்கப்பருத்து," "தக்கத்தடித்து" என்பனபோன்ற ஒ(ரு) வகைக் குறிப்பிடைச்சொல் ஏறு—ஆகுபெயரால், செருக்கு, நடை, காம்பீர்யம் முதலி(ய) குணங்களால் காளைபோன்ற இளவீரனைக்குறிக்கும். .... .... .... (3

111 நாந்தகமேந்திய நம்பிசரணென்று *
தாழ்ந்ததனஞ்சயற்காகித் தரணியில் *

வேந்தர்களுட்க விசயன்மணித்திண்டேர் *
ஊர்ந்தவனென்னைப் புறம்புல்குவா னும்பர்கோனென்னைப் புறம்புல்குவான். (4)

நாந்தகம் ஏந்திய நம்பி சரண் என்று தாழ்ந்த — ‘நந்தகம் என்னும் வாளைக் கையிலணிந்துள்ள பெரியோனே! (நீ எனக்கு) ரக்ஷகன்’ என்று சொல்லி (தன்னை) வணங்கிய
தனஞ்சயற்கு ஆகி — அர்ஜுநனுக்குப் பக்ஷபாதியாயிருந்து
தரணியில் வேந்தர்கள் உட்க — இப்பூமியிலே (எதிரிகளான) ராஜாக்கள் அஞ்சிக் கலங்கும்படி
விசயன் மணி திண் தேர் ஊர்ந்தவன் — அந்த அர்ஜுநனது அழகிய வலிய தேரை (ஸாரதியாயிருந்து) செலுத்தினவன்
என்னை புறம் புல்குவான்—;
உம்பர் கோன் — நித்யஸூரிகளுக்கு நிர்வாஹகனான இவன்
என்னை புறம் புல்குவான்—.

* * *—நாந்தகம்=‘நந்தகம்’ என்ற வடசொல் நீண்டுகிடக்கிறது. நம்பி—உயர்திணை ஆண்பாற் சிறப்புப்பெயர்; நம்பி ஆடூஉ, விடலை கோவேள் குரிசில் தோன்றல், இன்னன ஆண்பெயராகுமென்ப" என்பது நன்னூல். சரண் ‘சரணம்’ என்ற வடசொற் சிதைவு. தனஞ்சயன்—அர்ஜுநனுக்கு மறுபெயர். இது தர்மபுத்ரன் ராஜஸூயயாகம் செய்யக் கோலின போது பலராஜாக்களையும் வென்று மிக்க பொருளைக் கொணர்ந்ததனாலும், வெற்றியையே செல்வமாக வுடையவனென்ற காரணத்தாலும் வந்த பெயராம். தரணி—தரணி: உட்க—(நெஞ்சு) உளுக்கும்படியாக; மணித்தேர்—மணிகளமைத்துச் சமைத்ததேரென்றுமாம். உம்பர்—மேலுலகு; அங்குள்ளார்க்கு ஆகுபெயர். .... .... .... .... (4)

112 வெண்கலப்பத்திரங் கட்டிவிளையாடி *
கண்பலசெய்த கருந்தழைக்காவின்கீழ் *
பண்பலபாடிப் பல்லாண்டிசைப்ப * பண்டு
மண்பலகொண்டான்புறம்புல்குவான் வாமனனென்னைப்புறம்புல்குவான் (5)

பண்டு — முன்னொரு காலத்திலே
வெண்கலம் பத்திரம் கட்டி விளையாடி — வெண்கலத்தாற்செய்த பத்திரத்தை (அரையிற்) கட்டிக்கொண்டு விளையாடி
பல கண் செய்த கரு தழை காவின் கீழ் — பல பீலிக்கண்களைக் கொண்டு செய்யப்பட்ட பெரிய குடையாகிற சோலையின் கீழேயிருந்து (மாவலியிடத்தில் மூவடிமண்ணை இரந்து பெற்று)
பல பண் பாடி — (அநுகூலமானவர்கள்) பலவித ராகங்களைப் பாடிக்கொண்டு
பல்லாண்டு இசைப்ப—மங்களாசாஸநம் செய்ய
பல மண் கொண்டான் — பல [ஸகலமான] லோகங்களையும் அளந்து தன்னதாக்கிக்கொண்ட இவன்
புறம் புல்குவான்—;
வாமனன் என்னை புறம்புல்குவான்—.

* * *—பத்திரம்—வடசொல்; இலை என்பது பொருள்; வெண்கலத்தாலே இலைவடிவமாகச் செய்து குழந்தையினரையிற் கட்டுதல் முற்காலத்தில் அந்தணர்களின் வழக்கம் போலும்; அங்ஙனமே வாமநாவதாரஞ்செய்த ஸ்ரீவிஷ்ணு தன் திருவரையிலணிந்துகொண்டன னென்க; இனி, முதலடியால் கண்ணபிரானது பால்யதசையில் லீலைவகையைச் சொல்லிற்றாகவுமாம். "கண்பலபெய்து" என்று பாடமாகில், கருந்தழை—பீலிப்பிச்சத்தினுடைய, பல கண்–பலகண்களையும், பெய்து—தலையில் அணிந்துகொண்டு, காவின் கீழ் விளையாடி—சோலைநிழலிலே விளையாடியென்று உரைக்கவேண்டும். பீலித்தழையைத் தலையிலேகட்டுகை ஜாதிக்கு உரிய செய்கையாம். ‘மண்’ என்ற சொல் ஆகுபெயரால் பூமியைக் காட்டும்; அச்சொல் இங்கு, உலகம் என்ற பொதுப்பொருளைத் தந்தது. .... .... (5)

113 சத்திர மேந்தித் தனியொரு மாணியாய் *
உத்தர வேதியில் நின்ற வொருவனை *
கத்திரியர் காணக் காணி முற்றுங்கொண்ட *
பத்திராகாரன் புறம்புகுவான் பாரளந்தானென் புறம்புல்குவான். (6)

உத்தர வேதியில் நின்ற ஒருவனை — உத்தரவேதியிலிருக்க (ஔதார்யத்தில்) அத்விதீயனான மஹாபலியினிடத்திலே
சத்திரம் ஏந்தி — குடையை (கையில்) பிடித்துக்கொண்டு
தனி ஒரு மாணி ஆய் — ஒப்பற்ற ஒரு ப்ரஹ்மசாரி வாமனனாய்(ப்போய்)
கத்திரியர் — (அவனுக்குச் சிறப்பட்ட) க்ஷத்ரியர்கள்
காண — பார்த்துக்கொண்டிருக்கையில்
காணி முற்றும் கொண்ட — உலகமுழுவதையும் (நீரேற்றளந்து) தன்னதாக்கிக்கொண்ட
பத்திரம் ஆகாரன் — விலக்ஷணமான வடிவையுடையனான இவன்
புறம் புல்குவான்—;
பார் அளந்தான் — பூமியை (திரிவிக்கிரமனாய்) அளந்த இவன்
என் புறம் புல்குவான்—.

* * *—சத்திரம்—'ச்சத்ரம்' என்ற வடசொல் திரிபு. உத்தரவேதி—ஆஹவநீயாக்நிக்கு வடதிசையிலே யாகபசுவைக் கட்டுகின்ற யூபஸ்தம்பத்தை நாட்டிய வேதிகை; இச்சொல் இங்கு, யாகபூமியைக் காட்டுமென்க. கத்திரியர்—'க்ஷத்ரியா:' என்ற வடசொற்றிரிபு. ['கத்திரிவர்' என்பது சிலர் பாடம்.] பத்திராகாரன்—பத்ராகார:. .... .... (6)

114 பொத்தவுரலைக்கவிழ்த்து அதன்மேலேறி *
தித்தித்தபாலும் தடாவினில்வெண்ணெயும் *
மெத்தத்திருவயிறார விழுங்கிய *
அத்தன்வந்தென்னைப்புறம்புல்குவா னாழியானென்னைப்புறம்புல்குவான். (7)

பொத்த உரலை கவிழ்த்து — (அடியில்) ஓட்டையாய்விட்டதொரு உரலைக்கொண்டுவந்து தலைகவிழ்த்துப்போட்டு
அதன்மேல் ஏறி — அவ்வுரலின்மேலேறி
தடாவினில் — மிடாக்களிலேயுள்ள
தித்தித்த பாலும் — மதுரமான பாலையும்
வெண்ணெயும் — வெண்ணெயையும்
திருவயிறு ஆர — வயிறு நிரம்ப
மெத்த விழுங்கிய — மிகுதியாக விழுங்கின
அத்தன் — தலைவன்
வந்து என்னை புறம் புல்குவான்—;
ஆழியான் — (இப்படிக் களவுகாணும் உள்ளங்கையில் ஆழியைச் சேர்த்தவன்)
என்னை புறம் புல்குவான்—.

* * *—திருவாய்ப்பாடியிலுள்ளார் தங்கள் தயிர் நெய் பால்களைக் கண்ணனுக் கெட்டாதபடி உயர உறிகளின்மேலே சேமித்துவைக்க, அதுகண்டு சர்வேச்வரன் ஒரு பொத்த வுரலைத்தேடிக் கண்டுபிடித்து உருட்டிக்கொண்டுவந்து தலைகீழாகக் கவிழ்த்துப்போட்டு அதன் மேலேறி உறிகளையெட்டி அதிலுள்ளவற்றை விழுங்குவனாம். [பொத்தவுரலை] நல்லவுரலானால் அதை நடுவே யாரேனும் சிலர் கார்யார்த்தமாகத் தேடிவந்து தன்னைப் பிடித்துக்கொள்ளக் கூடுமென்று பொத்தவுரலைத்தேடிப் பிடித்தானென்பது விசேஷார்த்தம். பொத்தவுரல்—'பொத்தலுரல்' என்பதன்மரூஉ வென்னலாம்: 'பொத்தல்' என்பதில் ஈற்றுமெய் கெட்டதென்றலுமொன்று. ... ... .... .... .... (7)

115 மூத்தவைகாண முதுமணற்குன்றேறி *
கூத்தவந்தாடிக் குழலாலிசைபாடி *
வாய்த்தமறையோர் வணங்க * இமையவர்
ஏத்தவந்தென்னைப்புறம்புல்குவா னெம்பிரானென்னைப்புறம்புல்குவான். (8)

| | | | |
|---|---|---|---|
| மூத்தவை | வயதுசென்ற இடைச்சனங்கள் | இமையவர் | தேவர்கள் |
| காண | காணும்படியாக | ஏத்த | ஸ்தோத்திரஞ்செய்யவும் |
| முதுமணற் குன்றேறி | நெடுநாளாய்க்குவிந்த மேடாயிருக்கு மணற்குன்றின மேலேயிருந்து | குழலால் இசைபாடி | வேய்ங்குழலினல் ராகம் பாடிக்கொண்டும் |
| வாய்த்த | தன்னுடைய சேஷ்டிதத்தைக் காணும்படி கிட்டின | உவந்து | ஸந்தோஷித்து |
| | | கூத்து ஆடி | கூத்தாடியும் நின்று |
| மறையோர் | ப்ரஹ்மர்ஷிகள் | | வந்து என்னை புறம்புல்குவான்—; |
| வணங்க | தன்னைக்கண்டு வணங்கவும் | | எம்பிரான் என்னை புறம்புல்குவான்—. |

* * *—கண்ணபிரான் எல்லாருங் காணும்படியாக மிகவுமுயர்ந்ததொரு மணற்குன்றின்மேலேறிநின்று தான் விரும்பின பெண்களின் பேரைச்சொல்லுதலும் தன்மேல் கோபங்கொண்டிருக்கும் பெண்களின் காலைக்கையைப் பிடித்துக்கொண்டு பொறுப்பித்தலும் முதலான ஆவியின் குறிப்புகள் தன்னோடுபழகும் பெண்களுணரும்படி புல்லாங்குழலூதியும், நிலவறைகளிற் கிடக்கும் பெண்களும் அவ்விடத்தை விட்டோடிவந்து காண்கையாலே மிகவும் மனமுகந்து கூத்தாடியுமநிற்க, அவனுடைய சேஷ்டிதங்களைதை அனுபவித்து ரிஷிகளும் தேவர்களும் வணங்கித் துதிக்க இப்படிக் கூத்தாடின அழகோடே அப்பிரான்வந்து என்னைப் புறம்புல்க வேணுமென்பதுகருத்து. மூத்தவை — பலவின்பால் வினையாலணையும பெயர்: மூத்த அவை என்றுபிரித்து, பெயரெச்சத்து ஈற்று அகரம தொக்கதென்றால், வயசுமுதிர்ந்துள்ள கூட்டமென்று பொருளாம். அவை='ஸபா' என்ற வடசொல் 'சபை' எனத் திரிந்த, அது 'சவை' என்றாய், சவை அவை ஆயிற்றென்ப. 'வாய்ந்த மறையோர்' என்றதொடர் — (எதுகைக்கேற்ப) வாய்த்த மறையோர் என விகாரப்பட்டதென்றால், கண்ணன் யாவருங்காண முதுமணற்குன்றேறிக் குழலாலிசைபாடிக் கூத்து உவந்தாட, மூத்த அவை — மூத்த ஸபையாய்த்திரண்ட இடையர்கள், இமையவர்—கண் இமையாதவர்களாயிருந்து, ஏத்த—துதிக்கவும், வாய்த்த மறையோர்—(நிலவறைகளிலே) பொருந்திய மறைதலையுடைய பெண்கள் (குழலோசைவழியேகிட்டிச், கண்ணன் கூத்தாடுவதைக்கண்டு அவனது திருவடியின் ஸௌகுமார்யத்தை நினைத்து அக்கூத்தை நிறுத்துவதற்காக) வணங்கவும் இப்படிக் கூத்தாடின செவ்வியோடே வந்து என்னைப் புறம்புல்கவேணுமென்று பொருள் பணிக்க: அப்போது, ஆடி—ஆட; எச்சத்திரிபு. .... .... .... (8)

**116** கற்பகக்காவு கருதியகாதலிக்கு *
இப்போழுதீவனென்று இந்திரன்காவினில் *
நிற்பனசெய்து நிலாத்திகழ்முற்றத்துள் *
உய்த்தவனென்னைப்புறம்புல்குவா னும்பர்கோனென்னைப்புறம்புல்குவான். (9)

| | | | |
|---|---|---|---|
| இந்திரன் காவினில் கற்பகம் காவு | இந்த்ரனுடைய உத்யானவனத்திலிருந்த கற்பகச்சோலையை | நிலா திகழ் முற்றத்துள் | நிலா விளங்குகின்ற அவள் வீட்டு முற்றத்தில் |
| கருதிய காதலிக்கு | (தன் வீட்டிற்கொண்டுவைக்க வேணுமென்று) விரும்பிய தனக்கு ப்ரியையான ஸத்யபாமைப்பிராட்டிக்கு | நிற்பன செய்து உய்த்தவன் | இருப்பனவாகச் செய்து தழைக்கும்படி செய்தவன |
| | | | என்னை புறம்புல்குவான்—; |
| இப்பொழுது ஈவன் என்று | 'இப்பொழுதே கொணர்ந்து தருவேன' என்று சொலலி | உம்பர் கோன் | (அன்று தன் பராக்ரமததைக் காட்டிய) தேவாதிதேவன என்னை புறம்புல்குவான். |

* * *—கண்ணபிரான் ஸத்யபாமையின் உகப்புக்காக, தேவலோகத்திலிருந்து பாரிஜாத வ்ருக்ஷத்தைக் கொணர்ந்து த்வாரகையில் நாட்டினமை ப்ரஸித்தம. இந்திரன் காவு—

நந்தநவநம். மந்தாரம், பாரிஜாதம், ஸந்தானம், கல்பவ்ருக்ஷம், ஹரிசந்தனம் எனத் தேவ லோகத்து மரங்கள் ஐந்து; அவ்வைந்தையும் கல்ப வ்ருக்ஷமென்று ஸாதாரணமாக வழங்குதலுமுண்டு; இங்கு, பாரிஜாதத்தைக் கற்பகமென்றார். இம்மரங்களில் ஒவ்வொன்றுமே பெருஞ்சோலையாகத் தழைத்திருக்குமாதலால், "கற்பகக்காவு" எனப்பட்டது. ஒரு மரத்தையே காவு என்று கூறியதற்கு ஏற்ப 'நிற்பன செய்து' என்று பன்மையாகக் கூறினர் போலும். ஐந்து மரங்களையுங் கொணர்ந்தானெனபாருமுளர். ஈவன்=ஈ—பகுதி; அன்—தன்மையொருமைவிகுதி; வ்—எதிர்கால இடைநிலை. .... .... (9)

117 ஆய்ச்சியன்றாழிப்பிரான் புறம்புல்கிய *
வேய்த்தடந்தோளிசொல் விட்டுசித்தன்மகிழ்ந்து *
ஈத்ததமிழிவை யீரைந்தும்வல்லவர் *
வாய்த்தநன்மக்களைப்பெற்று மகிழ்வரே. (10)

| | | | |
|---|---|---|---|
| வேய் தட தோளி ஆய்ச்சி | மூங்கில்போன்ற பெரிய தோள்களையுடையளான யசோதையானவள், | மகிழ்ந்து ஈத்த தமிழ் இவை ஈர் ஐந்தும் வல்லவர் | (தாம் அநுபவித்து) ஸந்தோஷித்து (உலகத்தார்க்கு) உபகரித்த தமிழ்ப்பாசுரமாகிய இப்பத்து பாசுரங்களையும் ஓதவல்லவர்கள் |
| ஆழி பிரான் அன்று புறம் புல்கிய சொல் | சக்கராயுததாரியாகிய ப்ரபுவான கண்ணன் அக்காலத்திலே புறம்புல்குவதைக்கூறிய சொல்லை | வாய்த்த நல் மக்களை பெற்று மகிழ்வரே | (மங்களாசாஸநத்தில் விருப்பம்) பொருந்திய நல்ல புத்திரர்களை அடைந்து ஆநந்திப்பர்கள். |
| விட்டுசித்தன் | பெரியாழ்வார் | | |

* * *—'ஈந்த' என்னவேண்டியது—செய்யுளின்பம் நோக்கி, ஈத்த என்று கிடக்கிறது. நன்மக்கள்—சிஷ்யர்களென்றுமாம். இப்பத்து, ஒன்பது திருமொழிகளிலேயே நாலு பாசுரங்களாய் விட்டபடியால், இவ்வொன்பதாந் திருமொழியிலேயே முடிந்ததென்க. (10)

அடி வரவு:—வட்டு கிண்கிணி கத்த சுாந்தகம் வெண்கலம் சத்திரம் பொத்த மூத்தவை கற்பகம் ஆய்ச்சி மெச்சூது.

முதற்பத்து உரை முற்றிற்று.

---

## இரண்டாம்பத்து—முதல் திருமொழி, மெச்சூது.

---

அவதாரிகை:—சிறுபிள்ளைகள் பூச்சிகாட்டி விளையாடுவதுபோலக் கண்ணபிரான் தானும் மாநுஷபாவனைக்கேற்பப் பூச்சிகாட்டி விளையாடியதை அக்காலத்திலுள்ள இடைப் பெண்கள் கண்டு அநுபவித்து உகந்தாப்போலே, ஆழ்வார் ஸாமுய பாவநாப்ரகர்ஷத்தாலே அச்சேஷ்டிதத்தை ப்ரத்யக்ஷமமாகக்கண்டு அநுபவித்து இனியராகிறார்—இத்திருமொழியில். இது கோபிமார் பாசுரமென்பதை, மேல் "புரட்டி அந்நாளெங்கள் பூம்பட்டுக் கொண்ட அரட்டன்" என்பதனாலறிக. ... ... .... (*)

118 மெச்சூதுசங்கமிடத்தான் நல்வேயூதி *
பொய்ச்சூதில்தோற்ற பொறையுடைமன்னர்க்காய் *
பத்தூர்பெறாதன்று பாரதங்கைசெய்த *
அத்தூதனப்பூச்சிகாட்டுகின்றான் அம்மனேயப்பூச்சிகாட்டுகின்றான். (1)

மெச்சூது சங்கம் இடத்தான் { (அனைவரும்) கொண்டாடும்படி ஊதுகின்ற பாஞ்சஜந்யத்தை இடக்கையில் ஏந்தியுள்ளவனும்
நல் வேய் ஊதி — நல்ல வேய்ங்குழலை ஊதுபவனும்,
பொய்ச் சூதில் தோற்ற பொறை உடை மன்னர்க்கு { க்ருத்ரிமமான சூதிலே (தம்முடைய சொத்துக்களையெல்லாம்) இழந்தவர்களாய் பொறுமைசாலிகளான பாண்டவர்கட்கு
தான் (எல்லாவகைத்) துணையுமாயிருந்து (துர்யோதநாதிகளிடத்தில் தூதுபோய்க் கேட்டும் பார்த்தும் அவர்களிடத்தினின்றும்)
பத்து ஊர் பெறாத அன்று } பத்து ஊரையும் அடைய முடியாத அக்காலத்திலே
பாரதம் கைசெய்த அத்தூதன் { பாரத யுத்தத்தை அணிவகுத்துச் செய்த அந்த பாண்டவதூதனான கண்ணன்
அப்பூச்சி காட்டுகின்றான் } அப்படிப்பட்ட மிகவும் பயங்கரமான பூச்சிகாட்டுகின்றான்;
அம்மனே — அம்மா!
அப்பூச்சி காட்டுகின்றான்—.

* * *.—கண்ணபிரான், பாண்டவர் துர்யோதநாதிகள் என்ற இருவரையும் ஸந்தி செய்விக்கைக்காகத் துர்யோதநாதியரிடம் தூதாகச்சென்று 'பாண்டவர்களுடைய நீங்களுடைய பகைமைகொள்ள வேண்டாம்; ராஜ்யத்தில் இருவருக்கும் பாகமுண்டு; ஆதலால் ஸமபாகமாகப் பிரித்துக்கொண்டு ஸமாதாநமாக அரசாட்சிசெய்து வாழுங்கள்; அதற்கு ஸம்மதி இல்லாவிடில், தலைக்கு இரண்டிரண்டு ஊராகப் பாண்டவர் ஐவர்க்கும் பத்து ஊரைக் கொடுங்கள்; அதுவும் அநிஷ்டமாகில் பாண்டவர்கள் குடியிருக்கும்படி ஓரூரையாவது கொடுங்கள்' என்று பலபடி அருளிச்செய்ய, அந்தச்சொல்லுக்குச் சிறிதும் ஸம்மதியாமல் 'பராக்ரமமிருந்தால் போர்செய்து ஜயித்துக்கொள்ளட்டும்; இந்தப்பூமி வீரர்க்கே உரியது' என்றிப்படி திக்காரமாக மறுத்துச் சொல்லவே, தான் பாண்டவ பக்ஷபாதியாயிருந்து எதிரிகளைத் தோற்பித்தனனென்க. மெச்சு—ஊது=மெச்சூது; தொகுத்தல் விகாரம். கண்ணன் பசுநிரை மேய்க்கும்போது திருச்சங்கையும் வேய்ங்குழலையும் கொண்டிருப்பவனாதலால் அவனை, 'மெச்சூது சங்கமிடத்தான் நல்வேயூதி' என்றார். "ஆநிரையினம் மீளக் குறித்த சங்கம்," "வேய்த்தீங்குழலூதிற்றும் நிரைமேய்த்ததும்" என்பனகாண்க. ஊதி—ஊதுமவன்; பெயர்ச்சொல்; வினையெச்சமன்று; ஊது-பகுதி, இ-கருத்தாப்பொருள்விகுதி. ஆகவே 'ஊதிப் பொய்ச்சூதில்' என இரட்டியாது, 'ஊதிபொய்ச்சூதில்' என இயல்பாம். "கழல் சூடி வைக்கின்ற வேற்கைக்கலியன்" என்றவிடத்திற்போல. துர்யோதநன் தான் புதிதாய் மண்டபங்கட்டி அதைக் காண்பதற்கென்றொரு வ்யாஜமிட்டுப் பாண்டவர்களைத் தனது ஹஸ்திநாபுரிக்கு வரவழைத்துத் தந்த்ரமாகச் சகுநியைக்கொண்டு சூதாடுவிக்க, அச்சூதில் தர்மபுத்ரன் ராஜ்யத்தையும் தம்பியரையும் மனைவியையும் தன்னையுந் தோற்றானாதலால், பாண்டவர் பொய்ச்சூதில்தோற்ற மன்னராயினர். இவர்கள் தமக்குள் பொறுமையை மாத்திரம் சூதில் தோற்றிலராதலால், பொறையுடை மன்னருமாயினர். பூச்சிகாட்டுதலையே அப்பூச்சி காட்டுதலென்று வழங்குதலுமுண்டெனக் கொள்ளினுமாம். அப்பூச்சி காட்டுகையாவது—கண்ணை இறுக்குவது, மயிரால் முகத்தை மறைத்துக்காட்டுவது முதலாகச்செய்யும் பயங்கரமான பாலசேஷ்டைகள். அம்மனே—அச்சத்தினாற் சொல்லும் சொல்லு. இந்தப்பாசுரத்தினீற்றடியைக் குறித்து ஓர் ஐதிஹ்யம்:—இப்பாசுரத்தை நம்பெருமாள் ஸந்நிதியில் உடையவர் கோஷ்டியிலே 'உய்ந்தபிள்ளை' என்பாரொரு அரையர் அபிநயிக்குமளவில் 'அத்தூதன்' என்னும்போது ஸ்ரீ கிருஷ்ணனையும், 'அப்பூச்சி' என்னும்போது கண் இமையை மடக்கிக் கொண்டு வருவதையுங்காட்டி அபிநயிக்க, உடையவர்பின்னே எழுந்தருளியிருந்த எம்பார், தம் திருக்கைகளைத் திருத்தோள்களோடு சேர்த்துக்காட்ட, அரையரும் தாம் முன் அபிநயித்ததைவிட்டு எம்பார் காட்டியதுபோலவே எம்பெருமான் திருத்தோள்களில் சங்குசக்கரங்

கள் தரித்துக்கொண்டிருப்பதை அபிநயிக்க, உடையவர் மிகவுமுகந்து, கோவிந்தப்பெருமாள், [எம்பார்]! இருந்தீரோ? என்றாராம்: இதனால் ஏற்படுவதாவது—தூதனாய்த் தன் ஸௌலப்யத்தை வெளியிட்டு 'நம்மிலே ஒருவன்' என்று இவ்வுலகத்தவர்கொள்ளும்படி யிருப்பவன் அவர்கள் அஞ்சும்படி சில காலங்களில் ஈச்வரத்வ சின்னங்களைக் காட்டுகிறானென்பது; இது ஈற்றடிக்கு உள்ளுறைபொருள் [ஸ்வாபதேசம்]. .... .... .... (1)

119 மலைபுரைதோள்மன்னவரும் மாரதரும்மற்றும் *
பலர்குலைய நூற்றுவரும்பட்டழிய * பார்த்தன்
சிலைவளையத் திண்டேர்மேல்முன்னின்ற * செங்கண்
அலவலைவந்தப்பூச்சிகாட்டுகின்றானம்மனே யப்பூச்சிகாட்டுகின்றான். (2)

| | | | |
|---|---|---|---|
| மலை புரை தோள மன்னவர் மாரதரும் | மலையை ஒத்த தோள்களையுடைய அரசர்களான மஹாரதரும் | பார்த்தன சிலை வளைய | அர்ஜுநனுடைய (காண்டீவமென்னும்) வில்லு வளையவும் |
| மற்றும் பலர் உம் | மற்றும்பலவகை அரசர்களும் | திண் தேர் மேல் முன் நின்ற | (அந்த அர்ஜுநனுடைய) வலிய தேரின்மேல் (ஸாரதியாய்) முன்புறத்தில் நின்ற |
| குலைய | அழியவும் | செம் கண் | (வாத்ஸல்ய ஸூசகமாகச்) சிவந்த கண்களையுடையனாய் |
| நூற்றுவரும் பட்டு அழிய | (துர்யோதநாதிகள்) நூறுபேரும் மரணமடைந்து உருவழிந்து போகவும் | அலவலை | (அர்ஜுநனுடைய வெற்றியைப்) புகழ்பவனான கண்ணன வந்து * * * அப்பூச்சி காட்டுகின்றான்—. |

* * *—பருத்தவடிவத்திலும், ஒருவராலும் சலிப்பிக்க முடியாதபடி உறுதியாயிருத்தலிலும் தோளுக்கு மலை உவமை யென்க. தேர்வீரர்—அதிரதர், மஹாரதர், ஸமரதர், அர்த்தரதர் என நால்வகைப்படுவாராதலால், 'மாரதரும் மற்றும்' என்றார். (அஸஹாயராய்த் தாம் ஒரு தேரின்மேலிருந்து தமது ரதகஜதுரகபதாதிகளுக் கழிவுவாராமல் காத்துக்கொண்டு பல்லாயிரம் தேர்வீரர்களோடு பொருது வெல்லும் வல்லமையுள்ளார்—அதிரதர் என்றும், கீழ்ச் சொன்னபடியே தாமிருந்து பதினோராயிரம் தேர்வீரரோடு பொருபவர்—மஹாரதர் என்றும், ஒரு தேர்வீரரோடு தாமு மொருவராய் நின்று எதிர்க்கவல்லவர்—ஸமரதர் என்றும், அங்ஙனமே பொருது, தம் தேர் முதலியவற்றை இழந்துவிடுபவர்—அர்த்தரதர் என்றுஞ் சொல்லப்படுவர்.) 'மன்னவரும்' என்றவிடத்திலுள்ள உம்மை, 'பலர்' என்பதோடு கூட்டப்பட்டது. மாரதர்-மஹாரதா: என்ற வடசொல் திரிபு. பார்த்தன்—வடசொல்; 'ப்ருதா' [குந்தி] என்பவளுடைய மகன். அலவலை—அர்த்தத்தின் யாதாத்ம்யமறியாமல் கேட்பவனுடைய தாழ்வையும் பாராமல் ரஹஸ்யார்த்தங்களைச் சொல்லுபவன்; வரம்பு கடந்து பேசுபவன். இப்படியெல்லாம் ஸ்ரீக்ருஷ்ணன் செய்தது—த்ரௌபதியின் விரிந்தகூந்தலை முடிக்கும் பொருட்டாம். .... .... .... .... .... (2)

120 காயுநீர்புக்குக் கடம்பேறி * காளியன்
தீயபணத்திற் சிலம்பார்க்கப்பாய்ந்தாடி *
வேயின்குழலூதி வித்தகனாய்நின்ற *
ஆயன்வந்தப்பூச்சிகாட்டுகின்றானம்மனே யப்பூச்சிகாட்டுகின்றான். (3)

| | | | |
|---|---|---|---|
| காயும் நீர் புக்கு | (காளியனுடைய விஷத்தால்) கொதிக்கின்ற [illegible] (கலக்கி) (அங்கிருந்த [illegible]) | கடம்பு ஏறி | (அம்மடுவின் கரையிலிருந்த) கடம்பமரத்தின்மேலேறி |
| | | காளியன் தீய பணத்தில் | அந்தக் காளியனுடைய கொடிய படத்திலே |

(பாடகம் ஆர்க்க — (தன் திருவடியில் அணிந்துகொண்டிருந்த) சிலம்பு சப்திக்கும்படி; பாய்ந்து ஆடி — குதித்துக் கூத்தாடி, (இச்செய்கையைக் கண்டு என்ன தீங்கு வருமோ! என்று கலங்கினவர் மகிழ) | வேயின் குழல் ஊதி — மூங்கிலினாலாகிய குழலை ஊதி (இப்படி) வித்தகன் ஆய் நின்ற — விஸ்மயநீயனாயிருந்த ஆயன் — கண்ணபிரான் வந்து * * * அப்பூச்சி காட்டுகின்றான்—.

* * *—தீயபணம்=படம் விஷமிருத்தற்கு உரிய இடமாதலாலும், கோபத்தைத் தெரிவித்தலாலும் தீயதாயிற்று. ... .... .... (3)

121 இருட்டிற்பிறந்துபோ யேழைவல்லாயர் *
மருட்டைத்தவிர்ப்பித்து வன்கஞ்சன்மாள *
புரட்டியந்நாளெங்கள் பூம்பட்டுக்கொண்ட *
அரட்டன்வந்தப்பூச்சி காட்டுகின்றா னம்மனேயப்பூச்சிகாட்டுகின்றான். (4)

இருட்டில் பிறந்து போய் — இருள்நிறைந்த நடுராத்ரியிலே (மதுரையிலே) தேவகீபுத்ரனாகத்தோன்றி (அங்குநின்றும் அப்போதே ஆய்ப்பாடிக்குப்)போய், ஏழை வல் ஆயர் — (அவிவேகிகளான (தன்னைப்பற்றியிருக்கும்) மனவலிமையையுடைய இடையர்களின் (கண்ணனிடத்திலுள்ள ப்ரேமத்தாலும் கம்சனிடத்திலுள்ள கோபத்தாலும் தாமே கம்ஸனைக்கொல்ல வல்லவர்கள் போலே செருக்கிச் சொல்லுகிற) மருட்டை — மருள் வார்த்தைகளை தவிர்ப்பித்து — போக்கினவனும் | வல் கஞ்சன் மாள புரட்டி — கொடிய கம்சன் மாண்டுபோம்படி [அவனை மயிரைப்பிடித்து அடித்துப்] பூமியிலிட்டுப் புரட்டினவனும்; அந்நாள் எங்கள் பூம் பட்டு கொண்ட அரட்டன் — [நாங்கள் யமுனையில் நீராடிய] அக்காலத்திலே எங்களுடைய அழகிய பட்டுப்புடவைகளை வாரிக்கொண்டுபோன தீம்பனுமுள்ள கண்ணன வந்து * * * அப்பூச்சி காட்டுகின்றான்—.

* * *—'பிள்ளைபிறப்பது எப்போது!' என்று உருவின கத்தி உருவியபடி கம்ஸன் நிற்கையாலே அவனுடைய கண்ணிற்படாதபடி யிருக்கவேணுமென்று நள்ளிருளிலே தேவகீ புத்ரனாய்த்தோன்றி, அப்போதே ஸ்ரீ வஸுதேவரை எடுத்துப்போம்படி கட்டளையிட்டுத் தேவகி தன்னைப் பிரியும் பிரிவால் கதறத் தான் திருவாய்ப்பாடியிற் புகுந்து வளர்ந்தருளின வரலாறு அறிக. [ஆயர் மருட்டைத் தவிர்ப்பித்து] கம்ஸன் பூதநாதிகள் மூலமாகக் கண்ணனைக் கொல்ல நினைக்கிறானென்றறிந்த இடையர்கள் தாங்களே கம்ஸனைக் கொல்வார்போலச் சில மருட்டு வார்த்தைகளைச் சொல்ல, நீங்களெல்லாரும் வேணுமோ? நானே செய்வேன்' என்று சொல்லித் தன் பேச்சாலே அவர்கள் அந்த மருட்டு வார்த்தைகளைச் சொல்லாதபடி தவிர்ப்பித்து என்பது பொருள். மருட்டு—மருளையுடையது; அஃறிணை ஒன்றன்பாற் படர்க்கைக் குறிப்புவினையாலணையும் பெயர்: 'இருள்' 'மருள்' என்ற பெயர்ச்சொற்களின்மேல் 'டு' என்ற விகுதி ஏறப் பெற்றது; "து றுடுக்குற்றியலுகரவிற்ற, ஒன்றன் படர்க்கை டுக்குறிப்பிற்றும்" என்பது—நன்னூல். பூ+பட்டு=பூம்பட்டு, "பூப்பெயர் முன்னின மென்மையுந் தோன்றும்." என்ற சிறப்புவிதி அறிக. .... ... .... .... (4)

122 சேப்பூண்டசாடு சிதறி * திருடிநெய்க்
காப்பூண்டு நந்தன்மனைவிகடைதாம்பால் *
சோப்பூண்டுதுள்ளித் துடிக்கத்துடிக்க * அன்று
ஆப்பூண்டானப்பூச்சிகாட்டுகின்றானம்மனே யப்பூச்சிகாட்டுகின்றான். (5)

சே பூண்ட சாடு — எருதுகள் கட்டுதற்கு உரியசகடம் (அசுராவேசத்தாலே தன்னைக் கொல்லவர, முலைக் | கால அழுகிற பாவனையாலே தன திருவடியைத் தூக்கி அச்சகடத்தை)

செய்க்கு திருடி — உருக்குலையும்படி உதைத்து நெய்க்கு ஆசைப்பட்டுக் களவு செய்து
ஆப்பூண்டு — (உடைமைக்கு உரியவர் கையில்) அகப்பட்டுக்கொண்டு
(அவர்கள் யசோதை கையிற் காட்டிக்கொடுக்க,)
நந்தன் மனைவி — நந்தகோபன் தேவியான அவ்யசோதை
கடை தாம்பால் — (தயிரைக்) கடையும் தாம்பாலே (அடிக்க)
துள்ளி துடிக்க துடிக்க சோப்பூண்டு — துள்ளி மிகவுந் துடிக்கும்படி அடியுண்டு
(அதனோடு நில்லாமல்)
அன்று ஆப்பூண்டான் — அக்காலத்தில் (எங்கும் சலிக்கமுடியாதபடி உரலில்) கட்டுண்டவனாகிய கண்ணன்
அப்பூச்சி காட்டுகின்றான் * * *—.

* * *—சாடு—'சகடம்' என்ற வடசொல்லின் சிதைவு. ஆப்பூண்டு நந்தன் மனைவி கடைதாம்பால் சோப்பூண்டு—'என்மகனமேல் வீண்பழிவிளைத்திடேல்மின்; களவுகண்டதுண்டாகில் கையும்பிடியுமாய்ப் பிடித்துக் கொணருங்கள்' என்று சொல்லிய தாயான தன் முன்பே ஆய்ச்சிமார் கண்ணனைக் கொண்டுவியோடே கண்டுபிடித்துக்கொணர, அதுகண்ட யசோதை, 'நான் பிள்ளைபெற்று வளர்க்கிறது மிகவு மழகிதாயிருந்தது!' என்று சொல்லித் தன்னைத்தானே மோதிக்கொண்டு அவர்கள் முன்னே தன் வயிற்றெரிச்சலெல்லாந் தோன்றும்படி அடிக்க அடியுண்டு என்றபடி. ஆப்பூண்டு, சோப்பூண்டு, ஆப்பூண்டான்—'ஆப்புண்டு' 'சோப்புண்டு' 'ஆப்புண்டான்' என்பவற்றின் நீட்டல் விகாரம். .... (5)

123 செப்பிளமென்முலைத் தேவகிநங்கைக்கு *
சொப்படத்தோன்றித் தோறுப்பாடியோம் வைத்த *
துப்பமும்பாலுந் தயிரும்விழுங்கிய *
அப்பன்வந்தப்பூச்சிகாட்டுகின்றானம்மனே யப்பூச்சிகாட்டுகின்றான். (6)

செப்பு இள மெல் முலை தேவகி நங்கைக்கு — ஸ்வர்ணகலசங்கள்போன்று இளமையையும் மென்மையையுமுடைய முலைகளையுடைய தேவகிப்பிராட்டிக்கு (மகனாக)
சொப்பட தோன்றி — கன்றாகப்பிறந்து
தொறுப்பாடியோம் வைத்த துப்பமும் பாலும் தயிரும் — ஆய்ப்பாடியிலிருப்பவர்களாகிய நாங்கள் சேமித்துவைத்த நெய்யையும் பாலையும் தயிரையும்
விழுங்கிய அப்பன் — உட்கொண்டஸ்வாமி [உபகாரகனானது] * * * அப்பூச்சி காட்டுகின்றான்—.

* * *—செப்பு—முலைகளுக்கு நிறத்திலும் வடிவிலும் உவமை. சொப்படத்தோன்றி—ஸர்வேச்வரத்வசின்னங்களோடு தோன்றி. தொறு—பசு, பாடி—இடம்; எனவே, பசுக்கூட்டங்கள் நிரம்பிய 'கோகுலம்' என்று ப்ரஸித்திபெற்ற திருவாய்ப்பாடியாயிற்று. சில ஆய்ச்சிமார் எங்களுடைய இறுகின நெய்யையும் காய்ந்த பாலையும் தோய்ந்த தயிரையும் கண்ணன் உண்ணப்பெற்றோமே! என்றிருபட்டமைதோற்ற 'அப்பன்' என்றனரென்க. .... (6)

124 தத்துக்கொண்டாள்கொலோ தானேபெற்றாள்கொலோ *
சித்தமனையா ளசோதையிளஞ்சிங்கம் *
கொத்தார்கருங்குழல் கோபாலகோளரி *
அத்தன்வந்தப்பூச்சிகாட்டுகின்றா னம்மனேயப்பூச்சிகாட்டுகின்றான். (7)

தத்து கொண்டாள் கொலோ — (இந்தப் பிள்ளையை யசோதை) [illegible] கொண்டாளோ!
(அல்லது)
தானே பெற்றாள் கொலோ — [illegible] பெற்றாளோ!
சித்தம் அனையாள் அசோதை இளசிங்கம் — (கண்ணனுடைய) மனக்கருத்தை ஒத்து நடப்பவளாகிய யசோதையினுடைய சிங்கக்குட்டிபோன்றவனும்
கொத்து ஆர் கருங்குழல் — பூங்கொத்துக்களை யணிந்த கரிய கூந்தலையுடையவனும்

126 பதகமுதலைவாய்ப் பட்டகளிறு *
கதறிக்கைகூப்பி யென்கண்ணாகண்ணாவென்ன *
உதவப்புள்ளூர்ந்து அங்குறுதுயர்தீர்த்த *
அதகன்வந்தப்பூச்சிகாட்டுகின்றா னம்மனேயப்பூச்சிகாட்டுகின்றான். (9)

பதகம் முதலை வாய் பட்ட களிறு — பாதிக்குந்தன்மையையுடைய முதலையின் வாயிலே அகப்பட்ட ஸ்ரீகஜேந்த்ராழ்வான்
கதறி கை கூப்பி என் கண்ணா கண்ணா என்ன — (தன் வருத்தந்தோன்றக்) கூப்பிட்டு கையைக் குவித்துக்கொண்டு 'என்னுடைய கண்ணனே!' என்று பலகாலழைக்க
அங்கு உதவ — அப்போதே [அந்தயானைக்கு] உதவும்படி
புள் ஊர்ந்து — பெரியதிருவடியை வாஹநமாகக் கொண்டு சென்று
உறு துயர் தீர்த்த — [அந்தயானையின்] மிக்கவருத்தத்தைப் போக்கின
அதகன் — [ஆச்ரித ரக்ஷணத்தில்] மிடுக்கையுடையவன்
வந்து *** அப்பூச்சி காட்டுகின்றான்—.

* * *—பதகம்—"பாதகம்" என்ற வடசொல் விகாரம்: 'பாதகம்' என்பதன் (குறுக்கல்) விகாரமெனக்கொண்டால் (சாபமாகிற) பாபத்தையுடையவனென்று பொருளாம். உறுதுயர்—ப்ரயாஸப்பட்டுப் பறித்த பூ பயனற்றுப் போகின்றதே என்னுந் துயர்; "உயிர்போகிறதே" என்ற துயரன்று. உறு—மிகுதியைக் குறிப்பதோர் உரிச்சொல். களிறு—யானையின் ஆண்மைப்பெயர்: (பெண்மைப்பெயர்-பிடி.) களி—மதக்களிப்பு; அதனையுடையது—களிறு எனக் காரணக்குறி: று—பெயர்விகுதி; ஒன்றன்பால் விகுதியெனக் கொள்ளலாகாது; பால்பகா அஃறிணைப்பெயராதலால். அதகன் — ஹாதகன்; ஆச்ரித விரோதிகளை ஹரம்பண்ணுமவன். .... .... ... (9)

127 வல்லாளிலங்கை மலங்கச்சரந்துரந்த *
வில்லாளனை விட்டுசித்தன்விரித்த *
சொல்லார்ந்தவப்பூச்சிப் பாடலிவைபத்தும்
வல்லார்போய் * வைகுந்தம் மன்னியிருப்பரே. (10)

வல் ஆள் இலங்கை மலங்க — பலசாலிகளான வீரர்களையுடைய லங்கையானது பாழாம்படி
சரம் துரந்த — அம்பைச்செலுத்திய
வில் ஆளனை — வில்லாளியான ஸ்ரீராமனை [illegible]
விட்டுசித்தன் விரித்த — [illegible] பாசுக்கக்கூடிய
சொல் ஆர்ந்த அப்பூச்சி பாடல் இவை பத்தும் வல்லார் — [illegible]
போய் — [illegible]
வைகுந்தம் மன்னி இருப்பர் — ஸ்ரீவைகுண்டத்திலே [illegible] பெறுவர்.

* * *—சொல்லார்ந்த பாடலிவைபத்தும்=இத்திருமொழியில் அர்த்தத்தைக்கவனிக்க வேண்டுமென்கிற அவசியமே வேண்டா; சொல்லே பரமபோக்யம் என்று கருத்து. இச்செய்யுள், வெண்டளையால் வந்த கலிவிருத்தமாதலால் "விட்டுசித்தன் விரித்தன" என்று பாடமானால் தளைக்குப் பொருந்துமென்பர் சிலர். பரம—வடசொல். ... (10)

அடிவரவு:—மெச்சு மை காயும் இருட்டு சேப்பூண்ட செப்பு தத்துக் கொங்கை பதகம் வல்லாள் அரவணை.

முதல்திருமொழி உரை முற்றுப்பெற்றது.

---

அவதாரிகை:— கண்ணபிரான் பகல்முழுதும் விளையாடி யிளைத்துப், பொழுது போனதையும் முலையுண்பதையும் மறந்து உறங்கிப்போய் பொழுதுவிடிந்து நெடும்போதாயும் கண்விழியாதிருக்கவே, யசோதைப் பிராட்டி அப்பிரானைத் துயிலெழுப்பி முலையுண்ணுமையை அவனுக்கறிவித்துத் தன்முலையை யுண்ணவேணுமென்று நிர்ப்பந்தித்து விரும்பி ஊட்டின படியை ஆழ்வார் தாமுமநுபவிக்க விரும்பித் தாமே அவ்யசோதைப் பிராட்டியாகவே பாவித்துக்கொண்டு அவனை அம்மமுண்ண வெழுப்புதல் முதலியவற்றைப் பேசி இனியராகிறார்—இத்திருமொழியில். .... ... .... .... *

128 அரவணையாயாயரேறே அம்மமுண்ணத்துயிலெழாயே *
இரவுமுண்ணாதுறங்கிநீபோ யின்றுமுச்சிகொண்டதாலோ *
வரவுங்காணேன்வயிறசைந்தாய் வனமுலைகள்சோர்ந்துபாய *
திருவுடையவாய்மடுத்துத் திளைத்துதைத்துப்பருகிடாயே. (1)

அரவு அணையாய்—சேஷசாயியானவனே!
ஆயர் ஏறே—இடையர்களுக்குத் தலைவனே!
நீ இரவும் உண்ணாது—நீ நேற்று இரவும் முலையுண்ணாமல்
உறங்கிப்போய்—உறங்கிப்போய்விட்டாய்;
இன்றும் உச்சி கொண்டது ஆல்—இப்போதும் பொழுது விடிந்து உச்சிப்போதாய்விட்டது; ஆதலால்
அம்மம் உண்ண—முலையுண்பதற்கு
துயில் எழாய்—தூக்கந்தெளிந்து படுக்கையை விட்டு எழுந்திருக்கவேணும்;
வரவும் காணேன்—நீயே எழுந்திருந்து அம்மம் வேணுமென்று சொல்லி வரும் வரவைக் கண்டிலேன்;
வயிறு அசைந்தாய்—(உணர்ந்து பசியைப் போமென்று) வயிறு தளர்ந்து நின்றாய்;
வனம் முலைகள்—எனது அழகிய முலைகள் உன்மேல் அன்பினால் நெறித்தது,
சோர்ந்து பாய—பால்வடிந்து பெருகிக்கொண்டிருக்க
திரு உடைய—அழகை உடைய
வாய் மடுத்து—(உன்) வாயை வைத்து
திளைத்து உதைத்து பருகிடாய்—நெருக்கி கால்களாலே உதைத்துக்கொண்டு முலையுண்பாய்.

* * *—[அரவணையாய்] எம்பெருமான் திருவனந்தாழ்வானாகிற படுக்கையைவிட்டு கண்ணனாகத் தோன்றினனும், "சென்றாற் குடையாம்" என்கிறபடியே அவ்வக்காலத்துக்கு ஏற்ற கோலங்கொண்டு அடிமை செய்பவனான அத்திருவனந்தாழ்வான் கண்ணபிரானுக்குத் திருப்பள்ளி மெத்தையாய் இனிது தூங்குவதற்கு உதவுகின்றானென்க. 'அம்மமுண்ண' என்றது—கண்ணனுடைய குழந்தைப் பருவத்திற்குத் தக்கபடியாக யசோதை சொல்லியதாகும். சிங்கம் முதலியவற்றின் ஆணை யுணர்த்துகின்ற 'ஏறு' என்ற பெயர் இலக்கணையால் 'ப்ரதாநன்' என்ற பொருளைத் தரும். இரண்டாமடியின் ஈற்றிலுள்ள ஆல்—'ஆதலால்' என்பதன் சிதைவு; இனி, ஆல், ஓ—இரண்டும் இரக்கப் பொருளைக் குறிப்பன வென்றுமாம். வயிறசைந்தாய்=தளர்ந்தாய், "சினைவினை சினையொடும் முதலொடுஞ் செறியும" என்றாராதலின், சினைவினை முதலோடு செறிந்ததென்க. "வனப்பு முலை" என்கிறவிது—'வனமுலை' என்று விகாரப்பட்டதென்பர்; "வனமே நீரும் வனப்பு மீமுக், துழாயும் மிகுதியுங் காடுஞ் சோலையும், புற்றுமெனவே புகலுமெண் பேரே" என்ற நிகண்டின்படி 'வனம்' என்ற சொல்லே அழகைக் குறிக்குமென்பதும் பொருந்தும். (1)

129 வைத்தநெய்யுங்காய்ந்தபாலும் வடிதயிரும்நறுவெண்ணெயும் *
இத்தனையும்பெற்றறியே னெம்பிரான்நீபிறந்தபின்னை *

எத்தனையுஞ்செய்யப்பெற்றாய் ஏதுஞ்செய்யேன்கதம்படாதே *
முத்தனையமுறுவல்செய்து மூக்குறிஞ்சிமுலையுணாயே. (2)

எம் பிரான் — எமது உபகாரகனே!
வைத்த நெய்யும் காய்ந்தபாலும் வடி தயிரும் நறு வெண்ணெயும் — உறுக்கிவைத்த நெய்யும் ஏடு மிகுதியாகப் படியும்படி காய்ந்த பாலும் (உள்ள நீரை) வடித்துக்கட்டியாயிருக்கிற தயிரும் மணமிக்க வெண்ணெயும்
இத்தனையும் — ஆகிய இவையெல்லாவற்றையும்
நீ பிறந்த பின்னை பெற்று அறியேன் — நீ பிறந்த பிறகு கண்டறிந்திலேன்;
எத்தனையும் செய்ய பெற்றாய் — (நீ) வேண்டினபடி எல்லாம் நீ செய்யலாம்;
ஏதும் செய்யேன் — (அப்படி நீ செய்வதற்காக நான் உன்னை) ஒன்றும் செய்யமாட்டேன்;
கதம் படாதே — நீ கோபியாதே கொள்;
முத்து அனைய முறுவல் செய்து — முத்தைப்போல் வெண்ணிறமாக மந்தஸ்மிதம்பண்ணி
மூக்கு உறிஞ்சி முலை உணாய் — மூக்கை உறிஞ்சிக்கொண்டு முலையுண்பாயாக.

* * *—இத்தனையும் பெற்றறியேன்—(நெய் பால் முதலியவற்றில்) சிறிதும் சேஷித்திருக்கக் கண்டிலேன் என்றபடி. கதம்—கோபம். குழந்தைகள் மூக்குறிஞ்சி முலையுண்ணுதல்—இயல்பு, ... ... ... ... (2)

130 தந்தம்மக்களழுதுசென்றால் தாய்மாராவார்தரிக்ககில்லார் *
வந்துநின்மேற்பூசல்செய்ய வாழவல்லவாசுதேவா *
உந்தையாருன்திறத்தரல்லர் நானுன்னைநானொன்றுரப்பமாட்டேன் *
நந்தகோபனணிசிறுவா நான்சுரந்தமுலையுணாயே. (3)

தம்தம் மக்கள் அழுது சென்றால் — தங்களுடைய பிள்ளைகள் அழுது கொண்டு (தம் தம் வீட்டுக்குப்) போனால்
தாய்மார் ஆவார் தரிக்ககில்லார் — (அக்குழந்தைகளின்) தாய்மார்கள் பொறுக்கமாட்டாதவர்களாய்
வந்து நின் மேல் பூசல் செய்ய வாழ வல்ல வாசுதேவா — (தம் குழந்தைகளை அழைத்துக் கொண்டு) வந்து உன்மேல் பிராது சொல்ல (அதைக்கண்டு) மகிழவல்ல கண்ண பிரானே!
உந்தையார் உன் திறத்தர் அல்லர் — உன் தகப்பனார் உன் விஷயத்தைக் கவனிப்பவரல்லர்;
நான் உன்னை ஒன்றும் உரப்பமாட்டேன் — (அபலையான) நானும் தீம்பிலே கை வளர்ந்த உன்னை சிறிதும் அதட்ட வல்லமையற்றிராநின்றேன்; இவையெல்லாங் கிடக்க;
நந்தகோபன் அணி சிறுவா — நந்தகோபருடைய அழகிய சிறு பிள்ளாய்!
நான் சுரந்த முலை உணாய் — எனது பால் சுரந்திருக்கிற முலையை உண்பாயாக.

* * *—கண்ணபிரான் தன்னோடொத்த பிள்ளைகளோடு விளையாடப்போனால் எல்லாப் பிள்ளைகளையும்போல விளையாடாமல் அப்பிள்ளைகளை அடித்துத் துன்புறுத்தி விளையாடுவதனால் அழுது கொண்டே வீட்டிற்குச் செல்லுகிற அப்பிள்ளைகளைக் கண்ட தாய்மார்கள் மனம்பொறாமல் நொந்து அப்பிள்ளைகளைக் கண்ணபிரானிடம் அழைத்துக்கொண்டுவந்து காட்டி இவன் மேலே பழிசொல்லிப் பிரலாபிக்கையில் இவன் அதனால் சற்றும் இளைப்புக்கொள்ளாமல் அதையே திருப்தியாகக்கொண்டு ஸந்தோஷிப்பனென்பதைக் காட்டுகிறார் — முதலிரண்டடியால். [வாசுதேவா] பசுவின் வயிற்றிலே புலி பிறந்ததே! என்கிறார். உன்+தந்தையார்= உந்தையார்; மரூஉமொழி. ... ... ... (3)

131 கஞ்சன்றன்னாற்புணர்க்கப்பட்ட கள்ளச்சகடுகலக்கழிய *
பஞ்சியன்னமெல்லடியால் பாய்ந்தபோதுநொந்திடுமென்று *
அஞ்சினேன்காணமரர்கோவே ஆயர்கூட்டத்தளவன்றாலோ *
கஞ்சனைஉன்வஞ்சனையால் வலைப்படுத்தாய்முலையுணாயே. (4)

133 மின்னனையநுண்ணிடையார் விரிகுழல்மேல்நுழைந்தவண்டு *
இன்னிசைக்கும்வில்லிபுத்தூர் இனிதமர்ந்தாயுன்னைக்கண்டார் *
என்னநோன்புநோற்றாள்கொலோ இவனைப்பெற்றவயிறுடையாள் *
என்னும்வார்த்தையெய்துவித்த இருடீகேசாமுலையுணாயே. (6)

| | | | |
|---|---|---|---|
| மின் அனைய | மின்னலையொத்த | அமர்ந்தாய் | எழுந்தருளியிருப்பவனே! |
| நுண் | ஸூக்ஷ்மமான | உன்னை கண்டார் | உன்னைப்பார்த்தவர் |
| இடையார் | இடையையுடைய பெண்களின் | இவனை பெற்றவயிறு உடையாள் | இவனைப் (பிள்ளையாகப்) பெற்ற வயிற்றையுடையவள் |
| விரி குழல் மேல் | விரிந்த [பரந்த] கூந்தலின்மேல் | என்ன நோன்பு நோற்றாள் கொலோ | என்ன தபஸ்ஸு பண்ணினளோ! |
| நுழைந்த | (தேனை உண்ணப்) புகுந்த | என்னும் | என்று கொண்டாடிச்சொல்லுகிற |
| வண்டு | வண்டுகள் (தேனையுண்டு களித்து) | வார்த்தை | வார்த்தையை |
| இன் இசைக்கும் | இனிதாக ஆளத்தியைத்தூப் பாடுமிடமான | எய்துவித்த | (எனக்கு) உண்டாக்கின |
| வில்லிபுத்தூர் | ஸ்ரீவில்லிபுத்தூரிலே | இருடீகேசா | ஹ்ருஷீகேசனே! |
| இனிது | போக்யமாக | | முலை உணாய்—. |

* * *—[என்ன நோன்பித்யாதி] ரூபகுணசேஷ்டிதாதிகளாலே இப்படி லோகவிலக்ஷணனாயுள்ள இப்பிள்ளையைப் பெற்றாளும் ஒருத்தியே!, அவள் தான் பூர்வஜந்மத்தில் நோற்ற நோன்பு என்னோ! என்று என்னைப் பலரும் கொண்டாடும்படி பிறந்தவனே! என்று—யசோதை, கண்ணன் தன் வசப்படுகைக்காகப் புகழ்ந்து கூறுகிறபடி. ஹ்ருஷீகேசன்—(ரூபகுணாதிகளாலே) ஸர்வேந்த்ரியங்களையும் கவருமவன். இப்பாட்டின் முன்னடிகளில் ஆண்டாளுடைய கூந்தலிலே எம்பெருமானாகிற தெய்வ வண்டு ஆசைகொண்ட மை காட்டிற்றாகும். .... .... .... .... ... ... (6)

134 பெண்டிர்வாழ்வார்நின்னொப்பாரைப் பெறுதுமென்னுமாசையாலே *
கண்டவர்கள்போக்கொழிந்தார் கண்ணிணையாற்கலக்கநோக்கி *
வண்டுலாம்பூங்குழலினார் உன்வாயமுதமுண்ணவேண்டி *
கொண்டுபோவான்வந்துநின்றார் கோவிந்தாநீமுலையுணாயே. (7)

| | | | |
|---|---|---|---|
| கண்டவர்கள் | (உன்னைப்) பார்த்தவர்களான | கண் இணையால் கலக்க நோக்கி | (தமது) இரண்டு கண்களினாலும் (உனது) திருமேனி முழுவதும் பார்த்து |
| பெண்டிர் வாழ்வார் | (தமது கணவர்க்கு) மனைவியாய் வாழ்கின்ற பெண்கள் | | |
| நின் ஒப்பாரை பெறுதும் என்னும் ஆசையாலே | உன்னைப்போன்ற குழந்தையைப் பெறுவோம் (பெறுவோமா) என்கிற ஆசையினால் | உன் வாய் அமுதம் உண்ண வேண்டி | உன்னுடைய அதராம்ருதத்தை பானம்பண்ண ஆசை கொண்டவர்களாய் |
| போக்கு ஒழிந்தார் | (உன்னைவிட்டுப்) போதலைத் தவிர்த்தார்கள், | கொண்டு போவான் வந்து நின்றார் | (உன்னை) எடுத்துக்கொண்டு போவதற்காக வந்து நிற்கிறார்கள்; |
| வண்டு உலாம் பூ குழலினார் | வண்டுகள் சஞ்சரிக்கிற புஷ்பங்களையணிந்த கூந்தலையுடையவர்கள் | கோவிந்தா | கோவிந்தனே! |
| | | | நீ முலை உணாய்—. |

* * *—முதலிரண்டடியால்—பதிவிரதைகளான பெண்களின் மனோரதமும், பின்னிரண்டடியால்—யுவதிகளாய் போகமநுபவிக்க விரும்பின பெண்களுடைய மனோரதமும் சொல்லுகிறபடிகள். அவற்றில் வேண்டினபடி ஆகிறது; இப்போது நீ முலையுண்ண வரவேணுமென்கிறாள். பெண்டிர்=இர் — பலர்பால் விகுதி. பெறுதும்—தன்மைப்பன்மை வினைமுற்று. ஆசா—வடசொல். கலக்க நோக்குதல்—ஒவ்வொரு அங்கத்தினுடையவும் ஸௌந்தர்யத்தை நோக்குதல். .... .... .... ... (7)

ஓட ஓட ஒலிக்கும் கிண்கிணிகளால் ஓசைப்பாணியாலே — (குழந்தைப் பருவத்துக்குத் தக்கபடி) பதறி ஓடுவதனால் சப்திக்கின்ற பாதச் சதங்கைகளினுடைய ஓசையாகிற சப்தத்தால்
பாடி பாடி — இடைவிடாது பாடிக்கொண்டு
அதனுக்கு ஏற்ற கூத்தை — அப்பாட்டிற்குத் தகுந்த ஆட்டத்தை
அசைத்து அசைத்திட்டு — வலப்புறமாகவும் இடப்புறமாகவும் அசைந்து

ஆடி ஆடி வருகின்றாயை — ஆடிக்கொண்டு வருகின்ற உன்னை
பற்பநாபன் என்று இருந்தேன் — (வேறோராபரணம் வேண்டாதபடி) பதுமத்தை நாபியிலுடையவனென்று எண்ணியிருந்தேன்;
நீ ஆடி ஓடிஓடி போய் விடாதே — நீ ஆடிக்கொண்டே (எனக்கு எட்டாதபடி) ஓடிப்போய் விடாதே.

முலை உணாய்—.

* * *—கண்ணபிரான் நடந்துவரும்போது திருவடிச்சதங்கைகளின் ஓசைதானே பாட்டாயிருக்குமென்க. [பற்பநாபனென்றிருந்தேன்] "கொப்பூழில்எழு கமலப்பூவழகர்" என்றபடி வேறொரு ஆபரணமும் வேண்டாமல் திருநாபீகமலமே ஆபரணமாம்படி யிருப்பானொருவனன்றோ இவன்! இவனுக்கு வேறொருபாட்டும் கூத்தும் வேணுமோ? சதங்கையோசையும் நடையழகுமே பாட்டும் ஆட்டமுமாய் அமைந்த ஆச்சரியம் என்னே! என்று வியப்புக்கொண்டிருந்தேன் என்க. இனி,—இவன் அழிந்துகிடந்த வுலகத்தை நாபீகமலத்திலுண்டாக்கினவனன்றோ, ஆகையால் நம்முடைய ஸத்தையையுந் தருகைக்காக வருகிறானென்றிருந்தேன் என்றும் விசேஷார்த்தம் கூறுவர். .... .... ... ... (10)

138 வாரணிந்தகொங்கையாச்சி மாதவாவுண்ணென்றமாற்றம் *
நீரணிந்தகுவளைவாசம் நிகழநாறும்வில்லிபுத்தூர் *
பாரணிந்ததொல்புகழான் பட்டர்பிரான்பாடல்வல்லார் *
சீரணிந்தசெங்கண்மால்மேல் சென்றசிந்தைபெறுவர்தாமே. (11)

வார்—அணிந்த கொங்கை ஆய்ச்சி — கச்சை அணிந்துகொண்டிருக்கிற ஸ்தனங்களையுடைய யசோதை
மாதவா உண் என்ற மாற்றம் — 'மாதவனே! உண்பாயாக' (முலையை) என்று(வேண்டிச்)சொன்ன வார்த்தையைக் குறித்தனவான,—
நீர் அணிந்த குவளை வாசம் நிகழ நாறும் — நீர்நிலையை அழகுடையதாகச்செய்கிற செங்கழுநீரின் நல்ல வாசனை ஒரேமாதிரியாக எப்போதும் வீசுகின்ற
வில்லிபுத்தூர் — ஸ்ரீ வில்லிபுத்தூரில் அவதரித்தவரும்

பார் அணிந்த தொல் புகழான் — பூமிமுழுவதும் அழகாகப் பரவிய பழமையான கீர்த்தியையுடையவருமான
பட்டர்பிரான் — பெரியாழ்வார் அருளிச்செய்த
பாடல் வல்லார் — பாசுரங்களை ஓதவல்லவர்,
சீர் அணிந்த செம் கண் மால் மேல் — குணங்களாலழகிய சிவந்த திருக்கண்களையுடைய திருமாலிடத்தில்
சென்ற சிந்தை பெறுவர் — படிந்த மனத்தை அடைவார்கள்.

* * *—வாரணிந்த கொங்கையாச்சி—ராஜாக்களுக்கு போக்யமான பொருளை வேலைக்காரர் மூடிக்கொண்டுபோவதுபோல, கண்ணனுக்கு விருப்பமான ஸ்தநங்களை யசோதை பிறர்கண்படாதபடி கச்சினால்மறைத்து வைப்பாளென்க. மாற்றம் (ஆகிய) பாடல் எனத் தொடரும். குவளை—'குவலய' என்ற வடசொல் விகாரம்: 'குவலயம்' என்பது மதுவே; "குவாலயம் குவலயம் குவாலம் குவலம் குவம்" என்பது—வடமொழி நிகண்டு. வாசம்—'வாஸநா' என்ற வடசொற்சிதைவு. 'நிகழ்நாறும்' என்றபாடம் பொருந்தாது. (11)

அடிவரவு—அரவணை வைத்த தந்தம் கந்தன் பிய மின் பெண்டிர் இருமலை அங்கமலம் ஓட வாரணி போய்.

இரண்டாந்திருமொழி உரை முற்றுப்பெற்றது.

# ரண்டாம்பத்து—மூன்றாந்திருமொழி, போய்ப்பாடு.

—அந்தாதித்தொடையாலமைந்தது)

(கண்ணனைக் காதுகுத்த அழைத்தல்)

அவதாரிகை:—யசோதைப்பிராட்டி கண்ணபிரானுக்குக் காதுகுத்திக் காது பெருக்கிக் காதணிகளுமிட்டு அநுபவிக்க ஆசைப்பட்டுக் காதுகுத்துகையாகிற அவ்வுத்ஸவத்துக்கு ஊரில் பெண்களையெல்லாமழைத்துவிட்டு, வந்தவர்களை ஸம்பாவிக்கைக்கிடான அடைக்காய் முதலியவைகளையும ஸம்பாதித்து வைத்து அவனைக் 'காதுகுத்தவா' என்றழைக்க, அவன், காது நோகுமென்றஞ்சி 'வரமாட்டேன்' என்னச்செய்தேயும அவனஞ்சாமைக்குறப்பான வார்த்தைகளைச் சொல்லியும் அவனுக்கு அபிமதமான வஸ்துக்களைக் காட்டியும் உடன்படுத்திக்கொண்டு காது பெருக்கினபடியை, ஆழ்வார் தாமும அவளைப்போல அநுபவிக்க ஆசைப்பட்டுத் தம்மை அவளாகப் பாவித்துத் தத்காலம்போலே அவனைக்குறித்து அப்பாசுரங்களைப் பேசி அநுபவித்து இனியராகிறார்—இத்திருமொழியில்.

இத்திருமொழியில் முதற்பாசுரம்முதல் பன்னிரண்டாம் பாசுரமவரை முறையே எம்பெருமானுடைய த்வாதசநாமங்களைக் கூறிவருவது—ரத்நாவலியலங்காரத்தின் பாற்படும.

139 போய்ப்பாடுடையநின்தந்தையுந்தாழ்த்தான் பொருதிறற்கஞ்சன்கடியன் *
காப்பாருமில்லை கடல்வண்ணாவுன்னைத் தனியேபோயெங்குந் திரிதி *
பேய்ப்பால்முலையுண்ட பித்தனே கேசவ நம்பீயுன்னைக் காதுகுத்த *
ஆய்ப்பாலர்பெண்டுகளெல்லாரும்வந்தா ரடைக்காய்திருத்திநான் வைத்தேன். (1)

| | | | |
|---|---|---|---|
| பாடு உடைய நின் தந்தையும் போய் தாழ்த்தான் | பெருமையை உடைய உன்தகப்பனும் (வெளியே) போய் (திரும்பிவருவதற்கு) | பேய் முலை பால் | பூதனையின் முலைப்பாலை |
| | | உண்ட பித்தனே | உட்கொண்ட மதிமயக்கமுள்ளவனே! |
| பொருதிறல் கஞ்சன் கடியன் | போர் செய்யுந்திறமையுள்ள கம்ஸனோ (உன் விஷயத்தில்) மிகவும் க்ரூரனாயிராநின்றான்; | கேசவ நம்பி | கேசவனே! பூர்ணனானவனே! |
| | | உன்னை காது குத்த | உன் காதுகளைக்குத்துவதற்காக |
| கடல் வண்ணா உன்னை காப்பாரும் இல்லை | கடல்போன்ற [ச்ரமஹரமான] வடிவையுடையவனே! உன்னைப் பாதுகாப்பவரான வேறொருவரும (இங்கு இப்போது) இல்லை; | ஆய் பாலர் பெண்டுகள் எல்லாரும் வந்தார் | இடைச்சியர்களாகிய எல்லாப் பெண்டுகளும் வந்திராநின்றார்கள்; |
| தனியே போய் எங்கும் திரிதி | (நீயோவென்றால்) அஸஹாயனாய்ப்போய் கண்டவிடங்களிலும் திரியாநின்றாய்; | நான் அடைக்காய் திருத்தி வைத்தேன் | நானும் (அவர்களுக்கு ஸம்பாவிக்க வேண்டிய) வெற்றிலை பாக்குகளை ஆய்ந்து வைத்திருக்கிறேன். |

* * *—கண்ணபிரானே!, உன்னை ரக்ஷிப்பதில் ஸமர்த்தரான உன் தகப்பனாரும் 'பசுக்களின் பின்னே போய்வருகிறேன்; வருகிறவரையில் நீ பிள்ளையைக் காப்பாற்றிக்கொண்டிரு' என்று சொல்லிச்சென்று இன்னும வரவில்லை. கம்ஸனோ உன்மேல் கறுக்கொண்டிருப்பதனால் எந்த ஸமயத்தில் யாரை அனுப்புவனோ, என்ன செய்வனோ, ஒன்றுந்தெரியவில்லை: உபாயமறிந்து காப்பாற்றவல்ல வேறொருவரும் இங்கில்லை; நீயோ பயமறியாமல் எங்குந் திரிகின்றாய்; பல பிள்ளைகளுடன் நான் திரிந்துகொண்டிருந்தால் என்னை யாரறிவாரென்று நீ நினைக்கவேண்டா; [கடல் வண்ணா!] உன் வடிவழகே உன்னைக் கோட்சொல்லிக்கொடுக்குமே. மேலும பிள்ளைகளோடே விளையாடுகிறாயென்று சொல்லவும முடியாதபடி நீ அவர்களை விட்டுத் தனியே பல விடங்களில் திரிகின்றாய்: இப்படியெல்லாம ஓடிப்போகாமல் கிட்டவா; உன்னைக் காதுகுத்த ஆய்ப்பாடிப் பெண்டுகளெல்லாரும் வந்தி

[illegible]ருக்கிறார்கள்; நான் அவர்கட்குக்கொடுக்க வெற்றிலை பாக்கு எல்லாம் ஸித்தப்படுத்திவைத்திருக்கிறேன்—என்று சொல்லி யழைக்கிருள் யசோதை. 'போய்' என்பதை மிகுதிக்கு வாசகமாகக்கொண்டு, ரக்ஷ்யவர்க்கத்தினுடைய ரக்ஷணத்திலே மிகவும் நோக்கமுடையவராய் "கூர்வேற் கொடுந்தொழிலன் நந்தகோபன்" என்கிறபடியே நீ பிறந்தவன்று தொடங்கித் தமது வேலாயுதத்தைக் கூர்மையாகத் தீட்டிக்கொண்டு நீ படுக்குந் தொட்டிற்கீழே எறும்பு ஊர்ந்தாலும் சிங்கத்தின்மேற் சீறுமாபோலே சீறி உன்னைக்காப்பாற்றுவதில் மிகவும் ச்ரத்தையையுடையனை என்றும் பொருளாம். தீரிதி—முன்னிலையொருமை வினைமுற்று. அடை—இலை=வெற்றிலை; காய்—பாக்கு. .... ... (1)

**140** வண்ணப்பவளமருங்கினிற்சாத்தி மலர்ப்பாதக்கிண்கிணியார்ப்ப *
நண்ணித்தொழுமவர்சிந்தைபிரியாத நாராயணாவிங்கேவாராய் *
எண்ணற்கரியபிரானே திரியையெரியாமேகாதுக்கிடுவன் *
கண்ணுக்குநன்றுமழகுமுடைய கனகக்கடிப்புமிவையா. (2)

நண்ணி தொழுமவர் சிந்தை பிரியாத நாராயணா } கிட்டி வணங்குகிறவர்களுடைய மனஸ்ஸில் நின்றும் விட்டு நீங்காத நாராயணனே! (நீ,)

வண்ணம் பவளம் மருங்கினில் சாத்தி } (மிக்க செந்நிறத்தையுடைய பவழ வடத்தைத் திருவரையிலே சாத்திக்கொண்டு

மலர் பாதம் கிண் கிணி ஆர்ப்ப } தாமரைமலர்போன்ற பாதங்களிலணிந்த சதங்கை ஒலிக்கும்படி இங்கே வாராய்—; (உன்மேல் அன்பில்லாதவர்களுக்கு)

எண்ணற்கு அரிய பிரானே } நினைப்பதற்கு அருமையான ஸ்வாமியே!

திரியை எரியாமே காதுக்கு இடுவன் } நூல்திரியை எரிச்சலுண்டாகாதபடி (உன்) காதுகளுக்கு இடுவேன்; (அப்படித் திரியையிட்டுக் காதுபெருக்கின பின்பு நீ அணியவேண்டியவையான)

கண்ணுக்கு நன்றும் அழகு உடைய கனகம் கடிப்பும் இவை } கண்களுக்கு மிகவும் அழகையுடைய (ஸ்வர்ணமயமான) பொற்கடிப்பும் இவையாகும்;

ஆ ஆச்சர்யம்.

* * *—கீழ்ப்பாசுரத்தில் காதுகுத்த அழைத்தாள்; காதில் நூல்திரியை இட அழைக்கிருள்—இப்பாட்டில். காதுகுத்தி நூல்திரியை இட்டுக் காது பெருக்கியபின்பு காதணிகளையிடுதல், இயல்பு. அழகும்=உம்—இசைநிறை. "கனகக்கடிப்புமிவையாம்" என்றும் பாடம் கொள்ளலாமென்பர் சிலர், அது வேண்டா. கடிப்பு—கர்ணபூஷணம் (2)

**141** வையமெல்லாம்பெறும்வார்கடல்வாழும் மகரக்குழைகொண்டுவைத்தேன் *
வெய்யவேகாதில்திரியையிடுவன் நீவேண்டியதெல்லாந்தருவன் *
உய்யவிவ்வாயர்குலத்தினில்தோன்றிய ஒண்சுடராயர்கொழுந்தே *
மையன்மைசெய்திளவாய்ச்சியருள்ளத்து மாதவனேயிங்கேவாராய். (3)

உய்ய இ ஆயர் குலத்தினில் தோன்றிய } [illegible]

ஒண் சுடர் ஆயர் கொழுந்தே } [illegible]

வையம் எல்லாம் பெறும் } [illegible]

வார் கடல் வாழும் மகரம் குழை } [illegible]

கொண்டு வைத்தேன் (உன் காது பெருக்கியபடிக்கு) கொண்டுவந்திருக்கிறேன்,

(உன் காதுக்குத் திரிவு உண்டாகாமல் இருக்கும் பொருட்டு)

வெய்யவே சௌகர்யமுடனிருக்கும்படி

காதில் திரியை இடுவன் } (உன்) காதிலே திரியை இடுவேன்;

நீ வேண்டியது எல்லாம் தருவன் } நீ விரும்பிய பொருள்களை யெல்லாம் கொடுப்பேன்;

மாதவனே —ச்ரிய:பதியே!

இளம் ஆய்ச்சியர் உள்ளத்து } மடமைப் பருவமுடைய இடைப்பெண்கள் மனஸ்ஸிலே

மையன்மை செய்து—வ்யாமோஹத்தைச் செய்துகொண்டு

இங்கே வாராய்—.

* * *—நீ இப்போது திரியையிட்டுக்கொண்டால் பின்பு பொற்கடிப்புமாத்திரமல்ல, மிகச்சிறந்த மகரகுண்டலங்களையும் அணியலாம்; காது நினவு தின்னுமென்றக்க வெப்பமாகவே திரியையிடுவேன்; உனக்கு வேண்டிய பணியாரங்களையும் பழங்களையும் தருவேன்; நீ வர வேணும் என்று சொல்லி யழைக்கிறாள். வெப்பு தினவுக்குப் பரிஹாரமாதலால் 'வெய்யவே காதில் திரியையிடுவன்' என்றாள். ... .... ... .... (3)

142 வணநன்றுடையவயிரக்கடிப்பிட்டு வார்காதுதாழப்பெருக்கி *
குணநன்றுடையர்க்கோபாலபிள்ளைகள் கோவிந்தாநீசொல்லுக்கொள்ளாய் *
இணைநன்றழகியவிக்கடிப்பிட்டால் இனியபலாப்பழந்தந்து *
சுணநன்றணிமுலையுண்ணத்தருவன்நான் சோத்தம்பிரானிங்கேவாராய். (4)

இ கோபால பிள்ளைகள் } இந்த இடைப் பிள்ளைகள்
வார் காது தாழ பெருக்கி } (தமது) நீண்ட காதை (தோளளவும்) தொங்கும்படி பெருக்கி
வணம் நன்று உடைய வயிரம் கடிப்பு இட்டு } நல்ல நிறத்தை மிகுதியாக வுடைய வயிரக்கற்களை அழுத்திச் செய்த கடிப்பை அணிந்துகொண்டு
(இப்படி தமது தாய்மார் சொல்லியபடி செய்து)
நன்று குணம் உடையர் } நற்குணசாலிகளாயிரா நின்றார்கள்;
கோவிந்தா நீ சொல்லு கொள்ளாய் } கோவிந்தனே! நீயோவென்றால் தாயாகிய என்னுடைய சொல்லைக் கேட்கிறாயில்லை;

(இப்படியிராமல் எனது சொல்லைக் கேட்டு)
இணை நன்று அழகிய இ கடிப்பு இட்டால் } ஒன்றோடொன்றொத்து மிகவும் அழகியவையாயிருக்கிற இக்கடிப்பை அணிந்துகொண்டால்,
நான் இனிய பலாப் பழம் தந்து } நான் தித்திப்பான பலாப்பழங்களைக் கொடுத்து
சுணம் நன்று அணி முலை உண்ண தருவன் } சுணங்கையுடைய மிகவழகிய முலையையும் (நீ) பருகும்படி கொடுப்பேன்;
பிரான் சோத்தம் —ஸ்வாமியே! (உனக்கு) ஸ்தோத்ரம்;
இங்கே வாராய்—.

* * *—கண்ணனைப்புகழ்ந்து அழைத்தும் அவன் வாராமையாலே, மற்றையிடைப் பிள்ளைகள் காதுபெருக்கிக் காதணிகளை யணிந்திருப்பதைக் காட்டி அப்பிள்ளைகளைக் கொண்டாடிச் சொல்லி 'இவர்களைப்போல நீயும் தாய் சொல் கேட்டுக் காது பெருக்கிக்கொள்ள வேண்டாமோ? அப்படிக் காது பெருக்கிக் கடிப்பை யணிந்தால் நானுனக்கு நல்ல பலாப் பழம தருவதோடு முலையையும் உண்ணத் தருவேன்; அப்பா! உன்னைக் கும்பிடுகிறேன், நீ இங்கே வரவேணும்' என்று கெஞ்சியழைக்கிறாள். வணம்—'வண்ணம்' என்பதன் தொகுத்தல். வயிரக்கடிப்பு—வஜ்ர குண்டலம. கோபாலர் + பிள்ளைகள் = கோபாலபிள்ளைகள்; "சில விகாரமா முயர்திணை." சுணம்—"சுணங்கு" என்பதன் விகாரமென்பர்: முலைமேல் தோன்றும் நிறவேறுபாடு; பசலைநிறம். சோத்தம்—'ஸ்தோத்ரம' என்ற வடசொற் சிதைவு என்னலாம்; இதற்கு—"அஞ்ஜலி பண்ணுமவர்கள் அதுக்கு அநுகூலமாகத் தாழ்ச்சிதோற்றச் சொல்லுவதொரு சப்தவிசேஷம" என்பது, பெரியஜீயருரை. ... .... .... (4)

143 சோத்தம்பிரானென்றிரந்தாலுங்கோள்ளாய் சுரிகுழலாரோடுநீபோய் *
கோத்துக்குரவைபிணைந்திங்குவந்தாற் குணங்கொண்டிடுவனோநம்பி *
பேர்த்தும்பெரியனவப்பந்தருவன் பிரானேதிரியிடவொட்டில் *
வேய்த்தடந்தோளார்விரும்புகருங்குழல் விட்டுவேநீயிங்கேவாராய். (5)

[illegible] | [illegible] | தரம் கொள்ளுகிறேனோ | (உனக்குத்) தகுதியானதாக (நான்) கொள்வேனோ?; —உபகாரகனே!
[illegible] | | பட்டில் | திரிசைய (உன்காதிலே) இடப்படி நீ இசைந்தால
[illegible] | [illegible] | பெருத்த பெரியன அப்பம் தருவன் | மறுபடியும் மறுபடியும் பெரிய பெரிய அப்பங்களைக் கொடுப்பேன்;
[illegible] | [illegible] | பேய் சேய் தட தோளார் விருப்பு கருகுழல் விட்டுவே | மூங்கிலைபோன்ற பெரிய தோள்களையுடைய மகளிர் விரும்புகைக்கு உரிய கருநிறமான கூந்தலையுடைய விஷ்ணுவே!

நீ இங்கே வாராய்—.

* * *—கண்ணபிரான். 'நேற்று நீ என்னை அழைக்கையில் நான் வர, அப்போது வந்ததைக் குணமாகக் கொள்ளாமல் என்னை அடித்தவளன்றோ நீ' என்ன; யசோதை, 'நீ பெண்களுடன் தனியிடத்திலே குரவையாடி வந்தால் அதை நான் எப்படி குணமாகக் கொள்ளக்கூடு'மென்கிறாளென்க. போத்தும்-புந:புந:. 'இது சிறிது, இது சிறிது' என்று சொல்லி, யசோதை கொடுக்கும் அப்பங்களைக் கண்ணன் தள்ளிவிடவும், இன்னும் அவன் விருப்பப்படி பெரிய பெரிய அப்பங்களைக் கொடுப்பேனென்று கருத்து. குரவைக் கூத்தாவது—"ஸஜ நாகம் ரு நாஜஜெ ஶாயவ:" இத்யாதிப்படியே—ஒவ்வொரு ஆய்ச்சியின் பக்கத்திலும் ஒவ்வொரு கண்ணனாகத்தோன்றிநின்று கைகோத்தாடல்; இதைத்தான் ராஸக்ரீடை என்பது என்பர்—ஸாம்ப்ரதாயிக ஆர்யவ்ருத்தர்.

"சிலப்பதிகாரம்" என்னும் தமிழ்க்காப்பியத்தில் "ஆய்ச்சியர் குரவையும்" என்ற விடத்து அடியார்க்கு நல்லாருரையில், "குரவை யென்பது கூறுங்காலைச், செய்தோர் செய்த காமமும் விறலும், மெய்தவுரைக்கு மியல்பிற்றென்ப" எனவும், "குரவை யென்ப தெழுவர் மங்கையர், செந்நிலை மண்டலம் கடகக் கைகோத்தந்நிலை கொட்பநின் றாடலாகும" எனவுஞ் சொன்னாராகலின், இதுவும் ஆய்ச்சியரிடத்து நிகழ்தலான் ஆய்ச்சியர்குரவை யெனக் கூத்தாற் பெற்ற பெயர்' என்று உரைத்தவாறு காண்க. "குரவை யென்பது கைகோத்தாடல்" என்று ஸாமான்யமாகச் சொன்னான் ஒரு தமிழன். .... ... .... (5)

**144** விண்ணெல்லாங்கேட்கவழுதிட்டாய் உன்வாயில்விரும்பியதனைநான்நோக்கி *
மண்ணெல்லாங்கண்டேன்மனத்துள்ளேயஞ்சி மதுசூதனேயென்றிருந்தேன் *
புண்ணேதுமில்லையுன்காதுமறியும் பொறுத்திறைப்போதிருநம்பி *
கண்ணாவென்கார்முகிலேசடல்வண்ணா காவலனேமுலையுணாயே. (6)

(மண்ணைத் தின்றதாகக் [illegible] அழுக்கையால், நீ) [illegible] —தெரிந்துகொண்டேன்; ([illegible])
விண் எல்லாம் கேட்க அழுதிட்டாய் | [illegible] —பரமாநுபவிகிற,
[illegible] | (பெருமிதமே) உன் காது [illegible],
[illegible] (அனாதிரு)
[illegible] | [illegible] மெதுவாகக் கொண்டிரு,
[illegible] | நம்பி கார் முகிலே கடல் வண்ணா | புருஷோத்தமனே! கண்ணனே! காளமேகம் போன்றவனே! கடல் போன்ற திருநிறத்தவனே! ரக்ஷண வியாபாரத்தில் வல்லவனே!

என் முலை உணாய—.

* * *—காதில் கடிப்பிடவேணுமென்று யசோதை அழைத்துக்கொண்டிருக்கவும் கண்ணன் வாராதிருந்ததுமல்லாமல் மண்ணையுமதின்றானாக, அதற்காக அவள்கோபங்கொண்டு அவனையடிக்க, அப்போது அவன் தனது வாயைத் திறந்துகொண்டு ஆகாயமுழுதும் தொனி பரவும்படிஅழ, அதுகண்டு யசோதை 'இவன் எவ்வளவு மண் தின்றிருப்பன்' என்பதை வாயிலுள்ள மண்சுவட்டைக்கொண்டு தெரிந்துகொள்வோமென்று அவன் வாயை விருப்பிப் பார்க்கையில்; அவன் வாயிலுள்ளே உலகங்களையெல்லாம் முன்போலக்கண்டு 'இவனை நமது மகனென்றெண்ணி அடித்தோமே!, இவன் ஸர்வேச்வரனன்றோ' என்று அஞ்சியிருக்க, கண்ணன் தன்னை யசோதை இப்படி வேறாக எண்ணினதைப் பொறாமல் அதனை அவள் மறந்து தன் பிள்ளையென்றே கொண்டு தழுவும்படி ஸமீபித்துநிற்க, அப்போது அவள் காதில் கடிப்பையிடும்படிமுயல, கண்ணன் அது கண்டு 'அம்மா! என் காது குத்தியதனால் புண்ணாயிருக்கிறது. நோகும்; ஆதலால் அது எனக்கு வேண்டா' என்று மறுக்க, யசோதை 'உன் காதில் புண் ஒன்றுமில்லை, ஆறிவிட்டது; இந்தக் குண்டலத்தை இடும்போது உன் காது சற்றுமுறியும்; அதை மாத்திரம் பொறுத்துக்கொள்ளவேணும்' என்று சொல்ல, கண்ணன் அதற்கு இசைந்துநிற்க, யசோதை அவனைப் பலபடியாகக் கொண்டாடிக் கடிப்பிடும்போது உண்டாகும் நோவைப் பொறுப்பதற்காக முலையுண்ணவேணுமென்று விரும்புகின்றாள். நோக்கி—நோக்க: எச்சத்திரிபு. அஞ்சி—'இவனை நமமகனென்றெண்ணி யடித்தோமே, இவன்றானிப்போது நாராயணனாயிராநின்றானே' என்று அஞ்சினளென்க. மதுஸூதநன்—'மது' என்ற அஸுரனைக் கொன்றவன். 'என்றிருந்தேன்" என்பதுமொரு பாடம். ஆகாசம் சப்தகுணகமாதலால் "விண்ணெல்லாம் கேட்க" என்றது. .... (6)

145 முலையேதும்வேண்டேனென்றோடி நின்காதிற்கடிப்பைப்பறித்தெறிந்திட்டு *
மலையையெடுத்துமகிழ்ந்துகன்மாரிகாத்துப் பசுநிரைமேய்த்தாய் *
சிலையொன்றிறுத்தாய்திரிவிக்கிரமா திருவாயர்பாடிப்பிரானே *
தலைநிலாப்போதேயுன்காதைப்பெருக்காதே விட்டிட்டேன் குற்றமேயன்றே. (7)

| | |
|---|---|
| முலை ஏதும் வேண்டேன் என்று ஓடி | 'முலையையும் (மற்றுமுள்ள பக்ஷணாதிகள்) எதையும் (நான்) விரும்பமாட்டேன்' என்று சொல்லி ஓடிப்போய் |
| நின் காதில் கடிப்பை பறித்து எறிந்திட்டு | (நான்) உன் காதிலிட்ட காதணியை பிடுங்கி யெறிந்துவிட்டு |
| மலையை எடுத்து மகிழ்ந்து கல் மாரி காத்து பசு நிரை மேய்த்தாய் | கோவர்த்தநமலையை (குடையாக) எடுத்துத் தூக்கி திருவுள்ளமுகந்து கல் வர்ஷத்தில் நின்றும் (இடையர் முதலானாரை) ரக்ஷித்து பசுக்களின் திரளை மேய்த்தவனே! |
| ஒன்று சிலை இறுத்தாய் | —ஒப்பற்றதொரு ருத்ர தநுஸ்ஸை (பிராட்டியை மணம்புரிய) முறித்தவனே! |
| திரிவிக்கிரமா | —திரிவிக்ரமனே! |
| திரு ஆயர் பாடி பிரானே | திருவாய்ப்பாடிக்கு உபகாரகனே! |
| தலை நிலா போதே | தலை நிற்காமலிருக்கிற இளங்குழந்தைப் பருவத்திலேயே |
| உன் காதை பெருக்காது விட்டிட்டேன் | உன் காதைத் (திரியிட்டு)ப் பெருக்காமல் விட்டுவைத்தேன்; (அப்படி விட்டுவைத்தது) |
| குற்றமே அன்றே | —என்னுடைய அபராதமன்றோ? |

* * *—கண்ணனைப் பலவிதமாகப் புகழ்ந்து யசோதை முலையுண்ணச் சொன்னதும் அவனும் அப்படியே முலையுண்ணத் தொடங்க, அப்போது யசோதை அவன் காதில் கடிப்பை இட்டாளாக, கண்ணன் மிகவும் கோபித்து 'நீ கொடுக்கும் முலையும் வேண்டா, ஒன்றும் வேண்டா' என்று சொல்லி அவளுக்குப் பிடிபடாமல் அப்பால் ஓடிச்சென்று காதிலிட்ட காதணியையும் பிடுங்கி எறிந்துவிட்டனனாக, யசோதை மறுபடியும் பலவிதமாகப் புகழ்ந்து

கொண்டு காதில் கடிப்பை இடப்போகையில் அவன் இசையாமலிருக்க, யசோதையானவள், 'அப்பா! உன்மேல் ஒரு குற்றமுமில்லை; தலை செவ்வனே நில்லாத இளங்குழந்தைப் பருவத்திலேயே உன் காதைப் பெருக்காமல் விட்டிட்டது என்னுடைய குற்றமேகாண்' என்று வெறுத்துக் கூறுகின்றாள். .... .... .... .... (7)

அவதாரிகை:—எட்டாம்பாட்டில், முதலிரண்டடி கண்ணன் பாசுரமாகவும பின்னிரண்டடி யசோதை பாசுரமாகவும் செல்லுகிறது.

146 என்குற்றமேயென்றுசொல்லவும்வேண்டாகாண் என்னைநான்மண்ணுண்டேனாக *
அன்புற்றுநோக்கியடித்தும்பிடித்தும் அனைவர்க்குங்காட்டிற்றிலையே *
வன்புற்றரவின்பகைக்கொடி வாமனநம்பியுன்காதுகள்தூரும் *
துன்புற்றனவெல்லாந்தீர்ப்பாய்பிரானே திரியிட்டுச்சொல்லுகேன்மெய்யே. (8)

(நான இப்போது உன் சொல்லைக் கேளாமலிருப்பது)
என் குற்றமே என்று சொல்லவும் வேண்டாகாண் { 'என்னுடைய குற்றமே யாகும்' என்று நீ சொல்லுதலும் வேண்டியதில்லைகாண்:
(ஏனெனில்;)
நான் மண உண்டேன் ஆக { நான் மண்ணுண்டதாகச் சொல்லி
என்னை —(மண் தின்னாத) என்னை
பிடித்தும் —பிடித்துக்கொண்டும்
அன்பு உற்று நோக்கி அடித்தும் { அன்பை ஏறிட்டுக்கொண்டு [அன்புடையவள்போல] (என வாயைப்) பார்த்து (என்னை அடித்தும்
அனைவர்க்கும் காட்டிற்றிலையே } எல்லார்க்கும் நீ காட்டின தில்லையோ?
(என்று கண்ணன் சொல்ல அதற்கு யசோதை)
வல் புற்று அரவின் { வலிய புற்றில் வஸிக்கின்ற பாம்புக்கு
பகை கொடி வாமந நம்பி } விரோதியான கருடனைக் கொடியாகவுடைய வாமந மூர்த்தியே!
(இப்படி நீ ஒன்றுசொல்ல நானொன்று சொல்வதாகப் போதுபோக்கிக்கொண்டிருந்தால)
உன் காதுகள தூரும் { உன்னுடைய (குத்தின) காதுகள் தூர்ந்துவிடும்;
(உன்னை அடுத்தவர்கள)
உற்றன துன்பு எல்லாம் தீர்ப்பாய் பிரானே } அடைந்தனவான துன்பங்களை யெல்லாம் போக்குமவனே! உபகாரகனே!
திரி இட்டு மெய்யே சொல்லுகேன் { (உன்காதில) திரியையிட்டு (உன்னை யடிக்கமாட்டேனென்று நீ நம்பும்படியான) சபதத்தைச் சொல்லுவேன
(என்கிறாள்.)

* * *—கண்ணன், யசோதையைநோக்கி, "தலைநிலாப்போதே உன் காதைப் பெருக்காதே விட்டிட்டேன் குற்றமேயன்றே" என்று நீ உன்னை வெறுத்துச் சொல்லுவது-நீ சொன்னதை நான் கேட்கவில்லையென்று என்மேலுள்ள குற்றத்தை நினைத்தன்றோ?' என்ன, அதற்கு யசோதை 'பின்னை யார் குற்றம்?' என்ன, கண்ணன் 'உன்மீதுங் குற்றமில்லையோ?' என்ன, யசோதை 'நானுன்னை என்ன செய்தேன்?' என்ன; கண்ணன் 'நான் மண் தின்னாதிருக்கையில் மண் தின்றதாகப் பழியையேற்றிட்டு என்மேல் அன்புடையாள்போல என்னைப் பிடித்துக்கொண்டு என் வாயில் மண் தின்ற சுவடு இருக்கிறதாவென்று பார்த்து, அது இல்லாதிருக்கையிலேயே அதைக் கண்டதாகச் சொல்லியடித்தது அவ்வளவோடு நில்லாமல் 'பாருங்கோள் பெண்காள்! இவன் மண் தின்னுமபடியை' என்று எல்லார்க்கும் நீ காட்டவில்லையோ' என்ன, யசோதை 'இப்படி நாம வழக்காடிக்கொண்டிருந்தால் போதுபோகின்றது, அச்ரிதருடைய ஆர்த்தியைத் தீர்க்குமவனே! உன் காதுகள் தூர்ந்துவிடும்' என்ன, கண்ணன் 'நீ என்னை ஸ்தோத்ரம்பண்ணவேண்டா, என்னைப் பிடித்தல் அடித்தல் செய்வதில்லையென்று உறுதியாக ஒரு வார்த்தை சொல்' என்ன, யசோதை 'நான் திரியிடும்படி நீ இசைந்து வா, பின்பு அங்ஙனமே ஸபதம பண்ணித்தருகிறேன்' என்கிறாள். சொல்லவும் வேண்டா—நெஞ்சினால் நினைத்ததே சாலவழுகிது, இதனை வாய்கொண்டு வெளிப்படச் சொல்லவும் வேணுமோ? என்றவாறு. .... (8)

147 மெய்யென்றுசொல்லுவார்சொல்லைச்சருதித் தோடுப்புண்டாய்வெண்ணெயையென்று *
கையைப்பிடித்துக்கரையுரலோடேன்னைக் காணவேசட்டிற்றிலையே *
செய்தனசொல்லிச்சிரித்தங்கிருக்கில் சிரீதராவுன்காதுதூரும் *
கையில்திரியையிடுகிடாய் இந்நின்றகாரிகையார்சிரியாமே. (9)

சொல்லுவார் சொல்லை மெய் என்று கருதி — சொன்னார் சொன்ன பேச்சுக்களையெல்லாம் (நீ) மெய்யென்றெண்ணி
வெண்ணெயை தொடுப்பு உண்டாய் என்று — 'வெண்ணெயைக் களவு கண்டு உண்டாய்' என்று பழிசுமத்தி ?,
கையை பிடித்து —(என) கையைப்பிடித்து
காண — (பலரும்) கண்டு பரிஹஸிக்கும்படி
கரை உரலோடு என்னை கட்டிற்றிலையே — விளிம்பிலே வேலைசெய்திருக்கிற உரலில் (ஒன்றும் திருடாத) என்னை நீ கட்டவில்லையா ?
(என்று கண்ணன் யசோதைமேல் குறைசாட்டிச் சிரித்துநிற்க)

(அதற்கு யசோதை சொல்லுகிறாள்):-
சிரீதரா —ஸ்ரீதரனே !
செய்தன சொல்லி சிரித்து அங்கு இருக்கில் — (நான் முன்பு) செய்தவற்றை சொல்லிக்கொண்டு பரிசிரிப்புச் செய்து அங்கே [தூரத்தில்] (பொழுது போக்கிக்கொண்டு) இருந்தால்
உன் காது தூரும் —உன் காதுகள் தூர்ந்துவிடும்;
இ நின்ற காரிகையார் சிரியாமே — (உன்) முன்னே நிற்கிற இந்த பெண்கள் சிரியாதபடி
கையில் திரியை இடு கிடாய் — (என்) கையிலுள்ள திரியை இட்டுக்கொள்வாயாக.

* * *—கண்ணன் யசோதையை நோக்கி 'உன் பேச்சை நம்பக்கூடாது; நீ சொல்லுவார் சொல்வதைக்கேட்டு என்னைத் தண்டிப்பவளன்றோ ?' என்ன; யசோதை 'உன்னை நான் அப்படிச் செய்ததுண்டோ ?' என்ன, கண்ணன் 'இவன் வெண்ணெய் திருடினனென்று யாரோசொல்ல அதை உண்மை யென்று நம்பி என்கையைப்பிடித்து இழுத்துக் கொண்டுபோய் என்னை எல்லாரும்பார்த்துப் பரிஹஸிக்கும்படி உரலோடு கட்டவில்லையோ ?' என்று சிரித்து நிற்க, யசோதை 'நீ இப்படியெல்லாம் நான் செய்தவற்றைச் சொல்லிச் சிரித்துக்கொண்டிருந்தால் உன் காதுகள் தூர்ந்துவிடுமே; தவிரவும், உன்பக்கல் அன்பினால் உன்னைவிட்டுப் போகமாட்டாமல் நிற்கிற இந்தப்பெண்கள் 'சொ , கூழைககாது என்று சொல்லி உன்னை ஏசாதபடி உன்காதைப் பெருக்க, யை யணிந்துகொள்ள வேணும்' என்று மறுபடியும் திரியிடப் பார்க்கிறாள். சொல்லுவார் என்றது—கொள்ளத் தகாத பேச்சையுடையவர் என்ற கருத்தைக்காட்டும். தொடுப்பு – (ஒருவரையும் கேளாமல்) தொடுதல்; எனவே, களவாம்: 'பு' விகுதிபெற்ற தொழிற்பெயர். கிடாய் – முன்னிலையசைச்சொல். ... ... .... .... (9)

148 காரிகையார்க்குமுனக்குமிழுக்குற்றென் ? காதுகள்வீங்கியெரியில் *
தாரியாதாகில்தலைநொந்திடுமென்று விட்டிட்டேன்குற்றமேயன்றே *
சேரியிற்பிள்ளைகளெல்லாருங்காதுபெருக்கித் திரியவுங்காண்டி *
ஏர்விடைசெற்றிளங்கன்றெறிந்திட்ட இருடீகேசாவென்றன்கண்ணே. (10)

காதுகள் வீங்கி எரியில் — (என்னுடைய) காதுகள் வீங்கிப் போய் எரிச்சலெடுத்தால்,
காரிகையார்க்கும் உனக்கும் — (பரிஹஸிக்கிற,) பெண்களுக்கும் (என்காதில திரியிடநிற்கிற) உனக்கும்
உற்ற (து) இழுக்கு என் — கேரிட்டதான சேதம் ஏதேனுமுண்டோ ?

(என்று கண்ணன் சொல்ல, யசோதை சொல்லுகிறாள்),—
(நீ இன்னும் இளம்பருவத்திலிருந்தபோது)
தாரியாது ஆகில் — '(திரியை இடுவது) பொறுமற் போனால்
தலை நொந்திடும் என்று — (குழந்தைக்குத்) தலை நோப் உடைடாய்விடுமே' என்று நினைத்து

விட்டிட்டேன் — (முன்னமே காதுகுத்தாமல்) இருந்துவிட்டேனே; (அன்பினால் அப்படி விட்டிருந்தது)
குற்றமே அன்றே — (என்னுடைய) குற்றமேயாமல்லவா?
ஏர் விடை செற்று இளகன்று எறிந்திட்ட இருடீகேசா — அழகிய ரிஷபத்தின் வடிவு கொண்டுவந்த அரிஷ்டாஸுரனை அழித்து சிறிய கன்றின் வடிவாய் வந்த வத்ஸாஸுரனை (குணிலாகக் கொண்டு விளா மரத்தின்மேல்) வீசிய ஹ்ருஷீகேசனே!
என்றன் கண்ணே — எனக்குக் கண்போன்றவனே!
சேரியில் — இவ்விடைச்சேரியில்
பிள்ளைகள் எல்லாரும் — எல்லாப்பிள்ளைகளும்
காதுபெருக்கி — காதைப் பெரு
திரியவும் — திரியாநிற்பதையும்
காண்டி — நீ கா

* * *—நீயும் இடைச்சேரியிலுள்ள பிள்ளைகளைப்போலக் காதுபெருக்கிக் கொண்டிருக்க வேண்டுமென்பது, குறிப்பெச்சம். தாரியாதாகில்—நீட்டல் விகாரம்; தரியாதாகில்: நீ குழந்தையாயிருக்கும்போதே உன்காதைக்குத்தித் திரியிட்டிருக்கவேணும்; அப்போது, ஐயோ! சிறியகுழந்தையாயிற்றே! காது குத்தினால் ஒருகால் குழந்தைக்குத் தலைவலியுண்டாகுமோ. என்றஞ்சிக் குத்தாமல் விட்டது என்னுடைய குற்றமன்றோவென்று வெறுத்துச் சொல்லுகிறாளென்க. காண்டி—முன்னிலையொருமை வினைமுற்று. .... (10)

149 கண்ணைக்குளிரக்கலந்தெங்கும்நோக்கிக் கடிகமழ்பூங்குழலார்கள் *
எண்ணத்துளென்றுமிருந்துதித்திக்கும் பெருமானேயெங்களமுதே *
உண்ணக்கனிகள்தருவன் கடிப்பொன்றும்நோவாமே காதுக்கிடுவன் *
பண்ணைக்கிழியச்சகடமுதைத்திட்ட பற்பநாபாவிங்கேவாராய். (11)

குளிர — மனங்குளிரும்படி
கண்ணை — (உன்) கண்ணை (இடைப்பெண்களுடைய கண்களோடு)
கலந்து — சேர்த்து,
எங்கும் நோக்கி — (அவர்களுடைய) வடிவம் முழுவதும் பார்த்து,
கடி கமழ் பூ குழலார்கள் எண்ணத்துள் — வாஸனை வீசுகின்ற புஷ்பங்களணிந்த கூந்தலையுடைய அப்பெண்களினுடைய மநஸ்ஸினுள்ளே
என்றும் இருந்து தித்திக்கும் பெருமானே — எப்போது மிருந்துகொண்டு ரஸிக்கின்ற பெருமையையுடையவனே!
எங்கள் அமுதே — எங்களுக்கு அம்ருதம் போன்றவனே!
உண்ண கனிகள் தருவன் — (நீ) தின்பதற்கு (நாவல் முதலிய) பழங்களைக் கொடுப்பேன்;
கடிப்பு ஒன்றும் நோவாமே காதுக்கு இடுவன் — காதணியை சிறிதும் நோவாதபடி (உன்னுடைய) காதிலே இடுவேன்;
சகடம் — (அஸுராவிஷ்டமான) சகடத்தை
பண்ணை கிழிய உதைத்திட்ட — கட்டுக்குலையும்படி உதைத்தருளின
பற்பநாபா — பத்மநாபனே!
இங்கே வாராய்—.

* * *—'கண்ணைக்குளிரக்கலந்து' என்கிறவித்தால்—சக்ஷு:ப்ரீதி [தாராமைத்ரீ] எனப்படுங் கண்கலவியைச் சொல்லுகிறதென்க. கண்ணை என்பதில், ஐகாரத்தை அசையாகக்கொண்டு, கடிகமழ் பூங்குழலார்கள் கண்குளிர்ச்சியடைய உன்னுடையபுமுழுதும் பொருந்தப்பார்த்து (உன்னோடு கலக்கும் படிகளையெண்ண, அவர்களுடைய அந்த) எண்ணத்தின்படியே எப்போதும் அவர்களுக்கு போக்யனாயிருக்கும பெருமானே! என்று உரைத்தலும் ஏற்கும். பண்ணைக்கிழிய=பண்—செவ்வை; அது குலையும்படி: ஸந்திபந்தங்கள் சிதறும்படி. ... .... .... .... ... (11)

150 வாவென்றுசொல்லியென்கையைப்பிடித்து வலியவேகாதிற்கடிப்பை
நோவத்தரிக்கிலுனக்கிங்கிழுக்குற்றேன் காதுகள்நொந்திடுங்கில்லேன் *

நாவற்பழங்கொண்டுவைத்தேன் இவைகாணாய்நம்பீ * முன்வஞ்சமகளைச்
சாவப்பாலுண்டுசகடிறப்பாய்ந்திட்ட தாமோதராவிங்கேவாராய். (12)

(கண்ணன் யசோதையைப்பார்த்து)

வா என்று சொல்லி என் கையைப்பிடித்து — '(நான் காதில் திரியிட இங்கே) வருவாயாக' என்று சொல்லி என் கையைப் பிடித்துக் கொண்டு

காதில் நோவ கடிப்பை இங்கு வலியவே தரிக்கில் — காதிலே நோம்படி காதணியை இப்போது பலாத்காரமாக இட்டால்

உனக்கு இங்குகு உற்ற(து) என் — உனக்கு சேதமுண்டானதென்ன?

காதுகள் நொந்திடும் — (என் காதுகள் நோவெடுக்கும்;

கில்லேன் — (அதைப் பொறுக்கவல்ல) வல்லமையுடையேனல்லேன்;

(என்று மறுத்துச்சொல்ல;— யசோதை சொல்லுகிறாள்:—)

நம்பீ — பூர்ணனே!

நாவல்பழம் கொண்டு வைத்தேன் — (உனக்கு இஷ்டமான) நாவற் பழங்களை கொண்டு வைத்திருக்கிறேன்;

இவை காணாய் — இவற்றைப் பார்ப்பாயாக;

முன் — முன்பு

வஞ்சம் மகள் சாவ பால் உண்டு — வஞ்சனையுள்ள பூதனையானவள் மாளும்படி (அவளது) முலைப் பாலை பானம்பண்ணி,

சகடு இற பாய்ந்திட்ட — சகடாசுரன் முறியும்படி (கால் களைத்) தூக்கி யுதைத்த

தாமோதரா! இங்கே வாராய்—.

* * *—முன்னடிகள் கண்ணபிரானுடைய வார்த்தை; பின்னடிகள் யசோதையின் வார்த்தை. பூதநாசசகடநிரஸந வ்ருத்தாந்தத்தைக் குறித்ததற்குக்கருத்து – காதுநோவைப் பொறுத்தல் உனக்குப்பெரிதன்றென்கை. [தாமோதரா] வயிற்றில் கயிற்றுத்தழும்பை மறந்தாயோ என்றபடி. தரிக்கில்—தரிப்பிக்கில்; பிறவினையில் வந்த தன்வினை. "இவை ஆணாய்" என்பது-சிலர் பாடம். மகளை=ஐ – அசை. ... ... .... (12)

151 வார்காதுதாழப்பெருக்கியமைத்து மகரக்குழையிடவேண்டி *
சீராலசோதைதிருமாலைச்சொன்னசொல் சிந்தையுள்நின்றுதிகழ *
பாரார்தொல்புகழான்புதுவைமன்னன் பன்னிருநாமத்தாற்சொன்ன *
ஆராதவந்தாதிபன்னிரண்டும்வல்லார் அச்சுதனுக்கடியாரே. (13)

அசோதை — யசோதையானவள்

வார் காது தாழ பெருக்கி அமைத்து — (ஸ்வபாவமாகவே) நீண்டிருக்கிற காதுகளை தொங்கும்படி வளர்த்து ஓரளவிலே நிற்கும்படி செய்து

மகரம் குழை இட வேண்டி — மகர குண்டலங்களை இட விரும்பி

திருமாலை சீரால் சொன்ன சொல் — ச்ரிய:பதியான கண்ணனை சிறப்புக் குறையாதபடி அழைத்த சொற்கள்

சிந்தையுள் நின்று திகழ — (தம்முடைய) மனஸிலே நிலையாகப் பொருந்தி விளங்க, (அச்சொற்களை,)

பார் ஆர் தொல் புகழான் புதுவை மன்னன் — பூமியில நிரம்பிய பழமையான யசஸ்ஸையுடையவரும் ஸ்ரீவில்லிபுத்தூருக்கு நிர்வாஹகருமான பெரியாழ்வார்

பன்னிரு நாமத்தால் சொன்ன — த்வாதசநாமங்களோடுஞ் சேர்த்துச்சொல்லி யழைத்த

ஆராத அந்தாதி பன்னிரண்டும் வல்லார் — (ஓத ஓத) த்ருப்திபிறவாத அந்தாதித் தொடையிலுளாகிய பன்னிரண்டு பாட்டுக்களையும் ஓதவல்லவர்கள்

அச்சுதனுக்கு அடியார் — எம்பெருமானுக்கு அடிமை செய்யப்பெறுவர்.

* * *—வார்–உரிச்சொல். அந்தாதி—அந்தத்தை ஆதியாகவுடையது; அன்மொழித்தொகை; வடமொழித்தொடர், தீர்க்கஸந்தி; அந்தாதியாவது—முன்னின்றசெய்யுளின் ஈற்றிலுள்ள எழுத்தாயினும அசையாயினும் சீராயினும் அடியாயினும் அடுத்துவருஞ் செய்யுளின் முதலாக அமையும்படி பாடுவது. சொற்றொடர் நிலைச்செய்யுள் பொருட்டொடர் நிலைச் செய்யுள் என்ற வகையில், இது சொற்றொடர்நிலை: "செய்யுளந்தாதி சொற்றொடர்நிலையே" என்றார் தண்டியலங்காரத்தும். அச்யுதன்–(ஆச்ரிதரை) நழுவவிடாதவன்; (தன்னுடைய

நிலையில் நின்றும் தான் ஒருபோதும்) நழுவாதவனென்றுமாம்: [ந ச்யாவயதி, ந ச்யவதே இதி அச்யுத:]. திருநாமங்கள் பன்னிரண்டாதலால், பாசுரங்களும் பன்னிரண்டாயின: பயனுரைத்த பாட்டு ஒன்று. .... .... .... .... (13)

அடிவரவு:—போய் வண்ணம் வையம் வணம் சோத்தம் விண் முலை என் மெய்கரிகை கண்ணை வா வார் வெண்ணெயளைந்த.

மூன்றாந்திருமொழி உரை முற்றிற்று.

---

## இரண்டாம்பத்து—நான்காந்திருமொழி, வெண்ணெயளைந்த.

---

அவதாரிகை:—யசோதைப்பிராட்டி கண்ணபிரானுக்குக் காதுகுத்தித் திரியிட்டுக் காதைப்பெருக்கிக் கடிப்பிட்டபின்பு, அனுக்கம் நீங்க அவனை நீராட்ட வேணுமென்றாசைப்பட்டு அதற்குவேண்டிய உபகரணங்களையெல்லாம் ஸித்தப்படுத்தி அப்பிரானைப் பலபடியாக நல்வார்த்தை சொல்லிப் புகழ்ந்தழைத்து மஞ்சனமாட்டியதை ஆழ்வார் தாமும் அநுபவிக்க விரும்பித் தம்மை அவளாகப் பாவித்து அவள் அக்காலத்திற் பேசியதையெல்லாம்பேசி இனியராகிறார்—இத்திருமொழியில்.

152 வெண்ணெயளைந்தகுணுங்கும் விளையாடுபுழுதியுங்கொண்டு *
திண்ணெனவிவ்விராவுன்னைத் தேய்த்துக்கிடக்கநானொட்டேன் *
எண்ணெய்புளிப்பழங்கொண்டு இங்கெத்தனைபோதுமிருந்தேன் *
நண்ணலரியபிரானே நாரணாநீராடவாராய். (1)

வெண்ணெய் அளைந்த குணுங்கும் — வெண்ணெயளைந்ததனாலான மொச்சை நாற்றத்தையும்
விளையாடு புழுதியும் கொண்டு — விளையாடுமிடத்தில் படிந்த புழுதியையும் (உடம்பிற்) கொண்டிருக்கிற, (அதனால்,)
இ இரா தேய்த்து கிடக்க — இன்றை இரவில் (உடம்பைப் படுக்கையிலே) தேய்த்துக்கொண்டு படுத்திருக்கும்படி (விட)
உன்னை திண்ணென நான் ஒட்டேன் — உன்னை நிச்சயமாக நான் ஸம்மதிக்கமாட்டேன்;
எண்ணெய் புளி பழம் கொண்டு — (தேய்த்துக்கொள்வதற்கு வேண்டிய) எண்ணெயையும் புளிப்பழத்தையும் ஸித்தமாக வைத்துக்கொண்டு
இங்கு — இங்கே
எத்தனை போதும் இருந்தேன் — எவ்வளவோ காலமாக [வெகுகாலமாக] (உன் வரவை யெதிர்பார்த்து) இராநின்றேன்;
நண்ணல் அரிய பிரானே நாரணா நீராட வாராய் — (ஒருவராலும் ஸ்வயத்நத்தால்) கிட்டக்கூடாத ஸ்வாமியே! நாராயணனே! நீராடுவதற்கு வரவேணும்.

* * *—கண்ணபிரான் * தாரார்தடந்தோள்களுள்ளளவுங் கைநீட்டி வெண்ணெயளைந்ததனால் உடம்பெல்லாம் அவ்வெண்ணெய்பட்டு மொச்சைநாற்றம் வீசும்; அதனோடு விளையாடப்போனால் அதன்மேல் புழுதியும்படியும்; இவ்விரண்டும் உடம்பிலிருந்தால் தினவு தின்னும்; அதற்காகக் கண்ணன் உடம்பைப் படுக்கையிலே தேய்ப்பானும்; இப்படியெல்லாம் வருந்துவதைப் பொறுக்கமாட்டாமல் நீராடவழைக்கின்றனளென்க. விளையாடுபுழுதி=விளைத்தொகை; விளையாடின புழுதியெனவிரிக்க 'உண்ட இளைப்பு' என்றவிடத்துப்போல, விளை

யாடி யதனால் தோன்றிய புழுதியென்க. புளிப்பழம் – எண்ணெயைப் போக்குவதாய்ப் புளிப்புச்சுவையுடையதா யிருக்கின்ற ஒருவகைப்பழத்தைக் குறிக்கு மென்பர்; சிக்காயைக் காட்டு மென்பாருமுளர். எள் + நெய் = எண்ணெய். ... ... (1)

153 கன்றுகளோடச்செவியில் கட்டெறும்புபிடித்திட்டால் *
தென்றிக்கெடுமாகில் வெண்ணெய்திரட்டிவிழுங்குமாகாண்பன் *
நின்றமராமரஞ்சாய்த்தாய்! நீபிறந்ததிருவோணம் *
இன்றுநீநீராடவேண்டும் எம்பிரானோடாதேவாராய். (2)

நின்ற மராமரம் சாய்த்தாய் — நிலையாய் நின்ற ஸப்தஸால வ்ருக்ஷங்களை (ஊடுருவ அம்பெய்து) சாய்த்தவனே!
கன்றுகள் ஓட செவியில் கட்டெறும்பு பிடித்து இட்டால் — பசுவின் கன்றுகள் வெருண்டோடும்படி (அக் கன்றுகளின்) காதில் கட்டெறும்பைப் பிடித்துப் போகட்டால்
(அதனால் அக்கன்றுகள் வெருண்டு)
தென்றி கெடும் ஆகில் — சிதறிப்போய் (கண்டு பிடிக்க முடியாதபடி) ஓடிப்போய் விட்டால்,
(பின்பு நீ,)
வெண்ணெய் திரட்டி விழுங்குமா காண்பன் — வெண்ணெயை திரட்டி விழுங்கும்படியைப் பார்ப்பேன்,
[வெண்ணெயே உனக்கு உண்ணக் கிடைக்காதென்றபடி;]
இன்று நீ பிறந்த திருவோணம் — இந்த நாள் நீ அவதரித்த ச்ரவண நக்ஷத்திரமாகும்;
(ஆகையால்)
நீ நீர் ஆடவேண்டும்—;
எம்பிரான்! ஓடாதே வாராய்—.

* * *—கன்று உண்டானால் பசுகறக்கலாம், பசுவைக்கறந்தால் பாலுண்டாகும், பாலுண்டானால் வெண்ணெயுண்டாகும்: ஆகவே, வெண்ணெய் வேணுமென்றால், கன்றுகள் அவச்யம் வேணும்; அக்கன்றுகள் வெருண்டோடுவதைக் காண்கைக்காக நீ அவற்றின் காதுகளில் கட்டெறும்பைப் பிடித்துப் புகவிட்டால் அவை காணமுடியாதபடி ஓடிப்போய் விடுமே! பின்பு உனக்கு இஷ்டமான வெண்ணெய் கிடைக்குமபடி யெங்ஙனே? என்பது முதலிரண்டடிகளின் கருத்து. ‘வெண்ணெய் திரட்டி விழுங்குமா காண்பன்’ என்றதொடர் வெண்ணெய் விழுங்கக் கிடைக்காது என்ற கருத்தைக்காட்டும்; இது ஒருவகை யெதிர்மறை யிலக்கணை: பிறகுறிப்பு. ஆ – ‘ஆறு’ என்பதன் விகாரம். [மராமரம்சாய்த்தாய்]. ராமாவதாரத்தில் ரிச்யமூகபர்வதத்தில் ஸுக்ரீவனுக்குத் தன்வலியின் மிகுதியைக்காட்ட ஏழுமராமரங்களை ஒருங்கே எய்தனனென்ற வரலாறு காண்க. ... ... (2)

154 பேய்ச்சிமுலையுண்ணக்கண்டு பின்னையும்நில்லாதென்னெஞ்சம் *
ஆய்ச்சியரெல்லாருங்கூடி அழைக்கவும்நான்முலைதந்தேன் *
காய்ச்சினநீரோடுநெல்லி கடாரத்திற்பூரித்துவைத்தேன் *
வாய்த்தபுகழ்மணிவண்ணா மஞ்சனமாடநீவாராய். (3)

பேய்ச்சி முலை உண்ணக் கண்டு — பூதனையினுடைய முலையை (அவளுடைய உயிரோடும்) (நீ) உண்டுவிட (அதைப்) பார்த்தும்
(நான் அஞ்சி ஓடவேண்டியிருக்க அங்ஙனம் செய்யாமல்,
பின்னையும் என் நெஞ்சம் நில்லாது — பின்பும் என மனங்கேளாமல்
ஆய்ச்சியர் எல்லாரும் கூடி அழைக்கவும் — இடைச்சிகளெல்லாரும் ஒன்றுகூடி கூப்பாடு போட்டுக் கதறவும்
நான் முலை தந்தேன் — (உன்மேல் அன்புகொண்ட) நான் முலை (உண்ணக்) கொடுத்தேன்;
நெல்லியோடு காய்ச்சின நீர் — நெல்லியையிட்டு காய்ச்சின வெந்நீரை
கடாரத்தில் பூரித்து வைத்தேன் — சருவத்தில் நிறைத்து வைத்திருக்கிறேன்
வாய்த்த புகழ் மணிவண்ணா — பொருந்திய யசஸ்ஸையும் நீலமணி போன்ற நிறத்தையுமுடைய கண்ணனே!
மஞ்சனம் ஆட —நீராட
நீ வாராய்—.

* * *—'உனக்கு முலைகொடுத்த பேய்ச்சி பட்டபாட்டை நானறிந்து வைத்தும், நாமும் அப்பாடுபடவேண்டி வரப்போகிறதேயென்று அஞ்சி ஓடவேண்டியிருக்க அதுசெய்யாமல், மற்றும் அச்சமுறுத்துகிற இடைச்சிகளின் பேச்சையும் கேளாமல் உனக்கு நான் முலைதந்தது அன்பினாலன்றோ? அதற்கிணங்க நீ நான் சொல்லிற்றைக் கேட்கவேண்டாவோ' என்கிறாள். நெல்லி—நெல்லியிலை. காய்ச்சின நீரோடு நெல்லி—நெல்லியோடு காய்ச்சினநீர் என உருபுபிரித்துக் கூட்டப்பட்டது. சடாரம் – கடாஹம. பூரித்து – வடமொழித்தாதுவடியாப்பிறந்த வினையெச்சம். .... .... .... .... (3)

155 கஞ்சன்புணர்ப்பினில்வந்த கடியசகடமுதைத்து *
வஞ்சகப்பேய்மகள்துஞ்ச வாய்முலைவைத்தபிரானே *
மஞ்சளுஞ்செங்கழுநீரின் வாசிகையும்நாறுசாந்தும் *
அஞ்சனமுங்கொண்டுவைத்தேன் அழகனேநீராடவாராய். (4)

கஞ்சன் புணர்ப்பினில் வந்த — கம்ஸனுடைய கபடமான ஆலோசனையினாலே (ஏவுதலாக) வந்த
கடிய சகடம் உதைத்து — (அஸுராவேசத்தாலே) க்ரூரமான சகடத்தை (திருவடிகளால்) உதைத்து முறித்துவிட்டு,
வஞ்சகப் பேய் மகள் துஞ்ச — வஞ்சனையுள்ள பூதனையானவள் முடியும்படி
முலை வாய் வைத்த பிரானே — (அவளுடைய) முலையிலே வாயை வைத்த உபகாரகனே!
(உன்மேனி நிறம்பெறும்படி சாத்துவதற்கு உரிய)
மஞ்சளும் — மஞ்சளையும்
செங்கழு நீரின் வாசிகையும் — (நீராடியபிறகு சாத்திக் கொள்ள வேண்டிய) செங்கழுநீர் மாலையையும்
நாறு சாந்தும் — பரிமளிதமான சந்தனத்தையும்
அஞ்சனமும் — (கண்களிலிடும்) மையையும்
கொண்டு வைத்தேன்—;
அழகனே! நீராட வாராய்—.

* * *—உன்திருமேனிக்கு வேண்டுமவற்றையெல்லாம் சேர்த்து வைத்திருக்கிறேன், நீராட வா என்றழைக்கிறாள். உனது அழகு கெடாதபடி நீ நீராடவேணுமென்பதற்காக அழகனே! என்கிறாள். .... .... .... .... (4)

156 அப்பங்கலந்தசிற்றுண்டி அக்காரம்பாலிற்கலந்து *
சொப்படநான்சுட்டுவைத்தேன் தின்னலுறுதியேல்நம்பி *
செப்பிளமென்முலையார்கள் சிறுபுறம்பேசிச்சிரிப்பர் *
சொப்படநீராடவேண்டும் சோத்தம்பிரானிங்கேவாராய். (5)

நம்பி — (பால சாபலத்தால்) பூர்ணனே!
செப்பு இள மென் முலையார்கள் — பொற்கலசம்போன்ற இளமையான மெல்லிய முலையையுடைய மாதர்கள்
சிறு புறம் பேசி சிரிப்பர் — (உன்மேலே) அற்பமான குற்றங்களை மறைவிற் சொல்லி பரிஹஸிப்பார்கள்
(அன்றியும்,)
பாலில் அக்காரம் கலந்து — பாலிலே வெல்லக்கட்டியை சேர்த்துப் (பிசைந்து)
அப்பம் கலந்த சிற்றுண்டி — அப்பத்தையும் (அப்படியே) சேர்ந்த சிற்றுண்டியையும்
சொப்பட — நன்றாக
நான் சுட்டு வைத்தேன்—;
(நீ அவற்றை)
தின்னல் உறுதி ஏல் — தின்ன விரும்பினாயாகில்
சொப்பட — நன்றாக
நீர் ஆட வேண்டும்—;
பிரான் சோத்தம் — ஸ்வாமியே! உனக்கு அஞ்ஜலி;
இங்கே வாராய் —

* * *—'இப்பையல் அழுக்குடம்பனாயிரா நின்றான்' என்று இடைச்சிகள் ஏசுவதற்கு இடமறும்படி நீராடவருவாயாகில் வேண்டிய பக்ஷணங்கள் தருவேனென்கிறாள். அப்பம்—'அபூபம்' என்ற வடசொற்சிதைவு. சிறுமை + உண்டி = சிற்றுண்டி; "ஈறு

சேஷ்டிதனயிருப்பனே' என்று உன்மேல் பிறர் குறைவாகச் சொல்லப்போகிறார்களே யென்ற எண்ணத்தினா லென்றபடி. ... ... ... (7)

**159** கன்றினைவாலோலைகட்டிக் கனிகளுதிரவெறிந்து *
பின்தொடர்ந்தோடியோர்பாம்பைப் பிடித்துக்கொண்டாட்டினாய்போலும் *
நின்திறத்தேனல்லேன்நம்பி நீபிறந்ததிருநன்னாள் *
நன்றுநீநீராடவேண்டும் நாரணாவோடாதேவாராய். (8)

கன்றினை வாலோலை கட்டி — கன்றினுடைய வாலிலே ஓலையைக் கட்டி

(கன்றை) — (அசாதாரணத் தன்மையினால் உன்னைக் கொண்டாடாத ஒரு) கன்றை (எறிகருவியாகக்கொண்டு, அசுராவேசமுள்ள விளாமரத்தின்)

கனிகள் உதிர எறிந்து — பழங்கள் (கீழே) உதிர்ந்து விழும்படி வீசி

பின் தொடர்ந்து ஓடி —பின்பு ஓடிப்போய்

ஓர் பாம்பை பிடித்துக்கொண்டு — (காளியனென்ற) ஒரு பாம்பைப் பிடித்துக்கொண்டு

ஆட்டினாய் போலும்—ஆட்டினவனேதான் (நீ);

நம்பீ — ஒன்றிலும் குறைவில்லாதவனே! (நான்)

நின் திறத்தேன் அல்லேன் — உன் விஷயமொன்றையு மறியாதவனாயிராநின்றேன்; (அது கிடக்கட்டும்;)

நீ பிறந்த நல் திருநாள் — நீ அவதரித்த திருநக்ஷத்திரமாகும் (இன்றை); (ஆகையால்)

நீ நன்று நீர் ஆடவேண்டும்—;

நாரணா ஓடாதே வாராய்—;

* * *—கண்ணபிரான் கன்று துள்ளியோடுவதைக் காண்கைக்காக அதன் வாலிலே ஓலைகளை முடைந்து விடுவதனால், 'கன்றினை வாலோலைகட்டி' என்றார். கன்றினை—உருபு மயக்கம். [நின் இத்யாதி.] 'அத்தைச்செய்தான் இத்தைச் செய்தான்' என்றிப்படி யெல்லாம் சொல்லுவார் சொல்லக் கேட்டதல்லது, உன்னுடைய தன்மையை நினைத்தறிதற்கும் எனக்கு முடியாதென்றபடி. ... ... ... ... (8)

**160** பூணித்தொழுவினிற்புக்குப் புழுதியளைந்தபொன்மேனி *
காணப்பெரிதுமுகப்பன் ஆகிலுங்கண்டார்பழிப்பர் *
நாணெத்தனையுமிலாதாய் நப்பின்னைகாணிற்சிரிக்கும் *
மாணிக்கமேயென்மணியே மஞ்சனமாடநீவாராய். (9)

பூணி தொழுவினில் புக்கு புழுதி அளைந்த பொன் மேனி — பசுக்கள் கட்டும் கொட்டகையிலே [illegible]

காண பெரிதும் உகப்பன் — [illegible] (நான்) விரும்புவேன்;

ஆகிலும் கண்டார் பழிப்பர் — [illegible]

(ஆனபடி,)

நாண் எத்தனையும் இலாதாய் — சிறிதும் லஜ்ஜையென்பது இல்லாதவனே!

நப்பின்னை காணில் சிரிக்கும் — நப்பின்னைப் பிராட்டி கண்டாளாகில் நீ இப்படி [illegible] சிரிப்பாள்;

என் மாணிக்கமே! என் மணியே!

மஞ்சனம் ஆட நீ வாராய்—.

* * *—[illegible] மாட்டுத்தொழுவிற்புகுந்து புழுதியளைந்து அழுக்குடம்பு [illegible] பொன்னுக்குப் புழுதியேறினாற்போலக் குழந்தைப் [illegible] அழுக்காண்பது எனக்கு மிகவும் விருப்பமே; என்றாலும் '[illegible]' என்று கண்டவர்களெல்லாரும் என்னைச்

சிரிப்பர்களே; தவிரவும், நப்பின்னையும் உன்னைப் பரிஹாஸம் பண்ணுவளே; ஆகையால் இப்போது இருப்பதுபோல நீ வெட்கமற்று நில்லாமல் உடனே நீராட வரவேணுமென்கிறாள். (9)

161 கார்மலிமேனிநிறத்துக் கண்ணபிரானையுகந்து *
வார்மலிகொங்கையசோதை மஞ்சனமாட்டியவாற்றை *
பார்மலிதொல்புதுவைக்கோன் பட்டர்பிரான்சொன்னபாடல் *
சீர்மலிசெந்தமிழ்வல்லார் தீவினையாதுமிலரே. (10)

| | | | |
|---|---|---|---|
| கார் மலி மேனி நிறத்து கண்ணபிரானை உகந்து | காளமேகத்திற் காட்டிலும் சிறந்த திருமேனி நிறத்தையுடைய கண்ணபிரானை விரும்பி | பார் மலி தொல் புதுவை கோன் பட்டர்பிரான் சொன்ன | பூமியிலே சிறந்த பழமையான ஸ்ரீவில்லிபுத்தூருக்கு நிர்வாஹகரான பெரியாழ்வார் அருளிச்செய்த |
| வார் மலி கொங்கை அசோதை | கச்சுக்கு அடங்காமல் விம்முகின்ற ஸ்தனங்களையுடைய யசோதைப் பிராட்டி | சீர் மலி செந்தமிழ் பாடல் வல்லார் | அழகு நிறைந்த செந்தமிழ்ப் (இப்) பாசுரங்களை ஓத வல்லவர்கள் |
| மஞ்சனம் ஆட்டிய ஆற்றை | நீராட்டின ப்ரகாரத்தை,— | யாதும் தீவினை இலர் | சிறிதும் பாபமில்லாதவராவர். |

* * *—'உகந்து ஆட்டிய ஆற்றைச் சொன்ன பாடல் வல்லார் தீவினையிலர்' என்று முடிபுகாண்க. .... ... ... ... (10)

அடிவரவு:—வெண்ணெய் கன்று பேய்ச்சி கஞ்சன் அப்பம் எண்ணெய் கறந்த கன்றினை பூணி கார் பின்னை.

நான்காந்திருமொழி உரை முற்றிற்று.

---

## இரண்டாம்பத்து—ஐந்தாந்திருமொழி, பின்னைமணாளனை.

---

அவதாரிகை:—யசோதைப் பிராட்டி கண்ணபிரானை மஞ்சனமாட்டின பின்பு குழல் வாரக்கருதி, அவன் அழுது ஓடுதல் ஆடுதல் செய்யாமல் செவ்வனேயிருந்து குழல்வாரக் காட்டுதற்காக, லோகத்தார் குழந்தைகளைக் குழல்வாரும்போது வசப்படுத்தவதற்குச் சொல்லுவதுபோலே 'அக்காக்காய் குழல்வாரவா' என்று சொல்லிக் கண்ணனைச் சீராட்டிக் கொண்டு ஸ்வாதீனப்படுத்தினபடியை ஆழ்வார் தாமு மநுபவிக்க விருபபித் தமமை அவளாகப் பாவித்து அக்காலத்தில் அவள் அக்காக்காய் அழைத்தாப்போலே தாமு மழைத்துச் சீராட்டிக் குழல் வாருகையாகிற ரஸத்தை அநுபவித்து மகிழ்கிறார்—இத் திருமொழியில்.

162 பின்னைமணாளனைப் பேரிற்கிடந்தானை *
முன்னையமரர் முதல்தனிவித்தினை *
என்னையுமெங்கள் குடிமுழுதாட்கொண்ட *
மன்னனைவந்துகுழல்வாராயக்காக்காய் மாதவன்றன்குழல் வாராயக்காக்காய். (1)

அக்காக்காய் —காக்கையே!
பின்னை மணாளனை — நப்பின்னைப் பிராட்டிக்கு நாயகனும்
பேரில் கிடந்தானை — திருப்பேர் நகரிலே பள்ளிகொண்டிருப்பவனும்
முன்னை அமரர் முதல் — (பகவதநுபவத்தில்) முதல்வரான நித்யஸூரிகளுக்கு தலைவனும் (அந்த நித்யஸூரிகளின் ஸத்தைக்கும் தாரகாதிகளுக்கும்)
தனிவித்தினை —ஒப்பற்ற காரணமாயிருப்பவனும்
என்னையும் எங்கள் குடிமுழுது ஆட்கொண்ட மன்னனை — என்னையும் எங்களுடைய குடியிலுள்ளாரெல்லாரையும் அடிமை கொண்ட தலைவனுமாகிய கண்ணனுக்கு
வந்து குழல வாராய்—(நீ) வந்து கூந்தல் வாருவாயாக;
அக்காக்காய் —காக்கையே!
மாதவன் தன் —ச்ரிய:பதியான இவனுக்கு குழல் வாராய்—.

* * *—காக்கை வந்து கத்தும்போது குழந்தைகள் பராக்காயிருக்குமாதலால் அப்போது தலைவாருதல் ஸுகமாய் முடியுமென்பதுபற்றி, அக்காரியத்தைக் காக்கையின் மேலேற்றிக் 'குழல்வாராய் அக்காக்காய்' என்றுளென்க: 'அக்காக்காய்!' என்று காக்கையை விளித்துக் குழந்தைகளுக்குக் குழல்வாரி முடித்தல், உலகவழக்கத்திலிருப்பது காண்க. 'முதல்' என்றதனோடும் இரண்டனுருபு கூட்டுக. வித்து—பீஜம்: எனவே, ஆதிகாரணம். பேர்—திருப்பேர் நகர்; சோழநாட்டுத் திருப்பதிகள் நாற்பதில் ஒன்று. (1)

163 பேயின்முலையுண்ட பிள்ளையிவன்முன்னம் *
மாயச்சகடும் மருதுமிறுத்தவன் *
காயாமலர்வண்ணன் கண்ணன்கருங்குழல் *
தூய்தாகவந்துகுழல்வாராயக்காக்காய் தூமணிவண்ணன்குழல்வாராயக்காக்காய். (2)

அக்காக்காய்!—;
இவன் முன்னம் பேயின் முலை உண்ட பிள்ளை — இப்பிள்ளை முன்பு பூதனையின் முலையை (அவளுயிரோடு) குடித்த பிள்ளைகாண்; (அன்றியும்,)
மாயம் சகடும் மருதும் இறுத்தவன் — வஞ்சனையுள்ள சகடத்தையும் யமளார்ஜுநங்களையும் முறித்தவன்;
காயாமலர் வண்ணன் — காயாம்பூப்போன்ற திருநிறத்தையுடையவன்
கண்ணன் — 'க்ருஷ்ணன்' என்னும் பேரையுடையவன்; (இவனுடைய)
கரு குழல் —கருநிறமான கூந்தலை
வந்து தூய்து ஆக குழல் வாராய் — (நீ) வந்து நன்றாக வாருவாயாக;
தூ மணி வண்ணன் — பழிப்பற்ற நீலமணிபோன்ற நிறத்தையுடைய இவனுக்கு குழல்வாராய—.

* * *—தூய்தாக — தலையிற் சிக்குப்படாமல் மழமழவென்றிருக்கும்படி. "குழல் வாராய்" என்ற தொடர்—ஒருசொல்நீர்மைத்தாய் வாருதல் என்ற தொழிலை மாத்திரம் உணர்த்தும்; ஆதலால், 'கருங்குழல் குழல்வாராய்" என்றது. [புநருக்தி தோஷமில்லையென்க.] .... .... .... .... .... (2)

164 திண்ணக்கலத்துத் திரையுறிமேல்வைத்த *
வெண்ணெய்விழுங்கி விரைய உறங்கிடும் *
அண்ணலமரர் பெருமானையாயர்தம் *
கண்ணனைவந்துகுழல்வாராயக்காக்காய் காமுகில்வண்ணன்குழல்வாராயக்காக்காய். (3)

அக்காக்காய்!—;
திரை உறிமேல் வைத்த — [illegible] (பெரிய) உறி மேலே
திண்ணம் கலத்து — திடமான பாத்திரத்திலுள்ள
வெண்ணெய் விழுங்கி — வெண்ணெயை உட்கொண்டு
விரைய உறங்கிடும் அண்ணல் — விரைவாக (ஓடிவந்து) பொய்யாகக் கண்ணுறங்குகின்ற ஸ்வாமியும்
அமரர் பெருமானை —நித்யஸூரிகளுக்கு நிர்வாஹகனும்
ஆயர் தம் கண்ணனை — இடையர்களுக்குக் கண்போன்றவனுமான இவனை

வந்து குழல் வாராய—;

அக்காக்காய்!—;

காம்பகிக் பண்ணாள { [illegible] யுடையனான இவனுடைய குழல் வாராய்

* * *—திண்ணம்—'அம்' விகுதிபெற்ற பண்புப்பெயர். —கலம்—'கலசம்' என்ற வடசொற்சிதைவு என்னலாம். "விரையவுறங்கிடும்" என்பதும் பாடம். (3)

**165** பள்ளத்தில்மேயும் பறவையுருக்கொண்டு *
கள்ளவசுரன் வருவானைத்தான்கண்டு *
புள்ளிதுவென்று பொதுக்கோவாய்கீண்டிட்ட *
பிள்ளையைவந்துகுழல்வாராயக்காக்காய் பேய்முலையுண்டான்குழல்வாராயக்காக்காய். (4)

அக்காக்காய்!—;

| | | | |
|---|---|---|---|
| பள்ளத்தில் மேயும் பறவை உரு கொண்டு | நீர்த்தாழ்வுகளிலே இரை பொறுக்கித் திரிகின்ற (கொக்கு என்னும்) பக்ஷியின் ரூபத்தை எடுத்துக்கொண்டு | இது புள் என்று | (அவனை) இது பக்ஷியேயென்று (சாமான்யமாக நினைத்து) |
| வருவான் கள்ளம் அசுரனை தான் கண்டு | வருபவனாகிய வஞ்சனை பொருந்திய அசுரனை [பகாஸுரனை] தான் பார்த்து | பொதுக்கோ வாய் கீண்டிட்ட | விரைவாக (அவ்வஸுரனது) வாயை கிழித்துப்போகட்ட |
| | | | பிள்ளையை வந்து குழல்வாராய்—, அக்காக்காய்! பேய்முலை உண்டான் குழல் வாராய்—, |

* * *—யமுனைக்கரையிலே கண்ணபிரானைப் பகாஸுரன் விழுங்கிவிட, அவனது நெஞ்சில் கண்ணன் நெருப்புப்போலே எரிக்கவே அவன் பொறுக்கமாட்டாமல் கண்ணனை வெளியே உமிழ்ந்து மூக்கால் குத்த நினைக்கையில், கண்ணன் அவன் வாயலகுகளைத் தனது இருகைகளினாலும்பற்றி விரிவாகக் கிழித்திட்டனனென்பது — பகாஸுரவதவ்ருத்தாந்தம். பொதுக்கோ=பொதுக்கெனை. ("பிதுக்கென்று புறப்பட்டான்" என்று திரிந்து வழங்கி வருதல் காண்க.) ... ... ... ... (4)

**166** கற்றினம்மேய்த்துக் கனிக்கொருகன்றினை *
பற்றியெறிந்த பரமன்திருமுடி *
உற்றனபேசி நீயோடித்திரியாதே *
அற்றைக்கும்வந்துகுழல்வாராயக்காக்காய் ஆழியான்றன்குழல்வாராயக்காக்காய். (5)

அக்காக்காய்!—;

| | | | |
|---|---|---|---|
| நீ உற்றன பேசி ஓடி திரியாதே | நீ (உன்ஜாதிக்குத்) தகுந்தவற்றை சொல்லிக்கொண்டு அங்குமிங்கும் பறந்து திரியாமல்,— | கன்றினை பற்றி கனிக்கு எறிந்த பரமன் திரு முடி | உதிர்த்தற்காக (குணிலாக) வீசின பரமபுருஷனுடைய அழகிய தலை முடியை |
| கன்று இனம் மேய்த்து ஒரு கன் | கன்றுகளின் கூட்டத்தை மேய்த்து வந்து (அஸுராவிஷ்டமான) கன்றொன்றை பிடித்து (அஸுராவிஷ்டமான) விளாம்பழத்தை | அற்றைக்கும் வந்து குழல் வாராய் ஆழியான் தன | —அவ்வநாளும் வந்து —வருவாயாக; —சக்ராயுதபாணியான இவனுடைய குழல் வாராய்—. |

* * *—முள்ளை முள்ளாற்களைவதுபோல அஸுரனை அஸுரனைக் கொண்டே களைந்தனனென்க. கன்று+இனம்=கற்றினம். அற்றைக்கு=‘அன்று’ என்னும் மென்றொடர்க்குற்றியலுகரம் வன்றொடராய் ஐகாரச்சாரியை பெற்று ‘அற்றை’ என்றாகும்; அதன்மேல், கு—சாரியை. ஆழியான்—"ஆழிகொண்டுன்னையெறியும்" என்றவிடத்துக் கருத்தை நினைக்க. .... .... ... .... (5)

167 கிழக்கிற்குடிமன்னர் கேடிலாதாரை *
அழிப்பான்நினைந்திட்டு அவ்வாழியதனால் *
விழிக்குமளவிலே வேரறுத்தானை *
குழற்கணியாகக்குழல்வாராயக்காக்காய் கோவிந்தன்றண்குழல்வாராயக்காக்காய். (6)

அக்காக்காய்!—
கேடு இலாதார் கிழக்கில் குடி மன்னரை { (வரபலமும் புஜபலமுமிருப்பதால் நமக்கு) அழிவில்லையென்று நினைத்திருந்தவரான கிழக்குதிக்கிலுள்ள பட்டணத்திற் குடியிருந்த ராஜாக்களை
அழிப்பான் நினைந்திட்டு } அழிக்கும்படி எண்ணி
அ ஆழி அதனால் —அந்தச் சக்ராயுதத்தால்
விழிக்கும் அளவிலே { கண்மூடித் திறக்கின்ற காலத்திற்குள்
வேர் அறுத்தானை —ஸமூலமாக அழித்தவனுடைய
குழற்கு அணி ஆக —கூந்தலுக்கு அழகு உண்டாம்படி
குழல் வாராய்—;
கோவிந்தன் தண் குழல் வாராய் { (இந்த) கோவிந்தனுடைய குளிர்ந்த [சிறந்த] குழலை வாருவாயாக.

* * *—கிழக்கிற் குடிமன்னர்—ப்ராக்ஜ்யோதிஷபுரவாஸிகளான நரகாஸுரன் முதலானோர். அவ்வாழி—அ—உலகறிசுட்டு: ப்ரஸித்தியைக் காட்டும். இனி, கேடு இலாதாரை—(விஷ்ணுபக்தராதலால்) அழிவில்லாதவரான இந்த்ராதிகளை, அழிப்பான் நினைந்திட்ட கிழக்கிற் குடிமன்னர் விழிக்குமளவிலே (அவரை) வேரறுத்தான் என்றும் உரைப்பர். அழிப்பான்—எதிர்காலவினையெச்சம். .... .... .... .... (6)

168 பிண்டத்திரளையும் பேய்க்கிட்டநீர்ச்சோறும் *
உண்டற்குவேண்டி நீயோடித்திரியாதே *
அண்டத்தமரர் பெருமானழகமர் *
வண்டொத்திருண்டகுழல்வாராயக்காக்காய் மாயவன்றன்குழல்வாராயக்காக்காய். (7)

அக்காக்காய்!—;
பிண்டம் திரளையும் { (பித்ருக்களை உத்தேசித்து இடும்) பிண்டத்தின் உருண்டையையும்
பேய்க்கு இட்ட நீர் சோறும் } பிசாசங்களுக்குப் போகட்ட நீரையுடைய சோற்றையும்
உண்டற்கு வேண்டி—உண்ணுதற்கு விரும்பி
நீ ஓடி திரியாதே —நீ பறந்தோடித் திரியவே வேண்டா;
அண்டத்து அமரர் பெருமான் { மேலுலகத்திலுள்ள தேவர்களுக்குத் தலைவனாகிய இக் கண்ணபிரானுடைய
அழகு அமர் —அழகு பொருந்திய
வண்டு ஒத்து இருண்ட } வண்டைப்போல் கறுத்திருக்கிற
குழல் வாராய்:—
மாயவன் தன { ஆச்சர்யச் செயல்களையுடைய இவனுடைய
குழலை வாராய்—;

* * *—தந்தைதாய் முதலானோர் இறந்த திதியில் செய்யும் ச்ராத்தத்தில் பித்ராதி தேவதைகளை உத்தேசித்துப் பிண்டவுருண்டையைக் காகத்தை யழைத்து இடுவதும், பிசாசம் முதலியவற்றைக் குறித்து ஜலத்தோடு கூடிய சோற்றைப் பலிகொடுத்தலும் வழக்கமென்க. இப்படி கண்ட சோற்றுக்கும் அலைந்து திரியாமல் இவனுடைய குழலை வாரவரவேணுமென்றதாயிற்று. .... .... .... .... (7)

169 உந்தியெழுந்த உருவமலர்தன்னில் *
சந்தச்சதுமுகன்றன்னைப் படைத்தவன் *
கொந்தக்குழலைக் குறந்துபுளியட்டி *
தந்தத்தின்சீப்பால்குழல்வாராயக்காக்காய் தாமோதரன்றன்குழல்வாராயக்காச்சாய். (8)

அக்காக்காய்!—;

உந்தி எழுந்த உருவம் மலர் தன்னில — (தனது) திருநாபியிலே உண்டான ஸ்வரூபத்தையுடைய தாமரைப் பூவிலே

சதுமுகன் தன்னை படைத்தவன — சந்தஸ்ஸை நிரூபகமாகவுடைய நான்முகனை ஸ்ருஷ்டித்த இவனுடைய

புளி அட்டி கொந்தம் குழலை — புளிப்பழத்தைப் பிட்டுத் தேய்த்ததால் செறிப்பையுடைய கூந்தலை

தாரத்தின் சீப்பால் திருந்த நீ குழல் வாராய் — தாரத்தினாற் செய்த சீப்பாலே சிக்கு விடுத்து ... வாராய்

அக்காக்காய்! தாமோதரன் தன் குழல் வாராய்!—.

* * *—கீழ் "வெண்ணெயளைந்த குணுங்கும்" என்ற திருமொழியில் கூறியபடி யசோதைப்பிராட்டி ஸ்ரீக்ருஷ்ணனை எண்ணெய்தேய்த்துப் புளிப்பழமிட்டு நீராட்டியதனால், அப்படி நீராடின ஸ்ரீக்ருஷ்ணனுடைய கூந்தல் செறித்திருக்கும்; ஆதலால், யசோதையானவள் 'காக்கையே! செறிப்புப் போம்படி எண்ணெய்தடவித் தந்தச்சீப்பினால் தலைவாரவேணும்' என்கிறாள். 'புழுகட்டி' என்னும் பாடம்; புழுகு—புனுகு எண்ணெய்: அதைத் தடவிக் குழல்வாராய் என முடிபுகாண்க. [illegible], [illegible] என்ற வடசொற்கள் விகாரப்பட்டன. ... ... ... .... ... (8)

170 மன்னன்றன்தேவிமார் கண்டுமகிழ்வெய்த *
முன்னிவ்வுலகினை முற்றுமளந்தவன் *
பொன்னின்முடியினைப் பூவணைமேல்வைத்து *
பின்னேயிருந்துகுழல்வாராயக்காக்காய் பேராயிரத்தான்குழல்வாராயக்காக்காய். (9)

அக்காக்காய்!—;

முன் மன்னன் தன் தேவிமார் கண்டு மகிழ்வு எய்த — வாமனாவதாரகாலத்தில் அஸுரராஜனான மஹாபலியினுடைய மனைவியாகள் (தன்னுடைய) வடிவைக் கண்டு மகிழ்ச்சியடையும்படி

(மஹாபலியினிடத்திற்போய் 'கொள்வன் நானமாவலி!' என்று மூவடிமண் இரந்து பெற்றுப் பின்பு த்ரிவிக்ரமனாய்)

இ உலகினை முற்றும் அளந்தவன் — இந்த உலகங்கள் முழுவதையும் அளந்துகொண்ட இவனுடைய

பொன் முடியினை — அழகிய தலையை

பூ அணைமேல் வைத்து — புஷ்பத்தினாலாகிய படுக்கையிலே வைத்து

பின்னே இருந்து — (இவனது) பின்புறத்திலே இருந்துகொண்டு

குழல் வாராய்!—; அக்காக்காய்!—,

பேர் ஆயிரத்தான் — ஸஹஸ்ர நாமங்களையுடைய இவனுக்கு

குழல் வாராய்—.

* * *—எல்லா இந்திரியங்களையும் ஆகர்ஷிக்கவல்ல வாமநவடிவையும், ப்ரமசாரி ஆச்ரமத்துக்கு ஏற்றவாறு கொண்ட கோலத்தையும் மழலைச்சொல் சொல்லு மழகையுங் கண்டு மஹாபலியின் மனைவியரும் மகிழ்ந்தனராம். பொன்னின் = இன் — சாரியை. பூ அணை—புஷ்பம்போல் ம்ருதுவான படுக்கை யென்றுமாம். .... .... (9)

171 கண்டார்பழியாமே அக்காக்காய் * கார்வண்ணன்
வண்டார்குழல்வார வாவென்றவாய்ச்சிசொல் *
விண்டோய்மதிள் வில்லிபுத்தூர்க்கோன்பட்டன்சொல் *
கொண்டாடிப்பாடக் குறுகாவினைதாமே. (10)

அக்காக்காய் —'காக்கையே!

கண்டார் பழியாமே—பார்த்தவர்கள் பழியாதபடி

கார்வண்ணன வண்டு ஆர் குழல் வார — காளமேகம்போன்ற நிறமுடைய கண்ணனுடைய வண்டுகள் நிறைந்த கரிய கூந்தலை வாரும்படி வருவாயாக'

| | | | |
|---|---|---|---|
| என்ற ஆய்ச்சிசொல் | என்று சொன்ன யசோதைப்பிராட்டியின் சொல்லை (க்குறித்த),— | கொண்டாடி பாட ... ாம் குறுகா | ச்லாகித்து பாடப்பெற்றால் ஸுக்ருத துஷ்க்ருதங்க ளிரண்டும் சேராவாம். |
| மின் தோய் மதிள் வில்லிபுத்தூர் கோன்பட்டன் சொல | ஆகாசத்தை அளாவுகின்ற மதிளுடைய ஸ்ரீவில்லிபுத்தூர்க்கு நிர்வாஹகரான பெரியாழ்வாருடைய அருளிச்செயல்களை | | |

* * *—[கண்டார்பழியாமே.] நீராடியபின்பு தலையை விரித்துக்கொண்டிருந்தால், கண்டவர்களெல்லாம் பழிப்பர்களிறே. நல்வினையும் தீவினைபோலவே ஸம்ஸாரத்தில் பந்தத்தைத்தந்து பொன்விலங்குபோலுதலால், முமுக்ஷுக்கள் இரும்புவிலங்கையொத்த பாபத்தை நீக்குவது போலவே புண்யத்தையும் நீக்கவேண்டுமென்பது கருதி 'குறுகாவினை தாமே' எனப் பன்மையாக அருளிச் செய்தன ரென்க. .... .... (10)

அடி வரவு:—பின்னை பேய் திண்ணம் பள்ளத்தில் கற்று கிழக்கில் பிண்டம உந்தி மன்னன் கண்டார் வேலி.

ஐந்தாந்திருமொழி உரை முற்றிற்று.

## இரண்டாம்பத்து—ஆறுந்திருமொழி, வேலிக்கோல்வெட்டி.

அவதாரிகை:—யசோதைப்பிராட்டி கண்ணனைக் குழல்வாரின பின்பு பூச்சூட உத்யோகித்திருக்கையில், கண்ணபிரான் ஸ்வஜாத்யாசாரத்துக் கேற்பக் கன்று மேய்க்கிற பிள்ளைகளோடே தானும போகநினைத்துக் 'கன்றுமேய்க்கிற கோலைக்கொடு' என்று தாயை நிர்ப்பந்தித்துக்கேட்க, அவளும இவனைப் பூச்சூடிக்காணவேணுமென்ற அவாவினாலே அதற்கிசைந்து கோல் கொடாமல் அவனை வஞ்சித்துச் சொல்லியதை ஆழ்வார் தமமை அவளாகப் பாவித்துச் சொல்லி இனியராகிறார்—இத்திருமொழியில். ... (*)

இத்திருமொழியும் சாக்கையைக் குறித்துச் சொல்வதாவதைப் "பொற்றிசழ்" என்ற மேல் ஏழாம்பாட்டாலும், திருநாமப்பாட்டாலும் நன்கு உணரலாம்.

172 வேலிக்கோல்வெட்டி விளையாடுவில்லேற்றி *
தாலிக்கொழுந்தைத் தடங்கழுத்திற்பூண்டு *
பீலித்தழையைப் பிணைத்துப்பிறகிட்டு * [கோண்டுவா. (1)
காலிப்பின்போவாற்கோர்கோல்கோண்டுவா கடல்நிறவண்ணற்கோரகோல்

| | | | |
|---|---|---|---|
| (அக்காக்காய்) | —காக்கையே! | பீலி தழையை பிணைத்து பிறகு இட்டு | மயில் தோகைகளை ஒன்று சேர்த்து பின்புறத்திலே கட்டிக்கொண்டும் |
| வேலிகோல் வெட்டி விளையாடுவில் ஏற்றி | வேலிக் கால்களிலுள்ள கோலை (வாளால்) வெட்டி (அதை) லீலோபகரணமான வில்லாகச் செய்து (அதிலே) நாணேற்றியும், | காலி பின்போவாற்கு ஓர் கோல் | பசுக்கூட்டங்களின் பின்னே போகின்ற இவனுக்கு ஒரு கோலை கொண்டு வா—; |
| கொழுந்து தாலியை தட கழுத்தில் பூண்டு | சிறந்த ஆமைத்தாலியை (தனது) பெரிய கழுத்திலே அணிந்து கொண்டும் | | கடல் நிறம் வண்ணற்கு ஓர் கோல் கொண்டு வா—. |

* * *—இடைச்சாதிக்குத் தக்கபடி ஆமைத்தாலி யென்னும் ஒரு வகை ஆபரணத்தைக் கழுத்திலணிந்தும், மயில் தோகைகளைச் சேர்த்துக் கட்டிப் பின்புறத்திலணிந்தும் வேலிக் கால்களிலே வெட்டின சிறு கோல்களை வில்லாகச் செய்து நாணேறிட்டு வளைத்து விளையாடிக் கொண்டே கன்றுகளை மேய்த்துக்கொண்டே செல்லுகின்ற என் மகனுக்குக் கோல் கொண்டுவா என்கை வேலிக்கோல்—வேலிக் கால்களிலே வளர்ந்த சிறுகோல்களென்னுதல்; வளைவையுடைய கோலென்னுதல். தாலிக்கொழுந்தை—உருபு பிரித்துக் கூட்டுக: தாலி கொழுந்து—பனையின் (வெண்ணிறமான) குருத்தென்று முரைக்கலாம்; இதை ஓர் அணியாகச் சமைத்துக் கழுத்திலணிதல் முற்காலத்தியல்பென்க: இப்பொருளில், தாளி—தாலியென ளகரத்திற்கு லகரம் போலியாகவந்ததாம். "விளையாடு வில்லேந்தி" என்ற பாடத்தில், 'வேலிக்கால்களிலே கோலைவெட்டி. (அதை) விளையாடுவில்லாக (க்கையில்) ஏந்திக்கொண்டு' என்று பொருள் கொள்ளலாம். .... .... .... .... (1)

173 கொங்குங்குடந்தையும் கோட்டியூரும்பேரும் *
எங்குந்திரிந்து விளையாடுமென்மகன் *
சங்கம்பிடிக்கும் தடக்கைக்குத்தக்க * நல்
அங்கமுடையதோர்கோல்கொண்டுவா அரக்குவழித்ததோர்கோல்கொண்டுவா. (2)

- கொங்கு குடந்தையும் கோட்டி யூரும் பேரும் — வாஸனை பொருந்திய திருக்குடந்தையிலும் திருக்கோட்டியூரிலும் திருப்பேர் நகரிலும்
- எங்கும் திரிந்து விளையாடும் என் மகன் — மற்றுமுள்ள திருப்பதிகளிலுமெல்லாம் ஸஞ்சரித்து விளையாடுகின்ற என் பிள்ளையினுடைய
- சங்கம் பிடிக்கும் தடக்கைக்கு தக்க — பாஞ்சஜந்யம் தரிக்கிற பெரிய திருக்கைக்கு தகுந்ததான
- நல அங்கம் உடையது—நல்ல வடிவை யுடையதாகிய ஓர் கோல் கொண்டு வா—;
- அரக்கு வழித்தது — (நல்ல நிறமுண்டாம்படி) அரக்குப் பூசியதாகிய ஓர் கோல் கொண்டு வா—

* * *—கொங்கு+குடந்தை=கொங்குக் குடந்தை என வரவேண்டுவது செய்யுளின்பம் நோக்கிக் "கொங்குங் குடந்தையும" எனவந்ததென்க. அரக்கு—செந்நிறமெனினுமாம். .... .... .... .... .... (2)

174 கறுத்திட்டெதிர்நின்ற கஞ்சனைக்கொன்றான் *
பொறுத்திட்டெதிர்வந்த புள்ளின்வாய்கீண்டான் *
நெறித்தகுழல்களை நீங்கமுன்னோடி * கொண்டுவா. (3)
சிறுக்கன்றுமேய்ப்பாற்கோர்கோல்கொண்டுவா தேவபிரானுக்கோர்கோல்

- கறுத்திட்டு எதிர் நின்ற கஞ்சனை கொன்றான் — கோபித்து தன்னை எதிரிட்டு நின்ற கம்ஸனை கொன்றவனும்,
- எதிர் வந்த புள்ளின் வாய் பொறுத்திட்டு கீண்டான் — (தன்னைக் கொல்வதாக) எதிர்த்து வந்த பகாஸுரனுடைய வாயை (முதலிற்) பொறுத்துக்கொண்டிருந்து (பின்பு) கிழித்தவனும்,
- நெறித்த குழல்கள் —நெறித்திராநின்றுள்ள கூந்தல்கள
- நீங்க — ஓடுகிறவேகத்தாலே இரண்டு பக்கமும் அலையும்படியாக
- முன் ஓடி —கன்றுகளுக்கு முன்னே போய்
- சிறு கன்று மேய்ப்பாற்கு — இளங்கன்றுகளை மேய்ப்பவனுமாகிய இவனுக்கு ஓர் கோல கொண்டு வா—;
- தேவபிரானுக்கு ஓர் கோல் கொண்டுவா—.

* * *—பொறுத்திட்டுக்கீண்டான் = பகாஸுரன், தன்னை விழுங்கி உமிழுமளவும் கண்ணன் அவனை ஒன்றுஞ்செய்யாதிருந்து பின்பே அவன் வாயைக் கிழித்ததனால் பொறுமை விளங்குமென்க. குழல்களை=ஐ—சாரியை; இது இல்லாதபோது தளைதட்டுமென்க. (3)

175 ஒன்றே யுரைப்பா னொருசொல்லே சொல்லுவான் *
துன்று முடியான் துரியோதனன் பக்கல் *
சென்றங்குப் பாரதங் கையெறிந் தானுக்கு * [கோல்கொண்டுவா. (4)
கன்றுகள்மேய்ப்பதோர் கோல்கொண்டுவா கடல்நிறவண்ணற்கோர்

ஒன்றே உரைப்பான் — ('பாண்டவர்களுடன் சேர்ந்து வாழோம் என்ற ஒரேவிஷயத்தை சொல்லுபவனும்

(மத்யஸ்தர் எவ்வளவு சொன்னாலும் 'ஊசிகுத்து நிலமும் பாண்டவர்களுக்குக் கொடேன்' என்ற)

ஒரு சொல்லே சொல்லுவான் — ஒரு சொல்லையே சொல்லுபவனும்

துன்று முடியான் துரியோதனன் பக்கல் சென்று — (நவரத்னங்களும்) நெருங்கப்பதித்த கிரீடத்தை அணிந்தவனுமான துரியோதனனிடத்தில் தூதுபோய்

அங்கு பாரதம் கையெறிந்தானுக்கு — அவ்விடத்தில் பாரத யுத்தத்தை உறுதிப்படுத்திக்கொண்டு வந்த இவனுக்கு

கன்றுகள் மேய்ப்பது ஓர் கோல் கொண்டு வா—.
கடல்நிற வண்ணற்கு ஓர் கோல் கொண்டுவா—.

* * *—முதலடியிற் குறித்த அடைமொழிகளிரண்டையும் எம்பெருமானுக்காக்கி "மித்ரபாவேந ஸம்ப்ராப்தம் ந த்யஜேயம கதஞ்சந" என்ற ஒரு அர்த்தத்தையே சொல்லுபவனும், "அபயம் ஸர்வபூதேப்யோ ததாம்யேதத் வ்ரதம் மம" என்ற ஒருசொல்லே சொல்லுபவனுமாகிய என்று உரைத்து, 'கையெறிந்தானுக்கு' என்பதனோடு கூட்டி உரைத்தலு மொக்கும். கையெறிதல்—கையடித்தல். இது, பிரமாணம் செய்யும் வகையிலொன்று; இங்கு உறுதிப்படுத்துதல் என்ற பொருளைத் தந்தது. இனி, துரியோதனன் பக்கல் சென்று—துர்யோதனனிடம் தூதுபோய், (அவன் ஒன்றுங்கொடுக்க இசையாததனால்), அங்கு—பாரதயுத்தத்தில், கை யெறிந்தானுக்கு—ஸேனையை வகுத்துக்கொண்டு யுத்தம் செய்தவனுக்கு என்றும் பொருள் கொள்ளலாம். .... .... .... .... (4)

176 சீரொன்று தூதாய்த் துரியோதனன் பக்கல் *
ஊரொன்று வேண்டிப் பெறாத வுரோடத்தால் *
பாரொன்றிப் பாரதங் கைசெய்து பார்த்தற்கு * [கோல்கொண்டுவா. (5)
தேரொன்றையூர்ந்தாற்கோர் கோல்கொண்டுவா தேவபிரானுக்கோர்

துரியோதனன் பக்கல் —துரியோதனனிடத்தில் (பாண்டவர்களுக்காக)

சீர் ஒன்று தூது ஆய் — சிறப்புப் பொருந்திய தூதனாகப் போய்

ஊர் ஒன்று வேண்டி — (பாண்டவர்களுக்கு) ஒரு ஊராவது கொடு என்று யாசித்துக் கேட்டும்

பெறாத உரோடத்தால் — அந்த ஒரு ஊரையும் பெறாமையி னுண்டான சீற்றத்தாலே

பார் ஒன்றி பாரதம் கைசெய்து — பூமியில் பொருந்தியிருந்து பாரத யுத்தத்தில் அணிவகுத்து

பார்த்தற்கு தேர் ஒன்றை ஊர்ந்தாற்கு — அர்ஜுநனுக்கு ஒப்பற்ற தேரை (ப்பாகனாயிருந்து) நடத்தினவனுக்கு

ஓர் கோல் கொண்டுவா—;
தேவபிரானுக்கு ஓர் கோல் கொண்டுவா—.

* * *—கண்ணபிரான் பாண்டவதூதனாகித் துரியோதனனிடஞ்சென்று 'அதர்மமாகப் பந்துக்களை வருத்திப் பலத்தாலே வாழவேணுமென்று நீ எண்ணியிருப்பது தகாது; இருவர்க்குமுள்ள பாகங்களைப் பிரித்துக்கொண்டு இருவரும் ஒத்து வாழுங்கள்' என்று முதலிற்சொல்ல, அதைத் துரியோதனன் ஸம்மதியாமையால் 'பத்தூர்களாவது கொடு, என்ன, அவன் அதற்கும ஸம்மதியாமல் 'ஒரு ஊராவது கொடு' என்று கண்ணன் கேட்க,

அவன் அதற்கும் இசையாமல் ' நான் ஊசிகுத்து நிலமும் கொடேன்; பாண்டவர்களுக்குத் தருமமுண்டு; அவற்றின் பலனாகிய ஸ்வர்க்காதிலோகங்களுமுண்டு; அவர்கள் அவற்றை அநுபவிக்கலாம்; ராஜ்யம் எங்களுடையதே ' என்று மறுத்துச்சொல்லவே, ஒரு ஊரையும் பெறாத கோபத்தினாலே யுத்தத்தைத் தொடங்குவித்து அர்ஜுநனுக்குத் தேர்ப்பாகனாயிருந்தவனுக்குக் கோல்கொண்டுவா. ஒன்றுதல்—பொருந்துதல். உரோடம்—ரோஷம். தேவர் + பிரான் = தேவபிரான்; " சிலவிகாரமா முயர்திணை." .... .... (5)

177 ஆலத்திலையான் அரவினணைமேலான் *
நீலக்கடலுள் நெடுங்காலங்கண்வளர்ந்தான் *
பாலப்பிராயத்தே பார்த்தற்கருள்செய்த *
கோலப்பிரானுக்கோர்கோல்கொண்டுவா குடந்தைக்கிடந்தாற்கோர்கோல் [கொண்டுவா. (6)

(ப்ரளய காலத்தில் உலகமெல்லா முண்டு)
ஆலத்து இலை யான் { ஆலிலையில் பள்ளிகொண்டிருப்பவனும்
அரவின் அணை மேலான் { (எப்போதும்) திருவனந்தாழ்வான மீது பள்ளிகொள்பவனும்
நீலம் கடலுள் —கருநிறமான ஸமுத்திரத்தில்
நெடுங்காலம் கண் வளர்ந்தான் { வெகுகாலமாக யோக நித்ரை செய்பவனும்
பாலம் பிராயத்தே —குழந்தைப் பருவமே தொடங்கி
பார்த்தற்கு அருள் செய்த { அர்ஜுனனுக்கு க்ருபை செய்த
கோலம் பிரானுக்கு { அழகிய வடிவத்தையுடைய தலைவனுமான இவனுக்கு
ஓர் கோல் கொண்டுவா;—
குடந்தை கிடந்தாற்கு ஓர் * * வா—.

* * *—ஆல் + இலையான் = (அத்துச்சாரியை பெற்று) ஆலத்திலையான். க்ஷீராப்தி எம்பெருமான் திருமேனியின் நிழலீட்டாலே கறுத்துத் தோன்றுமாதலால் ' நீலக்கடல் ' எனப்பட்டது: " நீலாம்போதிஜலாந்தர்கதஸ்ய ஹரோம்புஜாக்ஷஸ்ய ஹர்ஷ—காந்த்யா நீலத்வமாப்தம் " என்று போஜராஜன் சொல்லியுள்ளது காண்க. அன்றி, " உவர்க்குங்கருங்கடல் நீருள்ளான் " என்றபடி லவணஸமுத்ரத்தில் பள்ளிகொண்டிருப்பதாகக் கூறுவதுமுண்டாதலால் அதுவுங் கொள்ளத்தக்கதே. .... .... (6)

178 பொற்றிகழ் சித்திரகூடப்பொருப்பினில் *
உற்றவடிவில் ஒருகண்ணும்கொண்ட * அக் *
கற்றைக்குழலன் கடியன்விரைந்துன்னை *
மற்றைக்கண்கொள்ளாமேகோல்கொண்டுவா மணிவண்ணநம்பிக்கோர் [கோல்கொண்டுவா. (7)

(அக்காக்காய் !—)
பொன் திகழ் சித்திர கூடம் பொருப்பினில் { அழகியதாய் விளங்குகின்ற சித்ர கூட மலைச்சாரலில
(பிராட்டிமடியிலே தலைவைத்துக்கொண்டு ஸ்ரீராமனாகிய தான் கண்வளர்ந்தருளும்போது)
வடிவில் உற்ற ஒரு கண்ணும் கொண்ட { (பிராட்டியின்) திருமேனியில் பதிந்த (உனது இரண்டு கண்களில்) ஒரு கண்ணை மாத்திரம் பறித்துக் கொண்ட
அ கற்றை குழலன் { அந்தத் தொகுதியான கூந்தலையுடையவன்
கடியன் —க்ரூரன்;
(ஆதலால், அவன் தனக்கு இஷ்டமானதை உடனே செய்யாமலிருந்ததற்றாக)
உன்னை மற்றை கண் கொள்ளாமே { உன்னை (ச்சீறி) (உனது) மற்றொரு கண்ணையும் பறித்துக் கொள்ளாதபடி
விரைந்து —ஓடிப்போய்
கோல் கொண்டுவா—;
மணிவண்ணன் நம்பிக்கு ஓர் * * வா—

* * *—பொன் + திகழ் = பொன்றிகழ், இங்கு மென்றொடர் வன்றொடராயிற்று—செய்யுளின்பம் நோக்கி. காகாஸுரன் பிராட்டியின் வடிவை நோக்கியதனால் இராமபிரான்

நோக்கியகண்ணையே கொண்டனனென்பது 'உற்றவடிவில் கண்கோண்ட' என்பதில் விளங்கும். காக்கையே! இவன் முன்னமே ஸ்ரீராமனாயிருந்த காலத்தில் (உன்சாதியிலொருவன்) செய்யத்தகாததைச் செய்ததற்காகக் கண்ணொன்றைப் பறித்திருக்கிறான்; நீ இப்போது சொல்லியது செய்யாமலிருந்தாலோ உனது மற்றொரு கண்ணையும பறித்து விடுவான்; ஆகவே நீ விரைந்து இவனுக்குக் கோல் கொண்டு வரவேணுமென்றவாறு. காகாஸுரனது ஒற்றைக்கண்ணைப் பறித்தபோது காக்கைகளெல்லாவற்றிற்கும் ஒற்றைக் கண்ணாம்படி அப்பெருமான் ஸங்கல்பித்ததனால் காகாஸுரனுக்கும் ஸாதாரணகாக்கைக்கும் அபேதமாக இப்படிச் சொல்லுகிறாள். கோடியன்—பிழைக்கேற்ற தண்டனை செய்பவன். (7)

179 மின்னிடைச்சீதைபொருட்டா இலங்கையர் *
மன்னன்மணிமுடி பத்துமுடன்வீழ *
தன்னிகரொன்றில்லாச் சிலைகால்வளைத்திட்ட * [கொண்டுவா. (8)
மின்னுமுடியற்கோர்கோல்கொண்டுவா வேலையடைத்தாற்கோர்கோல்

மின் இடை சீதை பொருட்டா — மின்னல்போன்ற [ஸூக்ஷ்மமான] இடையையுடைய ஸீதையை மீட்டுக்கொணாவதற்காக
இலங்கையர் மன்னன் மணி முடி பத்தும் உடன் வீழ — லங்கையிலுள்ளார்க்குத் தலைவனான ராவணனுடைய ரத்நகிரீட மணிந்த தலைகள் பததும் ஒருசேர அறறு விழும்படி
தன் நிகர் ஒன்று இல்லா சிலை கால் வளைத்து இட்ட — தனக்கு ஸமாநமானதொன்றுமில்லாத [உயர்ந்த] வில்லை கால்வளையும்படி பண்ணி ப்ரயோகித்த
மின்னும் முடியறகு — விளங்கா நின்ற கிரீடத்தை அணிநதவனுக்கு
ஓர் கோல் கொண்டுவா—;
வேலை அடைத்தாற்கு — ஸமுத்திரத்தில் ஸேது கட்டினவனுக்கு
ஓர் கொல் கொண்டுவா—.

* * *—பிராட்டியை மீட்டுக்கொணர்வதற்காகக் கடலிலே அணைகட்டி இலங்கை சென்று இராவணனை யழித்தவனான இவனுக்குக் கோல்கொண்டுவா என்பதாம். (8)

180 தென்னிலங்கைமன்னன் சிரந்தோள்துணிசெய்து *
மின்னிலங்குபூண் விபீடணநம்பிக்கு *
என்னிலங்குநாமத்தளவும் அரசென்ற * [கொண்டுவா. (9)
மின்னிலங்காரற்கோர்கோல்கொண்டுவா வேங்கடவாணற்கோர்கோல்

தென் இலங்கை மன்னன் சிரம் தோள துணிசெய்து — அழகிய லங்கைக்கு அரசனாகிய ராவணனுடைய தலைகளையும் தோள்களையும் (அம்பினால்) துணித்துப் பொகட்டு.
மின் இலங்கு பூண் — ஒளிவீசுகின்ற ஆபரணங்களை அணிந்த
விபீடணன் நம்பிக்கு—விபீஷணாழ்வானுக்கு
என் இலங்கு நாமத்து அளவும் அரசு என்ற — 'என்பெயா ப்ரகாசிக்குமளவும் ராஜ்யம (நடக்கக் கடவது)' என்று அருளசெய்த
மின் இலஙகு ஆரற்கு — மினனல்போல் விளஙகுகின்ற ஹாரததையுடையவனுக்கு
ஓர் கோல கொணடுவா—;
வேங்கடம் வாணற்கு — திருமலையில் வாழ்ந்தருளுமவனுக்கு
ஓர் கோல் கொண்டுவா—.

* * *—துஷ்டர்களைத் தொலைத்தொழித்து சிஷ்டர்களை வழ்விக்குமவனான இவனுக்குக் கோல் கொண்டுவா என்பதாம். கொண்டுவாராவிட்டாலோ உன்னையும் தண்டித்துப் பின்பு பசுக்களையும் காக்கப்போவன் என்பதும இதில் தொனிக்கும். தேன் — அழகுக்கும்பேர் துணி—முதனிலைத் தொழிற்பெயர். "முன்னலங்காரற்கு" என்பது மொருபாடம; மின்--

னிலங்காநின்ற, அலங்காரத்தையுடையவனுக்கென்று பொருள்: 'மின்னிலங்காரற்கு' என்ற பாடமே செய்யுளின்பத்திற்குச் சிறக்குமென்க. வாணன்—வாழ்நன்; மரூஉ. .... (9)

181 அக்காக்காய்நம்பிக்குக் கோல்கொண்டுவாவென்று *
மிக்காளுரைத்தசொல் வில்லிபுத்தூர்ப்பட்டன் *
ஒக்கவுரைத்த தமிழ்பத்தும்வல்லவர் *
மக்களைப்பெற்று மகிழ்வரிவ்வையத்தே. (10)

| | | | |
|---|---|---|---|
| அக்காக்காய் | 'காக்கையே! | ஒக்க உரைத்த தமிழ் பத்தும் வல்லவர் | அவ் யசோதையைப் போலவே சொன்ன தமிழினலாகிய இப் பத்துப் பாசுரங்களையும் ஓதவல்லவர்கள் |
| நம்பிக்கு கோல் கொணடுவா என்று | உத்தமனான இவனுக்கு கோலைக் கொணடுவந்து தா' என்று | மக்களை பெற்று இவ்வையத்தே மகிழ்வர் | ஜ்ஞாநபுத்ரர்களை [சிஷ்யர்களை] அடைந்து இப்பூமியிலே மகிழ்ந்திருக்கப்பெறுவா, |
| மிக்காள உரைத்த சொல | சிறந்தவளான யசோதை சொன்ன சொறகளை | | |
| விலலிபுத்தூர் பட்டன் | ஸ்ரீவில்லிபுத்தூரிலவதரித்த பெரியாழ்வார | | |

* * *—இப்பத்துப் பாசுரங்களையும வல்லவர் பகவத் பாகவத பக்தரான நல்ல சிஷ்யர்களைப் பெற்று இந்த லோகத்திலேயே பரமாநந்தத்தைப் பெறுவர்களென்றவாறு. மிக்காள் =தேவகியும் யசோதையுமாகிய இருவரும் பூர்வ ஜந்மத்தில் தவஞ்செய்தவர்களாயிருந்தாலும், தேவகி கண்ணனைப் பெற்றுவிட்ட மாத்திரமேயாய், பூர்ணநுபவம் யசோதையதாகையாலே இவள் மிக்காளானாள். வையம் — (பொருள்கள்] வைக்கப்படு மிடமென்று காரணக்குறி. .... .... .... .... ... (10)

அடிவரவு—வேலி கொங்கு கறுத்து ஒன்றே சீர் ஆல் பொற்றிகழ் மின் தென்னிலங்கை அக்காக்காய் ஆநிரை.

ஆறாந்திருமொழி உரை முற்றிற்று.

---

## இரண்டாம்பத்து—ஏழாந்திருமொழி, ஆநிரைமேய்க்க.

அவதாரிகை:—கன்று மேய்க்கப் போகவேணுமென்று அழுத கண்ணனை யசோதை, 'அக்காக்காய்! நம்பிக்குக் கோல்கொண்டுவா' என்று சொல்லி ஏமாற்றி அவனழுகையை நிறுத்தியபின்பு, தான் நினைத்தபடி 'நான் பல புஷ்பங்களையும் வைத்திருக்கிறேன்; அவை செவ்வியழிவதற்கு முன்னே நீ அவற்றைச் சூடவரவேணும்' என்று அக்கண்ணபிரானை அழைத்தபடியை, ஆழ்வார் தாமும் அநுபவிக்க ஆசைப்பட்டுத் தம்மை அவளாகப் பா
அவள் சொல்லியபடியே சொல்லியழைத்து இனியராகிறார் இத்திருமொழியில்.

182 ஆநிரைமேய்க்கநீபோதி அருமருந்தாவதறியாய் *
கானகமெல்லாந்திரிந்து உன்கரியதிருமேனிவாட *
பானையிற்பாலைப்பருகிப் பற்றாதாரெல்லாஞ்சிரிப்ப *
தேனிலினியபிரானே செண்பகப்பூச்சூட்டவாராய். (1)

| | | | |
|---|---|---|---|
| தேனில இனிய பிரானே | தேனைக்காட்டிலும் போக்யனாயிருக்கிற ப்ரபுவே! | பற்றாதார் எல்லாம் சிரிப்ப | பகைவரெல்லாரும பரிஹஸிக்கும் படி |

பானையில் பாலை பருகி — (கறந்த) பானையிலேயுள்ள பச்சைப் பாலைக் குடித்து (பினபு)
உன் கரிய திருமேனி வாட — உன்னுடைய ச்யாமமான அழகிய திருமேனி வாடும்படி
கானகம் எல்லாம் திரிந்து — காட்டிடம் முழுதும் திரிந்து கொண்டு
ஆ நிரை மேய்க்க நீ போதி — பசுக்களின் திரளை மேய்ப்பதற்கு நீ போகிறாய்;
அரு மருந்து ஆவது அறியாய் — (நீ உன்னை) பெறுதற்கரிய தேவாமிருதம்போன்றவனாகதலை அறிகிறாயில்லை;
(இனி நீ கன்றுமேயப்பதை விட்டிட்டு)
செண்பகம் பூ சூட்ட வாராய் — செணபகப்பூவை (நான்) சூட்டும்படி வருவாயாக

* * *—"இந்த கிருஷ்ணன் எங்கள் வீட்டில் கைப்பானையிலிருந்த பாலைக் குடித்துப் போனான்" என்று உகவாதார் சொல்லும்படி கறந்தபானையிலிருந்த பச்சைப்பாலைப் பருகுமவனை பித்தனாயிருந்தாலும் தேனைவிட இனியவனாயிருப்பவனே! உன்னுடைய திருமேனியின் அருமையைத் தெரிந்துகொள்ளாமல் காட்டிலே போய்த் திரிவதுதவிர்ந்து செண்பகப் பூவை நான் சூட்டும்படி வரவேணு மென்றவாறு. அருமருந்தாவதறியாய்—இவ்வுலகத்திலுள்ளார்க்குப் பிறவி நோயறுக்கும மருந்துமாய், பரமபதத்திலுள்ளார்க்குப் போக மகிழ்ச்சிக்கு மருந்துமாய் நீயிருப்பதை அறிகிறிலைகாண். பற்றுதார் சிரிப்ப—பற்று மவர்கள் [அன்பர்கள்] இவன் செயலுக்கு உகப்பர்போலும. தேனில்—ஐந்தாம வேற்றுமை சேண்பகம்—வடமொழியில் அம்வகம் எனவழங்கும் ... ... ... (1)

183 கருவுடைமேகங்கள்கண்டால் உன்னைக்கண்டாலொக்குங்கண்கள் *
உருவுடையாயுலகேழும் உண்டாகவந்துபிறந்தாய் *
திருவுடையாள்மணவாளா திருவரங்கத்தேகிடந்தாய் *
மருவிமணங்கமழ்கின்ற மல்லிகைப்பூச்சூட்டவாராய். (2)

கண்கள் உன்னை கண்டால் — கணகளானவை உன்னைப் பார்ததால்
கரு உடை மேகங்கள கண்டால ஒக்கும் உரு உடையாய் — கர்ப்பத்தையுடைய [நீர் கொண்ட] மேகஙகளை பாரத்தால் (அதை) ஒத்துக் குளிாகினற வடிவையுடையவனே!
உலகு ஏழும் உண்டாக வந்து பிறந்தாய் — ஏழுலகங்களும் ஸத்தை பெறும்படி திருவவதரித்தவனே!
திரு உடையாள் மணவாளா — (உன்னை) ஸம்பததாக வுடைய பிராட்டிக்கு நாயகனே!
திரு அரங்கத்தே கிடந்தாய் — கோயிலிலே பள்ளிகொண்டிருப்பவனே!
மணம் மருவி கமழ்கின்ற மல்லிகைப்பூ — வாசனை நீங்காமலிருந்து பரிமளிக்கிற மல்லிகைப்பூவை
சூட்டவாராய்—.

* * *—நீர் கொண்டெழுந்த காளமேகம் போன்ற வடிவையுடையவனே!, உலகங்களுக்கு ஸத்தையுண்டாகும்படி இங்நிலத்தில் வந்து பிறந்தவனே!; திருவாகிய ஸ்ரீமஹாலக்ஷ்மிக்கும் திருவாயிருப்பவனே! இந்த மல்லிகைப்பூவின் பரிமளம குன்றுவதற்கு முன்னே இதைச் சூடவா என்பதாம். 'ஒக்கும்' என்பதை முற்றுகக்கொண்டு 'கருவுடை மேகங்களைக் கண்டால் உன்னைக்காண்பதை ஒத்திருக்கும: (அதுக்குமேலே) கண்கள் உருவுடையாய்—கண்ணழகையுமுடையவனே!, என்றும உரைக்கலாம். .... .... (2)

184 மச்சோடுமாளிகையேறி மாதர்கள்தம்மிடம்புக்கு *
கச்சோடுபட்டைக்கிழித்துக் காம்புதுகிலவைகீறி *
நிச்சலுந்தீமைகள் செய்வாய் நீள்திருவேங்கடத்தேந்தாய் *
பச்சைத்தமனகத்தோடு பாதிரிப்பூச்சூட்டவாராய். (3)

மச்சொடு மாளிகை ஏறி மாதர்கள தம் இடம்புக்கு — நடுநிலையிலும் மேல நிலையிலும் ஏறிப போய பெணகளிருக்கிற இடத்திலே புகுநது
கச்சொடு பட்டை கிழிதது — (அவர்களுடைய முலைகளினமேலிருநத) கச்சுக்களையும பட்டாடைகளையும் கிழிததிட்டு

| | | | |
|---|---|---|---|
| காம்பு துகில் அவை கீறி | (மற்றும் அப் பெண்கள் உடுத்திருந்த) கரைகட்டின சேலையையும் கிழித்துப்போட்டு (இப்படியே) | நீள் திருவேங்கடத்து எந்தாய் | உயர்ந்த திருமலையிலெழுந்தருளியிருக்கிற ஸ்வாமியே! |
| நிச்சலும் தீமைகள் செய்வாய் | ப்ரதிநித்யம் துஷ்ட சேஷ்டைகளை செய்பவனே! | பச்சை தமனகத்தோடு பாதிரிப்பூ | பசுநிறமுள்ள மருக்கொழுந்தையும் பாதிரிப்பூவையும் சூட்டவாராய்— |

* * *—மேல் மாடங்களில் ஏகாந்தமாக வாழ்கின்ற பெண்களிடத்திலும் சென்று அவர்களுடைய கச்சுகளையும் பட்டாடைகளையும் கரைகட்டின சேலைகளையும் கிழித்துத் தீம்பு செய்வதை விட்டிட்டுப் பூச்சூட வரவேணு மென்பதாம். கச்சு—'கஞ்சுகம்' என்ற வடசொற்சிதைவு. துகிலவை=அவை–முதல் வேற்றுமைச் சொல்லுருபு. நிச்சல்—'நித்யம்' என்ற வடசொல் விகாரம். தமநகம் – வடசொல். .... .... .... (3)

185 தெருவின்கணின்றிளவாய்ச்சிமார்களைத் தீமைசெய்யாதே *
மருவுந்தமனகமுஞ் சீர்மாலைமணங்கமழ்கின்ற *
புருவங்கருங்குழல்நெற்றி பொலிந்தமுகிற்கன்றுபோலே *
உருவமழகியநம்பி உகந்திவைசூட்டநீவாராய். (4)

| | | | |
|---|---|---|---|
| புருவம் கரு குழல் நெற்றி பொலிந்த | புருவங்களையும் கருநிறமான கூந்தலையும் (இவ்விரண்டிற்கும் இடையிலுள்ள) நெற்றியையும் கொண்டு விளங்குகின்ற | இள ஆய்ச்சிமார்களை | இடைச்சிறுமிகளை |
| முகில் கன்றுபோலே உருவம் அழகிய நம்பி | மேகக் கன்றுபோலே வடிவழகிய சிறந்தோனே! (நீ) | தீமை செய்யாதே | —தீம்புசெய்யாமலிரு; |
| தெருவின்கண்நின்று—தெருவிலே நின்றுகொண்டு | | மருவும் தமனகமும் சீர் மாலை மணம் கமழ்கின்ற | மருவையும் தமநகத்தையும் (சேர்த்துக்கட்டின) அழகிய மாலைகள் வாஸனை வீசுகின்றன; |
| | | இவை உகந்து | —இவற்றை விரும்பி சூட்ட நீ வாராய்— |

* * *—நீ தெருவிலே நின்று அவ்விடத்தில் விளையாடுகின்ற சிறிய இடைப்பெண்களைத் தீம்பு செய்து திரியாமல், மருவையும் தமனகத்தையுஞ் சேர்த்துக் கட்டின மணம் வீசுகின்ற மாலையை அந்த மணம் பழுதுபடாதபடி சூடிக்கொள்ள வா என்கிறாள். எம்பெருமானுக்கு ஏற்ற உவமைப்பொருள் கிடையாமையால் 'புருவங் கருங்குழல் நெற்றி பொலிந்தமுகில்கன்று' என இல்பொருளுவமை கூறப்பட்டது. கமழ்கின்ற—'அன்' சாரியை பெறாத முற்று. (4)

186 புள்ளினைவாய்பிளந்திட்டாய் பொருகரியின்கொம்பொசித்தாய் *
கள்ளவரக்கியைமூக்கொடு காவலனைத்தலைகொண்டாய் *
அள்ளிநீவெண்ணெய்விழுங்க அஞ்சாதடியேனடித்தேன் *
தெள்ளியநீரிலெழுந்த செங்கழுநீர்சூட்டவாராய். (5)

| | | | |
|---|---|---|---|
| புள்ளினை வாய் பிளந்திட்டாய் | பகாஸுரனை வாய்கிழித்துப் பொகட்டவனே!, | வெண்ணெய் அள்ளி விழுங்க | வெண்ணெயை வாரி விழுங்க |
| பொரு கரியின் கொம்பு ஒசித்தாய் | யுத்தோந்முகமான குவலயாபீடத்தின் கொம்பை பறித்தவனே! | அஞ்சாது அடியேன் அடித்தேன் | சிறிதும் பயப்படாமல் '(எப்போது குழந்தை பிறந்து வெண்ணெய் விழுங்கப்போகிறது ?' என்றிருந்த) நான் அடித்தேன்; (அப்பிழையைப்பொறுத்து) |
| கள்ளம் அரக்கியை மூக்கொடு காவலனை தலை கொண்டாய் | வஞ்சனையையுடைய ராக்ஷஸியாகிய சூர்ப்பணகையின் மூக்கையும் (அவளுக்குப்) பாதுகாவலாயிருந்த ராவணனுடைய தலையையும் அறுத்தவனே! | தெள்ளிய நீரில் எழுந்த செங்கழுநீர் | தெளிவான நீரிலே உண்டான செங்கழுநீரை சூட்டவாராய்— |
| நீ | —(இப்படிப்பட்ட) நீ | | |

* * *—கொக்கின் வாயைக் கீண்டொழித்தவனே! நீ எது செய்தாலும் உன்னுடைய வல்லமையைக் கண்டு நான் வெறுமனேயிருக்க வேண்டியதாயிருந்தும், நீ வெண்ணெயை வாரி உட்கொண்டதைக்கண்டு ' இவன் இப்படியே வேறு வீடுகளிற் போய்ச் செய்தால் பழிவருமே ' என்று நினைத்து அஞ்சாமல் அடித்துவிட்டேன்; அவஸரப்பட்டு நான் செய்த விதைப் பொறுத்துச் செங்கழுநீர்ப்பூச் சூடவா என்கிறாள். புஷ்பம் மேலே பட்டாலும் வாடும்படியான உன்னுடைய ஸௌகுமார்யத்தைக் கண்டு அஞ்ச வேண்டியதாயிருக்க, அப்படி அஞ்சாமல் அடித்ததைப் பொறுத்துப் பூச்சூட வரவேணு மென்பதாகவுங் கொள்ள லாம். அடியேன் = ஸ்ரீ க்ருஷ்ணனுடைய வீரத்தி லீடுபட்டுச் சொல்லுகிறசொல்: மரபுவழு வமைதி; அடித்தபின்பு அநுதாபங்கொண்டு ' அடியேன் ' என்றுளெனினுமாம். (5)

187 எருதுகளோடுபொருதி ஏதுமுலோபாய்காண்நம்பி *
கருதியதீமைகள்செய்து கஞ்சனைக்கால்கொடுபாய்ந்தாய் *
தெருவின்கண்தீமைகள்செய்து சிக்கெனமல்லர்களோடு *
பொருதுவருகின்றபொன்னே புன்னைப்பூச்சூட்டவாராய். (6)

நம்பி —சிறந்தோனே!
(நப்பின்னையை மணம் புணாவதற்காக)
எருதுகளோடு பொருதி } எழுரிஷபங்களுடன் போர் செய்யா நின்றாய்;
ஏதும் உலோபாய் காண் { எதினும் [ஒன்றிலும்] விருப்பமில்லா தவனாயிராநின்றாய்;
கருதிய தீமைகள் செய்து } (கம்ஸன் உன்மேல செய்ய நினைத்த தீம்புகளை (நீ அவன்மேற்)செய்து
கஞ்சனை கால்கொடு பாய்ந்தாய் { (அந்தக்) கம்ஸனை காலினால் [காலைக் கொண்டு] பாய்நதவனே!

(அக்ரூரர் மூலமாயழைக்கப்பட்டுக் கம்ஸ னரண்மனைக்குப் போமபோது)
தெருவின் கண் தீமைகள் செய்து } தெருவிலே தீமைகளைச் செய்து கொண்டுபோய
சிக்கென மல்லர்களோடு பொருது வருகின்றபொன்னே { வலிமையாக [சாணூரமுஷ்டிக ரென்னும்) மல்லர்களுடனே போர் செய்துவந்த பொனபோலருமை யானவனே!
புன்னைப்பூ சூட்டவாராய்—.

* * *—பொருதி = முன்னிலையொருமை நிகழ்கால வினைமுற்று: "(எருதுகளோடே பொருதது) காலாந்தரமா யிருக்கச்செய்தேயும் தற்காலம்போலே ப்ரகாசிக்கையாலே ' பொருதி ' என்று வர்த்தமாநமாகச் சொல்லுகிறது " என்ற பெரியஜீயர் உரை நோக்கத் தக்கது. உலோபாய் = ' லோபः ' என்ற வடமொழியின் திரிபாகிய ' உலோபம ' என்பத னடியாகவந்த எதிர்மறைமுற்று; உடம்பைப்பேணுதல் ஒன்றும் செய்யாதிராநின்றாய் என்று கருத்து. போய்வழியில் வண்ணானைக்கொன்று வஸ்த்ரங்களைப் பறித்துக்கொண்டமை, கமஸ னுடையவில்லை முறித்தமை, குவலயாபீடத்தைக்கொன்றமை முதலியன-இங்கு, தெருவின்கண் செய்த தீமைகளாகும். கண் - ஏழனுருபு. .... .... ... (6)

188 குடங்களெடுத்தேறவிட்டுக் கூத்தாடவல்லவெங்கோவே *
மடங்கொள்மதிமுகத்தாரை மால்செய்யவல்லவென்மைந்தா *
இடந்திட்டிரணியனெஞ்சை யிருபிளவாகமுன்கீண்டாய் *
குடந்தைக்கிடந்தவென்கோவே குருக்கத்திப்பூச்சூட்டவாராய். (7)

குடங்கள் எடுத்து ஏறவிட்டு கூத்து ஆட வல்ல எம் கோவே { பல குடங்களை தூக்கி உயரவெறிந்து (இப்படி) குடக்கூத்தை யாடுவ தறகு ஸாமாத்தியமுடைய எம் முடைய தலைவனே
மடம் கொள் மதி முகத்தாரை மால் செய்ய வல்ல என மைநதா { மடப்பமென்ற குணத்தை யுடைய சந்தரன்போனற முகத்தை யுடைய பெணகளை மயக்கவல்ல எனது புத்திரனே!

முன் இரணியன் நெஞ்சை இடந்திட்டு — நரஸிம்ஹாவதாரத்திலே ஹிரண்யாஸுரனுடைய மார்பை (திருவுகிர்களை) ஊன்ற வைத்து
இரு பிளவு ஆக்கினாய் — இரண்டு பிளவாகப் போம்படி பிளந்தவனே!

குடந்தை கிடந்த எம் கோவே — திருக்குடந்தையில் பள்ளிகொள்ளுகிற எமது தலைவனே!

குருக்கத்திப்பூ சூட்டவாராய்—,

* * *—நரஸிம்ஹாவதாரம் முதலிய மற்றுமுள்ள விபவாவதாரங்கள் செய்தவனும், திருக்குடந்தை முதலிய திவ்ய தேசங்களில் வாழ்பவனும் இக்கண்ணபிரானே யென்பது இதில் விளங்கும். குடக்கூத்து—ப்ராஹ்மணர்க்குச் செல்வம் விஞ்சினால் யாகஞ் செய்வது போல, இடையர்க்குச் செல்வம் விஞ்சினால் அதனாலுண்டாகும் செருக்குக்குப் போக்கு வீடாக அவர்களாடுவதொரு கூத்து; இதனைத் தலையிலே அடுக்குக் குடமிருக்க இருதோள்களிலும் இருகுடங்களிருக்க இருகையிலும் குடங்களையேந்தி ஆகாசத்திலே யெறிந்து ஆடுவதொரு கூத்து, என்பர்; இதனைப்பதினோராடலிலொன்றென்றும், அறுவகைக் கூத்திலொன்றென்றுங்கூறி, "குடத்தாடல் குன்றெடுத்தோனாடலதனுக், கடைக்குப வைந்துறுப்பாய்ந்து" என்று மேற்கோளுங் காட்டினர் சிலப்பதிகாரவுரையில் அடியார்க்கு நல்லார் .... (7)

189 சீமாலிகனவனோடு தோழமைக்கொள்ளவும்வல்லாய் *
சாமாறவனைநீயெண்ணிச் சக்கரத்தால்தலைகொண்டாய் *
ஆமாறறியும்பிரானே அணியரங்கத்தேகிடந்தாய் *
ஏமாற்றமென்னைத்தவிர்த்தாய் இருவாட்சிப்பூச்சூட்டவாராய். (8)

சீமாலிகன் அவனோடு தோழமை கொள்ளவும் வல்லாய் — மாலிகன் என்ற பெயரை யுடையவனோடு ஸ்நேஹம் செய்து கொள்ளுதற்கும் வல்லவனாய்,
அவனை நீ சாம் ஆறு எண்ணி — அந்த மாலிகனை நீ செத்துப்போம் வழியையும் ஆலோசித்து
சக்கரத்தால் தலை கொண்டாய் — சக்ராயுதத்தினால் தலையையுமறுத்தாய்;

ஆம் ஆறு அறியும் பிரானே — நடத்த வேண்டியவைகளை அறிய வல்ல ப்ரபுவே!
அணி அரங்கத்தே கிடந்தாய் — அழகிய கோயிலிலே பள்ளிகொண்டிருப்பவனே!
என்னை ஏமாற்றம் தவிர்த்தாய் — எனக்கு துன்பத்தைப் போக்கினவனே!

இருவாட்சிப்பூ சூட்டவாராய்—;

* * *—மாலிகன் என்பானொருவன் கண்ணபிரானுக்கு உயிர்த்தோழனாய் அப்பிரானிடத்தில் பலவகையாயுதங்களையும் பயின்று ஒருவர்க்குமஞ்சாமல் அஹங்காரியாய் ஸாது ஜநங்களை ஹிம்ஸித்துக்கொண்டிருக்க, கண்ணபிரான் 'நண்பனாகிய இவனை நாம் கொல்வது தகாதே! என்னசெய்யலாம்?' என்று வ்யாகுலப்பட்டு, ஒருநாள் அவனை நோக்கி 'நீ இப்படி செய்வது தகாது' என்ன; ஆஸுரப்ரக்ருதியான அந்த மாலிகன் தன்வாயில்வந்தபடி பிதற்றி 'நீ எல்லா ஆயுதங்களையும் எனக்குக் கற்பித்தும் சக்ராயுதப்பயிற்சி மாத்திரம் செய்விக்கவில்லையே' என்று கண்ணன்மேற் குறைகூற, 'இதில் பழகுவது உனக்கு முடியாது எனக்கே அஸாதாரணமானது' என்ன; 'என்னால் முடியாததுமொன்றுண்டோ? நீ அவச்யம் அதைக் கற்பிக்கவேணும்' என்று அவன் நிர்ப்பந்திக்க, கண்ணன் 'இதுதான் தக்கஸமயம்' என்று திருவுள்ளத்திற்கொண்டு சக்ராயுதத்தை யெடுத்துத் தன் ஒற்றைவிரலால் சுழற்றி மேலெறிந்து கையிலேற்க, 'இது எனக்கு அரிதோ' என்று மாலிகன் சொல்ல, 'இது உனக்கு அரிதே' என்று கண்ணன் சொல்லவும் அதை அவன் கேளாமல் அச்சக்ராயுதத்தை வாங்கிச் சுழற்றி யெறிந்து பிடிப்பதாக நினைத்துத் தன் கைவிரலைக் கழுத்துக்கு அடுத்துவைத்து நிற்க, அச்

சக்கரம் சுழன்றுவருவதற்கு இடம் போதாமையாலே அதன் வீச்சு இவன் கையில் பிடிபடாமல் இவன் தலையை அரிந்துவிட்டதென்பது, இப்பாட்டில் குறித்த கதை. இவ்வரலாறு எந்தப் புராணத்திலுள்ளதென்று ஆராய்ந்துபார்த்தும் பலபெரியோர்களைக் கேட்டும் ஆகரம் அறியப் பெற்றிலேன்; வந்தவிடத்திற்கண்டுகொள்க. "தத்ஸர்வம் தர்மவீர்யேண யதாவத் ஸம்ப்ரபஸ்யதி=தத்ஸர்வம் தர்மவீர்யேண யதாவத் ஸம்ப்ரபச்யதி" என்று-சதுர்முகன்வரத்தினால் வால்மீகி முனிவர் பகவதவதார வ்ருத்தாந்தங்களைத் தாமாக ஸாக்ஷாத்கரித்ததுபோலே ஆழ்வாரும் மயர்வற மதிநல மருளப்பெற்றுத் தாமாக ஸாக்ஷாத்கரித்தவற்றில் இவ்வரலாறு ஒன்று என்பர் பெரியோர்; இப்பிரபந்தத்தின் ஈற்றுத் திருமொழியின் ஆறும்பாசுரத்தின் வியாக்கியானத்திலே பெரியவாச்சான்பிள்ளைதாமும இதை ஸ்பஷ்டமாக அருளிச்செய்தனர்.

'மாலிகன்' என்பதே அவன் பெயர்: மேன்மைப் பொருளைத்தரும் 'ஸ்ரீ' என்றசொல் 'ஶ்ரீ' எனத்திரிந்துவந்து சீமாலிகன் எனக் கிடக்கிறது. க்ருஷ்ண ஸ்நேஹத்தால்வந்த மேன்மையுண்டே அவனுக்கு. அவனைக்கொல்வது ஆவச்யகமானபோது 'தோழனைக் கொன்றான்' என்னும் பழி தனக்கு வாராமல் 'தன்னாலே தான் முடிந்தான்' என்று உலகத்தார் சொல்லும்படி கண்ணபிரான் மாலிகனை உபாயமாகக் கொன்றனனென்பார் 'சாமாறவனை நீ யெண்ணிச் சக்கரத்தால் தலைகொண்டாய்' என்றார். "தோழமைக்கொள்ளவும்" என்ற உம்மை எதிரது தழுவியதாய், தலைகொள்ளவும் என்பதைக் காட்டும். ... .... (8)

190 அண்டத்தமரர்கள்சூழ அத்தாணியுள்ளங்கிருந்தாய் *
தொண்டர்கள்நெஞ்சிலுறைவாய் தூமலராள்மணவாளா *
உண்டிட்டுலகினையேழும் ஓராலிலையிற்றுயில்கொண்டாய் *
கண்டுநானுன்னையுகக்கக் கருமுகைப்பூச்சூட்டவாராய். (9)

| | | | |
|---|---|---|---|
| அத்தாணியுள் அமரர்கள் | அருகான இடத்திலே (ஸேவிக்கும்படி) தேவர்கள் சூழ்ந்திருக்க | | (பிரளயகாலத்தில்) |
| அங்கு அண்டத்து இருந்தாய் | அவர்கள் நடுவில் பரமபதத்தில் வீற்றிருப்பவனே ! | ஏழும் உண்டிட்டு ஓர் ஆல் இலையில் துயில் கொண்டாய் | ஏழு உலகங்களையும் உண்டுவிட்டு ஓராலிலையில் யோகநித்திரையாகக் கொண்டவனே ! |
| தொண்டர்கள் நெஞ்சில் உறைவாய் | அடியார்களுடைய ஹ்ருதயத்தில் வஸிப்பவனே ! | நான் உனை கண்டு உகக்க | நான் (நீ பூச்சூடியதைப்) பார்த்து மகிழும்படி |
| தூ மலராள் மணவாளா | பரிசுத்தமான தாமரை மலரைப் பிறப்பிடமாக வுடைய பிராட்டிக்கு கொழுநனே ! | கருமுகைப்பூ | —இருவாட்சிப்பூவை சூட்ட வாராய்—. |

* * *—பரமபதத்திலே ஏழுலகும் தனிக்கோல் செல்ல வீற்றிருப்பவனே! அவ்விருப்பைக் காட்டிலும் மிகவிரும்பி அன்பர்களின் நெஞ்சிலே யெழுந்தருளியிருப்பவனே! லக்ஷ்மீநாதனே! உலகங்களைப் பிரளயங் கொள்ளாதபடி வயிற்றிலே கொண்டு காப்பவனே! மாலையும் மயிர்முடியுமாக உன்னை நான் கண்டுகளிக்குமாறு கருமுகைப்பூச் சூடவரவேணுமென்கிறாள். ... .... .... ... ... (9)

191 செண்பகமல்லிகையோடு செங்கழுநீரிருவாட்சி *
எண்பகர்பூவுங்கொணர்ந்தேன் இன்றிவைசூட்டவாவென்று *
மண்பகர்கொண்டானை ஆய்ச்சிமகிழ்ந்துரைசெய்தவிம்மாலை *
பண்பகர்வில்லிபுத்தூர்க்கோன் பட்டர்பிரான்சொன்னபத்தே. (10)

செண்பகம் —'செண்பகப்பூவும்
மல்லிகையோடு —மல்லிகைப்பூவும்
செங்கழுநீர் —செங்கழுநீரப்பூவும்
இருவாட்சி —இருவாட்சிப்பூவும்
(ஆகிய)
எண் பகர் } இன்னதின்னதென்று எண்ணிச் சொல்லப்படுகிற
பூவும் —மலர்களையெல்லாம
கொணர்ந்தேன் —கொண்டுவந்தேன்;
இன்று —இப்போது
இவை சூட்ட —இப்பூ மபடி
வா —வருவாயாக
என்று —என
பகர் மண் கொண்டானை } பகர்ந்த மண்ணைக்கொண்டவனை
ஆய்ச்சி —யசோதை
மகிழ்ந்து —மகிழ்ச்சிகொண்டு
உரை செய்த —சொல்லியவற்றை
பண் பகர் வில்லிபுத்தூர் } ராகமாகவே சொல்லுகின்ற வில்லிபுத்தூருக்கு
கோன் —நிர்வாஹகரான
பட்டர்பிரான் —பெரியாழ்வார்
சொன்ன —அருளிச்செய்த
இ மாலை —இந்தச்சொல்மாலையும்
பத்தே

* * *—இந்தத் திருமொழிக்குப் பலஞ்சொல்லாதொழிந்தது, இப்பத்துப் பாசுரங்களும் ஸ்வயமே ரஸ்யமாய் போக்யமாயிருக்கு மென்பதற்கு. பத்தே—ஏகாரம்—இப்படியும் பாடவிருக்கப் பெறுவதே! என்று இத்திருமொழியின் போக்யதையைக் கொண்டாடியதைக் காட்டும். எண்பகர்—கூட்டிக்கொள்ளலாமென்று சாஸ்த்ரங்களிலெண்ணப்பட்ட என்றுமாம. கொணர்ந்தேன் ='கொணு' என்ற பகுதி குறுக்கலும் விரித்தலுமாகிற விகாரங்களைப் பெற்று 'கொணர்' என நின்றது. பகர்மண்—வாமநனுய்ச்சென்ற திருமால் 'எனக்கு மூவடி மண் தா' என்று சொல்லப்பெற்ற பூமியை என்றுவது, 'மூவடிமண் அளந்துகொள்' என்று மஹாபலி உடன்பட்டுச் சொன்ன பூமியை என்றுவதுகொள்க. ஆரேனும் ஒன்றைச் சொல்லினும் ராகத்திலே சேருமபடி சொல்லுகின்ற ஸ்ரீ வில்லிபுத்தூரென்பது 'பண்பகர் வில்லிபுத்தூர்' என்பதன் கருத்து. உரைசெய்த—பலவின்பால் இறந்தகால வினையாலணையும் பெயர்; இரண்டாம் வேற்றுமைத் தொகை. உரை செய்தவற்றைப் பட்டர்பிரான்சொன்ன இம்மாலையென்க. ... .... ... ... .... (10)

அடிவரவு:—ஆநிரை கரு மச்சு தெரு புள் எருது குடம் சீமாலிகன் அண்டம் செண்பகம் இந்திரன்.

ஏழாந்திருமொழி உரை முற்றிற்று.

## ரண்டாம்பத்து—எட்டாந்திருமொழி, பிரமன்.

அவதாரிகை:—யசோதைப்பிராட்டி கண்ணபிரானை நீராட்டிக் குழல்வாரிப் பூச்சூட்டினபின்பு, அவனுக்கு த்ருஷ்டிதோஷம் வாராதபடி காப்பிடவேணுமென்று கருதி, 'நீ போதுபோன வேளையில் நாற்சந்தி முதலிய விடங்களில் நில்லாதே' என்று அப்பிரானை அழைத்துக் காப்பிட்டபடியை ஆழ்வார்தாமு மநுபவிக்க விரும்பித் தம்மை அவளாகப் பாவித்து, திருவெள்ளறையில கண்ணன் அர்ச்சையாய் நிற்கிற நிலையிலே அவ்யசோதைப் பிராட்டியின் பேச்சாலே அவனைக் காப்பிடவழைத்து இனியராகிருர் இத்திருமொழியில்.

192 இந்திரனோடுபிரமன் ஈசனிமையவரெல்லாம் *
மந்திரமாமலர்கொண்டு மறைந்துவராய்வந்துநின்றுர் *
சந்திரன்மாளிகைசேரும் சதுரர்கள்வெள்ளறைநின்றுய் *
அந்தியம்போதிதுவாகும் அழகனேகாப்பிடவாராய். (1)

சந்திரன் மாளிகை சேரும் சதுரர்கள் வெள்ளறை நின்றாய் — சந்த்ரனானவன் வீடுகளின் மேல்நிலையிலே சேரப்பெற்ற ஸமர்த்தர்கள் வஸிக்கின்ற திருவெள்ளறையிலே நின்றவனே!
அழகனே —அழகு உடையவனே!
இந்திரனோடு பிரமன் ஈசன் இமையவர் எல்லாம — இந்திரனும் ப்ரஹ்மாவும் ருத்ரனும் மற்றுமுள்ள தேவர்களும் (ஆகிய) யாவரும்
மா மந்திரம் மலர் கொண்டு — சிறந்த மந்த்ர புஷ்பங்களைக் கொண்டு
உவர் ஆய் வந்து மறைந்து நின்றார் — (மிக்க ஸமீபமாகவும் மிக்க தூரமாகவுமல்லாமல்) நடுவிடத்திலிருப்பவராகவந்து மறைந்து நிற்கிறார்கள்;
இது அம் அந்தி போது ஆகும் — (இக்காலம் அழகிய ஸாயம் ஸந்த்யா காலமாகும்;
(ஆகையால்)
காப்ப இட வாராய் — (நான் உனக்கு ரக்ஷையாக) திருவந்திக்காப்பிடும்படி வருவாயாக.

* * *—சந்திர மண்டலத்தளவும் ஓங்கியிருக்கின்ற மாளிகைகள் நிறையப்பெற்றதும் மங்களாசாஸநம் செய்ய வல்லவர் மலிந்திருக்கப் பெற்றதுமான திருவெள்ளறையில் எழுந்தருளியிருப்பவனே!, எல்லாத் தேவரும் உன்னை ஸேவிக்கும்படி மந்தரபுஷ்பங் கொண்டு வந்து மறைந்துநிற்கிறார்கள்; பொழுதும் ஸந்தியாகாலமாயிற்று. உனது அழகுக்கு ஒரு குறை வாராதபடி நான் திருவந்திக்காப்பிட வரவேணுமென்பதாம். பகவத் ஸ்தோத்ரமாகிய வேதமந்திரங்களைச் சொல்லிக்கொண்டு பகவானுக்கு ஸமர்ப்பிப்பதற்காகக் கையிலேந்தியுள்ள மலர் மந்திரமலர் எனப்பட்டது. காப்பு—ரக்ஷை. ... .... (1)

**193** கன்றுகளில்லம்புகுந்து கதறுகின்றபசுவெல்லாம் *
நின்றொழிந்தேனுன்னைக்கூவி நேசமேலொன்றுமிலாதாய் *
மன்றில்நில்லேலந்திப்போது மதிட்டிருவெள்ளறைநின்றாய் *
நன்றுகண்டாயென்றன்சொல்லு நானுன்னைக்காப்பிடவாராய். (2)

மதிள் திருவெள்ளறை நின்றாய் — மதிளரணையுடைய திருவெள்ளறையிலே நின்றருளினவனே!
ஒன்றும் நேசம் இலாதாய் — (என்மேல்) அல்பமும் அன்பில்லாதவனே!
உன்னை கூவி நின்றொழிந்தேன் — உன்னைக் கூவிக்கொண்டு நின்றுவிட்டேன்;
(அதனால்)
பசு எல்லாம் கன்றுகள் இல்லம் புகுந்து கதறுகின்ற — பசுக்களெல்லாம் கன்றுகளிருக்குமிடத்திலே சேர்ந்து கதறுகின்றன;
(நீ)
அந்தி போது மன்றில் நில்லேல் — அந்திவேளையில் நாற்சந்தியில் நில்லாதே;
என் தன் சொல்லு நன்று கண்டாய் — என்னுடைய வார்த்தை (உனக்கு) நன்மை தருங்கிடாய்
நான் உன்னை காப்பு இட வாராய்—.

* * *—பசுக்களைக் கறக்கவேண்டியநான் உன்னைக் காப்பிட அழைத்துக்கொண்டிருப்பதனால், மேய வெளியே போயிருந்த பசுக்களெல்லாம் கன்றுகளுள்ளவிடத்தில் வந்து சேர்ந்தபின்பும் கறப்பாரில்லாமல் முலைக்கடுப்பெடுத்துக் கத்துகின்றன என்பது முதலடியின் கருத்து. 'கதறுகின்ற' என்பதை இடைநிலைத்தீபகமாக்கி, கன்றுகள் முலையுண்ணப் பெறாமையால் கத்துகின்றன; பசுக்கள் புறப்பே நின்றுகொண்டு கன்றுகள் முலையூட்டுதல் கறத்தல் செய்யாமையாலே முலைக்கடுப்பால் கதறுகின்றன என்றுமாம். 'நேசமேல்' என்றவிடத்தில், நேசம் ஏல என்று பிரித்து ஏல என்பதை அசைச்சொல்லாகவுங் கொள்வர். நேசம்—'ஸ்நேஹம்' என்ற வடசொல் விகாரம். ... .... .... (2)

**194** செப்போதுமென்முலையார்கள் சிறுசோறுமில்லுஞ்சிதைத்திட்டு *
அப்போதுநானுரப்பப்போய் அடிசிலுமுண்டிலையாள்வாய் *
முப்போதும்வானவரேத்தும் முனிவர்கள்வெள்ளறைநின்றாய் *
இப்போதுநானொன்றுஞ்செய்யேன் எம்பிரான் காப்பிடவாராய் (3)

ஆள்வாய் —என்னை ஆளப்பிறந்தவனே!
முப்போதும் வான ஏத்தும் முனிவர்கள வெள்ளறை நின்றாய் { மூன்றுகாலத்திலும தேவர்கள் ஸ்தோத்திரஞ் செய்கின்ற (உன் மங்களத்தையே எண்ணுகிறவர் களுடைய திருவெள்ளறையிலே நிற்பவனே! (நீ),
செப்பு ஓது மென் முலையாகள் { பொற்கலசங்களை (உவமையாகச்) சொல்லத்தகுந்த மெல்லிய முலை யையுடைய ஸ்திரீகள யாட்டாகச்செய்த)
சிறு சோறும் —மணற்சோறறையும
(சிறு) இல்லும் —மணல வீட்டையும
சிதைத்திட்டு —அழித்துவிட்டு (நிற்க)
அப்போது —அக்காலத்தில்
நான் உரபப —நான் கோபித்துச் சொல்ல (பிடித்தடிப்பனோ? என்றஞ்சி என் முன் நில்லாமல்)
போய் —அப்பாறபோய்
அடிசிலும் உண்டிலை { சோற்றையும் உண்ணுமலிருந்திட் டாய்;
இப்போது —இந்த ஸமயத்திலே
நான் ஒனறும் செய்யேன { நான் உன்னை (மருட்டுதல் முதலி யன) ஒன்றும் செய்யமாட்டேன்;
எம்பிரான் காப்பிட வாராய்—.

* * *—சிறுபெண்கள் விளையாட்டாக மணற்சோறு சமைப்பதும் மணல்வீடு அமைப்பதுமாயிருக்க; அவைத நீ அழித்து அப்பெண்களோடே வலிவிற் சண்டையிட்டுக்கொண்டிருந்ததனல் 'நீ இப்படித் திரியக்கூடாது' என்று நான் உனக்கு ஹிதமாக அதட்டினேன்; ஒருகால நான் அடிப்பனேவென்று அஞ்சி நீ ஓடிப்போய்ச் சோறுண்பதற்கும வாராது நின்றிட்டாய்; இப்போது அப்படியொன்றுஞ் செய்யமாட்டேன்; காப்பிட நீ வரவேணுமென்கிருள்.

ஆள்வாய்!—என் சொற்படி கேட்டு நான் கொடுத்தவற்றை வாங்கிக்கொண்டு என் ட்டளைக்குக் கீழ்ப்படிந்து நடப்பவனே! என்றவாறு.

முப்போது—இரண்டுஸந்த்யையும் ஒரு உச்சிப்போதும். "வானவரேத்த" என்பதும பாடம். .... .... .... .... (3)

195 கண்ணில்மணற்கொடுதூவிக் காலினற்பாய்ந்தனையென்றென்று *
எண்ணரும்பிள்ளைகள்வந்திட்டு இவரால்முறைப்படுகின்ருர் *
கண்ணனே வெள்ளறைநின்ருய் கண்டாரோடேதீமைசெய்வாய் *
வண்ணமேவேலையதொப்பாய் வள்ளலேகாப்பிடவாராய். (4)

கண்ணனே —ஸ்ரீ க்ருஷ்ணனே!
வெள்ளறை நின்ருய்!—;
கண்டாரோடே தீமை செய்வாய் } கண்டவரோடெல்லாம் தீமபு செய் பவனே!
வண்ணம் வேலை அது ஒப்பாய் { திருமேனி நிறம கடலின் நிறத்தை ஒத்திருக்கப்பெறறவனே!
வள்ளலே —உதாரனே!
எண் அரு பிள்ளைகள் இவர் } எண்ணுவதறகு அருமையான (மிகபபல) இப் பிள்ளைகள
வந்திட்டு —வந்து
மணல் கொடு ... வந்து கண்
(அதனேடு நில்லாமல்)
...லை பாய்ந்தனை— ...லும் உதைத்தாய்;
என்று என்று —என்று பலதரஞ்சொல்லி
(நீ செய்யுந் தீம்பைக் குறித்து)
முறைப்படுகின்ருா —முறையிடாநின்ருாகள;
(ஆதலால அங்கே போவதைவிட்டு)
காபபு இட வாராய்—.

* * *—'நாங்கள் கண்ணை விழித்து விளையாட வொண்ணுதபடி இந்த கிருஷ்ணன் எங்கள் கண்ணிலே மண்ணைத்தூவியும், நீ ஏன் எங்கள் கண்ணிலே மண்ணைத் தூவினையென்று நாங்கள் கேட்கக் காலினலுதைத்தும போனன்' என்றிப்படி இவ்வூரிலுள்ள பிள்ளைகள் ஒருவரிருவரல்லாமல் மிகப் பலர் வந்து என்னிடத்தில் முறையிட்டுக்கொள்ளுகிறார்கள்; ஆதலால் நீ அங்குப்போகாமல் நான் காப்பிடும்படி வரவேணுமென்கிருள். கண்டாரோடே தீமை செய்வாய்=உன்னிடம் அன்புள்ளவர்களாய் நீ செய்தவற்றைப் பொறுக்குமவர்களிடத்

தில்=மாத்திரமல்லாமல் யாவரிடத்தும் தீமை செய்கிறாயே! என்றவாறு. "தீமை செய்வாய்! வண்ணம் வேலையதோப்பாய்" என்றது—நீ தீம்பு செய்தாலும் உன்னை விட முடியாதபடி யிருக்கிறது உனது வடிவழகு என்றபடி. வேலையது = அது — முதல் வேற்றுமைச் சொல்லுருபு. .... ... .... (4)

196 பல்லாயிரவரிவ்வூரிற்பிள்ளைகள் தீமைகள்செய்வார் *
எல்லாமுன்மேலன்றிப்போகாது எம்பிரான்நீயிங்கேவாராய் *
நல்லார்கள்வெள்ளறைநின்றாய் ஞானச்சுடரேயுன்மேனி *
சொல்லாரவாழ்த்திநின்றேத்திச் சொப்படக்காப்பிடவாராய். (5)

இ ஊரில் தீமைகள் செய்வார் பிள்ளைகள் பல் ஆயிரவர் } (பஞ்சலக்ஷம் குடியுள்ள) இவ்வூரிலே தீம்புகளைச் செய்பவர்களாகிய சிறுவர்கள் அனேக ஆயிரக்கணக்கானவராவர்;
எல்லாம் —அவர்கள்செய்யும் தீம்புகளெல்லாம்
உன் மேல் அன்றி —உன்மேலல்லாமல்
(வேறொருவர் மேலும்)
போகாது ஏறாது;
(இப்படியிருப்பதால் அங்கே போகாமல்)

எம்பிரான்! நீ இங்கே வாராய்—;
நல்லார்கள் —நல்லவர்கள் வாழ்கிற
வெள்ளறை யில்) நின்றாய்!—;
ஞானம் சுடரே —ஞானவொளியை யுடையவனே!
உன் மேனி —உன் திருமேனியை
சொல் ஆர நின்று ஏத்தி வாழ்த்தி } சொல் நிறையும்படி நின்று ஸ்தோத்ரஞ் செய்து மங்களாசாஸநஞ் செய்து
சொப்பட —நன்றாக
காப்பு இட வாராய்—.

* * *—பஞ்சலக்ஷங் குடியுள்ள இவ்வூரிலோ தீம்பு செய்யும் பிள்ளைகள் பலருண்டு; அப்படியிருக்கவும், அவர்கள் தாம்தாம் செய்யுந்தீமையை உன்மேலே யேற்றிவிடுகிறார்கள். ஆதலால் உன்மேலே குற்றத்தைச் சுமத்துகின்ற அவர்களை விட்டிட்டு, உன்னை அன்புடன் வாழ்த்திக் காப்பிடும்படி உன்மேல் பரிவுள்ளவர்களிருக்கின்ற இவ்விடத்திற்கு வரவேணு மென்பதாம்.

எம்பெருமானுடைய திவ்யாத்ம ஸ்வரூபம் ஸ்வயமப்ரகாசமாய் ஜ்ஞாந மயமாயிருப்ப தால் 'ஞானச்சுடரே' என்றார். எல்லாம் போகாது—ஒருமைப் பன்மை மயக்கம். (5)

197 கஞ்சன்கறுக்கொண்டுநின்மேல் கருநிறச்செம்மயிர்ப்பேயை *
வஞ்சிப்பதற்குவிடுத்தான் என்பதோர்வார்த்தையுமுண்டு *
மஞ்சுதவழ்மணிமாட மதிள்திருவெள்ளறைநின்றாய் *
அஞ்சுவன்நீயங்குநிற்க அழகனேகாப்பிடவாராய். (6)

மஞ்சு தவழ் மணி மாடம் மதிள் { மேகங்கள் ஊர்ந்து செல்கின்ற ரத்நமயமான வீடுகளையும் மதிளையு முடைய
திரு வெள்ளறை(யில்) நின்றாய்!—;
கஞ்சன் நின்மேல் கறுக்கொண்டு } 'கம்ஸனானவன் உன்மேலே, கோபங் கொண்டு
கரு நிறம் செம் மயிர் பேயை { கரு நிறத்தையும் செம்பட்ட மயிரையுமுடைய பூதனையை

வஞ்சிப்பதற்கு { (உன்னை) வஞ்சனையாகக் கொல்வ தற்கு
விடுத்தான் —அனுப்பினான்
என்பது ஓர் வார்த்தையும் உண்டு } என்பதான ஒரு சொல்லும் கேட்டிருப்பதுண்டு,
(ஆதலால்)
நீ அங்கு நிற்க அஞ்சுவன் { நீ அவ்விடத்திலே நிற்பதற்கு நான் அஞ்சாநின்றேன்;
அழகனே! காப்பு இட வாராய்—.

* * *—கம்ஸன் ஆகாசவாணி சொன்னதைக் கேட்டதுமுதல் தேவகியின் கருப்பம் பிறந்ததும் அப்போதைக்கப்போது அழித்துவருகையில் உனது யோகநித்திரையாற் பிறந்த கன்னிகையைக் கொல்லமுயன்றபோது அக்கன்னிகை 'உன்னைக் கொல்லப்போகிறவன்

ஒளித்து வளர்கின்றான்' என்று சொல்லியதைக் கேட்டதுமுதல் உன்மேல் கோபங்கொண்டவனாய் உன்னை வஞ்சனையாலழிப்பதற்குத் தாய் வடிவத்தோடு போகும்படி பேய் மகளாகிய பூதனையை ஏவினானென்று லோகப்ரவாதமிருக்கிறது; ஆகையால், அவன் உன்னைக் கொல்ல இன்னும் யாரையேனும் ஏவக்கூடும்; எனக்கு அச்சமாயிருக்கிறது; ஆகவே நீ அவ்விடத்துநின்றும் நான் அந்திக்காப்பிட இங்கு வரவேணுமென்பதாம். .... (6)

198 கள்ளச்சகடமருதுங் கலக்கழியவுதைசெய்த *
பிள்ளையரசேநீபேயைப்பிடித்து முலையுண்டபின்னை *
உள்ளவாறொன்றுமறியேன் ஒளியுடைவெள்ளறைநின்றாய் *
பள்ளிகொள்போதிதுவாகும் பரமனேகாப்பிடவாராய். (7)

| | |
|---|---|
| கள்ளம் சகடும் மருதும் கலக்கு அழிய | வஞ்சனையையுடைய சகடாசுரனையும் யமளார்ஜுநங்களையும் (வடிவம்) கட்டுக்குலைந் தழியும்படி |
| உதை செய்த பிள்ளை அரசே | (திருவடிகளால்) உதைத்துத் தன்னிய பிள்ளைத் தனமையைக் கொண்ட பெருமையனே! |
| நீ பேயை முலை பிடித்து உண்ட பின்னை | நீ பூதனையினுடைய முலையைப் பிடித்து (வாய் வைத்து) உண்ட பின்பு |
| உள்ள ஆறு ஒன்றும் அறியேன் | உள்ளபடி ஒன்றுமறிகிறேனில்லை |
| ஒளி யுடை வெள்ளறை நின்றாய்!—; | |
| இது பள்ளிகொள் போது ஆகும் | இப்போது படுத்து உறங்குகிற வேளையாகும்; |
| பரமனே! காப்பு இட வாராய்—. | |

* * *—"பேய்ச்சிமுலையுண்ட பின்னை இப்பிள்ளையைப் பேசுவதஞ்சுவனே" என்ற பெரிய திருமொழிப் பாசுரத்தோடு இப்பாட்டின் இரண்டு மூன்றாமடிகளை ஒருபுடை ஒப்பிடுக. பார்த்தால் சிறுவன்போலிருக்கின்றாய், நீ செய்யும் செய்கையோ அதிமாநுஷம், ஆகையால் உனது உண்மையான ஸ்வரூபம் என்னாலறியப்போகிறதில்லை யென்கிறாள். (7)

199 இன்பமதனையுயர்த்தாய் இமையவர்க்கென்றுமரியாய் *
கும்பக்களிறட்டகோவே கொடுங்கஞ்சன்நெஞ்சினிற்கூற்றே *
செம்பொன்மதிள்வெள்ளறையாய் செல்வத்தினால்வளர்பிள்ளாய் *
கம்பக்கபாலிகாணங்குக் கடிதோடிக்காப்பிடவாராய். (8)

| | |
|---|---|
| (உன் குணசேஷ்டிதங்களால்) | |
| இன்பம் அதனை உயர்த்தாய் | பரமாநந்தத்தை (எனக்கு) மேன்மேலுண்டாக்கினவனே! |
| இமையவர்க்கு என்றும் அரியாய் | தேவர்களுக்கு எந்நாளும் அருமையானவனே! |
| கும்பம் களிறு அட்ட கோவே | மஸ்தகத்தையுடைய குவலயாபீடத்தைக்கொன்ற ஸ்வாமியே! |
| கொடு கஞ்சன் நெஞ்சினில் கூற்றே | கொடுமை தங்கிய கம்ஸனுடைய மனஸ்ஸிலே யமன்போல பயங்கரனாய்த் தோன்றுமவனே! |
| செம் பொன் மதிள் வெள்ளறையாய்!—; | |
| செல்வத்தினால் வளர் பிள்ளாய் | செல்வச் செருக்கோடு வளர்கின்ற குழந்தாய்! |
| அங்கு | —நீ இருக்கிறவிடத்தில் |
| கம்பம் கபாலி காண | (கண்டார்க்கு) நடுக்கத்தை விளைக்க வல்ல துர்க்கையாகும்; |
| (ஆகையால் அங்கு நில்லாமல்) | |
| கடிது ஓடி | —மிகவும் விரைந்தோடி |
| காப்பு இட வாராய்—; | |

* * *—அங்கு துர்க்கை யென்னும க்ஷுத்ர தேவதையிருப்பதனால் அவ்விடத்தை விட்டு நான் காப்பிடும்படி விரைந்து வரவேணு மென்பதாம். கபாலி—ருத்ரனென்றுமாம். இனி, உடம்பு நிறையச் சாம்பல் பூசி எலும்புகளை மாலையாகக்கட்டியணிந்து கையிற் கபாலங் கொண்டு பிச்சையெடுப்பவர் இரவிற் பிச்சை யெடுத்துத்திரிவது முற்காலத் தியற்கையாதலால் அப்படிவந்தவர்களை 'கபாலி' என்றதாகவுமாம்; அப்படியிருப்பவர்களைக்கண்டு குழந்தைகள் அஞ்சுமென்று அழைத்தல் இயல்பு, .... .... (8)

200 இருக்கொடுநீர்சங்கிற்கொண்டிட்டு எழில்மறையோர்வந்துநின்றார் *
தருக்கேல்நம்பிசந்திநின்று தாய்சொல்லுக்கொள்ளாய்சிலநாள் *
திருக்காப்புநானுன்னைச்சாத்தத் தேசுடைவெள்ளறைநின்றாய் *
உருக்காட்டுமந்திவிளக்கு இன்றொளிகொள்ளவேற்றுகேன்வாராய்.

இருக்கொடு நீர் சங்கில் கொண்டிட்டு — (புருஷஸூக்தம் முதலியன) ருக்குக்களைச் சொல்லிக் கொண்டு தீர்த்தத்தை சங்கத்திலே கொணர்ந்து

எழில் மறையோர் — விலக்ஷணரான ப்ராஹ்மணர் (உனக்கு ரக்ஷையிடுவதற்கு)

வந்து நின்றார் — வந்து நிற்கிறார்கள்;

நம்பி — நிம்பு நிறைந்தவனே!

சந்தி நின்று தருக்கேல் — நாற்சந்தியிலே நின்று செருக்கித் திரியாதே;

சில நாள் — சிலகாலம்

தாய் சொல்லு கொள்ளாய் — ...

தேசு உடை வெள்ளறை நின்றாய் — (தேஜஸ்ஸை உடைய வெள்ளறை நின்றாய்)—;

இன்று நான் திருக்காப்பு உன்னை சாத்த — இப்போது நான் அழகிய ரக்ஷையை உனக்கு இடுதற்காக

உரு காட்டும் அந்தி விளக்கு — உன் திருமேனிவடிவத்தைக் காட்டுகின்ற அந்திவிளக்கை

ஒளி கொள்ள ஏற்றுகேன் — ஒளியையுடையதாக ஏற்றுவேன்; (இதைக்காண)

வாராய் — கடுக வருவாயாக.

* * *—'உனக்கு ரக்ஷையிடும்படி விலக்ஷணரான பிராமணர் சங்குகளில் நீரெடுத்துக் கொண்டு வந்திருக்கிறார்கள்' என்று யசோதை சொல்லவும், கண்ணன் விளையாடப் போகவே, மீண்டும் 'நீ பிராமணர்கள் ரக்ஷையிடும்படி வராவிட்டாலும் நாற்சந்தியிலே செருக்குடன் விளையாடித்திரிதல் கூடாது. அது க்ஷுத்ர தேவதைகள் வஸிக்கிற இடமாகும். தாய் சொல்வதை இன்னுஞ் சிலகாலமாவது கேள்; உனக்கு ரக்ஷையிட விளக்கேற்றுகிறேன்; நீ அவ்விடத்தைவிட்டு வரவேணும்' என்கிறாள். இக்காலத்திலும், விளக்கேற்றிக் குழந்தைகளுக்குச் சுழற்றும் வழக்கமுளது. .... .... (9

201 போதமர்செல்வக்கொழுந்து புணர்திருவெள்ளறையானை *
மாதர்க்குயர்ந்தவசோதை மகன்றன்னைக்காப்பிட்டமாற்றம் *
வேதப்பயன்கொள்ளவல்ல விட்டுசித்தன்சொன்னமாலை *
பாதப்பயன்கொள்ளவல்ல பத்தருள்ளார்வினைபோமே. (10

மாதர்க்கு உயர்ந்த அசோதை — ஸ்திரீகளுள் சிறந்த யசோதைப் பிராட்டி

மகன் தன்னை காப்பு இட்ட மாற்றம் — தன்புத்திரனை கண்ணனை ரக்ஷையிட அழைத்த வார்த்தையை

போது அமர் செல்வ கொழுந்து புணர் திருவெள்ளறையானை — தாமரைப்பூவைப் (பிறப்பிடமாகப்) பொருந்திய செல்வத்திற்கு உரியவளாய் மறைதேவியிற் சிறந்தவளான பிராட்டி ஸம்ச்லேஷிக்கப்பெற்ற திருவெள்ளறையில் நின்றருளியவனைப்பற்றி—.

(எம்பெருமானுக்கு மங்களாசாஸநம் செய்வதைப் பயே)

வேதம் பயன் கொள்ள — வேதத்தின் பயனாக அறிய வல்

வல்ல விட்டுசித்தன் சொன்ன மாலை — பெரியாழ்வார் அருளிச் செய் பாமாலையினுடைய

பாதம் பயன் கொள்ள வல்ல பத்தர் உள்ளார் — ஓரடிகற்றதனாலாகிய பயனை அடைய வல்ல பக்தராக உள்ளவரது

வினை போம் — வினைகளெல்லாம் கழிந்துவிடும்.

* * *—ஒருபாசுரத்தின் ஓரடிக்கு இத்துணை மஹிமை கூறியமுகத்தால் இத்திருமொழியின் பயன் அளவிட்டுச் சொல்லமுடியாதென்பதைக் கைமுதிக ந்யாயத்தால் பெறவைத்தார் [பாதப்பயனித்யாதி.] ஒவ்வொருபாட்டின் கடைசிப்பாதத்தில் கூறியுள்ள காப்பிடலாகிய புருஷார்த்தத்தைக் கைக்கொள்ளக்கடவ பக்தர்களுடைய பாபங்கள் தீருமென்று முரைக்கலாம். .... .... .... .... .... (10

அடிவரவு:—இந்திரன் கன்று செப்பு கண்ணில் பல்லாயிரவர் கஞ்சன் கள்ளம் இன்பம் இருக்கு போதமர் வெண்ணெய்.

எட்டாந்திருமொழி உரை முற்றிற்று.

## இரண்டாம்பத்து—ஒன்பதாந்திருமொழி, வெண்ணெய்விழுங்கி.

(கண்ணனது தீம்புகளை ஆய்ச்சிகள் முறையிடுதலும் கண்ணனை யசோதை சிக்ஷித்தலும்.)

—யசோதைப்பிராட்டி கண்ணபிரானை நீராட்டிக் குழல்வாரிப் பூச்சூட்டிக் காப்பிட்டுத் தன்பக்கத்தில் படுக்கவைத்துத் தானுமுறங்கிப் பின்பு விடிய எழுந்திருந்து வீட்டுவேலைகளைப் பார்க்கப்போக, கண்ணபிரான் தானுமெழுந்திருந்து ஊரார் வீட்டிலேபுகுந்து வெண்ணெயை விழுங்குவதும் பாத்ரத்தையுடைப்பதும் பக்ஷ்யங்களைப் பக்ஷிப்பதும் காய்ச்சின பாலைச் சாய்த்துப் பருகுவதும சிறுபெண்களின் கைவளைகளைக் கழற்றி நாவற்பழம் வாங்குவதுமாகத் தீம்புகளைச்செய்ய, அவ்வவ்வீட்டிலுள்ளார் வந்து யசோதை யிடத்தில் கண்ணனுடைய அச்செய்கைகளைப்பற்றி முறையிடுவதையும் அவ்வப்போது யசோதைப்பிராட்டி கண்ணனைப் பலவாறாகச் சொல்லியழைப்பதையும் ஆழ்வார் அவ்வவர்களின் தன்மையைத் தமமேலேறிட்டுக்கொண்டு பேசி இனியராகிறார் இத்திருமொழியில். ... .... .... .... ...

202 வெண்ணெய்விழுங்கிவெறுங்கலத்தை வெற்பிடையிட்டுஅதனோசைகேட்கும் *
கண்ணபிரான்கற்றகல்விதன்னைக் காக்ககில்லோமுன்மகனைக்காவாய் *
புண்ணிற்புளிப்பெய்தாலொக்குந்தீமை புரைபுரையாலிவைசெய்யவல்ல *
அண்ணற்கண்ணானோர்மகனைப்பெற்ற அசோதைநங்காயுன்மகனைக்கூவாய். (1)

வெண்ணெய் விழுங்கி } வெண்ணெயை (நிச்சேஷமாக) விழுங்கிவிட்டு
வெறுங் கலத்தை வெற்பிடை இட்டு { (பின்பு) ஒன்றுமில்லாத பாத்ரத்தை கலவிலே போகட்டு
அதன் ஓசை கேட்கும் } அப்படி எறிநததனாலுண்டான ஓசையை கேட்டுக் களிக்கின்ற
கண்ணபிரான் கற்ற கல்வி தன்னை { ஸ்ரீக்ருஷ்ணப்ரபு படித்துள்ள (தஸ்கர) வித்தையை
காக்க கில்லோம் —(எங்களால்) காக்கமுடியாது; (ஆகையால்)
உன் மகனை —உன் பிள்ளையை
காவாய் —(தீம்புசெய்யாமல்) தடுப்பாயாக;
புண்ணில புளி பெய்தால் ஒக்கும் தீமை இவை { புண்ணின்மேலே புளியைச் சொரிந்ததைப்போன்ற [தீவ்ரமான] இப்படிப்பட்ட தீம்புகளை
புரை புரை செய்ய வல்ல } வீடுதோறும் செய்வதில் ஸமர்த்தனாகி
அண்ணல் கண்ணான் ஓர் மகனை பெற்ற அசோதை நங்காய் { ஸ்வாமித்வ ஸூசகமான கண்களையுடையனான ஒரு புத்திரனைப் பெற்ற யசோதைப்பிராட்டி!
உன் மகனை கூவாய் } உன் பிள்ளையை அழைத்துக்கொண் வாயாக.

* * *—இவ்வாறு ஒரு இடைச்சி யசோதையிடம்வந்து முறையிடுகின்றாள். உன் மகன் எங்களுடைய வீட்டில் வந்து, நாங்கள் சேர்த்துவைத்த வெண்ணெயையெல்லாம் விழுங்குகின்றான்; அவ்வளவோடும் நில்லாமல் அவ்வெண்ணெய் இருந்த கலத்தைக் கற்பாறைகளிலே இட்டு உடைத்து 'ஓசை நன்றாயிருக்கிறது' என்று சொல்லுகிறான். இவன் செய்யும தீம்புகளோ எங்களாற் பொறுக்கப்போகிறதில்லை; புண்ணிலே புளிரஸத்தைப்பிழிந்தால் எப்படி பொறுக்கமுடியாதோ அப்படி பொறுக்கமுடியாத தீமைகளை ஒவ்வொரு வீட்டி

200 இருக்கோடுநீர்சங்கிற்கொண்டிட்டு எழில்மறையோர்வந்துநின்றார் *
தருக்கேல்நம்பிசந்திநின்று தாய்சொல்லுக்கொள்ளாய்சிலநாள் *
திருக்காப்புநானுன்னைச்சாத்தத் தேசுடைவெள்ளறைநின்றாய் *
உருக்காட்டுமந்திவிளக்கு இன்றொளிகொள்ளவேற்றுகேன்வாராய். (9

இருக்கொடு நீர் சங்கில் கொண்டிட்டு { (புருஷஸூக்தம் முதலியன) ருக்குக்களைச் சொல்லிக் கொண்டு தீர்த்தத்தை சங்கத்திலே கொணர்ந்து
எழில் மறையோர் —விலக்ஷணரான ப்ராஹ்மணர் (உனக்கு ரக்ஷையிடுவதற்கு)
வந்து நின்றார் —வந்து நிற்கிறார்கள்;
நம்பி —நிரம்பு நிறைந்தவனே!
சந்தி நின்று தருக்கேல் { நாற்சந்தியிலே நின்று செருக்கித் திரியாதே;
சில நாள் —சிலகாலம்
தாய் சொல்லு கொள்ளாய் { தாய் வார்த்தையைக் கேட்பாயாக;
தேசு உடை —தேஜஸ்ஸை உடைய
வெள்ளறை நின்றாய்)—;
இன்று நான் திருக்காப்பு உன்னை சாத்த { இப்போது நான் அழகிய ரக்ஷையை உனக்கு இடுகிறதாக
உரு காட்டும் அந்தி விளக்கு { உன் திருமேனிவடிவத்தைக் காட்டுகின்ற அந்திவிளக்கை
ஒளி கொள்ள ஏற்றுகேன் { ஒளியையுடையதாக ஏற்றுவேன்; (இதைக்காண)
வாராய் —கடுக வருவாயாக.

* * *—'உனக்கு ரக்ஷையிடும்படி விலக்ஷணரான பிராமணர் சங்குகளில் நீரெடுத்துக் கொண்டு வந்திருக்கிறார்கள்' என்று யசோதை சொல்லவும், கண்ணன் விளையாடப் போகவே, மீண்டும் 'நீ பிராமணர்கள் ரக்ஷையிடும்படி வராவிட்டாலும நாற்சந்தியிலே செருக்குடன் விளையாடித்திரிதல் கூடாது. அது க்ஷுத்ர தேவதைகள் வஸிக்கிற இடமாகும். தாய் சொல்வதை இன்னுஞ் சிலகாலமாவது கேள்; உனக்கு ரக்ஷையிட விளக்கேற்றுகிறேன்; நீ அவ்விடத்தைவிட்டு வரவேணும்' என்கிறாள். இக்காலத்திலும, விளக்கேற்றிக் குழந்தைகளுக்குச் சுழற்றும் வழக்கமுளது .... .... (9)

201 போதமர்செல்வக்கொழுந்து புணர்திருவெள்ளறையானை *
மாதர்க்குயர்ந்தவசோதை மகன்றன்னைக்காப்பிட்டமாற்றம் *
வேதப்பயன்கொள்ளவல்ல விட்டுசித்தன்சொன்னமாலை *
பாதப்பயன்கொள்ளவல்ல பத்தருள்ளார்வினைபோமே. (10)

மாதர்க்கு உயர்ந்த அசோதை } ஸ்திரீகளுள் சிறந்த யசோதைப் பிராட்டி
மகன் தன்னை காப்பு இட்ட மாற்றம் { தன்புத்ரனான கண்ணனை ரக்ஷையிட அழைத்த வார்த்தையை
போது அமர் செல்வ கொழுந்து புணர் திருவெள்ளறையானை { தாமரைப்பூவைப் (பிறப்பிடமாகப்) பொருந்திய செல்வத்திற்கு உரியவளாய் மற்றைத்தேவியரிற் சிறந்தவளான பிராட்டி ஸம்ச்லேஷிக்கப்பெற்ற திருவெள்ளறையில் நின்றருளியவனைப்பற்றி—. (எம்பெருமானுக்கு மங்களாசாஸநம் செய்கையையே)
வேதம் பயன் கொள்ள வல்ல விட்டுசித்தன் சொன்ன மாலை { வேததாத்பர்யமாக அறியவல்ல பெரியாழ்வார் அருளிச் செய்த பாமாலையினுடைய
பாதப் பயன் கொள்ள வல்ல பத்தர் உள்ளார் } ஓரடிகற்றதனாலாகிய பயனை அடையவல்ல பக்தராக உள்ளவரது
வினை போம் —வினைகளெல்லாம கழிந்துவிடும்.

* * *—ஒருபாசுரத்தின் ஓரடிக்கு இத்துணை மஹிமை கூறியமுகத்தால் இத்திருமொழியின் பயன் அளவிட்டுச் சொல்லமுடியாதென்பதைக் கைமுதிக ந்யாயத்தால் பெறவைத்தார். [பாதப்பயனித்யாதி.] ஒவ்வொருபாட்டின் கடைசிப்பாதத்தில் கூறியுள்ள காப்பிடலாகிய புருஷார்த்தத்தைக் கைக்கொள்ளக்கடவ பக்தர்களுடைய பாபங்கள் தீருமென்று முரைக்கலாம். .... .... .... .... .... (10)

அடிவரவு:—இந்திரன் கன்று செப்பு கண்ணில் பல்லாயிரவர் கஞ்சன் கள்ளம் இன்பம் நக்கு போதமர் வெண்ணெய்.

எட்டாந்திருமொழி உரை முற்றிற்று.

---

## இரண்டாம்பத்து—ஒன்பதாந்திருமொழி, வெண்ணெய்விழுங்கி.

(கண்ணனது தீம்புகளை ஆய்ச்சிகள் முறையிடுதலும் கண்ணனை யசோதை சிக்ஷித்தலும்.)



அவதாரிகை:—யசோதைப்பிராட்டி கண்ணபிரானை நீராட்டிக் குழல்வாரிப் பூச்சூட்டிக் காப்பிட்டுத் தன்பக்கத்தில் படுக்கவைத்துத் தானுமுறங்கிப் பின்பு விடிய எழுந்திருந்து வீட்டுவேலைகளைப் பார்க்கப்போக, கண்ணபிரான் தானுமெழுந்திருந்து ஊரார் வீட்டிலேபுகுந்து வெண்ணெயை விழுங்குவதும் பாத்ரத்தையுடைப்பதும் பக்ஷ்யங்களைப் பக்ஷிப்பதும் காய்ச்சின பாலைச் சாய்த்துப் பருகுவதும சிறுபெண்களின் கைவளைகளைக் கழற்றி நாவற்பழம் வாங்குவதுமாகத் தீம்புகளைச்செய்ய, அவ்வந்தவீட்டிலுள்ளார் வந்து யசோதை யிடத்தில் கண்ணனுடைய அச்செய்கைகளைப்பற்றி முறையிடுவதையும் அவ்வப்போது யசோதைப்பிராட்டி கண்ணனைப் பலவாறாகச் சொல்லியழைப்பதையும் ஆழ்வார் அவ்வவர்களின் தன்மையைத் தமமேலேறிட்டுக்கொண்டு பேசி இனியராகிறார் இத்திருமொழியில். ... .... .... .... ...

202 வெண்ணெய்விழுங்கிவெறுங்கலத்தை வெற்பிடையிட்டுஅதனோசைகேட்கும் *
கண்ணபிரான்கற்றகல்வி தன்னைக் காக்ககில்லோமுன்மகனைக்காவாய் *
புண்ணிற்புளிப்பெய்தாலொக்குந்தீமை புரைபுரையாலிவைசெய்யவல்ல *
அண்ணற்கண்ணானோர்மகனைப்பெற்ற அசோதைநங்காயுன்மகனைக்கூவாய். (1)

வெண்ணெய் விழுங்கி } வெண்ணெயை (நிச்சேஷமாக) விழுங்கிவிட்டு
வெறுங் கலத்தை வெற்பிடை இட்டு } (பின்பு) ஒன்றுமில்லாத பாத்ரத்தை கலலிலே போகட்டு
கேட்கும் } ஓசையை கேட்டுக் கள்
கண்ணபிரான் கற்ற கல்வி தன்னை } ஸ்ரீக்ருஷ்ணபரபு படித்துள்ள (தஸ்கர) வித்தையை
காக்க கில்லோம —(எங்களால) காக்கமுடியாது; (ஆகையால)
உன் மகனை —உன் பிள்ளையை
காவாய் —(தீம்புசெய்யாமல்) தடுப்பாயாக;
புண்ணில் புளி பெய்தால் ஒக்கும் தீமை இவை } புண்ணின்மேலே புளியைச் சொரிந்ததைப்போன்ற [தீவ்ரமான] இப்படிப்பட்ட தீம்புகளை
புரை புரை செய்ய வல்ல } வீடுதோறும் செய்வதில் ஸமர்த்தனாகி
அண்ணல் கண்ணான் ஓர் மகனை பெற்ற அசோதை நங்காய் } ஸ்வாமித்வ ஸூசகமான கண்களையுடையனான ஒரு புத்திரனைப் பெற்ற யசோதைப்பிராட்டி!
உன் மகனை கூவாய் } உன் பிள்ளையை அழைத்துக்கொள்வாயாக.

* * *—இவ்வாறு ஒரு இடைச்சி யசோதையிடம்வந்து முறையிடுகின்றாள். உன் மகன் எங்களுடைய வீட்டில் வந்து, நாங்கள் சேர்த்துவைத்த வெண்ணெயையெல்லாம் விழுங்குகின்றான்; அவ்வளவோடும் நில்லாமல் அவ்வெண்ணெய் இருந்த கலத்தைக் கற்பாறைகளிலே இட்டு உடைத்து 'ஓசை நன்றாயிருக்கிறது' என்று சொல்லுகிறான். இவன் செய்யும் தீம்புகளோ எங்களாற் பொறுக்கப்போகிறதில்லை; புண்ணிலே புளிரஸத்தைப்பிழிந்தால் எப்படி பொறுக்கமுடியாதோ அப்படி பொறுக்கமுடியாத தீமைகளை ஒவ்வொரு வீட்டி

லும் செய்கிறான். இவனது திருட்டுத்தொழிலைத் தடுக்கலா மென்றாலும் எங்களாலாகவில்லை. ஆகையால், யசோதையே! நீ உன் பிள்ளையைக் கூவியழைத்துத் தீமபு செய்யவொட்டாதபடி வீட்டிலே உன் பக்கத்திலேயே வைத்துக்கொள் என்கிறாள். புரை—வீடு; ஆல்—அசை. "அண்ணற்கு அண்ணான்" என்று பிரித்து, அண்ணனாகிய பலராமனுக்கு, அண்ணியனாகாத வன்—குணத்தினா லொவ்வாதவனென்று முரைக்கலாம்; "தன்னம்பிநம்பியு மிங்கு வளர்ந்தது அவனிவை செய்தறியான்" என்ற பெரியதிருமொழிப் பாசுரம் காண்க; அண்ணான்—எதிர் மறைவினையாலணையும்பெயர். அண்ணல்—ஆண்பாற் சிறப்புப் பெயர். .... (1)

203 வருகவருகவருகவிங்கே வாமனநம்பீவருகவிங்கே *
கரியகுழற்செய்யவாய்முகத்துக் காகுத்தநம்பீவருகவிங்கே *
அரியனிவனெனக்கின்றுநங்காய் அஞ்சனவண்ணாவசலகத்தார் *
பரிபவம்பேசத்தரிக்ககில்லேன் பாவியேனுக்கிங்கேபோதராயே. (2)

இங்கே வருக வருக வருக } இவ்விடத்திலே சடக்கென வருவாயாக;
வாமன நம்பீ! இங்கே வருக—;
கரிய குழல் செய்ய வாய் முகத்து காகுத்த நம்பீ { கருநிறமான கூந்தலையும் செந்நிறமான வாயையும் (ஒப்பற்ற) முகத்தையுமுடைய ஸ்ரீராமமூர்த்தி
இங்கே வருக—;
(என்று கண்ணனையழைத்து, தன்பிள்ளைமேல் குற்றம் சொன்னவளை நோக்கி யசோதை)
நங்காய்
இவன் எனக்கு இன்று அரியன் } ... அருமையானவனாயிற்றே;
(என்றுசொல்லி மீண்டும் கண்ணனை நோக்கி)
அஞ்சனம் வண்ணா —மைபோன்ற வடிவுபடைத்தவனே!
அசல் அகத்தார் பரிபவம் பேசதரிக்ககில்லேன் } அசல வீட்டுக்காரர்கள் (உன்மேல்) அவமானகரமான சொற்களைச் சொன்னால் பொறுக்கவல்லேனல்லேன்;
{ (இப்படி பரிபவங்களைக் கேட்கும்படியான) பாபத்தைப் பண்ணின எனக்கு
(இவ்வருத்தந்தீர)
இங்கே போதராய் —இங்கே வாராய்
[என்று யசோதை கண்ணனையழைக்கிறாள்.]

* * *—கீழ்ப்பாட்டில் யசோதையிடம் ஒரு இடைச்சி வந்து 'உன் பிள்ளையை உன் வசம் அழைத்துவைத்துக்கொள்' என்று சொல்லவே, யசோதைப்பிராட்டி அவனுடைய நற்குண நற்செய்திகளை யெடுத்துரைத்து 'இங்கேவா' என்றழைக்க, முறையிட்டுக்கொள்ள வந்து அருகே நிற்குமவள் 'நீ இப்படிப் புகழ்ந்து அழைக்கலாமோ? அச்சமுறுத்தியன்றோ அழைக்கவேண்டும்' என்று சொல்ல; யசோதை அதற்கு "இவன் எனக்குச் செல்வப் பிள்ளை யாயிற்றே" என்று விடைகூறிவிட்டுக் கண்ணனை நோக்கி 'அஞ்சனவண்ணா; உன்னைப் பிறர் பழித்துச்சொன்னால் என்னால் காதுகொடுத்துக் கேட்டிருக்க முடியாது! ஆகையால் பிறர் ஒன்றுஞ் சொல்ல இடமில்லாதபடி நீ இங்கேவந்து சேரவேணும்' என்றழைக்கிறாள். வருக வருக வருக—விரைவுப்பொருளில் மும்முறைவந்த அடுக்கு. கரிய குழற் செய்ய வாய்—முரண்தொடை; "சொல்லினும் பொருளினும் முரணுதல் முரணே." பாவியேனுக் கென்றது—வெறுப்பினால். அரியன்—நியமநத்துக்கு உட்படிந்து நடக்க மாட்டாதவன் என்றவாறு. பரிபவம்—வடசொல். .... .... (2)

204 திருவுடைப்பிள்ளைதான்தீயவாறு தேக்கமொன்றுமிலன்தேசுடையன் *
உருகவைத்தகுடத்தொடுவெண்ணெய் உறிஞ்சியுடைத்திட்டுப்போந்துநின்றான் *
அருகிருந்தார்தம்மையநியாயஞ்செய்வதுதான் வழக்கோவசோதாய் *
வருகவென்றுன்மகன்றன்னைக்கூவாய் வாழவொட்டான்மதுசூதனனே. (3)

திரு உடை பிள்ளை தான் தீய ஆறு ஒன்றும் தேக்கம் இலன் — உன் செல்வப்பிள்ளையாகிய கண்ணன் தீம்பு செய்யும் வழியில் சிறிதும் தாமஸிப்பதில்லை.
தேசு உடையன் — (அதைத்தனக்கு) புகழாகக்கொண்டிராநின்றான்;
(இவன் செய்ததென்ன வென்றால்;—)
உருக வைத்த வெண்ணெய் — உருகுவதற்காக (அடுப்பில் நான்) வைத்திருந்த வெண்ணெயை
குடத்தொடு —தாழியோடே [நிச்சேஷமாக]
உறிஞ்சி —உறிஞ்சிவிட்டு
உடைத்திட்டு —தாழியையுமுடைத்துப் போகட்டு
(பிறகு, தான் உடையாதவன்போல்)
போந்து நின்றான் —அவ்வருகேவந்து நில்லா நின்றான்.
அசோதாய் —யசோதையே!
அருகு இருந்தார் தம்மை — உன் வீட்டருகே இருந்தவர்களை
அநியாயம் செய்வது—இஷ்டப்படி அக்ரமஞ்செய்வது
வழக்கோதான —ந்யாயமாகுமோ?
(நீ)
உன் மகனை தன்னை —உன் பிள்ளையை
வருக என்று —'வா' என்று சொலலி
கூவாய் —அழைக்கவேணும்;
(நீ அழைத்துக்கொள்ளாவிட்டாலோ)
மதுசூதனன் —இக்கண்ணபிரான்
வாழ ஒட்டான் — (எங்களைக்) குடிவாழ்ந்திருக்க வொட்டான்.

* * *—அசோதாய்! உன்மகன் வீட்டில் வயிறு வளர்ப்பதற்கு ஒன்றுமில்லாமல் இவ்வாறாகத் தீம்பு செய்பவனன்றே; செல்வச் செருக்கினாலன்றோ செய்கிறான். 'நாம் இதைச் செய்தால் நம்முடைய ஐச்வர்யத்திற்கும் பிறப்புக்கும் தகுமோ' என்றும் இவன் சிறிதும் ஆலோசிப்பதில்லை; தவிரவும் இப்படித் தீம்பு செய்வதே தனக்குப் புகழெனவும் நினைக்கிறானே; இவன் இப்போது என் வீட்டில் வந்து, உருக்கவைத்திருந்த வெண்ணெயைச் சிறிதும் மிஞ்சாதபடி புஜித்துக் கடைசியில் பாத்திரத்தையும் ஓசை கேட்பதற்காகப் பாறையிலிட்டு உடைத்துப்போட்டான். இப்படி உன் வீட்டிற்கு அருகிலிருக்கின்ற எங்களுக்குத் தீம்பு செய்யும்படி உன் பிள்ளையை விடுவது உனக்கு நியாயமோ?, நியாயமல்லவே; ஆகையால் நீ உன்பிள்ளையை அழைத்து உன்பக்கல் வைத்துக்கொள்; இல்லாவிட்டாலோ நாங்கள் குடிவாழ்ந்திருக்கவே முடியாது என்று ஓரிடைச்சி வந்து முறையிடுவதாகப் பேசும் பாசுரமிது.

தேசு என்பது புகழ் என்னும் பொருளில் இங்கு வந்தது. 'தேஜஸ்' என்னும் வடசொற் சிதைவு. .... .... ... .... (3)

205 கொண்டல்வண்ணாவிங்கேபோதராயே கோயிற்பிள்ளாயிங்கேபோதராயே *
தெண்டிரைசூழ்திருப்பேர்க்கிடந்த திருநாரணாவிங்கேபோதராயே *
உண்டுவந்தேனம்மமென்றுசொல்லி ஓடியகம்புகவாய்ச்சிதானும் *
கண்டெதிரேசென்றெடுத்துக்கொள்ளக் கண்ணபிரான்கற்றகல்விதானே. (4)

கொண்டல் வண்ணா — காளமேகம்போன்ற வடிவையுடையவனே!
இங்கே போதராய் —இங்கே வாராய்;
கோயில் பிள்ளாய் — திருவரங்கத்தில் வஸிக்கும வனான பிள்ளையே!
இங்கே போதராய—;
தென் திரை சூழ் திருப்பேர் கிடந்த — தெளிவான அலையையுடைய ஜலத்தால் சூழப்பட்ட திருப்பேர் நகரிலே பள்ளிகொண்டிராநின்ற
திரு நாரணா —ஸ்ரீமந்நாராயணனே!
இங்கே போதராய் —இங்கே வாராய்;
(இப்படி அம்ம முண்கைக்காகப் புகழ்ந்தழைத்த யசோதையினருகிற கண்ணபிரான் வந்து)
அம்மம் உண்டு வந்தேன் என்று சொல்லி ஓடி அகம் புக — 'உணவை (நான்) உண்டு வந்தேன்' என்று சொல்லி ஓடிவந்து அகத்தினுள்ளே புகுர,
ஆய்ச்சி தானும —தாயான யசோதையும்
கணடு — (கண்ணன் வந்த வரவையும் இவன் முக மலர்த்தியையும்) கண்டு (மகிழ்ந்து)
எதிரே சென்று —எதிர்கொண்டு போய்
எடுத்துக் கொள்ள — (அவனைத் தன இடுப்பில) எடுத்துக்கொள்ளும்படி
கண்ணபிரான் —(அந்த) ஸ்ரீகிருஷ்ணன்
கற்ற —(தானாகவே) கற்றுக்கொண்ட
கல்வி தானே — கல்வியின் பெருமையிருந்தவாறு என்னே!
[என்று ஆழ்வார் இனியராகிறார்.]

* * *—கீழ்ப்பாட்டில் "வருகவென்றுன் மகன்றன்னைக் கூவாய்" என்று சில ஆய்ச்சிகள் முறையிட்டவாறே யசோதைப்பிராட்டி கண்ணபிரானைப் பல படியாகப் புகழ்ந்து 'கண்ணு! முலையுண்ணவா' என்றழைக்க, அவன் தன் மகிழ்ச்சி தோற்ற "யான் அம்மமுண்டு வந்தேன்காண்!" என்று சொல்லி ஓடிவந்து அகத்தினுள்ளேபுகுர, அவ் யசோதை அவன்வந்த அழகையும் முகமலர்த்தியையுங் கண்டு மகிழ்ந்து அக்கண்ணபிரானை எதிர்கொண்டு சென்று அவனைத்தன் இடுப்பிலேற்றி அணைத்துக்கொண்டவாற்றை ஆழ்வார் அநுஸந்தித்து 'இவ்வகையான பரிமாற்றத்தைப் பெறும்படி கண்ணன் கற்ற கல்வியு மொன்றே!' என்று வியக்கின்றனர். அன்றிக்கே, முன்னிரண்டடியும் பின்னிரண்டடியும நன்கு பொருந்துமாறு தாயான யசோதைதானே வியக்கின்றுளென்று உரைத்தலும் உரித் தென்க; அப்போது "ஆய்ச்சிதானுங் கண்டெதிரே சென்றெடுத்துக்கொள்ள" என்றது தன் செயலைப் பிறர் சொலலுமாபோலே தானே சொன்னபடி யெனக்கொள்க. கண்ணன் முன்புசெய்த தீமைகளைத் தாயாகிய தான் மறந்துவிட்டு அவனை யெதிர்சென்றெடுத்துக் கொள்ளும்படி அவன் பண்ணின விசித்திரத்தில் ஈடுபட்டு 'இப்பருவத்திலே இவன் இவ்வளவு விரகனுவதே!' என்று தன்னில்தான் புகழ்ந்து மகிழ்ந்து பொலிகின்றுளென்க. கோயில்—இத்திருநாமம் திருவரங்கத்தின்மேல் வழங்குவது ஸம்ப்ரதாயம் திருப்பேர்—இது சோழநாட்டுத்திருப்பதிகள் நாற்பதில் ஒன்று. நன்னூலில் "ஒருபொருள்மேற்பல பெயர் வரினிறுதி, ஒருவினை கொடுப்ப தனியுமொரோ வழி" என்றபடி இப்பாட்டில் 'கொண்டல் வண்ணன்' 'கோயிற்பிள்ளை' 'திருநாரணன்' என்பன கண்ணனென்னும் ஒரு பொருளே யென்பது தெளிய நின்றதனுல், பெயர்தோறும் 'போதராய்' என ஒருவினை கொடுக்கப் பட்டது. ... .... .... .... .... (4)

206 பாலைக்கறந்தடுப்பேறவைத்துப் பல்வளையாளேன்மகளிருப்ப *
மேலையகத்தேநெருப்புவேண்டிச்சென்று இறைப்பொழுதங்கேபேசிநின்றேன் *
சாளக்கிராமமுடையநம்பி சாய்த்துப்பருகிட்டுப்போந்துநின்றுன் *
ஆலைக்கரும்பின்மொழியனைய அசோதைநங்காயுன்மகனைச்கூவாய். (5)

| | |
|---|---|
| ஆலை கரும்பு அனைய இன் மொழி அசோதை நங்காய் | ஆலையிலிட்டு ஆடும்படி முதிர்ந்த கரும்பைப் போன்று மதுரமான மொழியையுடைய யசோதைப் பிராட்டீ! |
| பல் வளையாள் என் மகள் | பலவகை வளைகளை அணிந்துள்ள என் மகளானவள் |
| பாலை கறந்து | பாலை (ப்பாத்திரங்களில்) கறந்தெடுத்து (அப்பாத்திரங்களை) |
| அடுப்பு ஏற வைத்து | அடுப்பின் மேலேற்றிவைத்து |
| இருப்ப | (அவற்றுக்குக் காவலாக) இருக்க (நான்) |
| நெருப்பு வேண்டி | (அவற்றைக் காய்ச்சுவதற்காக) நெருப்பெடுத்துவர விரும்பி |
| மேலை அகத்தே சென்று | மேலணடை வீட்டிற்குப் போய் |
| அங்கே இறைப் பொழுது பேசி நின்றேன் | அவ்விடத்தில் க்ஷணகாலம் (அவர்க ளோடு) பேசிக்கொண்டிருந்து விட்டேன்; (அவ்வளவிலே) |
| சாளக்கிராமம் உடைய நம்பி | ஸ்ரீஸாளக்ராமத்தை (இருப்பிடமாக உடையனாய் ஒன்றுலுங் குறை வற்றவனான (உன் மகன்) |
| | (என்மகளிருந்த விடத்திற் சென்று) |
| சாய்த்து பருகிட்டு போந்து நின்றுன் | (அந்த க்ஷீரபாத்திரத்தைச்) சாய்த்து (அதிலிருந்த பாலை முழுதும் குடித்துவிட்டு (இப்புறத்தே வந்து (ஒன்றுமறியாதவன்போல நில்லா நின்றுன்; |
| | (இனி இவன் எங்களகங்களில் இவ்வாறுன தீமைகளைச் செய்யத் துணியாதபடி நீ சிக்ஷிப்பதற்காக, |
| உன் மகனை கூவாய் | உன் பிள்ளையான இவனை அழைத் துக்கொள்ள வேணும், |

* * *—கண்ணபிரான் தன்தாய் வியக்கும்படி சில செய்கைகளைச் செய்து அவற்றுல் அவளை மகிழ்வித்து, மீண்டும் பண்டுபோலப் பிறரகங்களிற் புகுந்து தீம்புகளைச்செய்ய

ஓராய்ச்சி யசோதை பக்கலிலேவந்து தன் அகத்தில் அவன் செய்த தீம்புகளைச்சொல்லி முறைப்படுகின்றனள். மேலையகம்—யசோதையின் அகத்துக்கு மேலண்டைவீடு என்க. மேற்கு + அகம், மேலையகம். .... .... .... (5)

207 போதர்கண்டாயிங்கேபோதர்கண்டாய் போதரேனென்னாதேபோதர்கண்டாய் *
ஏதேனுஞ்சொல்லியசலகத்தார் ஏதேனும்பேசநான்கேட்கமாட்டேன் *
கோதுகலமுடைக்குட்டனேயோ குன்றெடுத்தாய்குடமாடுகூத்தா *
வேதப்பொருளேஎன்வேங்கடவா வித்தகனேயிங்கேபோதராயே. (6)

கோதுகலம் உடை ஓ குட்டனே } (எல்லாருடைய) கொண்டாட்டத்தையும் (தன்மேல்) உடைய வாராய்பிள்ளாய்!
குன்று எடுத்தாய் } (கோவர்த்தநமென்னும்) மலையை (குடையாக) எடுத்தவனே!
குடம் ஆடு கூத்தா —குடக் கூத்தாடினவனே!
வேதம் பொருளே } வேதங்களுக்கு பொருளாயிருப்பவனே!
என் வேங்கடவா } 'என்னுடையவன்' என்று அபிமாநிக்கும்படி திருமலையில் நிற்பவனே!
வித்தகனே —வியக்கத் தக்கவனே! (நீ)
(அசலகங்களிற்போக நினையாமல்)
இங்கே போதர் கண்டாய் போதர் கண்டாய் } என்னருகில் விரைந்து ஓடிவா;
(என்று யசோதை அழைக்க, அவன் ('வரமாட்டேன்' என்ன;)
போதரேன் என்னாதே போதர் கண்டாய் } 'வரமாட்டேன்' என்று சொல்லாமல் (இசைந்து) வருவாயாக;
(என்று யசோதை வேண்டியழைக்க, கண்ணன் 'நீ இங்ஙனே வருந்தி யழைப்பது எதுக்காக?' என்ன;)
அசல் அகத்தார் ஏதேனும் சொல்லி } அசல் வீட்டுக்காரர்கள் இன்னது என்று எடுத்துக்கூற ஒண்ணாதபடியுள்ள சில கடுஞ்சொற்களை (உன்னை நோக்கித் தம்மிலேதாம்) சொல்லிக்கொண்டு
(அவ்வளவோடும் நில்லாமல்)
ஏதேனும் } (என் காதால கேட்கவும் வாயாற் சொல்லவு மொண்ணாத) சில பழிப்புக்களை
பேச —(என் பக்கலிலேவந்து) சொல்ல
(அவற்றை)
நான் கேட்க மாட்டேன் } (உன்மீது பரிவுள்ள) நான் கேட்டுப் பொறுக்கமாட்டேன்;
(ஆதலால்,)
இங்கே போதராய் } (அவர்களின் வாய்க்கு இரையாகாமல்) இங்கே வருவாயாக (என்றழைக்கிறாள்.)

* * *—"அசோதை நங்காய் உன் மகனைக் கூவாய்" என்று கீழ்ப்பாட்டில் வேண்டினபடிக் கிணங்க அவள் தன் மகனை யழைக்கின்றாள். 'போதரு' என்கிறவிது போதர் என்று குறைந்து கிடக்கிறது; 'போ' என்னும் வினைப்பகுதி 'தா' என்னுந் துணைவினையைக் கொள்ளும்போது வருதல் என்ற பொருளைக் காட்டுமென்பர்: 'போதந்து' என்கிறவிது 'போந்து' என மருவி, 'வந்து' என்னும் பொருளைத்தருதல் அறிக. கோதுகலம்—'கௌதூஹலம்' என்ற வடசொல் விகாரம். இங்கு, 'கோதுகலமுடை', என்பதற்கு ('எல்லாருடைய) கௌதூஹலத்தை(த் தன்மேல்) உடைய' என்று பொருளாய், எல்லாராலும் விரும்பத்தக்க [குணங்களையுடைய]வனே! என்று கருத்தாம். இப்படி அனைவராலுங் கொண்டாடத் தக்கவனாயிருந்துவைத்து இன்று எல்லாராலும் பழிக்கப்படுவதே! என்றிரங்கி ஓ! என்கிறாள். குடமாடு கூத்தா—குடமெடுத்தாடின கூத்தையுடையவனே! என்றபடி: குடக்கூத்தின் வகையைக் "குடங்களெடுத்தேறவிட்டு!" என்ற பாட்டின் உரையில் காண்க. வேதப்பொருள்—வேதங்களாற் புகழ்ந்து கூறப்படுபவனென்று கருத்து. (6)

208 செந்நெலரிசிசிறுபருப்புச் செய்தவக்காரம்நறுநெய்பாலால் *
பன்னிரண்டுதிருவோணமட்டேன் பண்டுமிப்பிள்ளைபரிசறிவன் *
இன்னமுகப்பனெனென்றுசொல்லி யெல்லாம்விழுங்கிட்டுப்போந்துநின்றான் *
உன்மகன்றன்னையசோதைநங்காய் கூவிக்கொள்ளாயிவையுஞ்சிலவே. (7)

அசோதை நங்காய்!—;
செந் நெல் அரிசி —செந்நெலரிசியும்
சிறு பருப்பு —சிறு பயறாம்பருப்பும்
செய்த அக்காரம் { (சமையற் குற்றமொன்றும் நேராத படி காய்ச்சித் திரட்டி நன்றாகச்) செய்த கருப்புக்கட்டியும்
நறு நெய் —மணம் மிக்க நெய்யும்
பாலால் —பாலும் ஆகிற இவற்றாலே
பன்னிரண்டு திரு ஓணம் } பன்னிரண்டு திருவோணத் திருநாளளவும்
(நோன்புக்கு உறுப்பாகப் பாயஸ பக்ஷணங்களை)
அட்டேன் —சமைத்தேன்;
பண்டும் இ பிள்ளை பரிசு அறிவன் } முன்பும் இப்பிள்ளையினுடைய ஸ்வபாவத்தை (நான்) அறிவேன்;
(இப்போதும் அப்படியே)
எல்லாம் { (திருவோண விரதத்திற்காகச் சமைத்தவற்றை) யெல்லாம்
விழுங்கிட்டு { (ஒன்றும் மிகாதபடி) விழுங்கி விட்டு
(அவ்வளவிலும் திருப்தி பெறாமல்)
நான் இன்னம் உகப்பன் என்று சொல்லி } 'நான் இன்னமும் உண்ணவேண்டி யிராநின்றேன்' என்று சொல்லிக் கொண்டு
போந்து நின்றான் { (அவ்விடத்தைவிட்டுக்) கடக்க வந்து (அந்யபரரைப்போல) நில்லாநின்றான்;
(இனி இவ்வாறு தீமை செய்யாதபடி)
உன் மகன் தன்னை —உன பிள்ளையான இக் கண்ணனை
கூவிக் கொள்ளாய் { (உன்னருகில்) அழைத்துக் கொள்வாயாக;
(பிள்ளைகளைத் தீம்புசெய்ய வொட்டாதபடி பேணி வளர்க்கவேணடி யிருக்க, அப்படி வளர்க்காமல)
இவையும் —இப்படிவளர்ப்பதும்
சிலவே —சில பிள்ளை வளர்க்கையோ?

* * *—கீழ்ப்பாட்டில் கண்ணபிரான் தாயால் வருந்தி யழைக்கப்பட்டும் அவள்பாற் செல்லாமல் வேறொருத்தியின் வீட்டிலே புகுந்து, அவள் நோன்புக்கு உடலாகச் சமைத்து வைத்துள்ளவற்றை யடங்கலும் வாரிவிழுங்கிவிட்டு வேற்றுப்பொருளில் தேடுதலுற்றவன் போல அபிநயித்து வெளியேவந்து நிற்க இத்தீம்பைக் கண்ட அவள் ஆற்றமாட்டாமல் யசோதை யருகில் வந்து முறைப்படுகின்றனள். அக்காரம் – திரட்டுப்பால் என்னலாம். [பன்னிரண்டு இத்யாதி.] ஒவ்வொரு திருவோணத்திருநாளிலும் வ்ரதாங்கமாகச் சமைக்க வேண்டியவற்றை அவ்வப்போதுகளில் சமைத்திடாமல் சக்திக்கேற்ப ஸாம்வத்ஸரிக வ்ரதங் கொண்டு அவ்விரதநாளில் பன்னிரண்டு திருவோணங்களிலுஞ் சமைக்கவேண்டியவற்றைச் சேர்த்துச் சமைத்தேன் என்றுகருத்து. அட்டேன் = அடுதல்–சமைத்தல். [பண்டு மித்யாதி] வ்ரதாங்கமாக நாம் சமைக்கும் பக்ஷணங்களைத் தேவபூஜைக்கு முன்னமே இவன் வாரி விழுங்கிவிடுவன் என்பதை நான் பண்டே அறிவேன் என்றவாறு. 'இதுவும் ஒன்றே' என்று ஒருமையாகக் கூறாமல் 'இவையுஞ்சிலவே' என்று பன்மையாகக் கூறினது—நீ பிள்ளைவளர்க்கும் பரிசும அவன் தீமைசெய்யுந் திறமும் நான்வந்து முறைப்படும் முறைமையு மெல்லாம் சால அழகியவாயிருக்கின்றன வென்ற கருத்தைக் காட்டும். .... (7)

209 கேசவனேயிங்கேபோதராயே கில்லேனென்னாதிங்கேபோதராயே *
நேசமிலாதாரகத்திருந்து நீவிளையாடாதேபோதராயே *
தூசனஞ்சொல்லுந்தொழுத்தைமாருந் தொண்டருநின்றவிடத்திநின்று *
தாய்சொல்லுக்கொள்வதுதன்மங்கண்டாய் தாமோதரா விங்கேபோதராயே. (8)

கேசவனே —அழகியகுழலையுடையவனே!
இங்கே போதராய் —இங்கே வருவாயாக;
கில்லேன் என்னாதே { 'மாட்டேன்' என்று மறுத்துச் சொல்லாமல்
இங்கே போதராய்—;
(என்று யசோதை யழைக்க, இங்கே சிறிது விளையாடி வருகிறேன் என்று கண்ணன் சொல்ல,)
நீ —நீ
நேசம் இலாதார் } (உன்மீது) அன்பில்லாதவர் களுடைய
அகத்து இருந்து —அகங்களிலே யிருந்து
விளையாடாதே —விளையாட்டொழிவது மன்றி,
தூசனம் சொல்லும் } (உன்மேல்) பழிப்புக்களைச் சொல்லு கிற
தொழுத்தை மாரும் } (இடைச்சிகளுக்கு) அடிச்சிகளான வர்களும்
தொண்டரும் —(இடையர்க்கு) அடியரானவர்களும்

நின்ற —நிற்கின்ற
இடத்தில் நின்று —இடங்களையு மொழிததுவிட்டு
போதராய் —(இங்கே) வாராய்;
(என்று யசோதை சொல்லியும் அவன் வரக்காணமையாலே,)
தாய் சொல்லு —தாய் வாய்ச்சொல்லை
கொளவது —மேற்கொண்டு நடப்பது
தன்மம் கண்டாய் —(பிள்ளைகளுக்கு) தர்மங்காண்;
(ஆதலால்)
தாமோதரா! இங்கே போதராய்.
[என்றழைக்கின்றாள்.]

* * *—கண்ணபிரானே! நீ விளையாடுதற்கு இங்கே விசாலமான இடமுண்டே; இழிசனங்களான வேலைக்காரிகளும் வேலைக்காரருங்கூட உன்மேல் குற்றங்குறைகள் கூறும்படி பொறாமைக்காரர்களுள்ள விடங்களில் இருந்து கொண்டு விளையாடாமல், அசைந்திடுங் குழலழகும் நீயுமாய் வரும் நிலையைக்கண்டு நான் மகிழும்படி இங்கு வாராய் என்றழைக்கிறாள் யசோதைப்பிராட்டி. ஸ்நேஹம் என்ற வடசொல் 'நேசம்' என விகாரப்பட்டது. தூசனம்—தூஷணம். தோழுத்தைமார்—அடிமைப்பெண்கள்; இடைச்சிகளாகிலும் இடையர்களாகிலும் தாங்கள் நேராகப்பழிக்கில் வருந்திப் பொறுக்கலாயிருக்கும்; ஒரு நாழி நெல்லுக்குத் தம் உடலையுமுயிரையு மெழுதிக்கொடுத்துவிட்டு உழைக்கின்ற குக்கர் பேசும் பழிகளைப் பொறுக்கவொண்ணாதென்ற கருத்தைக்காண்க. தன்மம—யாகம். [தாமோதரா] என்கயிறுண்டு, உன்வயிறுண்டு; அங்குநின்று பெறும்பேறு என்? என்பது உள்ளுறை. (8)

210 கன்னலிலட்டுவத்தோடுசீடை காரேள்ளினுண்டைகலத்திலிட்டு *
என்னகமேன்றுநான்வைத்துப்போந்தேன் இவன்புக்கவற்றைப்பெறுத்திப்போந்தான் *
பின்னுமகம்புக்குறியைநோக்கிப் பிறங்கொளிவெண்ணெயுஞ்சோதிக்கின்றான் *
உன்மகன்றன்னையசோதைநங்காய் கூவிக்கொள்ளாயிவையுஞ்சிலவே. (9)

அசோதை நங்காய்!—;
கன்னல் —கருப்புக்கட்டிப்பாகுடன் சேர்ந்த
இலட்டுவத்தோடு —'லட்டு' என்னும் பக்ஷயததோடு
சீடை —சீடையையும்
கார் எள்ளின் உண்டை } காரெள இட்டு வாரினஎளளுண்டையையும
கலத்தில் இட்டு } (அவ்வவறறுக்கு உரிய) பாததிரங்களிலே நிறைத்து
என அகம் எனறு } 'என் அகம (ஆகையால் இங்குப் புகுவாரிலலை') எனறு நினைத்து
(விசேஷமாகக காவலிடாமல்,)
வைத்து —உறிகளிலே வைதது, வைததுவிட்டு
நான் போந்தேன —நான் (வெளியே) வநதேன;
(அவ்வளவில்)
இவன் புக்கு அவற்றை பெறுத்தி போந்தான் { இப்பிளளையானவன் (அவவிடத்திலே வந்து புகுந்து அப்பணியாரங்களை (நான்) பெறும்படிபண்ணி (ஒன்று மறியாதவன்போல இவ்வருகே) வநதுவிட்டான;
(அவ்வளவிலும் பர்யாப்தி பிறவாமையால்)
பின்னும் அகம் புக்கு உறியை நோக்கி } மறுபடியும் (என்) வீட்டினுள் புகுநது உறியைப் பார்த்து
(அதில்)
பிறஙகு ஒளி வெண்ணெயும சோதிக்கின்றான் } மிகவும் செவ்வியை உடைத்தான வெண்ணெய் உண்டோ என்று ஆராயா நின்றான்;
(இச்சேஷ்டைகள் எனக்குப் பொறுக்கப் போகாமையால்,)
உன் மகன் தனனை கூவிக் கொள்ளாய் { உன் பிள்ளையாகிய கண்ணனை (உன்னருகில் வரும்படி) அழைததுக் கொள;
இவையும் சிலவே { (இப்படி இவனைத் தீம்பிலே கைவளர விட்டிருக்கிற) இவையும் ஒரு பிள்ளை வளர்க்கையோ?

* * *—கீழ்ப்பாட்டில் கண்ணபிரான் யசோதையாலழைக்கப்பட்டும் வாராமல் மற்றொருத்தி வீட்டிற்சென்று அங்குள்ள பக்ஷணங்களை யெல்லாம் நிச்சேஷமாகத்தானே புஜித்து இவ்வகையான தீம்புகளைச்செய்ய, அவ்விடைச்சி யசோதை பக்கலிலேவந்து முறைப்படுகின்றனள். 'கன்னல்' என்கிறவிது மேற்சொல்லுகிறவை யெல்லாவற்றோடும் அந்வயிக்கக் கடவது. இலட்டுவம்—'லட்டுகம்' என்கிற பணியாரம்; 'இலட்டுகத்தோடு'

என்றும் பாடமுண்டாம். 'பெறுத்திப்போந்தான்' என்பது வ்யதிரேகோக்தி; பிறகுறிப்பு: அவற்றில் நானுஞ்சிலபெறும்படி சேஷப்படுத்தாமல் முழுவதையும் தானே வாரியுண்டா னென்று கருத்து. பெறுத்திப்போந்தான்—பெற்றுப்போனன் என்றுமாம். இப்பாட்டில் ஈற்றடிக்கு வேறுவகையாகவுங் கருத்துரைக்கலாம்; 'உன்மகன்றன்னைக் கூவிக்கொள்ளாய்' என்று அவ்விடைச்சி சொன்னவாறே, 'முச்சந்தியும் அவன்மேற் குற்றங்கூறிக் கதறுகையேயோ உங்களுக்கு வேலை? சிறுபிள்ளைகள் இவ்வாறு செய்கை இயல்பன்றோ? உங்கள் பிள்ளைகள் உங்களுக்குக் கீழ்ப்படிந்து நடக்கின்றனவோ' என்று யசோதை அவளை வெறுத்துநிற்க, அதற்கு அவள் 'அவன் செய்தவற்றுக்குமேலே இவையும் சிலவே' என்று உள்வெதும்பி உரைக்கின்றனளென்க. .... .... .... .... (9)

211 சொல்லிலரசிப்படுதிநங்காய் சூழலுடையனுன்பிள்ளைதானே *
இல்லம்புகுந்தென்மகளைக்கூவிக் கையில்வளையைக்கழற்றிக்கொண்டு *
கொல்லையினின்றுங்கொணர்ந்துவிற்ற அங்கொருத்திக்கவ்வளைகொடுத்து *
நல்லனநாவற்பழங்கள்கொண்டு நானல்லேனென்றுசிரிக்கின்றனே. (10)

நங்காய் —யசோதைப்பிராட்டி!
சொல்லில் {(உன்மகன் செய்ததீமைகளை நாங்கள்) சொன்னால்
அரசிப்படுதி {[அதற்காக நீ] சீற்றங்கொள்ளாநின்றாய்;
உன் பிள்ளை தான் —உன் பிள்ளையோவென்றால்,
சூழல் உடையனே {[பற்பல] வஞ்சனைச்செய்கைகளை உடையவனாயிருக்கின்றானே,
[என்று ஓரிடைச்சி சொல்ல, 'அவன் என்னதீமை செய்தான்?' என்று யசோதை கேட்க;]
இல்லம் புகுந்து என் மகளை கூவி } [என்] வீட்டினுள் புகுந்து என் பெண்ணை [பேர்சொல்லி] அழைத்து
கையில் வளையை கழற்றிக்கொண்டு } [அவளுடைய] கையிலிருந்த வளையை [பலாத்காரமாக] நீக்கிக் கொண்டு போய்,
கொல்லையில் நின்றும் கொணர்ந்து } காடுகளில் நின்றும் [நாவற்பழங்களை இடைச்சேரித் தெருக்களில்] கொண்டுவந்து
அங்கு —அவ்விடத்தில்
விற்ற —[அவற்றை] விற்பனை செய்யலுற்ற
ஒருத்திக்கு —ஒரு பெண்பிள்ளைக்கு
அவ் வளை கொடுத்து } அந்த [என்மகளுடைய] கைவளையைக் கொடுத்து
[அதற்குப்பதிலாக]
நல்லன நாவல் பழங்கள் கொண்டு {[தனக்கு] நல்லவையாகத் தோற்றின நாவற்பழங்களை [அவளிடத்தில்] வாங்கிக்கொண்டு
(போரும் போராதென்று விவாதப்படுகிற வளவிலே, என்னைத்தன் அருகில் வரக்கண்டு, நான் ஒன்றும் கேளாதிருக்கச் செய்தேயே)
நான் அல்லேன் என்று {['உன் மகளினது கைவளையைக் களவுகண்டவன்] நானல்லேன்' என்று தானாகவே சொல்லி, [அவ்வளவில் தன் திருட்டுத்தனம் வெளியானதைத் தானே அறிந்து கொண்டு]
சிரிக்கின்றான் } [ஓ! மோசம் போனோமே! என்று] சிரியாநின்றான்,
[இதிலும் மிக்க தீமையுண்டோ எனகிறாள்.]

* * *—'உன் மகன்றன்னைக் கூவிக்கொள்ளாய்' என்று ஒருத்தி சொல்லி வாய் மூடுவதற்குள் மற்றொருத்திவந்து கண்ணபிரான் தன்வீட்டிற் செய்த தீமைகளைச் சொல்லி முறைப்படுகின்றனள். [நானல்லேன் இத்யாதி.] நாவற்பழக்காரியின்கையில் வளையிருக்கக் கண்டு 'இவ்வளை உனக்கு வந்தது எப்படி?' என்று இவள்கேட்க, அவள் 'இதை எனக்கு இவன் தந்தான்' என்று கண்ணனைக்காட்ட, இவள் 'நீயோ இவளுக்கு வளைகழற்றிக் கொண்டு கொடுத்தாய்?' என்று கண்ணனைக்கேட்க, அதற்கு அவன் "நான் அல்லேன் காண், என்கையில் வளைகண்டாயோ? நான் உன் வீட்டிற் புகுந்ததைக் கண்டாயோ? உன் மகளைப் பேர்சொல்லியழைக்கக் கண்டாயோ? வந்து கையில் வளைகழற்றினது கண்டாயோ? கண்டாயாகில் உன்மகள் வளையை அப்போதே பிடுங்கிக் கொள்ளாவிட்ட

தென்" என்றாற்போலச் சிலவார்த்தைகளைச் சொல்லி அவனை மறுநாக்கெடுக்கமுடியாதபடி பண்ணிச் சிரியாநின்றான் என்பது ஆன்றோர் கருத்து.

அரசி — அரசன்மனைவி. அரசிப்படுதி — அரசியின் தன்மையை யடைகிறாய்; இது, கோபிக்கிறாயென்ற பொருளைத் தந்தது. சூழல்—சூழ்ச்சி; தந்திரம்: 'அல்' விகுதி பெற்ற தொழிற்பெயர். ... .... .... .... .... (10)

212 வண்டுகளித்திரைக்கும்பொழில்சூழ் வருபுனற்காவிரித்தென்னரங்கன் *
பண்டவன்செய்தகிரீடையெல்லாம் பட்டர்பிரான்விட்டுசித்தன்பாடல் *
கொண்டிவைபாடிக்குனிக்கவல்லார் கோவிந்தன்றன்னடியார்களாகி *
எண்டிசைக்கும்விளக்காகிநிற்பார் இணையடியென்றலைமேலனவே. (11)

வண்டு களித்து இரைக்கும் பொழில் — வண்டுகளானவை [தேனைப் பருகிக்] களித்து ஆரவாரங்கள் செய்யப் பெற்ற சோலைகளாலும்
வருபுனல் காவிரி சூழ் தென் அரங்கன் — [அச்சோலைகளுக்காகப் பெருகி] வாராநின்றுள்ள நீரையுடைத்தான காவேரீநதியாலும் சூழப்பெற்ற அழகிய திருவரங்கத்தில்
அவன் — நித்யவாஸம் பண்ணுகிற வைபவத்தை யுடையனான அப்பெருமான
பண்டு செய்த கிரீடை எல்லாம் — [விபவமாகிய] முற்காலத்தில்செய்த லீலாசேஷ்டிதங்களெல்லாவற்றையும் [விஷயமாகக்கொண்டு]
விட்டு சித்தன் பட்டர் பிரான பாடல் — விஷ்ணுவை நெஞ்சிற் கொண்டவராய் பிராஹ்மணோத்தமரான பெரியாழ்வார் பாடினபாடலாகிய
இவை கொண்டு — இப்பாட்டுகளை [அநுஸந்தேயமாகக்] கொண்டு
பாடி —[இப்பாசுரங்களைப்] பாடி
[அதனால் பக்தி மீதூர்ந்து உடம்பு இருந்தவிடத்தில் இராமல் விகாரமடைந்து]
குனிக்க வல்லார் —கூத்தாடவல்லவர்களாய்
கோவிந்தன் தன் அடியார்கள் ஆகி — கண்ணபிரானுக்கு அடியவர்களாய்
எண் திசைக்கும் விளக்கு ஆகி நிற்பார் இணை அடி — எட்டுத் திக்குக்களிலும் [உள்ள இருள் நீங்கும்படி [அத்திக்குக்களுக்கு] விளக்காக நிற்குமவர்களுடைய திருவடியிணைகளானவை
என் தலை மேலன — என்னுடைய முடியின்மேல் வீற்றிருக்கத்தக்கவை.

* * *—பகவத் விஷயத்திலே நான் பேசின இப்பாசுரங்களைப் பாடியாடி உத்தம பாகவதர்களாய் எங்கும் புகழ்பெற்று விளங்குமவர்களின் திருவடிகளை யான் முடிமேலணிவேன் என்பதாம். "குருகூர்ச் சடகோபன் சொன்ன தீதிலாத வொண்டமிழ்களிவையாயிரத்துளிப்பத்தும, ஓதவல்ல பிராக்கள் நம்மை ஆளுடையார்கள் பண்டே" என்ற நம்மாழ்வார் பாசுரத்தை அடியொற்றியதாமிது. இதனால், இத்திருமொழி கற்பாருடைய சிறப்பும் அவர்களிடத்தில் தமக்குள்ள கௌரவபுத்தியும் தெரிவிக்கப்பட்டனவாம். 'க்ரீடா' என்னும் வடசொல் கிரீடையெனத் திரிந்தது. "என் தலை மேலன" என்று வருவதனால் 'பட்டர்பிரான் விட்டுசித்தன்' என்பது தன்மையிற்படர்க்கை வந்த வழுவமைதியாம். மேலன=பலவின்பாற் குறிப்பு முற்று. .... .... .... .... .... (11)

அடிவரவு:—வெண்ணெய் வருக திரு கொண்டல் பாலை போதர் செங்நெல் கேசவன் கன்னல் சொல்லில் வண்டு ஆற்றில்.

ஒன்பதாந்திருமொழி உரை முற்றிற்று.

## இரண்டாம் பத்து—பத்தாந்திருமொழி, ஆற்றிலிருந்து.

---

அவதாரிகை:— கண்ணபிரானாலே நலிவுபட்ட பல பெண்பிள்ளைகள் யசோதைப் பிராட்டிபக்கலிலே வந்து 'ஸர்வரக்ஷகனாய் அவாப்தஸமஸ்தகாமனான இவன் எம்மை இன்று நலிந்தபடிகளை நினைத்தால் எங்களுக்குப் பிழைத்திருக்க விரகில்லை; இவனால் நாங்கள் முடியா நின்றோம்' என்று முறைப்பட்ட படியை ஆழ்வார் தாமும் தம்மை அவர்களாகப் பாவித்துத் தாமும் அப்படியே பேசி அக்கண்ணபிரானுடைய லீலாரஸத்தை அநுபவிக்கிறாரிதில் .... .... .... .... (*)

213 ஆற்றிலிருந்து விளையாடுவோங்களை *
சேற்றாலெறிந்து வளைதுகிற்கைக்கொண்டு *
காற்றிற்கடியனாய் ஓடியகம்புக்கு *
மாற்றமுந்தாரானாலின்றுமுற்றும் வளைத்திறம்பேசானாலின்றுமுற்றும் (1)

ஆற்றில் இருந்து { யமுனையாற்றங்கரை மணலிலிருந்து கொண்டு
விளையாடுவோங்களை — விளையாடாநின்ற எங்களைமேல
சேற்றால் எறிந்து — சேற்றை விட்டெறிந்து
வளை துகில் கைக்கொண்டு } (எங்களுடைய) கைவளைகளையும் புடவைகளையும (தன) கையால் வாரி எடுத்துக்கொண்டு
காற்றில் கடியன் ஆய் ஓடி அகம் புக்கு { காற்றிலுங்காட்டில் மிக்க வேகமுடையவனாக (அங்கு நின்றும்) ஓடிவந்து (தன்) வீட்டினுள்ளே புகுந்துகொண்டு

(வாசலில நின்று அவன பேரைச்சொல்லிக் கூப்பிட்டுக் கதறுகின்ற எங்களைக் குறித்து)
மாற்றமும் தாரானால் இன்று முற்றும் { ஒரு வாய்ச்சொல்லும் அருளாமல் உபேக்ஷியாநின்ற பெருமானால் இப்போது முடியாநின்றோம்;
வளைத்திறம் பேசானால { (தான் முன்பு வாரிக்கொண்டு போன வளையின் விஷயமாக (தருகிறேன், தருகின்றிலேன என்பவற்றில் ஒன்றையும) வாய்விட்டுச் சொல்லாத அப்பெருமானால
இன்று முறறும்—.

* * *—இவன் நினைத்தபடி தீம்புசெய்ய வொண்ணாமே பலருடைய போக்குவரத்துள்ள இடத்திலே நாங்களிருந்து விளையாடினால் அங்குந் தான்வந்து தீமை செய்துவிட்டு ஓடிவந்து ஒளிந்துகொண்டதுமன்றியிலே ஒரு வார்த்தையும் சொல்லாதொழிகின்ற உன் பிள்ளையின் தீமபு நிமித்தமாக நாங்கள் உயிரையிழக்கப் புகாநின்றோமென்று சில ஆய்ப்பெண்கள் யசோதை பக்கலிலே வந்து முறைப்படுகின்றனரென்க. கண்ணபிரான் பிறரறியாதபடி கையால் தொட்டுச சில விலாஸங்கள் பண்ணினானாகில ஒரு குறையுமில்லை; பிறரறிந்து 'இதுவென்?' என்று கேட்கும்படி சேற்றைவிட்டெறிந்தானே யென்று வருந்துகின்றனர் போலும். வளையையும் துகிலையும் தாராதொழிந்தாலும வாயில் நின்றும ஒரு முத்து உதிர்த்தானாகில் உயிர் தரித்திருப்பர்கள் போலும. முற்றும் ='முற்றுதும' என்பதன் குறை. முற்றுதும்—தன்மைப்பன்மை வினைமுற்று. உயிரை இழந்துகொண்டேயிருக்கிறோம என்கை. (1)

214 குண்டலந்தாழக் குழல்தாழநாண்தாழ *
எண்டிசையோரும் இறைஞ்சித்தொழுதேத்த *
வண்டமர்பூங்குழலார் துகில்கைக்கொண்டு *
விண்டோய்மரத்தானாலின்றுமுற்றும் வேண்டவுந்

குண்டலம் தாழ — கர்ணபூஷணங்களானவை (தோளளவும்) தாழ்ந்து தொங்கவும்
குழல் தாழ — திருக்குழல்களானவை (அத்தோடொக்கத்) தாழ்ந்தசையவும்
நாண் — திருக்கழுத்திற் சாத்தின) விடுநாணானது)
தாழ — (திருவுந்தியளவும்) தாழ்ந்தசையவும்
எண் திசையோரும் — எட்டு திக்கிலுமுள்ள (தேவர் முனிவர் முதலியோர் எல்லாரும்
இறைஞ்சி தொழுது ஏத்த — நன்றாக [ஸாஷ்டாங்கமாக] வணங்கி ஸ்தோத்திரம் பண்ணவும்
(இப்படிப்பட்ட நிலைமையையுடையனாய்)
வண்டு அமர் பூ குழலார் — வண்டுகள் படிந்துகிடக்கப்பெற்ற பூக்களை அணிந்த கூந்தலையுடைய இடைச்சிக(ளான எங்க)ளுடைய
(ஆற்றங்கரையில் களைந்து வைக்கப்பட்டிருந்த)
துகில் — புடவைகளை
கைக் கொண்டு — (தனது) கைகளால் வாரிக்கொண்டு
விண் தோய் மரத்தானால் — ஆகாசத்தை அளாவிய (குருந்த) மரத்தின்மேல் ஏறியிரா நின்றுள்ள கண்ணபிரானால்
இன்று முற்றும்—;
வேண்டவும் — (எங்கள் துகிலைத் தந்தருள் என்று நாங்கள்) வேண்டிக் கொண்டபோதிலும்
தாரானால் — (அவற்றைத்) தந்தருளாத கண்ணபிரானால்
இன்று முற்றும்—.

* * *—கண்ணபிரான், இடைச்சிகள் கரையிற் களைந்துவைத்திருந்த புடவைகளைத் தான் கைக்கொள்ளும்போது குனிந்தெடுக்கவேண்டியிருத்தலால், குண்டலமும் குழலும் நாணும் தாழப்பெற்றன. நாண்—கழுத்துக்கு அலங்காரமாக அணிந்துகொண்டுள்ளதொரு கநககண்டிகை. "*உய்யவுலகு படைத்துண்ட மணிவயிற்றனைப் பரம்பரனாயிருந்துள்ளவன் கர்மவச்யரைப்போல் இங்ஙனே வந்து பிறந்ததுமல்லாமல் இவ்வாறு இடைப்பெண்களோடு இட்டீடுகொண்டு விளையாடவும் பெறுவதே! இதென்ன ஸௌசீலயம்!" என்று பலரும் புகழாநிற்பர் என்ற கருத்தைக் காட்டும் இரண்டாமடி. 'இறைஞ்சி' என்றாலும் 'தொழுது' என்றாலும் 'வணங்கி' என்றே பொருளாம்; இங்கு 'இறைஞ்சி' என்பதனால் மாநஸமான வணக்கத்தையும், 'தொழுது' என்பதனால் காயிகமான வணக்கத்தையும் சொல்லுகிறதென்று கொள்ளலாம். விண் தோய மரம்—ஆகாசத்தளவும் ஓங்கி யுயர்ந்துள்ள மரமென்றபடி. எங்களுடைய குழலழகைக் கண்டு மகிழ்ந்து கூடவிருந்து அநுபவிக்கப் பெறாமல் குரங்குபோல் மரத்தின்மேலேறிக் கிடப்பதே! என்ற வயிறெரிச்சல் தோற்ற 'வண்டமர் பூங்குழலார்' என்கிறார்கள். .... .... .... (2)

215 தடம்படுதாமரைப் பொய்கைகலக்கி *
விடம்படுநாகத்தை வால்பற்றியீர்த்து *
படம்படுபைந்தலை மேலெழப்பாய்ந்திட்டு *
உடம்பையசைத்தானாலின்றுமுற்றும் உச்சியில்நின்றானாலின்றுமுற்றும். (3)

தடம் படு தாமரைப்பொய்கை — இடமுடைத்தான [விசாலமான] தாமரைப்பொய்கையை
கலக்கி — (உள்ளே குதித்துக்) கலங்கச்செய்து, (அக்கலக்கத்தினால் சீற்றமுற்று)
விடம்படு நாகத்தை வால் பற்றி ஈர்த்து — விஷத்தை உமிழ்ந்துகொண்டு அப்பொய்கையில்) மேற்கிளம்பின காளிய ஸர்ப்பத்தை வாலைப்பிடித்திழுத்து, (அதனால் பின்பு)
படம் படு — படமெடுக்கப்பெற்று
பை தலை மேல் எழ பாய்ந்திட்டு — மேற்கிளர்ந்திருந்த (அந்த நாகத்தின்) தலையின்மீது கிளரக் குதித்து அத்தலையின்மீது நின்று
உடம்பை அசைத்தானால் — (தன) திருமேனியை அசைத்துக் கூத்தாடின கண்ணபிரானால்
இன்று முற்றும்—;
(அந்தக்காளியன் இளைத்து விழுந்து தன்னைச் சரணம் புகுமளவும்)
உச்சியில் நின்றானால் — (அவனுடைய) படத்தின் மீது நின்றருளின கண்ணபிரானால்
இன்று முற்றும்—.

* * *—இடையர்களும் பசுக்களும் விடாய்தீர நீரைப்பருகவொண்ணாதபடி தாமரைப் பொய்கையிலே நெடுநாளாய்க்கிடந்த காளிய நாகத்தின் கொழுப்படக்கினபடியை

அநுஸந்தித்த ஆய்ச்சிகள் மகிழவேண்டியிருக்க, அது செய்யாமல் 'இன்று முற்றும்' என்பா னென் னென்னில்; இப்படியெல்லாம் ஆச்ரிதவிரோதி நிரஸநசீலனென்று பேர்பெற்றுள்ள வன் இன்று எங்கள் பக்கல் மாத்திரம் தீம்புசெய்யத் தலைப்பட்டானே! இது எங்கள் பாவமோ? இக்கஷ்டங்களை யாம் பொறுத்து உயிர்தரித்திருப்பது மிகவும் அரிது என்று வயி றெரிந்து கூறுகின்றனரெனக் கொள்க. விடம்—விஷம். வால்—'வாலஃ' என்ற வடசொற் சிதைவு. 'பைம்பொன்' என்ற சொல், பசுமை+பொன் எனப் பிரிகிறுப்போல, பைந்தலை என்கிற இச்சொல்லும், பசுமை+தலை எனப் பிரிகின்றதென்று நினைக்கவேண்டா; பை— என்பது மெத்தெனவு, அழகு, பாம்பின்படம் முதலிய பல பொருள்களைக் குறிப்பதொரு தனிச்சொல் என்க. 'இவன் இப்பாம்பின் வாயில அகப்பட்டுக்கொள்ளப் போகிறானித்தனை' என்று நடுநடுங்கி அஞ்சிக்கிடந்த அநுகூலர் மனமகிழ உடம்பையசைத்துக் கூத்தாடினபடி. (3)

216 தேனுகனாவிசெகுத்துப் பனங்கனி *
தானெறிந்திட்ட தடம்பெருந்தோளினால் *
வானவர்கோன்விட வந்தமழைதடுத்து *
ஆனிரைகாத்தானாலின்றுமுற்றும் அவையுய்யக்கோண்டானாலின்றுமுற்றும். (4)

| | | | |
|---|---|---|---|
| தேனுகன் ஆவி செகுத்து | தேநுகாஸுரனுடைய உயிரை முடிக்க நினைத்து (அத்தேனுகனை) | வானவர் கோன் விட வந்த மழை தடுத்து | தேவேந்திரனது ஏவுதலாலே வந்த வர்ஷத்தைத் தவிர்த்து |
| பனங்கனி | (அஸுராவிஷ்டமான) பனைமரத்தின பழங்கள் (உதிரும்படியாக) | ஆன் நிரை காத்தானால் | பசுக்களின் திரளை ரக்ஷித்தருளின கண்ணபிரானால இன்று முற்றும்—; |
| எறிந்திட்ட | (அந்த மரத்தின்மேல்) வீசியெறிந்த | அவை | அப்பசுக்கூட்டத்தை |
| தடபெரு தோளினால் | மிகவும் பெரிய தோளாலே, (கோவர்த்தந பர்வதத்தை யெடுத்து) | உய்யக் கொண்டானால் | உஜ்ஜீவிப்பித்தருளின கண்ணபிரானால் இன்று முற்றும்—. |

* * *—தேநுகன்—கழுதை வடிவங்கொண்டு கண்ணனை நலியவந்த அசுரன்; இவ்வரலாற்றை "வானவர் தாமமகிழ" (1-5-4) என்றபாட்டின் உரையிற் காண்க. செகுத்து—செகுக்க; எச்சத்திரிபு. பனை+கனி, பனங்கனி; "பனைமுன்....வலிவரின் ஐபோயமமும்" என்ற சிறப்பு விதி காண்க. தான்—அசை. 'ஆனிரை காத்தானால்' என்பதனால் அநிஷ்ட நிவர்த்தநமும், 'அவை உய்யக்கொண்டானால்' என்பதனால் இஷ்டப்ராபணமும் சொல்லப்படுகின்றது; அதாவது—வந்த ஆபத்தை அகற்றி, வயிறு நிரம்பப் புல்லூர் தண்ணீருங் கொடுக்கை. (4)

217 ஆய்ச்சியர்சேரி அளைதயிர்பாலுண்டு *
பேர்த்தவர்கண்டுபிடிக்கப் பிடியுண்டு *
வேய்த்தடந்தோளினார் வெண்ணெய்கோள்மாட்டாது * அங்
காப்புண்டிருந்தானாலின்றுமுற்றும் அடியுண்டழுதானாலின்றுமுற்றும். (5)

| | | | |
|---|---|---|---|
| ஆய்ச்சியர் சேரி | இடைச்சேரியிலே (இடைச்சிகள் கடைவதாக) | பேர்த்து அவர் கண்டு பிடிக்க | திருடப்புகுந்த வளவிலே) அவ்விடைச்சிகள் (ஒளித்திருந்து, இவன திருடுகிறபோதில) கண்டு (இவனைத் தங்கள்கையில) அகப்படுத்திக்கொள்ள |
| அளை தயிர் பால் உண்டு | (மத்தைநாட்டி) உடைத்த தயிரையும (காய்ச்சுவதற்காக வைத்த) பாலையும் அமுதுசெய்து (அவர்களோடு திருட்டியடையாமல) பின்னையும (ஒருகால் வெண்ணெய் | | அதற்குத் தப்பமாட்டாமல்) |
| | | பிடியுண்டு | (அவர்கள் கையிலே) பிடிபட்டு, |

| | | | |
|---|---|---|---|
| வேய் தட தோளினார் | மூங்கிலைப்போன்று பருத்த தோள்களையுடைய அவ்விடைச்சிகளுடைய | அங்கு ஆப்புண்டு இருந்தானால் | அவர்கள் வீட்டில் கட்டுண்டிருந்த கண்ணபிரானால் இன்று முற்றும்—; |
| வெண்ணெய் கொள் மாட்டாது | வெண்ணெயை (தான் நினைத்தபடி) கைக்கொள்ள மாட்டாமல் | அடியுண்டு அழுதானால | (அவர்கள கையால்) அடிக்கப்பட்டு அழுத கண்ணபிரானால இன்று முற்றும்—. |

* * *—‘பழநாளைத்திருடன் ஒருநாளைக் ககப்படுவான்’ என்னும் பழமொழியை இரண்டாமடியில் நினைக்க. அளைதயிர்—தன் ஆவலின் அளவுக்கேற்பத் தடாவினில் தன்கையுள்ளளவும் போகவிட்டு அளைகைக்கு உரிய தயிர் என்னவுமாம். வேய்த்தடந்தோளினார்—ஸர்வசக்தனை ஸர்வேச்வரனுக்கு இடைச்சிகள் கையில் பிடியுண்டு ஆப்புண்கையைத் தப்பிப் போதல் அரிதன்றேயாயினும் அங்ஙன் தப்பிப்போகாமல், அவர்கள் படுத்தினபாட்டுக்கெல்லாம் இசைந்திருந்தது அவ்விடைச்சிகளின் வேய்த்தடந் தோளினழகைக் கண்டு கொண்டிருக்கைக்காகவென்க. கோள்மாட்டாது-கொள்ளமாட்டாது; கோள்— முதனிலை. .... (5)

218 தள்ளித்தளர்நடையிட்டு இளம்பிள்ளையாய் *
உள்ளத்தினுள்ளே அவளையுறநோக்கி *
கள்ளத்தினால்வந்த பேய்ச்சிமுலையுயிர் *
துள்ளச்சுவைத்தானலின்றுமுற்றும் துவக்கறவுண்டானலின்றுமுற்றும். (6)

| | | | |
|---|---|---|---|
| தள்ளி தளர்நடை இட்டு | (காலூன்றிநடக்கத் தரிப்பில்லாமையாலே) தட்டித்தடுமாறித் தளர்நடை யிட்டு | உள்ளத்தின் உள்ளே உற நோக்கி | (‘நம்மை நலியவருகிறவள் இவள்’ என்று) தன் மநஸ்ஸினுள்ளே (எண்ணி) உறைக்கப்பார்த்து (பிறகு அ[illegible] தனக்கு முலை உணணக்கொடுத்தவாறே) |
| இளம்பிள்ளை ஆய் | (நடக்க வேண்டும்படியான) இளங்குழந்தையாய் (இருக்கச் செய்தே) | முலை உயிர் துள்ள சுவைத்தானால் | அம்முலையை (அவளுடைய) உயிர் துடிக்கும்படி உறிஞ்சியுண்ட கண்ணபிரானால இன்று முற்றும்—; |
| கள்ளத்தினால் | (தன வடிவை மறைத்துத் தாய் வடிவைக் கொண்டு) கிருத்திரிமத்தாலே | துவக்கு அற உண்டானால் | (அம்முலையில் தடவிக்கிடந்த விஷத்தில் தனக்கு) ஸ்பாசமிலலாதபடி (அம்முலையிற் பாலை) உண்ட கண்ணபிரானால் இன்று முற்றும்—. |
| வந்த பேய்ச்சி முலை | (தன்னைக் கொல்ல) வந்த பேய்ச்சியாகிய அசுரப்பூதனையை | | |

* * *—கண்ணபிரான், தரையிலேகாலூன்றி நடக்கமாட்டாத இளங்குழந்தையாயிருக்கச்செய்தேயே அநாயாஸமாக விரோதிநிரஸநம பண்ணினவனாயிருந்துவைத்து, பருவம் முற்றமுற்ற ஆச்ரிதைகளான எங்களுக்குத் தீமைசெய்யத் தலைப்படுவதே! என்று வயிறெரிந்து முறைப்படுகின்றனர். உள்ளத்தினுள்ளே—‘இவள் நம்மை நலியவருகின்றாள்’ என்று—தான் தெரிந்துகொண்டதை வெளிப்படுத்தினால், வந்தபூதனை அஞ்சி யோடிப்போய்விடுவளென்று உள்ளத்திலுள்ளே அவளை உறநோக்கினான். ‘சுவைத்தான்’ என்ற சொல் நயத்தினால்—விஷந்தடவின அமமுலையைத் தானுண்ணும்போது மாம்பழக்கதுப்பு செப்புமாபோலே ரஸ்யமாக உறிஞ்சியுண்டான் என்பது போதரும; “ஸ்தநம் தத் விஷஸம்மிச்ரம் ரஸ்யமாஸீஜ் ஜகத்குரோ:” என்றான் முனிவனும. விஷமுண்டால் சிறிது வருத்தமாயினும உண்டாகக்கூடுமன்றோவென்று சங்கித்து, அக் கண்ணபிரானுக்கு அது லேசமுமில்லை யென்பதைக் காட்டும் “துவக்கறவுண்டானால்” என்பது. ... ... ... .... (6)

219 மாவலிவேள்வியில் மாணுருவாய்ச்சென்று *
மூவடிதாவென்று இரந்தவிம்மண்ணினை *
ஓரடியிட்டு இரண்டாமடிதன்னிலே *
தாவடியிட்டானலின்றுமுற்றும் தரணியளந்தானலின்றுமுற்றும். (7)

மா வலி வேள்வியில் மாண் உரு ஆய் சென்று — மஹாபலியினுடைய யாகபூமியிலே பிரமசாரி ரூபியாய் எழுந்தருளி
மூ அடி தா என்று இறந்த இ மண்ணினை — (என் அடியாலே) மூன்றடி (நிலம்) கொடு என்று யாசித்துப்பெற்ற இந்தப்பூமியை
(அளந்து தன் வசப்படுத்தத் தொடங்கின வளவிலே)
ஓர் அடி இட்டு — (பூமிப்பரப்படங்கலும் தனக்குள்ளேயாம்படி) ஓரடியைப் பரப்ப வைத்து (அளந்து)
இரண்டாம் அடி தன்னிலே — இரண்டாவது அடியைக்கொண்டு அளக்கத்தொடங்கின வளவிலே
தாவி அடி இட்டானை — (மேலுலகங்களடங்கலும் தனக்குள்ளேயாம்படி) தாவி அடியிட்ட கண்ணபிரானை
இன்று முற்றும்—;
(தேவேந்திரனாகிய ஒரு ஆச்ரிதனுக்காக இப்படி)
தரணி அளந்தானை — லோகத்தை அளந்தவனை இன்று முற்றும்—.

* * *—கண்ணபிரான் தன்னை அழியமாறியும் அடியார்களின் வேண்டுகோளைத் தலைக்கட்டித் தருவனாயிருந்துவைத்து எங்கள் பக்கலிலே தீமைசெய்ய ஒருப்பட்டது என்னே! என்று முறைப்படுகின்றனர். தன் திருவடிகளின் மென்மை நோக்காமல் காடுமேடுகளை அளந்தருளினவன் அத்திருவடிகளின் ஆயாஸந்தீர நாங்கள் அவற்றைப் பிடிக்கின்றோமென்றால் அதற்கிசைந்து திருவடிகளைத் தந்தருளலாகாதோ! என்ற மனக்குறையை நுண்ணிதிலுணர்க. தாவடி இட்டானல்—தாவி அடியிட்டானல்; தொகுத்தல் விகாரம். தாவு அடி—தாவுகின்ற அடி என்று உரைப்பாருமுளர். தரணி—பூமியைச்சொல்லக்கடவ இச்சொல்—இங்குப்பொதுப்படையாக உலகங்களைக்குறிக்கும். இலக்கணையால். .... .... (7)

220 தாழைதண்ணாம்பல் தடம்பெரும்பொய்கைவாய் *
வாழுமுதலை வலைப்பட்டுவாதிப்புண் *
வேழந்துயர்கெட விண்ணோர்பெருமானாய் *
ஆழிபணிகொண்டானலின்றுமுற்றும் அதற்கருள்செய்தானலின்றுமுற்றும் (8)

தாழை — (கரையிலே) தாழைகளையும்
தண் ஆம்பல் — (உள்ளே) குளிர்ந்த ஆம்பல் மலர்களையுமுடைய
தட பெரு — மிகவும்பெரிய
பொய்கைவாய் — தடாகத்தினுள்ளே
வாழும் — வாழ்ந்துகொண்டிருந்த
முதலை — முதலையின்
வலைபட்டு — வலையிலே அகப்பட்டுக்கொண்டு
வாதிப்பு உண் — துன்பமடைந்த
வேழம் — ஸ்ரீ கஜேந்திராழ்வானுடைய
துயர் — வருத்தம்
கெட — தீரும்படியாக
விண்ணோர் பெருமான் ஆய் — நித்ய ஸூரிகளுக்குத் தலைவன் என்பதைத் தோற்றுவிக்கப் பெரிய திருவடியை வாகனமாக உடையனாய்
(அப்பொய்கைக் கரையிலே சென்று)
ஆழி — சக்ராயுதத்தாலே
(முதலையைத் துணித்து)
பணி கொண்டானை — (கஜேந்திராழ்வானுடைய) கைங்கர்யத்தை ஸ்வீகரித்தருளின கண்ணபிரானை
இன்று முற்றும்—;
அதற்கு — அந்த யானையின் திறத்தில்
அருள் செய்தானை — (இப்படிப்பட்ட) கிருபையைச் செய்தருளின கண்ணபிரானை
இன்று முற்றும்—.

* * *—கண்ணபிரான் கஜேந்திராழ்வானுகிற ஒரு மிருகத்துக்காக அந்த:புரத்தையும் அகன்று அரைகுலையத் தலைகுலைய நெடுந்தூரமோடிக் காரியஞ்செய்தவனாயிருந்துவைத்து, அருகிலுள்ள எங்களை இவ்வாறு அகற்றுவதே! இதென்ன கொடுமை! என்று முறைப்படுகின்றனர். போய்கைவாய்–பொய்கையிலே; வாய்—ஏழனுருபு 'நம் சாபமோக்ஷத்துக்கு ஓரானைவருவது எப்போதோ' என்று இதே நினைவாக அம்முதலை பொய்கையினுள்ளே உறைந்திருந்ததனால் 'வாழும்' என்று சிறப்பித்துச் சொல்லப்பட்டது; நற்கதியை எதிர்பார்த்துக் கொண்டிருக்குமிருப்பை வாழ்ச்சியாகச் சொல்லக்கடவதிறே. முதலை என்னுஞ்சொல் இலக்கணையால் அதன்வாயை உணர்த்திற்று. வாதிப்பு–பாயிப்பு பாயா என்றபடி. (8)

221 வானத்தெழுந்த மழைமுகில்போல் * எங்கும்
கானத்துமேய்ந்து களித்துவிளையாடி *
ஏனத்துருவாய் இடந்தவிம்மண்ணினை *
தானத்தேவைத்தானலின்றுமுற்றும் தரணியிடந்தானலின்றுமுற்றும். (9)

(கடலில் நீரை முகந்துகொண்டு)
வானத்து எழுந்த மழை முகில்போல் } ஆகாசத்திலே கிளம்பின வர்ஷிக்கப்புக்க மேகம்போல
(கறுத்த நிறத்தையுடைய)
ஏனத்து உரு ஆய் ஒரு வராகத்தின ரூபமாய்
(அவதரித்து)
கானத்து எங்கும் மேய்ந்து { காடு நிலங்களில் எல்லா விடத்திலும் (திரிந்து) கோரைக்கிழங்கு முதலியவற்றை அமுது செய்து
களித்து விளையாடி செருக்கடைந்து விளையாடி,
(பூமியைப்பாயாகச் சுருட்டிக்கொண்டுபோன ஹிரண்யாக்ஷனைக் கொன்று)
இடந்த இ மண்ணினை } (அண்ட பித்தியில் நின்றும) ஒட்டு விடுவித்தெடுத்த இந்தப்பூமியை
தானத்தே வைத்தானல் } யதாஸ்தானத்தில் (கொணர்ந்து) வைத்து நிலைநிறுத்தின கண்ணபிரானல்
இன்று முற்றும்—;
தரணி { (இப்படி கடலில் மூழ்கிப்போன) பூமியை
இடந்தானல { கோட்டாற்குத்தி எடுத்துக் கொணர்ந்த கண்ணபிரானல்
இன்று முற்றும்—.

* * *—'வானத்தெழுந்த மழைமுகில்போல் ஏனத்துருவாய் தரணி இடந்தானல் இன்றுமுற்றும்; இடந்தவிம்மண்ணினைத் தானத்தே வைத்துக் கானத்து எங்கும்மேய்ந்து களித்து விளையாடினால் இன்றுமுற்றும்' என்று இரண்டு வாக்கியார்த்தமாக்கிப் பொருள் கொள்ளுதல் நன்று; வைத்தானல் என்ற விடத்துள்ள மூன்றும் வேற்றுமையுருபைப்பிரித்து விளையாடி என்ற வினையெச்சத்தோடு கூட்டி உரைத்தவாறு. முன் ஒருகாலத்தில் பூமியைப் பாயாகச்சுருட்டியெடுத்துக்கொண்டு கடலில் மூழ்கிப்போன ஹிரண்யாக்ஷனைத் திருமால் தேவர் முனிவர் முதலியோரது வேண்டுகோளால் மஹாவராஹமாகத் திருவவதரித்துக் கொன்று பூமியைக்கோட்டாற் குத்தியெடுத்துக்கொண்டுவந்து பழயபடி விரித்தருளினன் என்ற வரலாற்றை அநுஸந்தித்து இப்படி பிரளயாபந்நையான பூமியை எடுத்தவன் எங்களை விரஹப்ரளயத்தே தள்ளி வருத்தா நின்றனே! என்று வயிறெரிகின்றனர்.

[இப்பொழுது நடக்கிற சுவேதவராஹ கல்பத்துக்கு முந்தின பாத்ம கல்பத்தைப்பற்றிய பிரளயத்தின் இறுதியில் திருமால் பிரளயப்பெருங்கடலில் மூழ்கியிருந்த பூமியை மேலேயெடுக்க நினைத்து ஸ்ரீவராஹரூபங்கொண்டருளிக் கோட்டுநுனியாலே பூமியை எடுத்து வந்தனனென்றும் அதுபற்றி இக்கல்பத்துக்கு வராஹகல்பமென்று பெயராயிற்று என்றும் புராணவரலாறு உண்டு.] கானம்-கானநம். தானம்-ஸ்தாநம். (9)

222 அங்கமலக்கண்ணன்றன்னை அசோதைக்கு *
மங்கைநல்லார்கள்தாம் வந்துமுறைப்பட்ட *
அங்கவர்சொல்லைப் புதுவைக்கோன்பட்டன்சொல் *
இங்கிவைவல்லவர்க்கு ஏதமொன்றில்லையே. (10)

நல் மங்கை மார்கள் தாம் — (பகவத் ப்ரேமமாகிற) நன்மை பொருந்திய (இடைப்) பெண்கள்
அம் கமலம் கண்ணன் தன்னை — அழகிய செந்தாமரைப் பூப்போன்ற கண்களையுடைய கண்ணபிரான் (செய்த தீம்பு) விஷயமாக
அங்கு வந்து — அந்தக் கண்ணபிரானுடைய வீட்டுக்கு வந்து
அசோதைக்கு முறைப்பட்ட அவர் சொல்லை — (அவன் தாயான) யசோதைப் பிராட்டியிடத்திலே (தங்கள் ஆர்த்திதோற்றக்) கதறிச் சொன்ன அவ்விடைச்சிகளின் சொல்லை,
புதுவைகோன் பட்டன் — ஸ்ரீவில்லிபுத்தூருக்கு நிர்வாஹகரான பெரியாழ்வார்
சொல் இவை — அருளிச்செய்த இப்பாசுரங்களை
இங்கு — இந்த ஸம்ஸாரத்தில் (இருந்துகொண்டே)
வல்லவர்க்கு — ஓதவல்லவர்க்கு
ஒன்று ஏதம் இல்லை — ஒருவகைக் குற்றமும் இல்லையாம்.

* * *—இப்பாட்டால்-இத்திருமொழி கற்ருர்க்குப் பலஞ்சொல்லித் தலைக்கட்டுகிருர்.
மங்கை நல்லார்கள்-நல்ல மங்கைமார்கள் என மாற்றியுரைக்கப்பட்டது .... .... (10)

அடிவரவு:—ஆற்றில் குண்டலம் தடம் தேனுகன் ஆய்ச்சி தள்ளி மாவலி தாழை வானத்து அங்கமலம் தன்னேர்.

பத்தாந்திருமொழி உரை முற்றிற்று.

---

## மூன்ரும்பத்து—முதல்திருமொழி தன்னேராயிரம்

(யசோதை கண்ணன் மேன்மைகளை யநுஸந்தித்து அவனுக்கு முலைப்பால்தர அஞ்சினபடியைக் கூறுதல்)

---

அவதாரிகை:— கண்ணபிரான் பக்கலுள்ள அன்பின் மிகுதியால் அவனை அம்மமுண்ண அழைத்தும் அம்மமூட்டியும் வரும் யசோதைப்பிராட்டி அவனுடைய பருவத்தின் இளமையையும் சேஷ்டைகளின் பெருமையையும் கண்டு 'இவன் நம் பிள்ளை' என்ற எண்ணத்தைத் தவிர்ந்து 'ஒருவராலும் நியமிக்கவொண்ணுத ஸாக்ஷாத் ஸர்வேச்வரனிவன்' என்று அநுஸந்தித்து அவனைக்குறித்து அவைதன்னைச்சொல்லி உனக்கு நான் அம்மம் [முலை] கொடுக்க அஞ்சாநின்றேன்' என்று பலகாலும் பேசினபடியை ஆழ்வார்தாமும் தம்மை அவளாகப் பாவித்துத் தாமுமப்படியே பேசி மகிழ்கிருர்—இத்திருமொழியில்.

223 தன்னேராயிரம்பிள்ளைகளோடு தளர்நடையிட்டுவருவான் *
பொன்னேய்நெய்யோடுபாலமுதுண்டு ஒருபுள்ளுவன்பொய்யேதவழும் *
மின்னேர்நுண்ணிடைவஞ்சமகள்கொங்கைதுஞ்ச வாய்வைத்தபிரானே *
அன்னேயுன்னையறிந்துகொண்டேன் உனக்கஞ்சுவனம்மந்தரவே. (1)

தன் நேர் ஆயிரம் பிள்ளைகளோடு — (வயஸ்ஸாலும் வளர்த்தியாலும்) தனனேடு ஒத்த ஆயிரம் பிள்ளைகளோடு கூட
தளர் நடை இட்டு வருவான் — தளர்நடை நடந்துவருகின்ற கண்ணபிரானே!

பொன் ஏய் நெய்யோடு பால் அமுது உண்டு — (நிறத்தால்) பொன்னை ஒத்திரா நின்ற நெய்யோடுகூட போக்யமான பாலையும் அமுதுசெய்து

(ஒன்றுமறியாத பிள்ளைபோல)

பொய்யே தவழும் ஒரு புள்ளுவன் — கபடமாகத் தவழ்ந்துவருகிற ஒப்பற்ற கள்ளனே!

மின் நேர் நுண் இடை வஞ்சம் மகள் துஞ்ச — மின்னலைப்போன்று அதிஸூக்ஷ்மமான இடையையும் வஞ்சனையையுமுடையளான பூதனையென்னும் பேய்மகள் மாண்டுபோம்படி

கொங்கை வாய் வைத்தபிரானே — (அவளுடைய) முலையிலே தன்னுடைய வாயைவைத்(துச்சுவைத்)தாயனே!

உன்னை அறிந்துகொண்டேன் — நம் பிள்ளையென்று இதுவரை என்னால் பாவிக்கப்பட்ட உன்னை அருந்தெய்வமென்று இன்று தெரிந்துகொண்டேன்.

ஆதலால்,

உனக்கு அம்மம் தர அஞ்சுவன் — உனக்கு முலைகொடுக்கபயப்படாநின்றேன்;

அன்னே — அஹஹ!

* * *—கண்ணன் திருவாய்ப்பாடியிலேவந்து பிறந்தபோது அவனோடுகூட ஆயிரம் பிள்ளைகள் பிறந்தார்களாகையால், இளமை தொடங்கித் தன்னைவிட்டுப் பிரியமாட்டாதவர்களாய்த் தன்னோடு கூடவே விளையாடித் திரிகின்ற அப்பிள்ளைகளோடேயே ஸ்ரீக்ருஷ்ணன் திரிதலால் "தன்னேராயிரம் பிள்ளைகளோடு தளர்நடையிட்டு வருவான்" என்றும், இப்படித் தளர்நடை யிடுபவன் ஒவ்வொரு வீட்டிலும்புக்கு அங்குள்ள தயிர் நெய் பால் முதலியவற்றையெல்லாம் திருடி வயிறார விழுங்கிவிட்டு 'இந்தப்பூனை இந்தப்பாலைக் குடிக்குமா' என்னும்படி தவழ்ந்து நடைகற்பனாதலால் "பொன்னேய் நெய்யொடு பாலமுதுண்டு பொய்யே தவழும் புள்ளுவன்!" என்றும் விளிக்கிறாள். இரண்டும் அண்மைவிளி; இயல்பு [மின்னேர் இத்யாதி.] உனக்கு ஒருத்தி முலைகொடுக்கவந்து தான் பட்டபாட்டை நானறிந்துளேனாகலால் 'நம்மையும் அப்பாடு படுத்துவனோ' என்றஞ்சுகின்றேனென்கிறாள். அன்னே-அச்சக் குறிப்பிடைச் சொல். தூங்க என்னும் பொருளதான துஞ்ச என்ற சொல்லை, 'சாவ' என்ற பொருளில் பிரயோகிப்பது-மங்கலவழக்காம்; தீர்க்க நித்திரையடையும்படி என்பது கருத்து; "முன்னத் தினணரும் கிளவியுமுளவே" என்றார் நன்னூலாரும். .... .... .... (1)

224 பொன்போல்மஞ்சனமாட்டியமுதூட்டிப்போனேன் வருமளவிப்பால் *
வன்பாரச்சகடமிறச்சாடி வடக்கிலகம்புக்கிருந்து *
மின்போல்நுண்ணிடையாளொருகன்னியை வேற்றுருவஞ்செய்துவைத்த *
அன்பாவுன்னையறிந்துகொண்டேன் உனக்கஞ்சுவனம்மந்தரவே. (2)

பொன் போல் மஞ்சனம் ஆட்டி அமுது ஊட்டி போனேன் — பொன்னைப்போல [உன் வடிவழகு விளங்கும்படி உன்னைத்] திருமஞ்சனம் செய்வித்து (அதன்பிறகு) அமுது செய்யவும் பண்ணிவிட்டு (யமுனை நீராடப்) போன நான்

வரும் அளவு இப்பால் — (மீண்டு) வருவதற்குள்ளே

வல் பாரம் சகடம் இற சாடி — வலிவுள்ளதும் கனத்ததுமாயிருந்த சகடமானது [கட்டுக்குலைந்து] முறியும்படி (அதைத் திருவடியால்) உதைத்துத்தள்ளி

(அவ்வளவோடும் நில்லாமல்)

வடக்கில் அகம் புக்கு இருந்து — (இவ்வீட்டுக்கு) வடவருகிலுள்ள வீட்டிலே போய் நுழைந்து

(அவ்வீட்டிலுள்ள)

மின் போல் நுண் இடையாள் ஒரு கன்னியை — மின்னலைப்போன்று நுட்பமான இடையை யுடையளான ஒரு கன்னிகையை

வேறு உருவம் செய்து வைத்த அன்பா — (கலவிக் குறிகளால்) வேறுபட்ட வடிவையுடையளாகச் செய்து வைத்த அன்பனே!

உன்னை அறிந்து கொண்டேன்—;

உனக்கு அம்மம் தர அஞ்சுவன்—.

* * *நான் ஒருநாள் உனக்குத் திருமஞ்சனஞ் செய்து அமுதூட்டி உன்னைத் தொட்டிலில் தூங்கவிட்டு யமுனையில் நீர்த்தமாடப்போக, அப்போது, முலைப்பாலுக்காகக்

குழந்தைகள் அழுவதைப்போலே காலைத்தூக்கி யுதைத்து வலிய சகடத்தை முறித்துத் தள்ளினாய்; அன்றியும், மற்றொருகால் அவ்விளம்பிராயத்திலேயே ஒரு கன்னிகையை ஸம்போக சின்னங்களால் உருவம் மாறும்படியும் செய்திட்டாய்; இப்படி மனிதரால் செய்யலாகாத செயல்களைச் செய்வதனால் ‘இவன் நம்மோடு சேர்ந்தவனல்லன்; நம்மிலும் வேறுபட்ட கடவுள்’ என்று உன்னைத் தெரிந்து கொண்டேன்; ஆனபின்பு உனக்கு அமமந்தர அஞ்சுவேன் என்கிறாள். நன்றாக நீராட்டினேன் என்றபொருளில் பொன்போல் நீராட்டினேனென்பது ஒருவகை மரபு. போனேன்—வினையாலணையும் பெயர்; வினைமுற்றுஅன்று பாரம்—ஹாரம். அன்பா=எதைக் கண்டாலும் அதன் மேல்விழும்படியான விருப்பமுடையவனே! என்கை. வேற்றுருவஞ் செய்துவைக்கையாவது “கண்மலர் சோர்ந்து முலைவந்துவிம்மிக் கமலச்செவ் வாய் வெளுப்ப, என்மகள் வண்ணமிருக்கின்றவா நங்காய்! என்செய்கேன் என்செய்கேனோ” என்ற பாசுரத்திற் பகர்ந்தபடி பண்ணுகை. .... .... .... (2)

225 தும்மாயத்தோடுவெண்ணெய்விழுங்கிக் குடத்தயிர்சாய்த்துப்பருகி *
போய்ம்மாயமருதானவசுரரைப் பொன்றுவித்தின்றுநீவந்தாய் *
இம்மாயம்வல்லபிள்ளைநம்பீ உன்னையென்மகனேயென்பர்நின்றார் *
அம்மாவுன்னையறிந்துகொண்டேன் உனக்கஞ்சுவனம்மந்தரவே. (3)

| | | | |
|---|---|---|---|
| | கண்ணபிரானே! | இ மாயம் வல்ல பிள்ளை நம்பி | இப்படிப்பட்ட மாயச்செய்கைகளைச் செய்யவல்ல பிள்ளாய்! அந்தப் பிள்ளைத்தனத்தால் பூர்ணனானவனே! |
| கும்மாயத்தொடு வெண்ணெய் விழுங்கி | குழையச்சமைத்த பருப்பையும் வெண்ணெயையும் விழுங்கிவிட்டு | உன்னை | இப்படியிருக்கிற உன்னை |
| குடம் தயிர் சாய்த்து பருகி | குடத்தில் நிறைந்த தயிரை அந்தக் குடத்தோடு சாய்த்துக் குடித்தும் | நின்றார் | உன் வாசி அறியாத நடுநின்றவர்கள் |
| பொய் மாயம் மருது ஆன அசுரரை | பொய்யையும் மாயச்செய்கையையுமுடைய அஸுரர்களால் ஆவேசிக்கப்பெற்ற இரட்டை மருதமரங்களை | என் மகனே என்பர் | என் வயிற்றிற்பிறந்த பிள்ளையாகவே சொல்லாநின்றார்கள்; நானோவென்றால் அப்படி நினையாமல் |
| பொன்றுவித்து | விழுந்து முறியும்படி பண்ணியும் | உன்னை அறிந்து கொண்டேன் | இவன் ஸர்வேச்வரன் என்று உன்னைத் தெரிந்துகொண்டேன்; ஆதலால், |
| நீ இன்று வந்தாய் | இவ்வளவு சேஷ்டைகளைச் செய்த நீ இப்போது ஒன்றுஞ் செய்யாதவன்போல வந்து நின்றாய்; | அம்மா | ஸர்வேச்வரனே! உனக்குஅம்மம் தர அஞ்சுவன்—. |

* * *—இச்சேரியில் ஒருத்திவீட்டில் ஒன்றுவைக்க வொண்ணாதபடி எல்லாப் பண்டங்களையும் களவுகண்டும், மருதமரங்களை அவற்றின் நினைவறிந்து முறித்தும் திரிகிற உன் விசேஷங்களை யறியாதே உதாஸீநராயிருப்பவர்கள் உன்னை என் மகனாகச் சொல்லுவர்கள்; நான் உன் வாசியை யறிந்தவளாகையால் உன்னை ஸாக்ஷாத் ஸர்வேச்வரனாகவே அறுதியிட்டு உனக்கு முலை கொடுக்க அஞ்சாநின்றேனென்கிறாள். பிள்ளை, நம்பி—அண்மைவிளி. என் மகனே என்பர்=‘இவன் என் பிள்ளையன்று’ என்று நான் ஆணையிட்டுச் சொன்னாலும் அவர் கேளார் என்ற கருத்துத்தோன்றும்; ஏ-பிரிநிலை. .... .... .... (3)

226 மையார்கண்மடவாச்சியர்மக்களை மையன்மைசெய்தவர்பின்போய் *
கோய்யார்பூந்துகில்பற்றித்தனிநின்று குற்றம்பலபலசெய்தாய் *
பொய்யாவுன்னைப்புறம்பலபேசுவ புத்தகத்துக்குளசேட்டேன் *
ஐயாவுன்னையறிந்துகொண்டேன் உனக்கஞ்சுவனம்மந்தரவே. (4)

மை ஆர் கண் மடம் ஆய்ச்சியர் மக்களை — மையை அணிந்துள்ள கண்களையும் மடப்பம் என்ற குணத்தையுமுடையரான இடைப்பெண்களை
உன் விஷயத்திலே
மையன்மை செய்து — மோஹிக்கப்பண்ணி
அப்பெண்களுடைய
கொய் ஆர் பூ துகில் — கொய்தல் நிறைந்த அழகிய புடவைகளை
பற்றி — பிடித்துக்கொண்டு
அவர் பின் போய் — அப்பெண்களின் பின்னே போய்
தனி நின்று — தனியிடத்திலேநின்று
பல பல குற்றம் செய்தாய் — எண்ணிறந்த தீமைகளை பண்ணினாய்;
என்று யசோதை சொல்ல, 'நீ கண்டாயோ?' என்று

கண்ணன் கேட்க
அதற்கு யசோதை சொல்லுகிறாள்;—
பொய்யா — தீமை செய்ததுமல்லாமல், செய்யவில்லையென்று பொய் சொல்லுமவனே!
உன்னை — உன்னைக்குறித்து
புத்தகத்துக்கு உள — ஒரு புஸ்தகமெழுதுகைக்குத்தகுந்தனவாம்படி
பேசுவ — சொல்லப் படுகின்றனவான
பல புறம் — பற்பல புன்சொற்களை
கேட்டேன் — என் காதால் கேட்டிருக்கிறேன்;
ஐயா — அப்பனே!
உன்னை அறிந்துகொண்டேன்—;
உனக்கு அம்மம் தர அஞ்சுவன்—.

* * *—நீ இடைப் பெண்களுடைய கொய்சகத்தைப் பிடித்துக்கொண்டு அவர்கள் பின்னேபோய் அவர்களோடு ஏகாந்தமான இடத்திலேயிருந்து சொல்லத்தகாத பல தீம்புகளைச் செய்தாய்; நீ செய்யுந் தீம்புகள் பிறரறிந்து சொல்லுமவற்றை எழுதத் தொடங்கினால் பெரியதொரு புஸ்தகமாக முடியும். அதனால், உலகத்தாரால் செய்யமுடியாதவற்றையும் செய்யவல்ல அதிமாநுஷத் தன்மையை யுடையவனென்று உன்னை யறிந்துகொண்டேன்; ஆதலால் உனக்கு அம்மந்தர அஞ்சுவேனென்பதாம். முதலடியில் "மக்களை" என்பதை உருபு மயக்கமாகக்கொண்டு 'மக்கள் பக்கலிலே' என ஏழாம் வேற்றுமைப் பொருளுரைத்து, மையன்மைசெய்து-மோஹத்தைப்பண்ணி என்றுரைத்து, கண்ணபிரான் தான் அம்மக்களிடத்தில் மயக்கமுற்று, அவர்கள் இவனை மறுத்தபோதிலும் இவன் விடாமல் அவர்களுடைய புடவைகளைப் பற்றிக்கொண்டு ஏகாந்த ஸ்தலத்திற்சென்று பற்பல சிருங்கார சேஷ்டைகளைச் செய்தபடியைக் கூறுவதாகக் கருத்துரைத்தலும் ஒக்குமென்க. மடமக்கள்—மடமாவது—அறிந்தும் அறியாதுபோலிருத்தல்; மாதர்க்கு, நாண், மடம், அச்சம், பயிர்ப்பு என நாற்குணங்கள் அமையவேண்டுமென்றறிக. மையல் எனினும் மையன்மை எனினும் மயக்கமே பொருளாம்; மை-பண்புப்பெயர் விகுதி; விகுதிமேல் விகுதி. கோய்யார் பூந்துகில்=கொய்சகம்; 'கொசாம்' என்பது உலக வழக்கு. 'பேசுவ' என்கிறவிது-பலவின்பாற் படர்க்கை வினைமுற்று; அது இங்குப் பெயரெச்சப் பொருள் தந்து நிற்றல் காண்க: "வினைமுற்றே வினையெச்சமாகலும், குறிப்பு முற்றீரெச்ச மாகலு முளவே" என்ற சூத்திரத்தில் 'ஆகலும்' என்ற (எண்ணி நின்ற எதிரது தழுவிய எச்ச) உம்மையை நோக்குக. .... .... .... (4)

227 முப்போதுங்கடைந்தீண்டியவெண்ணெயினோடு தயிரும்விழுங்கி *
கப்பாலாயர்கள்காவிற்கோணர்ந்த கலத்தொடுசாய்த்துப்பருகி *
மெய்ப்பாலுண்டழுபிள்ளைகள்போல நீவிம்மிவிம்மியழுகின்ற *
அப்பாவுன்னையறிந்துகோண்டேன் உனக்கஞ்சுவனம்மந்தரவே. (5)

முப் போதும் கடைந்து ஈண்டிய வெண்ணெயினோடு தயிரும் விழுங்கி — மூன்று சந்திப்போதுகளிலும் இடையருமை கடையப்பட்டுத் திரண்ட வெண்ணெயையும் தயிரையும் களவுகண்டு விழுங்கி,
அவ்வளவோடும் நில்லாமல்
ஆயர்கள் — அவ்விடையர்கள் தம்முடைய
கப்பால — தோளாலே வருந்திச்சுமந்து
காவில் — காவடியில்
கொணர்ந்த — கொண்டுவந்த பால் முதலியவற்றை
கலத்தொடு சாய்த்து பருகி — அந்தப் பாத்திரத்தோடே சாய்த்துக் குடித்தும்
அதனால் பசியடங்கினபடியை மறைக்க நினைத்து
மெய் பால் உண்டு அழு பிள்ளைகள் போல — முலைப்பாலை உண்டு அது பெறாத போது அழுகிற பிள்ளைகளைப் போல
விம்மி விம்மி அழுகின்ற,
அப்பா — பெரியோனே!
உன்னை அறிந்து கொண்டேன்—;
உனக்கு அம்மம் தர அஞ்சுவன்—.

* * *—இந்த இடைச்சேரியிலோ காலை உச்சி அந்தியென்கிற மூன்று காலங்களிலும் பசுக்கள் கறக்கின்றன; இம்மூன்று காலங்களிலும் தயிர்கடைந்து வெண்ணெயெடுக்கிறார்கள். அப்படிக் கடைந்தெடுத்த வெண்ணெயையும் தயிரையும், இடையர்கள் காவடியிலே தம் தோளினால் சுமந்துகொண்டு வந்த பால்களையும் மிச்சமில்லாதபடி நீ குழந்தையாக விருக்கிற இப்பருவத்திலேயே உண்டுவிடுகிறாய்; அப்படியுண்டும், முலைப்பாலையே தங்களுக்குத் தாரகமாகக் கொண்டு உண்டு அம்முலைப்பால் பெறாதபோது அழுகின்ற பிள்ளைகளைப்போலே என்னுடைய முலைப்பாலை யுண்பதற்குப் பொறாமிப்பொறாமி அழவும் அழுகிறாய்; இப்படி அதிமாநுஷச் செயல்களையுடைய பெரியோனே! நீ மனிதனல்லையென்று நான் உணர்ந்து கொண்டேன்; ஆகவே உனக்கு அம்மந்தர அஞ்சுவேன் என்கிறாள். நீ என்பது—வார்த்தைப் பாடு; அதற்கு இங்குப்பொருளில்லை. முப்போது—காலை உச்சி அந்தியாகிற மூன்று காலம். மெய் என்று உடம்பாய் இலக்கணையால் முலையைக் குறித்தது. உலகத்தில் முலைப்பாலையே உண்டு வளர்கின்ற பிள்ளைகள் முலைப்பால் பெறாதபோது பசியின் மிகுதியால் அழுமா போலே இக்கண்ணபிரானும் "நமக்குப் பசியுள்ளமையைக் காட்டாவிடில நம்தாய் 'இவன் எங்கேனுங் களவுகண்டு உண்டிருக்கக்கூடும்' என்று ஐயப்பட்டு நம்மைத் தண்டிக்க ஒருப்படுவள்" என்று நினைத்து (ப் பசியுள்ளவன்போல) அழுகின்றமை மூன்றாமடியில் விளங்கும். கோணாந்த—பலவின்பால் வினையாலணையும் பெயர்; பெயரெச்சமன்று. .... .... (5)

228 கரும்பார்நீள்வயற்காய்கதிர்ச்செந்நெலைக் கற்றாநிரைமண்டித்தின்ன *
விரும்பாக்கன்றொன்றுகொண்டு விளங்கனிவீழவெறிந்தபிரானே *
சுரும்பார்மென்குழற்கன்னியொருத்திக்குச் சூழ்வலைவைத்துத்திரியும் *
அரம்பாவுன்னையறிந்துகொண்டேன் உனக்கஞ்சுவனம்மந்தரவே. (6)

நீள் வயல் கரும்பு ஆர் காய் கதிர் செந்நெலை — பரந்த வயலிலே கரும்புபோலக் கிளர்ந்துள்ள பசுங்காயான கதிரையுடைய செந்நெல் தானியத்தை
கன்று ஆ நிரை மண்டி தின்ன — கன்றுகளோடு கூடின பசுக்களின் திரள் விரும்பித் தின்னும்படிச் செய்தே
அத்திரளிலே சேர்ந்து மேய்கிறாப்போல் பாவனைசெய்த அஸுராவிஷ்டமான
விரும்பா கன்று ஒன்று — நெல்லைத் தின்கையில் விருப்பமில்லாத ஒரு கன்றை
அதன் செய்கைகளினாலே 'இது அஸுரம்' என்று அறிந்து
கொண்டு — அதனைக் குணிலாகக் கொண்டு, மற்றொரு அஸுரனால் ஆவேசிக்கப் பட்டிருந்த
விளங்கனி — விளாமரத்தின் பழங்கள்
வீழ — உதிரும்படி
எறிந்த — அவ்விளாமரத்தின்மேல அக்கன்றை வீசியெறிந்த
பிரானே — பெரியோனே!
சுரும்பு ஆர் மென் குழல் கன்னி ஒருத்திக்கு — வண்டுகள் நிறைந்த மெல்லிய குழலையுடையளான ஒரு கன்னிகையை அகப்படுத்திக் கொள்வதற்காக
சூழ் வலை வைத்து திரியும் அரம்பா — எல்லாரையும் சூழ்ந்துகொள்ளக் கடவ திருக்கண்களாகிற வலையை அவள் திறத்திலே விரித்து வைத்து அநியாயரைப்போலத் திரியாநின்ற தீம்பனே!
உன்னை அறிந்து கொண்டேன்—;
உனக்கு அம்மம் தர அஞ்சுவன்—.

* * *—எவ்வகையினாலாவது கண்ணனைக் கொல்லவேணுமென்ற கருத்துக்கொண்டுள்ள கம்ஸன் பற்பல அஸுரர்களைப் பற்பல வகையாக உருவெடுத்துத் தீங்குசெய்யும்படி ஏவியிருந்ததற்கேற்ப ஓரஸுரன் விளாமரமாய் வந்து நின்றான்; ஓரஸுரன் கன்றினுருவங் கொண்டு, வயல்களிற் கரும்புபோலக் கிளர்ந்துள்ள செந்நெற்களை மேய்ந்துகொண்டிருந்த பசுத்திரளிலே கூடிக்கலந்து அவற்றைப்போல தானும் மேய்கிறாப்போல் பாவனைபண்ணி அச்செந்நெற்களை மெய்யே மேயாதொழிந்தவாசியைக் கண்ணபிரானுணர்ந்து 'அஸுரப்பயல்

இங்ஙனே வந்துளன்' என்றறுதியிட்டு அக்கன்றை எறிகுணிலாகக் கொண்டு அவ்விளா மரத்தின்மேலெறிந்தவரலாறு முதலிரண்டடிகளிற் கூறப்பட்டது. கன்று+ஆநிரை, கற்று நிரை. கூந்தலில் பூமாறாதேயிருந்ததால் அதில் மதுவைப்பருகுதற்காக வண்டுகள் படிந்திருக்கப்பெற்ற முடியையுடையாளொரு மங்கையைத் தன்வசப்படுத்திக் கொள்வதற்காகத் "தாமரைத்தடங்கண் விழிகளினகவலை" என்றும், "கார்த்தண் கமலக்கண்ணென்னும் நெடுங்கயிறு" என்றும வலையாகச் சொல்லப்பட்ட தன் கண்களை அவள்மேல் விரித்துவைத்து இவ்வாறு தீமபுசெய்பவனே! என்பது மூன்றுமடியின் கருத்து; இவன் அவளைக் கண்ணால் குளிர நோக்க, அவள் அதுக்கு அற்றுத்தீர்ந்து இவனுக்கு வசப்படுவளென்க. சூழ்வலை—தப்பாமல் அகப்படுத்திக்கொள்ளும் வலை. இங்கு ('கண்' என்ற) உபமேயத்தை அதன் சொல்லாற் சொல்லாமல் (சூழ்வலை என்ற) உபமானச் சொல்லால் இலக்கணையாகச் சொல்லியிருத்தலால்—உருவகவுயர்வு நவிற்சியணி; வடநூலார், ரூபகாதிசயோக்த்யலங்கார மென்பர். (6)

229 மருட்டார்மென்குழல்கொண்டுபொழில்புக்கு வாய்வைத்தவ்வாயர்தமபாடி *
சுருட்டார்மென்குழற்கன்னியர்வந்துன்னைச் சுற்றுந்தொழநின்றசோதி *
பொருட்டாயமிலேனெம்பெருமான் உன்னைப்பெற்றகுற்றமல்லால் *
மற்றிங்கரட்டாவுன்னையறிந்துகொண்டேன் உனக்கஞ்சுவனம்மந்தரவே. (7)

| | |
|---|---|
| மருட்டு ஆர் மெல் குழல் கொண்டு | கேட்டவர்களை மயங்கப் பண்ணுந் திறமையுள்ள மெல்லிய தவனியையுடைய வேய்ங்குழலைக் கையிற்கொண்டு |
| பொழில் புக்கு | ஸம்போகத்துக்கு ஏகாந்தமான சோலைகளிலே போய்ச்சேர்ந்து |
| | அந்த வேய்ங்குழலை |
| வாய் வைத்து | தன் வாயில்வைத்து ஊத |
| | அவ்வளவிலே |
| ஆயர் தம் பாடி | இடைச்சேரியிலுள்ள |
| சுருள் தார் மெல் குழல் | சுருண்டு பூவணிந்த மெல்லிய குழலையுடைய |
| அ கன்னியர் | இடையர்களால் காக்கப்பட்டிருந்த அந்த இடைப்பெண்கள் |
| | குழலோசை கேட்கையிலுள்ள விருப்பத்தாலே காவலுக்கடங்காமல் |
| வந்து | அச்சோலையிடத்தே வந்து |
| உன்னை சுற்றும் தொழ நின்ற சோதி | உன்னை நாற்புறமும் சூழ்ந்துகொண்டு ஸேவிக்க அதனால் நிலைத்து நின்ற தேஜஸ்ஸையுடையவனே! |
| எம்பெருமான் | எமக்குப் பெரியோனே! |
| உன்னை பெற்ற குற்றம் அல்லால் | இப்படி தீம்பனான உன்னை பிள்ளையாகப்பெற்ற குற்றமொன்றை நான் ஸம்பாதித்துக்கொண்டேனத்தனையல்லது |
| இங்கு | இவ்வூரில் உள்ளாரோடொக்க |
| மற்று பொருள் தாயம் இலேன் | மற்றொரு பொருட்பங்கையும் பெற்றிலேன்; |
| அரட்டா | இப்படிப்பட்ட தீம்பனே! |
| | உன்னை அறிந்து கொண்டேன்—; |
| | உனக்கு அம்மம் தர அஞ்சுவன்—. |

* * *—கண்ணபிரான் ஸர்வஜந மோஹநமான ஸ்வரத்தையுடைய வேய்ங்குழலையெடுத்துக்கொண்டு ஸரஸவிஹாரத்துக்குப் பாங்கான சோலைப்புறங்களிலேபோய், தான் விரும்பின பெண்களின் பேரைச்சொல்லுதலும், தன்மேல் கோபங்கொண்டிருக்கும் பெண்களின் காலைக் கையைப்பிடித்துக் கொண்டு பொறுப்பித்தலும் முதலான ஒலியின் குறிப்புகள் தன்னோடு பழகும் பெண்களுணரும்படி அக்குழலை ஊதினவளவிலே, இடைச்சேரியில் தந்தம் மாமிமார் முதலியோரால் காவலிலே நியமிக்கப்பட்டுள்ள பெண்கள் இக்குழலோசையைக் கேட்டுப் பரவசைகளாய் "ஶ்வஶ்ரவஃ கிம்கரிஷ்யந்தி" என்று—தந்தம் நியாமகர்களையும லக்ஷியம் பண்ணாமல் கண்ணனிருப்பிடத்தேற ஓடிவந்து அவனைச் சுற்றிக்கொள்ள அதனால் அவன் விலக்ஷணமான ஒளியை முகத்திற் பெற்றானென்ற கருத்தைக் காட்டும் முதலிரண்டடி. மருட்டு—பிறவினைப் பகுதியே தொழிற்பொருள் தந்தது; மயங்கப்பண்ணுதல் என்று பொருள். வாய்வைத்து—வாய்வைக்க; எச்சத்திரிபு. "அவ்வாயர்தமபாடி" என்ற விடத்

திலுள்ள அகரச்சுட்டு கன்னியர் என்பதோடு கூட்டியுரைக்கப்பட்டது. சுருள்=சிறந்த கூந்தலுக்குச் சுருட்சி இலக்கணமென்க. தார்—பூமாலை. சுற்றுந் தொழும்படிநின்ற சோதி—பரஞ்சோதியாகிய கண்ணபிரானே! என்று முறைக்கலாம். [பொருள்தாயமித்யாதி.] 'இப்படிப்பட்ட பெருந்தீம்பனை பிள்ளையைப் பெற்றாயே பாவி' என்று என்னை அனைவரும் காறுகாறென்னும்படியான நிலைமையை நான் உன்னால் பெற்றேனே யொழிய வேறொரு ஸாம்ராஜ்யமும் பெற்றேனில்லையென்கிறாள். தாயம்—'தாயः' என்ற வடசொல் விகாரம். (7)

230 வாளாவாகிலுங்காணகில்லார் பிறர்மக்களைமையன்மைசெய்து *
தோளாலிட்டவரோடுதிளைத்து நீசொல்லப்படாதனசெய்தாய் *
கேளாராயர்குலத்தவரிப்பழி கேட்டேன்வாழ்வில்லை * நந்தற்
காளாவுன்னையறிந்துகொண்டேன் உனக்கஞ்சுவனம்மந்தரவே. (8)

வாளா ஆகிலும் — நீ தீம்புசெய்யாமல் வெறுமனே யிருந்தாலும்
உன் மினுக்குப் பொறாதவர்கள்
காண கில்லார் — உன்னைக் காணவேண்டார்கள்;
இப்படியிருக்கச்செய்தேயும்
நீ பிறர் மக்களை மையன்மை செய்து — நீயோவென்றால் அயற்பெண்களை உன்னுடைய இங்கிதாதிகளாலே மயக்கி
அவ்வளவோடு நில்லாமல்
தோளால் இட்டு அவரோடு திளைத்து — அவர்களைத் தோளாலும் அணைத்திட்டு அப்பெண்களோடு விளையாடி
சொல்லப்படாதன — வாயாற் சொல்லக்கூடாத காரியங்களை
செய்தாய் — அவர்கள் விஷயத்திலே செய்தாய்;
ஆயர் குலத்தவர் இப்பழி கேளார் — இடைக்குலத்துத் தலைவர்கள் இப்படிப்பட்ட பழிகளைக்கேட்கப் பொறார்கள்;
இப்பழிகளைக் கேட்கப்பெற்ற நான்
கெட்டேன் — பெரும்பாவியாயிராநின்றேன்;
இனி எனக்கு இவ்வூரில்
வாழ்வு இல்லை — வாழ்ந்திருக்கமுடியாது,
நந்தற்கு ஆளா — நந்தகோபருக்கு அழகிதாக ஆள்பட்ட பிள்ளாய்!
உன்னை அறிந்து கொண்டேன்—;
உனக்கு அம்மம் தர அஞ்சுவன்—.

* * *—"நந்தன் காளாய்" என்பது வழங்கிவரும் பாடம்; "ஸ்ரீநந்தகோபர் பிள்ளையான நீ" என்று வியாக்கியானம் காண்கிறபடியால் இப்பாடம் கொள்ளத்தக்கதே. மேல், "அன்றிக்கே" என்று தொடங்கிக் காண்கிற நிர்வாஹத்துக்கேற்ப "நந்தற்கு ஆளா" என்று பாடமோதுதல் சிறக்குமென்க: இங்கு 'நந்தகோபருக்கு ஆள்பட்டவனே!' என்றது விபரீதலக்ஷணையால், அவர்க்கு ஆள்படாதொழிந்தவனே!' என்ற பொருளைத் தரும்; இத்தீமைகளை நீ செய்யத் துணியாதபடி அவர் உன்னைத் தனக்கு ஆட்படுத்திக் கொள்ளாதொழியவேயன்றோ நானிப்படி பழிகேட்டுப் பரிபவப்பட வேண்டிற்றென்று விரிக்க: "அவர் உன்னை நியமித்து வளர்க்காமையிறே நீ இப்படி தீமபனாய்த்தென்னுதல்" என்ற ஜீயருரைக்குக் கருத்து இதுவேயாகுமென்க. அன்றியும், 'நந்தன் காளாய்' என்ற பாடத்துக்கு ஓர் அநுபபத்தியுண்டு: இத்திருமொழியில் இறுதிப்பாடலொன்றொழிய மற்ற எல்லாப் பாட்டுகளிலும் ஈற்றடியின் முதற்சீர் முதலெழுத்து மோனையின்பத்துக் கிணங்க அகரமாகவே அமைந்திருத்தலால் இப்பாட்டொன்றில் மாத்திரம் அது மாறுபடுதல் குறையாமாறு காண்க. 'நந்தற்கு ஆளா' என்றே ஆன்றோர் பாடம். இப்பாடத்தில் வியாக்கியானப் பொருத்தமும் இங்குக் காட்டப்பட்டது.

'இச்சேரியிலுள்ள கோபாலத்தலைவர்கள் உன் மினுக்கம் பொறாதவர்களாகையால், நீ தீம்பு செய்யாமல் வெறுமனிருந்தாலும் உன்மேல் அழுக்காறு கொண்டு உன்னைக் கண்ணிலுங்காண வேண்டுகிறிலர்; பின்னை நீ மெய்யே கடுமையான தீமைகளை இங்ஙனே செய்யாநின்றால் அவர்கள் அலர் தூற்றக் கேட்கவேணுமோ' என்பது முதலிரண்டடிகளின் கருத்து.

231 தாய்மார்மோர்விற்கப்போவர் தமப்பன்மார்கற்றாநிரைப்பின்புபோவர் *
நீயாய்ப்பாடியிளங்கன்னிமார்களை நேர்படவேகொண்டுபோதி *
காய்வார்க்கென்றுமுகப்பனவேசெய்து கண்டார்கழறத்திரியும் *
ஆயாவுன்னையறிந்துகொண்டேன் உனக்கஞ்சுவனம்மந்தரவே. (9)

பெண்களை அகம்பார்க்க வைத்துவிட்டு
தாய்மார் மோர் விற்க போவர் — தாய்மாரானவர் மோர் விற்பதற்கு வெளியூருக்குப் போவர்கள்
தமப்பன்மார் கன்று ஆ நிரை பின்பு போவர் — அப்பெண்களின் தகப்பன்மாரானவர் இளம் பசுக் கூட்டங்களை மேய்க்கைக்காக அவற்றின் பின்னே போய்விடுவர்கள்
அப்படிப்பட்ட ஸமயத்திலே
நீ—;
ஆய்ப்பாடி இள கன்னிமார்களை — இடைச்சேரியில் தந்தம் வீடுகளில் தனியிருக்கின்ற யுவதிகளான பெண்களை
நேர்பட — நினைத்தபடி
கொண்டு போதி — இஷ்டமான இடங்களில் கொண்டு போகா நின்றாய்;
காய்வார்க்கு என்றும் உகப்பனவே செய்து — உன் மேல் த்வேஷம் பாராட்டுகின்ற கம்ஸாதிகளுக்கு எந்நாளும் வாயாரப்பழித்து ஸந்தோஷப்படக்கூடிய கொள்கைகளையே செய்துகொண்டு
கண்டார் கழற திரியும் ஆயா — உனக்கு அநுகூலராயுள்ளவர்களும் உன்னை வெறுத்துச் சொல்லும்படி திரியாநின்ற ஆயனே!
உன்னை அறிந்து கொண்டேன் உனக்கு அம்மம் தர அஞ்சுவன்—.

* * *—இடைச்சேரியிலுள்ள இளம்பெண்களைப் புணருகைக்கு நீ தருணம் பார்த்திருக்கிற வளவிலே அப்பெண்களின் தாய்தந்தையர் தங்கள் வீட்டிற்குக் காவலாக அப்பெண்களை நிறுத்திவிட்டுத் தாம் மோர் விற்கவும் மாடு மேய்க்கவும் வெளியிற்சென்றவாறே நீ அப்பெண்களை உனக்கு வேண்டின விடங்களிலே கொண்டுபோகின்றாய்; ஏற்கனவே உன்னைப் பழிக்கின்ற வாயனுக்கு ஒரு பிடி அவலும் அகப்பட்டாற் போலக் ‘கண்ணனை நாம் ஏசுவதற்குப் பற்பல சங்கதிகள் கிடைத்தன’ என்று மகிழும்படியாக இவ்வகைத் தீமைகள் செய்கின்ற உன்னை அநுகூலரும் வெறுக்கும்படியாய் இப்படிகளாலே நீ பிராகிருதனுகத் தோற்றுவையாகிலும் உனது மெய்யான ஸ்வரூபத்தை நான் அறிந்துகொண்டு உனக்கு அமமம்தர அஞ்சுவேன் என்கிறாள். பெண்கள் தங்களகங்களிலே தனியிருத்தலால் இவன் அவ்விடத்தேயிருந்து அவர்களோடு ரமிக்கக் கூடுமாயினும், தாய்தந்தையரைத் தேடிக்கொண்டு ஆரேனும் அங்கு வந்தாற் செய்வதென்? என்ற சங்கையினால் வெளியிடத்தே அவர்களைக் கொண்டு போயினனென்க. கண்டார் —உன்னைப் பார்த்த பார்த்த மநுஷ்யர்களெல்லாரும் என்றும் பொருளாம். ... ... ... (9)

232 தோத்தார்பூங்குழற்கன்னியொருத்தியைச் சோலைத்தடங்கொண்டுபுக்கு *
முத்தார்கொங்கைபுணர்ந்திராநாழிகை மூவேழுசென்றபின்வந்தாய் *
ஒத்தார்க்கொத்தனபேசுவர் உன்னையுரப்பவேநானொன்றும்மாட்டேன் *
அத்தாவுன்னையறிந்துகொண்டேன் உனக்கஞ்சுவனம்மந்தரவே. (10)

தொத்து ஆர் பூ குழல் கன்னி ஒருத்தியை — கொத்தாய்ச் சேர்ந்திருந்துள்ள புஷ்பங்களை அணியப்பெற்ற கூந்தலையுடைய ஒரு கன்னிகையை
தடஞ்சோலை இரா கொண்டுபுக்கு — விசாலமானதொரு சோலையிலே (நேற்று) இரவில் அழைத்துக் கொண்டுபோய்
(அவளுடைய)
முத்து ஆர் கொங்கை புணர்ந்து — முத்துவடமணிந்த ஸ்தநங்களோடு ஸம்ச்லேஷித்து விட்டு
மூ எழு நாழிகை சென்ற பின் — மூன்றுயாமங்கள் கடந்த பிறகு
வந்தாய் — (வீட்டுக்கு) வந்து சேர்ந்தாய்;
(நீ இவ்வாறு தீமை செய்கையாலே)
உன்னை — உன்னைக் குறித்து
ஒத்தார்க்கு ஒத்தன பேசுவர் — வேண்டுவோர் வேண்டினபடி சொல்லுவர்கள்;
(இப்படி அவர்கள் சொல்லாநிற்கும்படி)
உரப்ப நான் ஒன்றும் மாட்டேன் — (உன்னை) சிக்ஷிக்க (அபலையாகிய) நான் கொஞ்சமும் சக்தையல்லேன்;
அத்தா — நாயகனே!
உன்னை அறிந்து கொண்டேன் உனக்கு அம்மம் தர அஞ்சுவன்—.

***–[ஒத்தார்க்கு இத்யாதி] (ஒத்தார்க்கு என்றது ஒத்தார் என்றபடி; ஆறனுருபுக்குப் பொருளில்லை; வழக்குபற்றிவந்த வழுவமைதி.) உன்மேல் பழிசொல்ல நினைத்தவர்கள் நீ செய்யாதவற்றையுஞ் சில சேர்த்துக்கொண்டு தாங்கள் நினைத்தபடி சொல்லத் தடையில்லை என்றவாறு. உரப்புதல்—வாயால் அதட்டுதல்; "ஊனமுடையன செய்யப்பெறு யென்றிரப்ப னுரப்பகில்லேன்" என்றார் திருமங்கை யாழ்வாரும். .... .... .... (10)

233 காரார்மேனிநிறத்தெம்பிரானைக் கடிகமழ்பூங்குழலாய்ச்சி *
ஆராவின்னமுதுண்ணத்தருவன்நான் அம்மந்தாரேனென்றமாற்றம் *
பாரார்தொல்புகழான்புதுவைமன்னன் பட்டர்பிரான்சொன்னபாடல் *
ஏராரின்னிசைமாலைவல்லார் இருடீகேசனடியாரே. (11)

| | | | |
|---|---|---|---|
| கார் ஆர் மேனி நிறத்து எம் பிரானை | மேகத்தோடு ஒத்த திருமேனி நிறத்தையுடைய கண்ணபிரானைக் குறித்து, | என்ற மாற்றம் சொன்ன | என்று சொன்ன பாசுரத்தை அருளிச்செய்த, |
| கடி கமழ் பூ குழல் ஆய்ச்சி | வாஸனைவீசாநின்ற பூக்களை அணிந்த கூந்தலையுடைய யசோதை | பார் ஆர் தொல் புகழான் | பூமியெங்கும் நிறைந்துள்ள பழமையான கீர்த்தியை யுடையராய் |
| ஆரா இன் அமுது உண்ண தருவன் | "(எவ்வளவு குடித்தாலும்) திருப்தி பிறவாத இனிய உனக்கு உண்ணத் தந்து கொண்டிருந்த நான் (இன்று உன் ஸ்வரூபத்தை உள்ளபடி அறிந்தேனாகையால்) | புதுவை மன்னன் பட்டர் பிரான் பாடல் | ஸ்ரீவில்லிபுத்தூருக்கு நிர்வாஹகரான பெரியாழ்வாருடைய பாடலாகிய |
| | | ஏர் ஆர் இன் இசை மாலை வல்லார் | இயலழகாலே நிறைந்து இனிய இசையோடேகூடியிருந்துள்ள சொல் மாலையை ஓதவல்லவர்கள் |
| அம்மம் தாரேன் | அம்மந்தர அஞ்சுவேன்" | இருடீகேசன் அடியார் | ஹ்ருஷீகேசனான எம்பெருமானுக்கு அடிமை செய்யப் பெறுவார்கள். |

* * *—ஆராவின்னமுது=யசோதைப் பிராட்டியின் முலை, பூதனையின் முலைபோல் விஷந்தடவப் பெற்றிராமையால், அமுமுலையிற்பால் அமுதாகச் சொல்லப்பட்டது. [தருவன் நான் அம்மம் தாரேன்.] 'தருவன்' என்ற எதிர்கால வினைமுற்று (வழுவமைதி யிலக்கணப்படி) தந்தேன் என்ற இறந்தகாலப் பொருளைத்தந்தது மன்றி, 'தந்த நான் அம்மந்தாரேன்' என்று பெயரெச்சப் பொருளையுந் தந்தவாறு காண்க: ஆகவே இவ்வினைமுற்று—முற்றெச்சம் என்றற் பாற்று. .... .... .... .... (11)

அடிவரவு—தன்னேர் பொன் கும்மாயம் மையார் முப்போது கருபு மருட்டார் வாளா தாய்மார் தொத்தார் காரார் அஞ்சனம்.

முதல்திருமொழி உரை முற்றிற்று.

## மூன்றும்பத்து—இரண்டாந்திருமொழி அஞ்சனவண்ணனை

அவதாரிகை:—கீழ்த்திருமொழியில் கண்ணபிரான் பக்கல் புத்ரத்வபுத்தியைத் தான் தவிர்த்துக்கொண்டமையை வெளியிட்ட யசோதைப்பிராட்டி அதை மறந்துவிட்டுக் கண்ணனைத் தன் மகனாகவேகொண்டு சாதிக்குத்தக்கவாறாக அவனைக்காலையிலே கன்றுமேய்க்கக் காட்டேற அனுப்பிவிட்டுப் பின்பு அவன் பிரிவைத் தான் பொறுக்கமாட்டாமல் நொந்து, அவன் ஊரில் தீமைசெய்யும்படிகளைச்சொல்லி 'அவனை இங்ஙனே இங்குச் செய்துகொண்டிருக்கவொட்டாமல் கல்லும் முள்ளுமான கடுங்காட்டிற் போக்கினேனே பாவியேன்!' என்று கழறினவாற்றை ஆழ்வார்தாமும் தம்மை அவளாகப்பாவித்துப் பேசுகிறார் – இத்திருமொழியில்.

234 அஞ்சனவண்ணனை ஆயர்கோலக்கொழுந்தினை *
மஞ்சனமாட்டி மனைகடோறுந்திரியாமே *
கஞ்சனைக்காய்ந்த கழலடிநோவக்கன்றின்பின் *
என்செயப்பிள்ளையைப்போக்கினேன் எல்லேபாவமே. (1)

| | | | |
|---|---|---|---|
| அஞ்சனம வண்ணனை | மைபோன்ற நிறத்தையுடையனும் | மஞ்சனம ஆட்டி | (காலையில் குள்ளக்குளிர) நீராட்டி, |
| ஆயர் கோலம | இடைக்கோலம் பூண்டுள்ளவனும் | கஞ்சனை காய்ந்த கழல் அடி நோவ | கம்ஸனைச் சிறியுதைத்த வீரக் கழலணிந்துள்ள திருவடிகள நோம்படியாக |
| கொழுந்தினை | (அவ்விடையர்க்குத) தலைவனும | | |
| பிள்ளையை | (எனக்குப்) பிள்ளையுமான கண்ணனை | கன்றின பின என் செய போக்கினேன் | கன்றுகளின பின்னே (மேய்க்கப போவென்று) எதுக்காகப் போக விட்டேன்!; |
| மனைகள தோறும் | (என வீட்டிற போலவே) அயல் வீடுகள தோறும் | | |
| திரியாமே | (இஷ்டப்படி) திரியவொட்டாமல் | எல்லே பாவமே | மஹா பாபம! மஹா பாபம். |

* * *—ஆயர்கோலக் கொழுந்தினை—இடையர்களுக்கு அழகியகொழுந்து போன்றவன் என்னவுமாம்; வெயிலே வெக்கைதட்டினால் முற்பட வாடுங் கொழுந்துபோலே, ஊரிலுள்ளாரில் ஆர்க்கேனும் ஒரு நோவுவந்தால் முற்படக் கண்ணபிரான் தன்முகம் வாடும்படி இருத்தலால் கொழுந்தெனப்பட்டான். "மஞ்சனமாட்டி" என்ற வினையெச்சம—'போக்கினேன்' என்பதோடு இயையும். கழல்—வீரத்தண்டை. என் செய—என்செய்ய; தொகுத்தல். எல்லே—இரக்கத்தைக் குறிக்கும் இடைச்சொல். .... .... .... (1)

235 பற்றுமஞ்சள்பூசிப் பாவைமாரோடுபாடியில் *
சிற்றில்சிதைத்தெங்கும் தீமைசெய்துதிரியாமே *
கற்றுத்தூளியுடை வேடர்கானிடைக்கன்றின்பின் *
எற்றுக்கென்பிள்ளையைப்போக்கினேன எல்லேபாவமே. (2)

| | | | |
|---|---|---|---|
| பாடியில் | திருவாய்ப்பாடியில் | பாவைமாரோடு திரியாமே | அவ்விடைப் பெண்களோடே திரியவொட்டாமல், |
| பற்று மஞ்சள் பூசி | பற்றுமாச்சும் மஞ்சளைத் (திருமேனியெங்கும் பெண்கள கையால தனித்தனியே) பூசப் பெற்று, | கன்று | கன்றுகளினுடைய |
| | | தூளி உடை | தூளகளையுடைத்தாய் |
| | | வேடர் கான இடை | (அடிதட்டிப்பிடுங்கும்) வேடர்களுக்கு இருப்பிடமான காட்டிலே |
| சிறில் சிதைத்து | (இடைபெண்கள் இழைக்கும்) சிற்றில்களை உதைத்தழித்து (இப்படி) | கன்றின் பின | கன்றுகளின்பின்னே (திரியும்படியாக) |
| எங்கும் | எல்லாவிடங்களிலும | என் பிள்ளையை எற்றுக்கு போக்கினேன | என் மகனை எதுக்காக அனுப்பினேன! |
| தீமை செய்து | தீம்புகளைச் செய்துகொண்டு | | எல்லே பாவமே — |

* * *—திருவாய்ப்பாடியில் இடைப்பெண்கள் மஞ்சளரைத்தால் 'இது பற்றும், பற்றாது' என்பதைப் பரீக்ஷிப்பதற்காகக் கண்ணபிரானுடைய கரிய திருமேனியிலே பூசிப் பார்ப்பர்களாம்; ஆகலால் அம்மஞ்சள் பற்றுமஞ்சள் எனப் பேர் பெற்றது. [கற்றுத்தூளி யித்யாதி.] கன்றுகளின் திரள் துகைத்துக் கிளப்பின தூள்கள் காடெங்கும் பரக்குமாதலால் கண்ணபிரானுடைய பொன்போல் மஞ்சனமாட்டின மேனி நிறம் மழுங்குமேயென்று வயிறெரிகின்றனள் தூளி—பூழி. .... ... ... (2)

236 நன்மணிமேகலை நங்கைமாரோடுநாடோறும் *
பொன்மணிமேனி புழுதியாடித்திரியாமே *
கன்மணிநின்றதிர் கானதரிடைக்கன்றின்பின் *
என்மணிவண்ணனைப்போக்கினேன் எல்லேபாவமே. (3)

என் மணி வண்ணனை } என் மகனான நீலமணி போன்ற வடிவுடைய கண்ணனை,
நல் மணி மேகலை நங்கைமாரோடு } லோகோத்தரமான நவமணி
நாள் தோறும் —தினந்தோறும்
பொன் மணி மேனி புழுதி ஆடி திரியாமே } அழகிய நீலமணிபோன்ற திருமேனி யானது புழுதி படைக்கப்பெற்று (விளையாடி)த் திரியவொண்ணாதபடி.
கான் —காட்
(இவன் கன்றுகளை அழைக்கிற த்வநியாலும், அவைகூவுகிற தவநியாலும்)
கல்மணி நின்றதிர் அதர் இடை } பிரதித்வனி யெழும்பப்பெற்றுள்ள (பயங்கரமான) வழியிலே (வருந்தும்படியாக)
கன்றின் பின் கன்றுகளின் பின்னே
போக்கினேன். போகவிட்டேனே!
எல்லே பாவமே!—.

* * *—என் கண்ணபிரான் தானுகந்த பெண்களோடுகூடித் திருமேனி புழுதி படியும்படி யதேச்சமாக விளையாடிக்கொண்டு இச்சேரியிலேயே திரிந்து கொண்டிருந்ததைத் தவிர்த்துக் கொடிய காட்டு வழியிலே போகவிட்டேனே பாவியேனென்று பரிதபிக்கின்றாள். மேகலை—ஒட்டியாணம்; அரைவடம். நாடோறும திரியாமே என்று இயையும். 'கல்' என்ற சொல் இலக்கணையால் மலையை உணர்த்திற்று. கண்ணபிரான் காட்டுவழியிற் போம்போது இவன் கன்றுகளை அழைக்கிற த்வநியாலும் அதைக்கேட்டு அவை கூப்பாடு போடுகின்ற த்வநியாலும் அருகிலுள்ள மலைகளில் பயங்கரமான ப்ரதித்வநி கிளம்புமே! என்று வழியின் கொடுமையை நினைத்து நோகின்றாளென்க. .... (3)

237 வண்ணக்கருங்குழல் மாதர்வந்தலர்தூற்றிட *
பண்ணிப்பலசெய்து இப்பாடியெங்குந்திரியாமே *
கண்ணுக்கினியானைக் கானதரிடைக்கன்றின்பின் *
எண்ணற்கரியானைப்போக்கினேன் எல்லேபாவமே. (4)

கண்ணுக்கு இனியானை } கண்களுக்கு மிகவும் தர்சநீயனாய்
எண்ணற்கு அரியானை } (இத்தனமையன் என்று) நினைக்க முடியாதவனாயுள்ள கண்ணபிரானை,
இ பாடி எங்கும் பல செய்து } இத்திருவாய்ப்பாடி முழுவதும் பல (தீமைகளைச்) செய்து (அத்தீமைகளினால்,)
வண்ணம் கரு குழல் மாதர் வந்து அலர் தூற்றிடப் பண்ணி திரியாமே } அழகிய கறுத்த கூந்தலை யுடையரானபெணபிள்ளைகள (தாயாகிய என்னிடம் ஓடி) வந்து பழிதூற்றும்படியாகப் பண்ணிக்கொண்டு திரியவொட்டாமல
கான் அதர் இடை காட்டு வழியிலே
கன்றின பின் கன்றுகளினபின்னே (திரியும்படி)
போக்கினேன் அனுப்பினேனே!
எல்லே பாவமே!—.

* * *—கண்ணுக்கினியானை—எத்தனையேனுந் தீமபு செய்யினும் அவன் வடிவழகை நினைத்தால் 'ஆகிலுங்கொடிய வென்னெஞ்சம் அவனென்றே கிடக்கும்' என்றாற்போல இவனை விடப் போகாதே! என்று கருத்து. .... .... .... (4)

238 அவ்வவ்விடம்புக்கு அவ்வாயர்பெண்டிர்க்கணுக்கனாய் *
கோவ்வைக்கனிவாய்கொடுத்துக் கூழைமைசெய்யாமே *
எவ்வுஞ்சிலையுடை வேடர்கானிடைக்கன்றின்பின் *
தெய்வத்தலைவனைப்போக்கினேன் எல்லேபாவமே. (5)

தெய்வம் தலைவனை —தேவர்களுக்கு நிர்வாஹகனான கண்ணனை
அது அது இடம் புக்கு { (மச்சுமாளிகை முதலான) அவ்வவ்விடங்களில் (ஏகாந்தமாக) புகுந்து
அது ஆயர் பெண்டிர்க்கு அணுக்கன் ஆய் { (அவ்வவ் விடங்களிலுள்ள) அவ்விடைப் பெண்களுக்கு அந்தரங்கனாய் (அவர்களுக்கு)
கொவ்வை கனி வாய் கொடுத்து கூழைமை செய்யாமே { கோவைப் பழம்போன்ற (தன்) அதரத்தை (போக்யமாகக்) கொடுத்துக்கொண்டு சூழ்மைத்தன மடித்துத்திரிய வொட்டாமல்
எவ்வும் சிலை உடை வேடர் கான் இடை } துன்பத்தை விளைக்குமதான வில்லை (க்கையிலே) உடைய வேடர்களுக்கு (இருப்பிடமான) காட்டிலே
கன்றின் பின் போக்கினேன—;
எல்லே பாவமே!—.

* * *—கீழ்த்திருமொழியில், "கேளாராயர் குலத்தவரிப்பழி கெட்டேன் வாழ்வில்லை" என்று சொன்ன யசோதைதானே இப்போது இங்ஙன் சொல்லுகை சேருமாறு எங்ஙனே யெனில்? கண்ணபிரானது பிரிவைப் பொறுக்கமாட்டாமல் 'அவன் என்னை இவ்வாறு வருத்துதலிற்காட்டில் இங்குத் தான் நினைத்தபடி தீமைசெய்து திரிவானாகில் இத்தனை வருத்தமெனக்கு விளையாதே! என்று கருதினள்போலும். அணுக்கன்—அணுகியிருப்பவன்; அந்தரங்கமாயிருப்பவன் என்றவாறு. கூழைமை செய்கையாவது—'உன்னையொழிய வேறொருத்தியையும் அறியமாட்டேன், உன்னைப்பிரிந்தால் க்ஷணமும் தரிக்கமாட்டேன்' என்றாற்போலச் சொல்லி அவ்வப்பெண்களுக்கே உரியனாய்த் தோற்ற நிற்கை. [எவ்வுஞ்சிலை] எவ்வம் என்றால் துன்பம்; அதனைச்செய்யுஞ்சிலை—எவ்வுஞ்சிலையாம். அன்றிக்கே; 'ஏவுஞ்சிலை' என்கிறவிது—எதுகையின்பம் நோக்கி 'எவ்வுஞ்சிலை' என்று கிடக்கிறதாகக் கொண்டால், ஏ என்று அம்புக்குப்பேராய் அத்தையும் சிலையையுமுடைய என்று பொருளாம். பேனையின்பத்துக்கிணங்க 'வெவ்வுஞ்சிலையுடை' என்று பாடமோதி, வெவ்விய [தீக்ஷ்ணமான] சிலையையுடைய என்று உரைத்தல் ஒக்குமென்பாருமுளர். அது பாடமன்று. .... .... (5)

239 மிடறுமெழுமெழுத்தோட வெண்ணெய்விழுங்கிப்போய் *
படிறுபலசெய்து இப்பாடியெங்குந்திரியாமே *
கடிறுபலதிரி கானதரிடைக்கன்றின்பின் *
இடறவென்பிள்ளையைப்போக்கினேன் எல்லேபாவமே. (6)

என் பிள்ளையை —என் மகனான கண்ணபிரானை,
வெண்ணெய் மிடறு மெழுமெழுத்து ஓட விழுங்கி { வெண்ணெயைக் கழுத்திலே (உறுத்தாமல்) மெழுமெழுத்து ஓடும்படி விழுங்கிவிட்டு
போய் பல படிறு செய்து { (பிராக்ருதங்களுக்குப்) போய் பலவான வேலைகளைச் செய்துகொண்டு
இ பாடி எங்கும் திரியாமே { இவ்விடைச்சேரி முழுதும் திரிய வொட்டாமல்
பல கடிறு திரி கான் அதர் இடை இடற { பல காட்டானைகள் திரியப்பெற்ற காட்டுவழியிலே தடுக்கித்திரியும்படியாக
கன்றின் பின் போக்கினேன—;
எல்லே பாவமே!—.

* * *—இலட்டுவம் சீடைமுதலான பணியாரங்களைப் புஜிக்கவேண்டுமானால் கல் உண்டோவென்று சோதித்து மெதுவாகக் கடித்துண்ணவேணும்; வெண்ணெயானபடியால் வருத்தமின்றி மெழுமெழென்று உள்ளே இழியுமே; ஆகையால் அதனை விழுங்குவனென்க. பலபடிறு செய்கையாவது * கச்சொடு பட்டைக்கிழித்துக் காமபுதுகிலவை கீறுகை;* பந்து பறித்துத் துகில்பற்றிக் கீறுகை. களிறு என்றசொல் எதுகையின்பம் நோக்கிக் கடிறு என வந்தது; டகரளகரப்போலி; டலயோரபேதஃ என்பர் வடநூலாரும். .... .... (6)

240 வள்ளிநுடங்கிடை மாதர்வந்தலர்தூற்றிட *
துள்ளிவிளையாடித் தோழரோடுதிரியாமே *

கள்ளியுணங்கு வெங்கானதரிடைக்கன்றின்பின் *
புள்ளின்தலைவனைப்போக்கினேன் எல்லேபாவமே. (7)

புள்ளின் தலைவனை —பெரியதிருவடிக்குத் தலைவனான கண்ணபிரானை,
வள்ளி நுடங்கு இடைமாதர் வந்து அலர் தூற்றிட — கொடிபோன்று துவளாநின்றுள்ள இடையையுடைய (இடைப்) பெண்கள் (தாயாகிய என்னிடத்தில்) வந்து (இவன் செய்த தீமைகளைச் சொல்லிப்) பழி தூற்றிக் கொண்டிருக்கச் செய்தே
(அதை ஒரு பொருளாக மதியாமல்)
துள்ளி தோழரோடு விளையாடி திரியாமே — (நிலத்தில் நில்லாமல்) துள்ளி (தன்) தோழர்களோடே விளையாடிக் கொண்டு திரிபவனே, அப்படி திரியவொட்டாமல்
கள்ளி உணங்கு வெம் கான அதர் இடை — (மழையில்லாக் காலத்திலும் பசுமை மாறுத) கள்ளிச்செடியுங்கூட (பால் வற்றி) உலரும்படியாய் மிக்க வெப்பத்தையுடைய காட்டு வழியிலே
கன்றின் பின் போக்கினேனே—;
எல்லே பாவமே !—.

* * *—வள்ளி-வல்லீ; கொடிபோன்று ஒடிந்து விழுகிறுப்போலிருக்கின்ற [அதிஸூக்ஷ்மமான] இடையையுடையாரென்றபடி. 'அப்பெண்கள் என்னிடம வந்து இவன் செய்த தீம்புகளைச்சொல்லிப் பழிதூற்றா நின்றால், அதனையே இவன் ஏற்றமாகக்கொண்டு மகிழ்ச்சியின் மிகுதியால் தோழருடன கூடித் துள்ளிவிளையாடுபவனே; இவ்வாறான விநோதச்செயல்களைச் செய்து திரியவொட்டாமல் முதுவேனிற்காலத்திலும் பசுகுபசுகென்று விளங்கக்கடவ கள்ளிச்செடியுங்கூடப் பால்வற்றி உலரும்படி வெம்மைமிக்க காட்டுவழியில் வருந்தும்படி அனுப்பிவிட்டேனே! என்று கதறுகின்றனள். .... .... (7)

**241** பன்னிருதிங்கள் வயிற்றிற்கொண்டவப்பாங்கினால் *
என்னிளங்கொங்கை அமுதமூட்டியெடுத்தியான் *
பொன்னடிநோவப் புலரியேகானிற்கன்றின்பின *
என்னிளஞ்சிங்கத்தைப்போக்கினேன் எல்லேபாவமே. (8)

என் இள சிங்கத்தை — எனது சிங்கக்குட்டிபோன்ற கண்ணபிரானை,
பன்னிரு திங்கள் கொண்ட அ பாங்கினால் — பன்னிரண்டு மாஸகாலம் (என்) வயிற்றிலே வைத்து நோக்கின அப்படிப்பட்ட அன்புக்கேற்ப
யான் —(தாயாகிய) நான்
என் இள கொங்கை அமுதம் — குழைந்திரா நின்றுள்ள என்னுடைய முலையிலுண்டான பாலை
ஊட்டி — (அவனுக்கு) உண்ணக் கொடுத்து
எடுத்து —வளர்த்து
(இப்படியாக அருமைப்பட நோக்கின பிள்ளையை)
புலரியே — (இன்று) விடியற்காலத்திலேயே (எழுப்பி)
பொன் அடி நோவ — அழகிய திருவடிகள் நோவெடுக்கும்படியாக
கானில் —காட்டிலே
கன்றின்பின் போக்கினேன்—;
எல்லே பாவமே!—

* * *—சக்கரவர்த்தித் திருமகனைப்போலவே கண்ணபிரானும் பன்னிரண்டு மாஸம் கர்ப்பவாஸம்பண்ணிப் பிறந்தானென்க. இவ்வாறு லோகவிலக்ஷணமாகப் பிறந்த பிள்ளையிடத்தில் இதுவேகாரணமாக மிகுந்த அன்பை வைத்து அதற்குத்தக்கபடி என்முலைப் பாலையூட்டிவளர்த்துப் போந்த நான் இன்று காலையில் அவனையெழுப்பிக் கால்நோவக் கன்றுமேய்க்கக் காட்டில் போகவிட்டேனே என்று பரிதபிக்கிறாள். கண்ணபிரானை யசோதைப்பிராட்டி மெய்நொந்துபெற்றிலளேயாகிலும "உன்னையென்மகனே யென்பர் நின்றார்" என்றபடி ஊரார் இவனை இவள்பெற்ற பிள்ளையாகவே சொல்லிவருகையால் இவளுமதைக்கொண்டு தானே அவனைப் பன்னிருதிங்கள் வயிற்றிற் கொண்டாளாகக் கூறினளெனக்கொள்க. பாங்கு—உரிமை, முறைமை. பிள்ளை முலைநெருடுங்காலத்தில் வரக்கென்றிருக்கை யன்றிக்கே குழைந்திருக்கும்படியைப்பற்ற இளமுலை என்கிறது. எடுத்து+யான் எடுத்தியான்; "உக்குறள்....யவ்வரின் இய்யாம்" என்பது நன்னூல். ... (8)

242 குடையுஞ்செருப்புங்கொடாதே தாமோதரனைநான் *
உடையுங்கடியன ஊன்றுவெம்பரற்களுடை *
கடியவெங்கானிடைக் காலடிநோவக்கன்றின்பின் *
கொடியேனென்பிள்ளையைப்போக்கினேன் எல்லேபாவமே. (9)

என் பிள்ளையை —என் மகனை
தாமோதரனை —கண்ணபிரானை,
குடையும் செருப்பும் கொடாதே — குடையையும் செருப்பையும் (அவனுக்குக்) கொடாமல்
கொடியேன் நான் —கொடியவளாகிய நான்
உடையும் — (ஸூர்யனுடைய வெப்பத்தாலே) உடைந்து கிடப்பனவாய்
கடியன ஊன்று வெம் பரற்கள் உடை — கூரியனவாய்க் கொண்டு (காலிலே) உறுத்துவனவாய் (இப்படி) அதி தீக்ஷ்ணமான பருக்காங்கல்லையுடைய
கடிய வெம் கான் இடை—அதயுஷ்ணமான காட்டிலே
கால அடி நோவ கன்றின்பின்
போக்கினேன்—;
எல்லே பாவமே!—.

* * *—காட்டிலுள்ள பருக்காங்கற்கள் கதிரவனுடைய எரிச்சலினால் ஒன்று பலவாகப்பிளந்து கூர்மைமிக்கு உள்ளங்காலில் உறுத்திவருத்துமே, வெயிலுக்குத்தடையாகக் குடையையும், தரையின் வெம்மைக்குத் தடையாகச் செருப்பையும் அவனுக்குத்தாராமல் இப்படிப்பட்ட காட்டிற்போக விட்டேன், என் கொடுமை யிருந்தவாறு என்னே! என்கிறாள். மேல் திருமொழியில் “குடையுஞ் செருப்புங்குழலுந் தருவிக்கக் கொள்ளாதே போனாய்மாலே” எனக் காண்கையால் இங்குக் ‘கொடாதே’ என்பதற்கு-அவன் இவற்றை ‘வேண்டா’ வென்று மறுக்கச்செய்தேயும் நான் கட்டாயப்படுத்தி [பலாத்காரமாக] அவற்றைக்கொடாமல் என்று பொருள் விரித்தல் வேண்டுமென்க. பரல்—பருக்கை. கால் அடி—காலின் உள்ளடி. .... .... .... ... (9)

243 என்றுமெனக்கினியானை யென்மணிவண்ணனை *
கன்றின்பின்போக்கினேனென்று அசோதைகழறிய *
பொன்திகழ்மாடப் புதுவையர்கோன்பட்டன்சொல் *
இன்தமிழ்மாலைகள்வல்லவர்க்கு இடரில்லையே. (10)

என்றும் எனக்கு இனியானை — ‘எப்போதும் (தாயாகிய) எனக்கு இனிமையைத் தருமவனாய்
என் மணி வண்ணனை — என்னுடைய நீலமணி போன்ற வடிவையுடையவனான கண்ணபிரானை
கன்றின் பின் போக்கினேன் என்று — கன்றுகளின் பின்னே (காட்டிலே) போக விட்டேனே!’ என்று
அசோதை கழறிய — யசோதைப்பிராட்டி (மனம் நொந்து) சொன்னவற்றை
சொல் —அருளிச்செய்த,
பொன் திகழ் மாடம் புதுவையர் கோன் பட்டன் — பொன்மயமாய் விளங்கா நின்றுள்ள மாடங்களையுடைய ஸ்ரீவில்லிபுத்தூரிலுள்ளவர்களுக்கு நிர்வாஹகரான பெரியாழ்வாருடைய
இன் தமிழ் மாலைகள் வல்லவர்க்கு — போக்யமான தமிழ்ச்சொல் மாலைகளை ஓதவல்லவர்களுக்கு
இடர் இல்லை —(ஒருகாலும்) துன்பமில்லையாம்.

* * *—என்றும்—தீம்புசெய்த காலத்திலுமென்க: ‘கழறிய’ என்பதைப் பலவின்பால் இறந்தகால வினையாலணையும் பெயராகக்கொண்டு அதில் இரண்டாம் வேற்றுமையுருபு தொக்கியிருக்கின்றதென்க. .... .... .... ... (10

அடிவரவு—அஞ்சனம் பற்று நன்மணி வண்ணம் அவ்வவ்விடம் மிடறு வள்ளி பன்னிரு குடை என்றும் சீலை.

இரண்டாந்திருமொழி உரை முற்றிற்று.

அவதாரிகை:—கண்ணபிரானைக் காட்டில்போகவிட்ட கொடுமையைக்கூறி வயிறெரிந்துகொண்டே பகற்பொதையெல்லாம் ஒருவாறு போக்கின யசோதைப் பிராட்டி மாலைப் பொழுதிலே கன்றுகளை மேய்த்துவிட்டு மீண்டுவருகின்ற கண்ணபிரானை எதிர்கொண்டு சென்று அவனுடைய திருமேனியி னலங்காராதிகளைத் தான் கண்டுமகிழ்ந்து பிறரையுங் காணச்செய்து தான் பெற்றுள்ள பெருமையையும் செய்தகாரியத்தின் புன்மையையுஞ் சொல்லி வருந்தி 'இனி நீ கன்றுகளின் பின்னே காடுநோக்கிச் செல்லவேண்டா' என்ற பாசுரத்தை ஆழ்வாரும் தம்மை அவளாகப்பாவித்துப் பேசி மகிழ்கிறார்—இத்திருமொழியில்.

244 சீலைக்குதம்பையொருகாதொருகாது செந்நிறமேற்றோன்றிப்பூ *
கோலப்பணைக்கச்சுங்கூறையுடையுங் குளிர்முத்தின்கோடாலமும் *
காலிப்பின்னேவருகின்ற கடல்வண்ணன்வேடத்தைவந்துகாணீர் *
ஞாலத்துப்புத்திரனைப்பெற்றார் நங்கைமீர்நானேமற்றாருமில்லை. (1)

நங்கைமீர் —பெண்காள்!
ஒரு காது சிலைக் குதம்பை { ஒருகாதிலே சீலைத்தக்கையையும்
ஒரு காது செம் நிறம் மேல் தோன்றி பூ { மற்றொரு காதிலே செங்காந்தள பூவையும் (அணிந்து கொண்டு)
கூறை உடையும் —திருப்பரியட்டத்தின் உடுப்பையும் (அது நழுவாமைக்குச் சாதகின)
கோலம பணை கச்சும { அழகிய பெரிய கச்சுப்பட்டையையும
குளிா முத்தின் கோடு ஆலமும் { குளிர்ந்திராநின்றுள்ள முத்தாலே தொடுக்கப்பெற்று (பிறைபோல்) வளைந்திருக்கின்ற ஹாரத்தையும் (உடையனாய்க் கொண்டு)
காலி பின்னே வருகின்ற கடல் வண்ணன் வேடத்தை { கன்றுகளின் பின்னே (மீண்டு) வாராநின்ற கடல போன்ற நிறத்தவனான கண்ணனுடைய வேஷத்தை
வந்து காணீர் —வந்து பாருங்கள்;
ஞாலத்து —பூமண்டலத்திலே
புத்திரனை பெற்றார்—பிள்ளையைப் பெற்றவர்களுள ('நல்ல பிள்ளை பெற்றவள' என்று சொல்லத்தக்கவள)
நானே —நான் ஒருத்தியேயாவேன்;
மற்று ஆரும் இல்லை—வேறொருத்தியுமில்லை.

* * *—சீலைக்குதம்பை='போய்ப்பாடுடைய நின்' என்ற திருமொழியில் யசோதைப் பிராட்டி கண்ணபிரானை வேண்டியழைத்துக் காதிலிட்ட துணித்திரி. "திரியை யெரியாமே காதுக்கிடுவன்" என்று சொல்லி இட்டாளன்றே; இரண்டு காதுகளிலும அத்திரியை இவள் இட்டனுப்ப, அவன் காட்டிலே ஒருகாதில் திரியைக் களைந்திட்டுச் செங்காந்தள்பூவை அணிந்துகொண்டுவந்தமை அறிக. உடை என்று வஸ்திரத்திற்கும் அதனை உடுத்துதற்கும் பேர். இங்கு இரண்டாவதான தொழிற்பொருளைக் கொள்க. ஆலம்='ஹாரம்' என்ற வடசொல் ஆரமெனத்திரிந்து ரகரத்திற்கு லகரம போலியாக வந்தது. வேடம்—வேஷம். பெண்காள்! கச்சுங்கூறையுமாரமுமாக என் கண்ணபிரான் கன்றுமேய்த்து மீண்டுவருகின்ற கோலத்தை வந்து காண்மின்; பிள்ளை என்றால் இவனொருத்தனேயொழிய மற்றைப்பிள்ளைகள் அணிற்பிள்ளை கீரிப்பிள்ளை தென்னம்பிள்ளையேயாமத்தனை; அவற்றைப்பெற்ற தாய்களோடு மலடிகளோடு ஒருவாசியில்லை; 'புத்ரவதி' என்று எனக் கொருத்திக்கே யன்றே பட்டங்கட்டத்தகும் என்று புகழ்ந்து மகிழ்ந்து பொலிகின்றாள். .... .... (1)

245 கன்னிநன்மாமதிள்சூழ்தரு பூம்பொழிற்காவிரித்தென்னரங்கம் *
மன்னியசீர்மதுசூதனாகேசவா பாவியேன்வாழ்வுகந்து *
உன்னையிளங்கன்றுமேய்க்கச் சிறுகாலேயூட்டியொருப்படுத்தேன் *
என்னின்மனம்வலியாளொருபெண்ணில்லை யென்குட்டனேமுத்தந்தா. (2)

கன்னி நல் மா மதிள் சூழ்தரு — அழிவற்ற விலக்ஷணமான பெரிய மதில்களாலே சூழப்பட்டு
பூ பொழில் காவிரி தென் அரங்கம் — பூஞ்சோலைகளை யுடைய காவேரி நதியோடு கூடிய தென் திருவரங்கத்தில்
மன்னிய —பொருந்தி யெழுந்தருளியிருக்கின்ற
சீர் மதுசூதனா — கல்யாண குணயுக்தனான மதுஸூதநனே! [கண்ணபிரானே!]
கேசவா —கேசவனே!
பாவியேன் —பாவியாகிய நான்
வாழ்வு உகந்து — (நமது ஜாதிக்கேற்ற கன்று மேய்க்கையாகிற) ஜீவநத்தை விரும்பி
உன்னை சிறுகாலே ஊட்டி — (இவ்விலைச்சலுக்கு ஆளல்லாத) உன்னை விடியற்காலத்திலேயே உண்ணச் செய்து
இள கன்று மேய்க்க ஒருப்படுத்தேன் — இளங்கன்றுகளை மேய்க்கைக்காக (அவற்றின் பின்னே போக) ஸம்மதித்தேன;
(இப்படி உன்னை அனுப்பிவிட்டுப் பொறுத்திருந்த)
என்னில் —என்னிற்காட்டில்
மனம் வலியாள் ஒரு பெண் இல்லை — கல்நெஞ்சை யுடையளான ஒரு ஸ்த்ரீயும (இவ்வுலகில்) இல்லை;
என குட்டனே முத்தம் தா — எனது குழந்தாய்! (எனக்கு) ஒரு முத்தம் கொடு.

* * *—கன்னி—ஸ்திரமாயிருக்கை; நிகண்டு;—“கன்னி பெண் அழிவில்லாமை கட்டிளமைக்கும் பேரே” என்றான் மண்டலபுருடன். * யாவரும வந்தடிவணங்க அரங்கநகர் துயின்ற ஸர்வேச்வரனை உன் அருமையை நோக்காது உன்னை இடைப்பிள்ளையாகவே நினைத்துச் சாதித்தொழிலென்று கன்றுமேய்க்கைக்காகக் காலையிலேவூட்டிக் காடேறப்போக விட்ட எனது நெஞ்சின் காடிந்யத்தை என்னென்று சொல்வேன்; இவ்வாறு கடினமான நெஞ்சையுடைய ஸ்த்ரீ மற்றுரேனுங் கிடைப்பாளோவென்று இவ்வுலகெங்குந் தேடினாலும் கிடையாள்; வேறு சிலராகில் நெஞ்சழிந்து விழுந்து விடார்களோ? இனி இதைப்பற்றிச் சிந்தித்துப் பயனென்? எனக்குண்டான இவ்வருத்தமெல்லாந்தீர ஒரு முத்தங்கொடுத்தருள் என்று அணைத்து உகந்து சொல்லுகின்றாள். வாழ்வு உகந்து என்ற சொல்நயத்தால்—ஸ்வப்ரயோஜனத்தைக் கணிசித்தேனேயொழிய உன் ஸம்ருத்தியை நான் விரும்பிற்றிலேனே என்று உள்வெதும்புகின்றமை தோற்றும். ஒருப்படுத்தேன்=ஒருப்பாடு – ஒருமனப்படுதல், ஸம்மதித்தல் என்றபடி: ‘நீ கன்றுமேய்க்கும்படியை நான் ஸம்மதித்தேன்’ என்கை. “ஒருப்படுத்தேன்” என்கிறவிது–உடன்பாட்டுக்கும எதிர்மறைக்கும பொதுவான வினை; இங்கு உடன்பாட்டில் வந்ததென்க. முத்தம்–அதரம். .... .... (2)

246 காடுசளுடுபோய்க்சன்றுகள்மேய்த்து மறியோடி * கார்க்கோடற்பூச்
சூடிவருகின்றதாமோதரா கற்றுத்தூளிகாணுன்னுடம்பு *
பேடைமயிற்சாயற்பின்னைமணாளா நீராட்டமைத்துவைத்தேன் *
ஆடியமுதுசெய்யப்பனுமுண்டில னுன்னோடுடனேயுண்பான். (3)

காடுகள் ஊடு போய்—(பறபல) காடுகளினுள்ளே புகுந்து (கன்றுகள் கைகழியப் போகாதபடி)
மறி ஓடி — (அவற்றை) மறிக்கைக்காக [திருப்புகைக்காக] முன்னே ஓடி
கன்றுகள் மேய்த்து—(அக்) கன்றுகளை மேய்த்து
கார் கோடல் பூ சூடி வருகின்ற தாமோதரா — பெரிய கோடல் பூக்களை முடியிலணிந்து கொண்டு (மீண்டு) வருகின்ற கண்ணபிரானே!
உன் உடம்பு —உன உடம்பானது
கன்று தூளி காண் — கன்றுகளால் துகைத்துக் கிளப்பப்பட்ட தூளிகள் படியப்பெற்றுள்ளது காண்;
மயில் பேடை சாயல் பின்னை மணாளா — பெண்மயில்போன்ற சாயலை யுடைய நப்பின்னைப்பிராட்டிக்கு வல்லபனானவனே!
(இந்த உன் உடம்பை அலம்புவதற்காக)
நீராட்டு அமைத்து வைத்தேன் — நீராட்டத்துக்கு வேண்டியவற்றை ஸித்தப்படுத்தி வைத்திருக்கிறேன்;
(ஆகையால் நீ)
ஆடி அமுதுசெய் —நீராடி அமுதுசெய்வாயாக;
உன்னோடு உடனே உண்பான் அப்பனும் உண்டிலன — உன்னோடு கூடவே உண்ணவேணுமென்று (உன) தகப்பனாரும் (இதுவரை) உண்ணவில்லை.

* * *—கண்ணபிரானே! நீ கன்றுமேய்க்கக் காட்டிடைப்புகுந்து மேய்க்கும்போது
வகை வங்கெயிங்கும் [illegible] அவற்றை விடாமல் அவற்றின் முன்னே மெக்

திருப்பி இவ்வாறு கஷ்டங்கள் பட்டுக் கன்றுகளை மேய்த்துவிட்டு வரும்போது உன் உடம்பெல்லாம் புழுதிபடிந்து கிடக்கின்றது; இந்த மாசுதீரும்படி உன்னை நீராட்டுவதற்காக எண்ணெய் புளிப்பழம் முதலிய ஸாமக்ரிகளைச் சேமித்துவைத்திருக்கின்றேன்; நீ வந்தபிறகு உன்னுடனே உண்ணவேணுமென்று உன் தகப்பனாரும் இதுவரை உண்ணாமல் காத்திருக்கின்றார்; ஆகையால் சடக்கென நீராடி அமுதுசெய்யவா என்றழைக்கின்றாள். கோடல்பூ-காந்தள்பூ; கார்-பெருமைக்குபேர். சாயல்-அழகு. ... .... .... (3)

247 கடியார்பொழிலணிவேங்கடவா கருடபோரேறே * நீயுகக்குங்
குடையுஞ்செருப்புங்குழலுந்தருவிக்கக் கொள்ளாதேபோனாய்மாலே *
கடியவெங்கானிடைக்கன்றின்பின்போன சிறுக்குட்டச்செங்கமல
வடியும்வெதும்பி * உன்கண்கள்சிவந்தாயசைந்திட்டாய் நீயெம்பிரான். (4)

| | | | |
|---|---|---|---|
| கடி ஆர் பொழில் அணி வேங்கடவா | (மலர்களின்) பரிமளம் நிறைந்த சோலைகளையுடைய அழகிய திருவேங்கடமலையில் எழுந்தருளியிருப்பவனே! | கொள்ளாதே போனாய் | (அவற்றை நீ) வாங்கிக்கொள்ளாமல் (கன்றுகளின் பின்னே) சென்றாய், (இப்படி) |
| போர் கரு ஏறே | யுத்தஞ்செய்ய முயன்ற காளரிஷபம்போல செருக்கியிருக்குமவனே! | கடிய வெம் கான் இடை | —மிகவும் வெவ்விய காட்டிலே |
| மாலே | (கன்றுகளிடத்தில்) மோஹமுள்ளவனே! | கன்றின் பின் போன சிறு குட்டா | கன்றுகளின் பின்னே தொடர்ந்து சென்ற சிறுப் பிள்ளையாகிய உன்னுடைய |
| எம்பிரான் | —எமக்கு ஸ்வாமியானவனே! | செம் கமலம் அடியும் வெதும்பி | செந்தாமரைப் பூப்போன்ற திருவடிகளும் கொதிக்கப்பெற்று |
| நீ உகக்கும் குடையும் செருப்பும் குழலும் தருவிக்க | நீ விரும்புமவையான குடையையும் செருப்பையும் வேய்ங்குழலையும் (நான் உனக்கு) கொடுக்கச் செய்தேயும் | உன் கண்கள் சிவந்தாய் | உன் கண்களும் சிவக்கப் பெற்றாய்; |
| | | அசைந்திட்டாய் | —(உடம்பு) இளைக்கவும் பெற்றாய் |

* * *—கண்ணபிரானே! நீ கன்றுமேய்க்குமிடமான காடுகளின் கொடுமையை நான் முன்னமே நினைத்துக் 'குடையையுஞ் செருப்பையுங்கொள்' என்று வேண்டியும் அவற்றை நீ கொள்ளவில்லை. அங்குமிங்குஞ் சிதறியோடுங் கன்றுகளை நீ இருந்தவிடத்திலிருந்துகொண்டே வேய்ங்குழலூதியழைத்துக்கிட்டுவித்துக்கொள்வதற்காக அவ்வேய்ங்குழலையுங் கொடுக்கக் கொண்டிலை; நீ சென்றவிடமோ, மிகவும் தீக்ஷ்ணமான காட்டிலம்; காலிற் செருப்பில்லாமையாலே செங்கமலவடிகள் வெதும்பிப்போயின; மேல் குடையில்லாமையாலே கண்கள் சிவந்தன; இங்குமங்குந்திரியாமல் இருந்தவிடத்தேயிருந்து கன்றுகளை மேய்க்கக் குழலில்லாமல் தட்டித்திரிந்தபடியால் உடம்பு இளைத்தது; இப்படியுமொரு கஷ்டம் நேரக்கடவதோவென்று வயிறுபிடிக்கிறாள். தருவிக்க என்பதற்கு 'கொடுக்க' என்று தன்வினைப்பொருள்கொள்க. போனாய் என்பதை வினைமுற்றாகக் கொள்ளாமல், போனவனே! என விளியாகக்கொள்ளவுந் தகுமெனக்கொள்க. கண்கள் சிவந்தாய்—"சினைவினை சினையொடும் முதலொடுஞ்செறியும்" என்ற நன்னூற் சூத்திரமுணர்க. .... .... (4)

248 பற்றார்நடுங்கமுன்பாஞ்சசன்னியத்தை வாய்வைத்தபோரேறே * என்
சிற்றாயர்சிங்கமேசீதைமணாளா சிறுக்குட்டச்செங்கண்மாலே *
சிற்றாடையுஞ்சிறுப்பத்திரமு மிவைகட்டிலின்மேல்வைத்துப்போய் *
கற்றாயரோடுநீகன்றுகள்மேய்த்துக் கலந்துடன்வந்தாய்போலும். (5)

முன் —(பாரதப்போர்செய்த) முற்காலத்தில்
பறளூர் நடுங்க பாஞ்சசன்னியத்தை வாய்வைத்த போர் ஏறே — (உனது உயிர்போன்ற பாண்டவர்களுக்குப்) பகைவரான துரியோதனாதியர் நடுங்கும்படி சங்கத்தைத் திருப்பவளத்தில் வைத்து ஊதின போர் செய்யவுற்ற காளை போன்ற கண்ணபிரானே!
என் சிறு ஆயர் சிங்கமே — எனக்கு விதேயனாய் சிறிய இடைப்பிள்ளைகளுள் சிங்கக்குட்டி போன்றுள்ளவனே!
சீதை மணாளா —ஸீதாபிராட்டிக்கு வல்லபனானவனே
சிறு குட்டன் —சிறு பிள்ளையாயிருப்பவனே!
(இப்படியிருக்கச் செய்தேயும்)
செங் கண் மாலே — செந்தாமரை மலர்போன்ற கண்களையுடைய ஸர்வேச்வரனாக விளங்குமவனே!
நீ—;
சிறு ஆடையும் — (உன் பருவத்துக்குத்தக்க) சிறிய திருப்பரிவட்டமும்
சிறு பத்திரமும் இவை — குற்றுடைவாளுமாகிற இவற்றை
(காட்டுக்குப் போகையிலுள்ள விரைவாலே)
கட்டிலின்மேல் வைத்து போய் — (கண்வளர்ந்தருளின) கட்டிலின் மேலே வைத்து மறந்துபோய்
கன்று ஆயரோடு — கன்றுமேய்க்கிற இடைப்பிள்ளைகளுடனே
கன்றுகள் மேய்த்து —கன்றுகளை மேய்த்துவிட்டு
(பின்பு மாலைப்பொழுதிலே)
கலந்து உடன — (அந்த இடைப்பிள்ளைகளோடே) கூடக்கலந்து
நீ வந்தாய் போலும —(வீட்டுக்கு) வந்தாயன்றோ

* * *—“ த்விஷதந்நம் ந போக்தவ்யம் — த்விஷந்தம் நைவ போஜயேத் பாண்டவாந் த்விஷஸே ராஜந் மம ப்ராணாஹி பாண்டவா:” [“த்விஷதந்நம் ந போக்தவ்யம்—பாண்டவாந் த்விஷஸே ராஜந்”] என்று கண்ணபிரான் தானே அருளிச் செய்தமையால், துர்யோதநாதிகள் பாண்டவர்களுக்குப் பகைவராயினும் இவன்றனக்கே பகைவராகச் சொல்லப்பட்டனர்; உயிர்வேறல்லாமையாலே. நடுங்க—“ஸவ்யோஷாய் தத்ராஷ்ட்ராணாம் ஹ்ருதயாநி வ்யதாரயத்” என்ற இதனை நினைக்க. சிறுக்குட்டன் + செங்கண்மால் = சிறுக்குட்டச் செங்கண்மால்; “ சிலவிகாரமாமுயர்திணை ” என்பது நன்னூல். சிறுக்குட்டன்-சிறுகுட்டனே! எனவிளித்தவாறு; “இம்முப் பெயர்க்கண் இயல்பும் ஏயும், இகர நீட்சியு முருபாம் மன்னே” என்பதும் நன்னூல் சிறுப்பத்திரம்—சிறிய கத்தி; “பத்திரமிலை வனப்புப் படை நன்மை சிறகே பாணம்” என்பது நிகண்டு. பின்னிரண்டடிகளின் கருத்து:—நீ கன்றுமேய்க்கக் காடு செல்ல நினைத்தபோது நான் உனது உத்தரீயத்தையும் விளையாட்டுக்கு உபகரணமான சொட்டைக்கத்தியையும் தரச்செய்தேயும் நீபோகையிலுள்ள விரைவாலே அவற்றைக் கட்டிலின்மேலேயேவைத்து மறந்துவிட்டுக் காட்டுக்குப்போய் இடைப்பிள்ளைகளோடொக்கக் கன்றுகளை மேய்த்துவிட்டு மாலைப்பொழுதானவாறே அப்பிள்ளைகளோடு கூடவே ‘இவன் இவர்களிலே ஒருவன்’ என்றே நினைக்கும்படிவந்து சேர்ந்தாயன்றோ என்று உகக்கிறாள்; மேல் பீதாம்பரமும் உடைவாளும் கையிலிருந்தால் வைலக்ஷண்யந் தோற்றும் என்பது உட்கருத்து. .... .... .... .... (5)

249 அஞ்சுடராழியுன்கையகத்தேந்தும் அழகாநீபொய்கைபுக்கு *
நஞ்சுமிழ்நாகத்தினோடுபிணங்கவும் நானுயிர்வாழ்ந்திருந்தேன் *
என்செய்யவென்னைவயிறுமறுக்கினாய் ஏதுமோரச்சமில்லை *
கஞ்சன்மனத்துக்குகப்பனவேசெய்தாய் காயாம்பூவண்ணங்கொண்டாய். (6)

அம் சுடர் ஆழி கை அகத்து ஏந்தும அழகா — அழகிய ஒளியையுடைய திருவாழியாழ்வானைத் திருக்கையிலே தரிப்பவனான அழகபிரானே!
நீ—!
பொய்கை புக்கு — (காளியன் கிடந்த) பொய்கையிலே போய்ப்புகுந்து
(அவவிடத்தில்)
நஞ்சு உமிழ் நாகத்தினோடு பிணங்கவும் — விஷத்தை உமிழாநின்ற காளியனோடு சண்டை செய்தபோது
நான் உயிர் வாழ்ந்து இருந்தேன் — நான் ஜீவித்திருந்தேன்;
என் செய்ய என்னை வயிறு மறுக்கினாய் — எதுக்காக என்னை இப்படி வயிறு குழம்பச் செய்கின்றாய்
ஏதும ஓர் அச்சம இல்லை — உனக்குக் கொஞ்சமும் பயமில்லையே;
காயாம்பூ வண்ணம் கொண்டாய் — காயாம்பூப்போன்ற வடிவு படைத்தவனே!
கஞ்சன் மனத்துக்கு உகப்பனவே செய்தாய் — கம்ஸனுடைய மனத்துக்கு உகப்பாயிருப்பவற்றையே செய்யாநின்றாய்.

* * *—முதலடியில் 'உன்' என்றது-வார்த்தைப்பாடு; பொருளில்லை. கண்ணபிரானே! நீ அன்றொருகால் காளியன் பொய்கை கலங்கப் பாய்ந்திட, அவன் தன் உடலாலே உன்னை இறுகக்கட்ட அதை உதறிப்போகட்டு அவனுச்சியின் மீதேறி அவன் வாலைப் பிடித்துக்கொண்டு நின்று திளைத்து அவன் வாயாலே ரத்தம் கக்கும்படி ஆடி இப்படியாய்க் கொண்டு அந்யோந்யம பிணங்கினபோது நான் உயிர்தரித்திருக்கப் பட்டபாடு பகவானறியும்; நீயோவென்றால் இறையு மஞ்சுகிறிலை; உன்னைக்கொல்ல ஸமயம் பார்த்திருக்கின்ற கம்ஸன் தன் மனோரதம் நிறைவேறப்பெற்று மகிழும்படியாகக் காட்டுக்குச்சென்று கண்டவிடமெங்குந் திரியாநின்றாய்; இப்படிகளை நினைத்தால் என் வயிறு குழம்புகின்றது; இப்படி என் குடலைக் குழப்புவதனால் நீ பெறும்பேறு என்னோ? அறிகிலேன் என்கிறாள். [காயாம்பூ இத்யாதி] இவ்வடிவின் பெருமையை நினைக்கிறாயில்லையே! என்றவாறு. 'வேண்டினபடியாகிறது, இவ்வடிவுக்கு ஒரு வைகல்யம் வாராமல் பிழைக்கப் பெற்றேனே யென்கை" என்பது-ஜீயருரை. மறுக்கிறாய் என்பதற்கு 'மறுக்குகின்றாய்' என்றும், செய்தாய் என்பதற்குச் 'செய்கின்றாய்' என்றும் நிகழ்காலப் பொருள்கொள்ளல் தகும்; இது வழுவமைதியின் பாற்படும்: "விரைவினு மிகவினுந் தெளிவினு மியல்பினும், பிறழவும் பெறூஉமுக் காலமு மேற்புழி" என்றார் நன்னூலார். .... ... .... (6)

250 பன்றியுமாமையுமீனமுமாகிய பாற்கடல்வண்ணாவுன்மேல் *
கன்றினுருவாகிமேய்புலத்தேவந்த கள்ளவசுரர்தம்மை *
சென்றுபிடித்துச்சிறுக்கைகளாலே விளங்காயெறிந்தாயபோலும் *
என்றுமென்பிள்ளைக்குத்தீமைசெய்வார்கள் அங்ஙனமாவர்களே. (7)

| | |
|---|---|
| பன்றியும் ஆமையும் மீனமும் ஆகிய | மஹாவராஹமாயும் ஸ்ரீகூர்மமாயும் மத்ஸ்யமாயும் திருவவதரித்தருளின |
| பால் கடல் வண்ணா | பாற்கடல்போல் வெளுத்த திருநிறத்துள்ள திருமேனியை யுடையவனே! |
| உன் மேல் | உன்னை நலியவேணுமென்ற எண்ணத்தினால் |
| கன்றின் உரு ஆகி | கன்றின் உருவத்தை யெடுத்துக்கொண்டு |
| மேய்புலத்தே வந்த | (கன்றுகள்) மேயும் நிலத்தில் வந்து கலந்த |
| கள்ளம் அசுரர் தம்மை | க்ருத்ரிமனான அஸுரனை (அவன சேஷ்டையாலே அவனை அஸுரனென்றறிந்து) |
| சென்று சிறு கைகளாலே பிடித்து | அக்கன்றின் அருகிற சென்று உனது சிறிய கைகளாலே அக்கன்றைப் பிடித்து |
| விளங்காய் எறிந்தாய் போலும் | அஸுராவிஷ்டமானதொரு விளாமரத்தின காயகளை நோக்கி விட்டெறிந்தாயன்றோ; |
| என் பிள்ளைக்கு தீமைசெய்வார்கள் | என பிள்ளையான கண்ணபிரானுக்குத தீமைகளை உண்டுபண்ணுமவாகள |
| என்றும் அங்ஙனம் ஆவாகள் | என்றைக்கும் அவ்விளவும கன்றும போலே நசித்துப்போகக் கடவாகள. |

* * *—'பாற்கடல்வண்ணா' என்றது—க்ருஷ்ணாவதாரத்தில் நிறத்தைச் சொன்னபடியன்று; 'பாலின் நீர்மை செம்பொனீர்மை' என்ற பாட்டிற் சொல்லியபடி—ஸாத்விகர்களான க்ருதயுக புருஷர்களுடைய ருசிக்குத் தக்கபடி திருமேனிநிறத்தை யுடையனாய்க்கொண்டு அவர்களைக் காத்தருளினவாற்றைச் சொல்லுகின்றதென்க; இனி, 'பார்க்கடல்வண்ணா' என்று பாடமாகில், பார் [பூமி] சூழ்ந்த கடல்போன்ற [கறுத்த] நிறத்தையுடையவனே! என்று பொருளாய் இவ்வவதாரத்தின் நிறத்தையே சொல்லிற்றாகலாம். கன்றினுருவாகி வந்த அசுரன் [வத்ஸாஸுரன்] ஒருவனாதலால் 'அசுரன்றன்னை' என்று ஒருமையாகச் சொல்லவேண்டியிருக்க, அங்ஙனஞ் சொல்லாது 'அசுரர்தம்மை' என்று பன்மையாகக் கூறினது-பால்வழுவமைதியின் பாற்படுமென்க; "உவப்பினு முயர்வினுஞ் சிறப்பினுஞ்

சேறலினும் இழிப்பினும் பால்திணை இழுக்கினுமியல்பே" என்றார் நன்னூலார்; கோபத்தினால் பன்மைப்பால் ஒருமைப்பாலாதலேயன்றி ஒருமைப்பால் பன்மைப்பாலாதலும் உண்டென்பது ஒருசாரார் கொள்கை; சிறியதிருமடலில், "அருகிருந்த மோரார் குடமுருட்டி முன் கிடந்த தானத்தே, ஓராதவன்போற் கிடந்தானைக் கண்டவளும், வாராத்தான் வைத்தது காணாள் வயிறடித்திங், காரார் புகுதுவார் ஐயரிவரல்லால், நீராமிதுசெய்தீர் என்றோர் நெடுங் கயிற்றால், ஊரார்களெல்லாருங்காண உரலோடே, தீரவெகுளியளாய்ச் சிக்கன ஆர்த்தடிப்ப, ஆராவயிற்றினோடாற்றாதான்" என்றவிடத்து 'ஐயர்' 'நீராம்' என்று ஒருமைப்பால் பன்மைப்பாலாக அருளிச்செய்துள்ளமையும், 'தீரவெகுளியளாய்' என்றமையால் இதுக்கு அடி கோபமென்பதும் இங்கு உணரத்தக்கது. "உண்ணிலாவியவைவரால்" என்ற பதிகத்திலும் மற்றும் பல விடங்களிலும் ஐம்பொறிகளை 'ஐவர்' என உயர்திணையாற் கூறியது, இழிவு பற்றிய திணைவழுவமைதி என்றாற்போலக்கொள்க.

கண்ணபிரானே! உன்னை நலியவந்த வத்ஸாஸுரனையும் கபித்தாஸுரனையும் அநாயாஸமாக முடித்தவனன்றோ நீ—என்று யசோதைசொல்ல, அவன் 'ஆம்' என்ன அதைக்கேட்ட யசோதை மனமகிழ்ச்சி ஒருபக்கத்திலும் வயிற்றெரிச்சல் ஒருபக்கத்திலுமாய் 'என்னுடைய பிள்ளைக்குத் தீமைசெய்யக் கருதுமவர்கள் என்றும் அப்படியே மாளக்கடவர்கள்' என்று கைநெரித்துச் சாபமிடுகிறாள் ஈற்றடியால். .... .... .... (7)

251 கேட்டறியாதனகேட்கின்றேன் கேசவாகோவலரிந்திரற்கு *
காட்டியசோறுங்கறியுந்தயிரும் கலந்துடனுண்டாய்போலும் *
ஊட்டமுதலிலேனுன்றன்னைக்கொண்டு ஒருபோதுமெனக்கரிது *
வாட்டமிலாப்புகழ்வாசுதேவா உன்னையஞ்சுவனின்றுதொட்டும் (8)

| | | | |
|---|---|---|---|
| கேசவா | —கண்ணபிரானே! | | (இப்படி உண்ணவல்ல பெருவயிறுடையவனான உன்னை) |
| கேட்டு அறியாதன கேட்கின்றேன் | உன விஷயமாக இதுவரை நான் கேட்டறியாதவற்றை இன்றுகேட்கப்பெற்றேன்; அவற்றில் ஒன்று சொல்லுகின்றேன் கேள்; | ஊட்ட முதல் இலேன் | நாடோறும் ஊட்டிவளர்க்க(த்தக்க) கைம்முதல் எனக்கில்லை; |
| கோவலர் இந்திரற்கு காட்டிய | கோபாலர்கள் இந்திரனைப் பூஜிப்பதற்காக அனுப்பிய | உன் தன்னை கொண்டு ஒருபோதும் எனக்கு அரிது | உன்னை வைத்துக்கொண்டு ஒரு வேளையும் என்னால் ஆற்ற முடியாது; |
| சோறும் கறியும் தயிரும் | சோற்றையும் அதுக்குத்தக்க கறியையும் தயிரையும் | வாட்டம் இலா புகழ் வாசுதேவா | என்றும் வாடாத புகழையுடைய வஸுதேவர் திருமகனே! |
| உடன் கலந்து உண்டாய்போலும் | ஒன்றுசேரக் கலந்து உண்டவனன்றோ நீ; | இன்று தொட்டும் உன்னை அஞ்சுவன் | இன்று முதலாக உன்னைக் குறித்து அஞ்சாநின்றேன். |

* * *—திருவாய்ப்பாடியில் ஆயர்களெல்லாருங்கூடி மழையின் பொருட்டாக இந்திரனை ஆராதித்தற்கென்று வழக்கப்படி சமைத்தசோற்றைக் கண்ணபிரான் ஒருகால் அவனுக்கு இடாதபடி விலக்கிக் கோவர்த்தனமலைக்கு இடச்சொல்லித் தானே ஒரு தேவதாரூபங்கொண்டு அமுதுசெய்தனனென்ற வரலாற்றைப் பலர்சொல்லக் கேட்டுணர்ந்த யசோதைப்பிராட்டி அக்கண்ணனை நோக்கிப் 'பிரானே! நீ இங்ஙனே செய்தாயோதான்' என்ன; அவனும் மறுமாற்ற முரையாதொழிய "*பாசன நல்லன பண்டிகளாற் புகப்பெய்த *அட்டுக்குவி சோற்றுப் பருப்பதமுந் தயிர்வாவியும் நெய்யளறுமடங்கப் பொட்டத்துற்றின உனக்கு நான் நாடோறு மவ்வளவு சோற்றையூட்டி வளர்க்கைக் கீடான கைச்சரக்கற்றவளாகையால் இனி உன்னை எவ்வாறு வளர்க்கக்கடவதென்று மிகவுமஞ்சாநின்றே னென்கிறாளென்கை. முதல்—கைம்முதல்; மூலத்ரவ்யம் என்றபடி. .... .... .... (8)

252 திண்ணார்வெண்சங்குடையாய் திருநாள்திருவோணமின்றேழுநாள் * முன்
பண்ணேர்மொழியாரைக்கூவி முளையட்டிப் பல்லாண்டுகூறுவித்தேன் *
கண்ணாலஞ்செய்யக் கறியுங்கலத்ததரிசியுமாக்கிவைத்தேன் *
கண்ணாநீநாளைத்தொட்டுக்கன்றின்பின்போகேல் கோலஞ்செய்திங்கேயிரு. (9)

திண் ஆர் வெண் சங்கு உடையாய் — திண்மைபொருந்திய வெண் சங்கத்தைத் திருக்கையில் ஏந்தியுள்ளவனே!
கண்ணா — கண்ணபிரானே!
திரு நாள் திரு ஓணம் இன்று ஏழு நாள் — நீ பிறந்த திருநக்ஷத்திரமாகிய திருவோண நக்ஷத்திரம் இற்றைக்கு ஏழாவது நாளாகும்; ஆதலால்,
முன் பண் ஏர் மொழியாரை கூவி முளை அட்டி பல்லாண்டு கூறுவித்தேன் — முதல் முதலாகப் பண்ணோடே கூடின அழகிய பேச்சையுடைய மாதர்களை யழைத்து அங்குரார்ப்பணம் பண்ணி மங்களாசாஸனமும் பண்ணுவித்தேன்;
கண்ணாலம் செய்ய — திருவோணத்தின்று திருக்கல்யாணம் செய்வதற்கு
கறியும் அரிசியும் கலத்தது ஆக்கி வைத்தேன் — கறியமுதுகளையும் அமுதுபடியையும் பாத்திரங்களில் சேமித்து வைத்திருக்கின்றேன்; நீ—;
நாளைத் தொட்டு கன்றின் பின் போகேல் — நாளைமுதற்கொண்டு கன்றுகளின் பின்னே காட்டுக்குப் போக வேண்டா;
கோலம் செய்து இங்கே இரு — உன் வடிவுக்குத்தக்க அலங்காரங்களைச் செய்துகொண்டு இந்த அகத்திலேயே இருக்கக் கடவையாக.

* * *—திண்ஆர்-சத்ருநிரஸநத்தில் நிலைபேராமல் நின்று முழங்கும் திண்மையைச் சொல்லுகிறது. யசோதைப்பிராட்டி கண்ணனைநோக்கி இப்பாசுரஞ் சொல்லியது-விசாக நக்ஷத்திரத்தின்று என்றுணர்க. பண்—இசைப்பாட்டு. இற்றைக்கு ஏழாவது நாளாகிய உன் ஜந்மநக்ஷத்திரத்தில் உனக்கு விசேஷமான மங்களகாரியங்களைச் செய்வதற்காக இன்று ஊரிற் பெண்களை யழைத்து உத்ஸவத் தொடக்கஞ் செய்வித்து மங்கலப் பாட்டுக்களையும் பாடுவித்தேன்; அன்றைக்கு வேண்டிய வஸ்துக்களையும் இப்போதே ஸித்தப்படுத்தி வைத்திருக்கிறேன்; ஆகையால் இனி நீ சாதித்தொழிலைத் தவிர்ந்து உத்ஸவவிக்ரஹம்போல் உன்னை அலங்கரித்துக்கொண்டு இவ்விடத்திலேயே வீற்றிரு என்று யசோதைப்பிராட்டி வேண்டுகின்றாள். முளையட்டுதல்-கல்யாணங்கமாக நவதானியங்களைக் கொண்டு பாலிகை வைக்கை. கண்ணாலம்—மரூஉமொழி. ... .... .... .... (9)

253 புற்றரவல்குலசோதைநல்லாய்ச்சி தன்புத்திரன்கோவிந்தனை *
கற்றினம்மேய்த்துவரக்கண்டுகந்தவள் கற்பித்தமாற்றமெல்லாம் *
செற்றமிலாதவர்வாழ்தரு தென்புதுவைவிட்டுசித்தன சொல் *
கற்றிவைபாடவல்லார் கடல்வண்ணன்கழலிணைகாண்பர்களே. (10)

புற்று அரவு அல்குல் அசோதை நல் ஆய்ச்சி — புற்றிலே வளர்கின்ற பாம்பின் படத்தை ஒத்த அல்குலையுடையவளாய யசோதையென்னும் பெயரையுடையவளாய பிள்ளைபிறத்தில நன்மையையுடையவளான ஆய்ச்சியானவள்
தன் புத்திரன் கோவிந்தனை — தன் மகனான கண்ணபிரானை
கன்று இனம் மேய்த்து வர கண்டு உகந்து — கன்றுகளின் திரளைக் காட்டிலே மேய்த்துவிட்டு மீண்டு வரக் கண்டு மனமகிழ்ந்து
அவள் — அவ்யசோதை
அம்மகனைக்குறித்து இன்னபடி செய் என்று
கற்பித்த — நியமித்துக்கூறிய
மாற்றம் எல்லாம் — வார்த்தைகளையெல்லாம்;— அவற்றை
செற்றம் இலாதவர் வாழ்தரு — பொறாமையற்ற ஸ்ரீவைஷ்ணவர்கள் வாழுமிடமான
தென் புதுவை விட்டுசித்தன் சொல் — அழகிய ஸ்ரீவில்லிபுத்தூருக்கு நிர்வாஹகரான பெரியாழ்வார் அருளிச்செய்த இப்பாசுரங்களை
இவை கற்று பாட வல்லார் — ஆசார்ய முகமாக ஓதி வாயாரப் பாடவல்லவர்கள்
கடல் வண்ணன் கழல் இணை காண்பர்கள் — கடல்போன்ற நிறத்தனான எம்பெருமானுடைய திருவடியிணைகளைக் கண்டு அநுபவிக்கப்பெறுவார்கள்.

* * *—கற்பித்த மாற்றம்—இத்திருமொழியில், மூன்றாம் பாட்டிலும் ஒன்பதாம்பாட்டிலும் நியமித்தவாறு காண்க. வாழ்தரு=தரு-துணை வினை. .... ... (10)

அடிவரவு—சீலை கன்னி காடு கடி பற்றார் அஞ்சுடர் பன்றி கேட்டு திண்ணார் புற்று தழை.

மூன்றாந்திருமொழி உரை முற்றிற்று.

---

## மூன்றாம்பத்து—நான்காந்திருமொழி, தழைகளுந் தொங்கலும்.

அவதாரிகை:—கீழ்த்திருமொழியில் ஒன்பதாம்பாட்டில் யசோதை நியமித்தபடியே கண்ணபிரானிருந்து அவ்வேழுநாளுங் கடந்தவாறே பண்டுபோலக் காட்டுக்குப்போய் அங்கு ஆநிரை மேய்த்த மகிழ்ச்சியாலே தன்னை வகைவகையாக அலங்கரித்துக் குழலூதுவது இசைபாடுவதாய்க்கொண்டு தன்தோழன்மாருடன் பெரிய ஓலக்கமாகத் திருவாய்ப்பாடியேற மீண்டுவருங் கோலத்தைக் கண்ட இடைப்பெண்கள் அக்கண்ணபிரான் திறத்தில் காமமுற்றவாற்றை ஆழ்வார் தம்மை அப்பெண்களாகப் பாவித்துப்பேசி இனியராகிறார்—இத்திருமொழியில். இதில் முதற்பாட்டு-ஆழ்வார் தாமான தன்மையில் அருளிச்செய்ததென்க.

254 தழைகளுந்தொங்கலுந்ததும்பியெங்குந் தண்ணுமையெக்கம்மத்தளிதாழ்பீலி *
குழல்களுங்கீதமுமாகியெங்குங் கோவிந்தன்வருகின்றகூட்டங்கண்டு *
மழைகொலோவருகின்றதென்றுசொல்லி மங்கைமார்சாலகவாசல்பற்றி *
நுழைவனர்நிற்பனராகியெங்கும் உள்ளம்விட்டுண்மறந்தொழிந்தனரே. (1)

| | | | |
|---|---|---|---|
| தழைகளும் தொங்கலும் ததும்பி | பாகைபட்ட மயிற்பீலிக்குடைகள் நாற்புறங்களிலும் நிறைந்து | மழைகொல் ஓ வருகின்றது என்று சொல்லி | 'மேக ஸமூஹமோ தான் (தரைமேலே நடந்து) வருகின்றது!' என்று உரைக்கிறது |
| தண்ணுமை எக்கம் மத்தளி | மிருதங்கங்களும் ஒரு தந்தியையுடைய மத்தளி வாத்யங்களும் | சாலகம் வாசல் பற்றி | ஜாலகரந்த்ரங்களைச் சென்றுகிட்டி |
| தாழ்பீலி குழல்களும் கீதமும் எங்கும் ஆகி | பெரிய விசிறிகளும் இலைக்குழல், வேய்ங்குழல் என்ற குழல்களும் இவற்றின் பாட்டுக்களும் எங்கும் நிறைய | நுழைவனர் நிற்பனர் ஆகி | வியாமோஹத்தாலே சிலர் மேலே விழுவதாகச் சாலக வாசல்வழியே நுழையப்புகுவாரும், சிலர் குருஜநபயத்தாலே திகைத்து நிற்பாருமாகி |
| இந்த ஸந்நிவேசத்துடனே | | எங்கும் | கண்ணபிரான் நடந்த வழி முழுவதும் |
| கோவிந்தன் வருகின்ற கூட்டம் கண்டு | கண்ணபிரான் கன்று மேய்த்து மீண்டு வருகின்ற பெரிய திருவோலக்கத்தைப் பார்த்து | உள்ளம் விட்டு | தங்கள் நெஞ்சைப் பரக்கவிட்டு |
| மங்கைமார் | யுவதிகளான இடைப்பெண்கள் | ஊண் மறந்தொழிந்தனர் | ஆஹாரத்தையும் மறந்துவிட்டார்கள். |

கண்ணபிரான் கன்று மேய்த்துவிட்டுத் தன்னோடொத்த நிறத்தனரான ஆயிரந்தோழன்மாருடன்கூடிப் பற்பல பீலிக்குடைகள் விசிறிகள் வாத்தியங்கள் முதலிய ஸம்ப்ரமத்துடன் வருகின்றவாற்றைக் கண்ட யுவதிகள் 'இவை மேகங்கள் திரண்டுருண்டு வருகின்றனவோ' என்று தமமிலே தாம் சொல்லிக்கொண்டு இவனை இடைவிடாது காண்கைக்காகத் தந்தம் மாளிகைகளில் கவாக்ஷத்வாரத்தளவிலே நின்று காணலுற்று, கண்ணனுடைய அழகின் மிகுதியைக் காணக்காணப் பரவசைகளாய், நின்றவிடத்தில் நிற்கமாட்டாமல் சிலர் அபிநிவேசாதிசயத்தால் கண் கலங்கிச் சாலக வழியாக வெளிப்புறப்பட முயல்வாரும், சிலர் மாமிமார் முதலியோருக்கு அஞ்சி அவ்விடத்திலேயே திகைத்து நிற்பாருமாய் இப்படி தந்தம் நெஞ்சுகளையிழந்து ஆஹாரவிருப்பத்தையும் மறக்கப் பெற்றார்கள் என்பதாம். .... (1)

255 வல்லிநுண்ணிதழன்னவாடைகொண்டு வசையறத்திருவரைவிரித்துடுத்து *
பல்லிநுண்பற்றாகவுடைவாள்சாத்திப் பணைக்கச்சுந்திப்பலதழைநடுவே *
முல்லைநன்னறுமலர்வேங்கைமலரணிந்து பல்லாயர்குழாநடுவே *
எல்லியம்போதாகப்பிள்ளைவரும் எதிர்நின்றங்கினவளையிழவேல்மினே. (2)

பிள்ளை — நந்தகோபர் மகனான கண்ணன்,
வல்லி நுண் இதழ் அன்ன ஆடை கொண்டு — கற்பகக்கொடியினது நுட்பமான இதழ் போன்று ஸுகுமாரமான வஸ்த்ரத்தைக்கொணர்ந்து
திரு அரை வசை அற விரித்து உடுத்து — தனது திருவரையிலே ஒழுங்காக விரித்துச் சாத்திக்கொண்டு
அதன்மேல்
பணை கச்சு உந்தி — பெரிய கச்சுப்பட்டையைக் கட்டிக்கொண்டு
அதன்மேல்
உடை வாள் பல்லி நுண் பற்று ஆக சாத்தி — கத்தியை பல்லியானது சுவரிலே இடைவெளியறப்பற்றிக் கிடக்குமாபோலே நெருங்கச் சாத்திக்கொண்டு
நல் நறு முல்லை மலர் வேங்கை மலர் அணிந்து — அழகியதும் பரிமளமுள்ளதுமான முல்லைப்பூவையும் வேங்கைப் பூவையும் தொடுத்து மாலையாகச் சாத்திக்கொண்டு
பல் ஆயர் குழாம் நடுவே — பல இடைப்பிள்ளைகளுடைய கூட்டத்தின் நடுவில
பல தழை நடுவே — பல மயில்தோகைக்குடை நிழலிலே
எல்லி அம்போது ஆக வரும் — ஸாயம் ஸந்த்யாகாலத்திலே வருவான்;
அங்கு எதிர் நின்று — அவன் வரும் வழியில் எதிராகநின்று
வளை இனம் இழவேல்மின் — கை வளைகளை இழவாதே கொள்ளுங்கள்.

தோழிமார் ஒருவர்க்கொருவர் சொல்லிக்கொள்ளும பாசுரம் இது. தோழிகாள்! இவ்வூரில் ஒரு பிள்ளை உளன் என்பது உங்களுக்குத் தெரியுமே, அவன் நல்ல நல்ல ஆடையைச் சாத்திக்கொண்டு கச்சுங்கத்தியுமாகத் தனது தோழன்மாருடன் மஹாஸம்ப்ரமமாக மாலைப்பொழுதாகிய இப்பொழுதிலே இச்சேரியேற வரப்புகாநின்றான்; அவன் வருமழகைக் காணவிரும்பி வழியில் அவனையெதிர்கொண்டு நின்றவர்களில் ஒருத்தரும் வளையிழவாதாரில்லை; நீங்களாகிலும் ஜாக்ருதைகளாயிருந்து உங்கள் கைவளைகளை நோக்கிக் கொள்ளுங்கள் என்று ஒருத்தி தன் தோழிகளுக்கு எச்சரிக்கை கூறுகின்றனளென்க. வளையிழக்கைக்கு அடியென்? என்னில்; * ஸாக்ஷாந் மந்மதமந்மதனான அவனைக் கண்ணுற்கண்ட மாத்திரத்திலேயே பெண்களுக்கு விசேஷமான வியாமோஹம் பிறக்கும்; அதற்கு ஏற்றபடி அவனோடு ரமிக்கை அவர்களுக்கு அரிது; அதனால் க்ஷணேக்ஷணே உடல் இளைக்கும்; உடனே கைவளைகள் கழன்று விழும் என்றறிக. பல்லிநுண்பற்றாக—இவ்வுடைவாள் கச்சுப்பட்டையுடன் கூடவே பிறந்த தத்தனையொழிய வைத்துக்கட்டினதல்ல என்று தோற்றும்படிக்கு உவமையென்க. உடைவாளாவது—அதிகாரி புருஷர்கள் எப்போதும் இடுப்பிலேயே அணிந்துகொண்டிருக்குங்கத்தி.

256 சுரிகையுந்தெறிவில்லுஞ்செண்டுகோலும் மேலாடையுந்தோழன்மார்கொண்டோட *
ஒருகையாலொருவன்றன்தோளையூன்றி ஆநிரையினம்மீளக்குறித்தசங்கம் *
வருகையில்வாடியபிள்ளைகண்ணன் மஞ்சளும்மேனியும்வடிவுங்கண்டாள் *
அருகேநின்றாளென்பெண்ணோக்கிக்கண்டாள் அதுகண்டிவ்வூரொன்று
புணாக்கின்றதே. (3)

தோழன்மார் — தன்னோராயிரம் பிள்ளைகள்,
சுரிகையும் — உடைவாளையும்
தெறி வில்லும் — சுண்டுவில்லையும்
செண்டு கோலும் — பூச்செண்டு கோலையும்
மேல் ஆடையும் — உத்தரீயத்தையும்
(கண்ணபிரானுக்கு வேண்டினபோது கொடுக்கைக்காக)
கொண்டு ஓட — கையிற்கொண்டு பின்னே ஸேவித்து வர,
ஒருவன் தன் தோளை — ஒரு உயிர்த்தோழனுடைய தோளை
ஒரு கையால் ஊன்றி — ஒரு திருக்கையினால் அவலம்பித்துக்கொண்டு
ஒரு கையால் — மற்றொரு திருக்கையினால்

| | |
|---|---|
| ஆ நிரை இனம் மீள குறித்த சங்கம் | கைகழியப்போன பசுக்களின் திரள் திரும்பி வருவதற்காக ஊதவேண்டிய சங்கை |
| (ஊன்றி) | ஏந்திக்கொண்டு |
| வருகையில் | மீண்டு வருமளவில் |
| வாடிய | வாட்டத்தை அடைந்துள்ள |
| பிள்ளை கண்ணன் | ஸ்ரீக்ருஷ்ண கிசோரனுடைய |
| மஞ்சளும் மேனியும் வடிவும் | பற்றுமஞ்சள் மயமான திருமேனியையும் அவயவஸமுதாய சோபையையும் |
| அருகே நின்றாள் என் பெண் | அவனுக்குச் சமீபத்தில் நின்று கொண்டிருந்த என்மகள் |
| கண்டாள் | முதலில் எல்லாரும் பார்க்கிறாப்போல் பார்த்தாள்: |
| (பிறகு, அபூர்வ வஸ்து தர்சனமாயிருந்தபடியால்) | |
| நோக்கி கண்டாள் | கொஞ்சம் குறிப்பாகப்பார்த்தாள்; |
| அது கண்டு | அவ்வளவையே நிமித்தமாகக் கொண்டு |
| இ ஊர் | இச்சேரியிலுள்ளவர்கள் |
| ஒன்று புணர்க்கின்றது | அவனுக்கும் இவளுக்கும் அடியோடில்லாத ஒரு ஸம்பந்தத்தை யேறிட்டுச் சொல்லுகின்றனர்; |
| இதற்கு என்செய்வது! | |

* * *—சுரிகை-‘க்ஷுரிகா’ என்ற வடசொல் திரிபு. தெறிவில்—கல் முதலியவற்றைச் செலுத்தும் சிறுவில். செண்டுகோல்—நுனியில் பூஞ்செண்டு கோத்துள்ள விலாஸதண்டம். நிரை என்றாலும் இனம் என்றாலும் கூட்டமே பொருள்; இதனால் எண்ணிறந்த பசுக்களை மேய்த்தவாறு தோற்றும். தூரத்திற்சென்ற பசுக்கள் அணுகுவதற்கும் மேய்கைக்கும் பக்கங்களில் விலகாமைக்கும் மற்றுஞ் சில காரியங்களுக்கும் ஸூசகமாகக் கண்ணபிரான் வகைவகையாகச் சங்கு ஊதுவன் என்க. இப்பாட்டின் கருத்து;—ஒரு பெண்பிள்ளையின் தாய் சொல்லும் பாசுரம் இது. கண்ணபிரான் காட்டில் கன்றுகளை மேய்த்துவிட்டு, லீலோபகரணங்களுங் கையுமான தனது தோழன்மாருடன் மீண்டுவரும்போது வழியில் நின்று கொண்டிருந்த என்மகள் முதலில் அவனைப் பொதுவாகப் பார்த்தாள்; பிறகு ‘இவர்களில் இவனொருத்தன் விலக்ஷணனா யிருக்கின்றானே!’ என்று சிறிது உற்றுநோக்கினாள்; உலகத்தில் அபூர்வ வஸ்துவைப் பார்ப்பவர்களுக்கெல்லாம் இது இயல்பே; நெஞ்சில் ஒருவகை ஆசை வைத்துக்கொண்டு பார்த்தாளில்லை; ஆயிருக்கச்செய்தேயும் ‘இவள் அவனை உற்றுநோக்கினளாகையால் இவளுக்கும் அவனுக்கும் ஏதோ இருக்கின்றது’ என்று ஊரார் வம்புகூறுகின்றனர், இது தகுமோ? என்று முறைப்படுகின்றாள். [மஞ்சளும்] கீழ் “பற்றுமஞ்சள்பூசி” என்றபாட்டின் உரையைக்காண்க. நின்றாள்—முற்றெச்சம. “அது சோண்டிவ்வூர்” என்ற பாட்டும் சிறக்கும்; “கண்டதுவே கோண்டெல்லாருங்கூடி” என்ற திருவாய்மொழியையுங் காண்க. ஊர்—இடவாகுபெயர். .... .... .... .... (3)

257 குன்றெடுத்தாநிரைகாத்தபிரான் கோவலனாய்க்குழலூதியூதி *
கன்றுகள்மேய்த்துத்தன்தோழரோடு கலந்துடன்வருவானைத்தெருவிற்கண்டு *
என்றுமிவனையொப்பாரைநங்காய் கண்டறியேனேடிவந்துகாணாய் *
ஒன்றுநில்லாவளைகழன்று துகிலேந்திளமுலையுமென்வசமல்லவே. (4)

| | |
|---|---|
| நங்காய் | பூர்த்தியை யுடையவளே! |
| ஏடி | தோழீ! |
| இவனை ஒப்பாரை என்றும் கண்டு அறியேன் | இவனைப்போன்றவர்களை எந்தநாளிலும் (நான்) பார்த்தறிகிலேன்; |
| வந்து காணாய் | (இங்கே) ஓடிவந்து பார்; (என்று ஒருத்தி தன் தோழியை அழைக்க, அவள் சிறிது தாமஸிக்க, மேல் தனக்குப் பிறந்த விகாரத்தைச் சொல்லுகிறாள்;—) |
| கோவலன் ஆய் | இடைப்பிள்ளையாகப் பிறந்து (இந்திர பூஜையை விலக்க) |
| (பசிக்கோபத்தினால் இந்திரன் விடாமழை பெய்வித்தபோது) | |
| குன்று எடுத்து ஆ நிரை காத்த பிரான் | கோவர்த்தனமலையை (குடையாக) எடுத்துப் பசுக்களின் திரளை ரக்ஷித்தருளின உபகாரகனும் |
| குழல் ஊதி ஊதி | குழலைப் பலகால் ஊதிக் கொண்டு |

கன்றுகள் மேய்த்து — கன்றுகளை (காட்டில்) மேய்த்துவிட்டு
தன் தோழரோடு உடன் கலந்து — தனது தோழர்களுடன் கூடிக்கொண்டு
தெருவில் வருவானை கண்டு — இவ்வீதிவழியே வருபவனுமான கண்ணபிரானை நான் கண்டவளவிலே
துகில் கழன்று வளை ஒன்றும் நில்லா — (எனது அரையிலுள்ள) புடவை (அரையில் தங்காதபடி அவிழ்ந்தொழிய) கைவளைகளும் சற்றும் நிற்கின்றனவில்லை;
ஏந்து இள முலையும் என் வசம் அல்ல — (என்னால்) சுமக்கப்படுகின்ற மெல்லிய முலைகளும் என் வசத்தில நிற்கின்றன வில்லை.

* * *—"பிரான்" என்றவிடத்தும் இரண்டனுருபுகூட்டுக கண்ணபிரானெழுந்தருளுந்தெருவில் நின்றுகொண்டிருந்த ஒரு பெண்பிள்ளை ஸம்ப்ரம விசேஷத்துடனே வருகின்ற கண்ணனைக்கண்டு இவ்விலக்ஷண வ்யக்தியை நம தோழியுங் கண்டுகளிக்கவேண்டுமெனக் கருதி, வீட்டினுள்ளே கிடப்பாளொரு தோழியைநோக்கித் "தோழீ! இதுவரை நம்மாற் காணப்பட்டுள்ளவர்களில் ஒருவரையும் ஒப்பாகச் சொல்லப்பெறாத ஒரு விலக்ஷண புருஷன் இங்ஙனே வருகின்றான், சடக்கெனவந்துகாணாய்" என்றழைக்க, அவள் 'அவன் யார்? எக்குடியிற் பிறந்தவன்?' என்றாற்போன்ற சில கேள்விகேட்டுக்கொண்டு வரத் தாமஸிக்க, அதற்கு அவள் 'ஒருவன் இவ்விடைச்சேரியில் வந்து பிறந்து பற்பல அதிமாநுஷ சேஷ்டிதங்களைச் செய்துளனென்று கேட்டுள்ளோமே, அக்கண்ணபிரான்காண்' என்ன; அதை அவள் கேட்டு 'அவன் அத்தனை விலக்ஷணனோ?' என்ன, அதற்கு அவள் 'பேதாய்! இவன் விலக்ஷணனல்லனாகில் யான் இவ்வாறு விகாரமடைவேனோ? பாராய் தோழீ! அரையில துகில் தங்கவில்லை, கையில் வளைநிற்கவில்லை, முலைகள் என்நியமனத்திற்கு உட்பட்டு நடக்கவில்லை ["என்கொங்கைகிளர்ந்து குமைத்துக் குதுகலித்து ஆவியை ஆகுலஞ்செய்யும்" என்றபடி;] இன்னும் என்னாகவேணுமென்கிறாள். (இரண்டாமடியிறுதியில்) கண்டு—எச்சத்திரிபு; காண என்றபடி. ஏடி—தோழி. இவ்விலக்ஷணபுருஷனைக் காணப்பெறாதகுறை ஒன்றுண்டுனக் கென்பாள் 'நங்காய்' என்று விளிக்கின்றாளென்க. இவனைக்கண்டவுடனே தன் மனோரதம் பலிக்கப்பெறாமையால் உடல் இளைக்கத்தொடங்கவே துகிலுமவளையுங் கழலப்புக்கன .... (4)

258 சுற்றிநின்றாயர்தழைகளிடச் சுருள்பங்கிநேத்திரத்தாலணிந்து *
பற்றிநின்றாயர்கடைத்தலையே பாடவுமாடக்கண்டேன் * அன்றிப்பின்
மற்றொருவற்கென்னைப்பேசலொட்டேன் மாலிருஞ்சோலையெம்மாயற்கல்லால் *
கொற்றவனுக்கிவளாமென்றெண்ணிக் கொடுமின்கள்கொடீராகிற்கோழம்பமே. (5)

ஆயர் சுற்றி நின்று தழைகள் இட — இடைப்பிள்ளைகள் (தன்னைச் சூழ்ந்துகொண்டு மயில்தோகைக் குடைகளை (தன திருமேனிக்குப் பாங்காகப்)பிடித்துக்கொண்டுவர
சுருள் பங்கி நேத்திரத்தால் அணிந்து — (தனது) சுருண்ட திருக்குழல்களை (எடுத்துக் கட்டி) பீலிக்கண்களாலே அலங்கரித்துக்கொண்டு
ஆயர் கடைத்தலை பற்றி நின்று — இடைப்பிள்ளைகளின் கோஷ்டியில் முன்புறத்தில் நின்றுகொண்டு
பாடவும் ஆடவும் கண்டேன் — பாட்டுக்கூத்துமாக வரக் கண்டேன்
பின் — இனிமேல்
அன்றி — அவனுக்கொழிய
மற்று ஒருவற்கு — வேறொருவனுக்கு
என்னை பேசல் ஒட்டேன் — என்னை (உரியவளாகத் தாய் தந்தையர்) பேசுவதையும் நான் பொறுக்கமாட்டேன்;
(ஆர்க்கொழியவென்று கேட்கிறீர்களாகில்?)
மாலிருஞ் சோலை எம்மாயற்கு அல்லால் — திருமாலிருஞ்சோலையில் நித்யவாஸம் பண்ணுகிற எனது தலைவனுக்கொழிய
[மற்றொருவற்கு என்னைப் பேசலொட்டேன்;]
(ஆகையினால், தாய்மார்களே!)
இவள் கொற்றவனுக்கு ஆம் என்று எண்ணி — ('நம்மகளான' இவள் அத்தலைவனுக்கே உரியள், என்று நிச்சயித்துவிட்டு)
கொடுமின்கள் — (அவனுக்கே தாரைவார்த்துத்) தத்தம்பண்ணி விடுங்கள்;
கொடீர் ஆகில் கோழம்பமே — (அப்படி) கொடாவிட்டீர்களேயாகில் (உங்களுக்கு எனறைக்கும்) மனக்குழப்பமேயாம். (நான் இறந்தொழிவேனென்றபடி.)

* * *—மானிடவர்க்கென்று பேச்சுப்படில் வாழகில்லேன்" என்ற உறுதியுடன் நின்ற ஆண்டாளைப்போன்ற ஆய்ச்சி இவள். இடைப்பிள்ளைகளெல்லாம் தனக்குக் குடை பிடிக்கும்படி வீறுபாடுடைய இக்கண்ணபிரானைத் தவிர்த்து மற்றொரு சப்பாணிப்பயலுக்கு என்னை உரிமைப்படுத்த நினைத்தீர்களாகில் குடிகெட்டதாம். பிறனொருவனைக்கொண்டு என்கழுத்தில் தாலிகட்டுவித்தாலும் நான் "கொம்மைமுலைகள் இடர்தீரக் கோவிந்தற்கோர் குற்றேவல், இம்மைப்பிறவி செய்யாதே இனிப்போய்ச்செய்யுந் தவந்தானென்?" என்றிருக்குமவளாகையால் அக்கண்ணனிடத்தே பேரவாக்கொண்டு அதற்கேற்பப் பரிமாறப் பெற்றிலேனாகில் சிந்தயந்தியைப்போலே தன்னடையே முடிந்து போவேன்; பிறகு உங்களுக்கு எந்நாளும் மனக்கவலையேயாம் என்று வெட்டொன்று துண்டிரண்டாகச் சொல்லுகின்றாளென்க. [சிந்தயந்தி—ஓர் ஆய்மகளின் பெயர்; இவள் குருஜநத்தின் காவலுக்கு அகப்பட்டுக் கண்ணனைப் பெறமாட்டாமல் இருந்தவிடத்திலேயே உள்ளுருகி நைந்து முடிந்துபோயினள்.] பங்கி—ஆண்மயிர்; "பங்கியே பிறமயிர்க்கும் பகரு மாண்மயிர்க்கும் பேராம" என்றான் மண்டலபுருடன். நேத்திரம்—நெத்ரம்; கண், இங்கு மயிற் கண். கடைத்தலை—தலைக்கடை; சொல்நிலைமாறுதல். மாலிருஞ்சோலையெம்மாயற்கல்லால் = "'கண்ணனுக்கு' என்னாதே இப்படி சொல்லிற்று இவனுக்கு ஓரடியுடைமை சொல்லுகைக்காக; அடியுடைமை சொல்லும்போது ஒரு கோத்ரஸம்பந்தஞ் சொல்லவேணுமிறே" என்ற ஜீயருரை அறியத்தக்கது. [கோத்ரம் ஸம்பந்தம்-பர்வத ஸம்பந்தம் என்று சிலேடை.] கோற்றவனுக்கு= கொற்றம்—ஜயம்; அதையுடையவனுக்கென்றபடி. தன் பொருளைத் தானே கைக்கொள்ள வல்லவனுக்கென்க. * அண்ணாந்திருக்கவே ஆங்கவளைக் கைப்பிடித்தவனிறே. கோழம்பம்—குழப்பம்; கலக்கம் என்றவாறு. பெண் முடிந்தால் தாய்மார்க்குக் கலக்கமேயன்றோ. (5)

259 சிந்துரமிலங்கத்தன்திருநெற்றிமேல் திருத்தியகோறம்பமுந்திருச்சுழலும் *
அந்தரமுழவத்தண்தழைக்காவின்கீழ் வருமாயரோடுடனவளைகோல்வீசா *
அந்தமொன்றில்லாதவாயப்பிள்ளை அறிந்தறிந்திவ்வீதிபோதுமாகில் *
பந்துகொண்டானென்றுவளைத்துவைத்துப் பவளவாய்முறுவலுங்காண்போந்தோழீ. (6)

| | |
|---|---|
| தோழி | வாராய் தோழீ! |
| தன் திருநெற்றிமேல் | தன்னுடைய திருநெற்றியிலே |
| சிந்துரம் | சிந்தூரமும் |
| திருத்திய | (அதன்மேல்) ப்ரகாசமாகச் சாத்தின |
| கோறம்பும் | திலகப்பொட்டும் |
| திருச் சுழலும் | (அதுக்குப் பரபாகமான) திருச்சுழற்சுற்றையும் |
| இலங்க | விளங்கவும், |
| அந்தரம் | ஆகாசமடங்கலும் |
| முழவம் | மத்தளங்களின் ஓசையினால் நிறையவும் |
| தழை தண் காவின் கீழ் | பீலிக்குடைகளாகிற குளிர்ந்த சோலையின் கீழே |
| வரும் ஆயரோடு உடன் | (தன்னோடு) வருகின்ற இடைப்பிள்ளைகளோடு கூட |
| வளை கோல் வீசா | வளைந்த தடிகளை வீசிக்கொண்டு |
| ஒன்றும் அந்தம் இல்லாத | (அலங்கார விசேஷங்களில்) ஒவ்வொன்றே எல்லை காணவொண்ணாத |
| ஆயப் பிள்ளை | இடைப்பிள்ளையான கண்ணபிரான் |
| அறிந்து அறிந்து | தன் தன்மையையும் என் தன்மையையும் அறிந்து வைத்தும் |
| இவ் வீதி போதும் ஆகில் | இத்தெரு வழியே வருவானாகில் (அவனை) |
| பந்து கொண்டான் என்று வளைத்து வைத்து | "எங்கள்) பந்தை வலியப் பிடுங்கிக் கொண்டுபோனவனன்றோ இவன்' என்று (முறையிட்டு) வழிமடக்கி (அவனுடைய) |
| பவளம் வாய் முறுவலும் காண்போம் | பவளம்போன்ற அதரத்தையும் புன்சிரிப்பையும் நாம் கண்டு அநுபவிப்போம் |

* * *—கண்ணபிரான் பக்கல் தான் விசேஷ வ்யாமோஹங்கொண்டு அவனைப்பிரிந்து தரிக்கமாட்டாதிருக்க, அவனால் மிகவும் உபேக்ஷிக்கப் பெற்ற ஒரு ஆய்ச்சியின் பாசுரம் இது.

அலங்காரவகைகளை அழகுபெற அமைத்துக்கொண்டு பீலிக்குடைகளின் நிழலிலே தோழன்மாருடன் தடிவீசுகை என்ற விளையாட்டைச் செய்துகொண்டுவருகின்ற இக்கண்ணபிரான் தன்னையொழியச் செல்லாத என் தன்மையையும் என்னையொழியச் செல்லும்படியான தன் தன்மையையும் தானறிந்துளனாகில இத்தெருவழியே வருவதற்குத் தனக்கு யோக்யதையில்லை; ஆயிருக்கச்செய்தேயும் அவன் மானங்கெட்டு இவ்வீதியில் வரப்போகிருன்; அப்போது எவ்வகையிலாவது நாம் அவனுடைய உபேக்ஷையை விலக்கிக்கொள்வோம்; அதாவது—'(நேற்று) நாங்கள் தோழிமாருடன் பந்தாடிக்கொண்டிருக்கையில் இவன் சடக்கெனப் புகுந்து அப்பந்தை அபஹரித்துக்கொண்டு கள்ளன்போல ஓடிப்போய்விட்டான், அதை இப்போது தந்தாலொழிய இவனைக் கால்பேரவொட்டோம்' என்றாற்போலச் சில ஸாஹஸோக்திகளைச் சொல்வோமாகில், இவன் திடுக்கிட்டு நிற்பன், 'இதென்ன ஸாஹஸம்!' என்றுவியந்து சிரிக்கவும் சிரிப்பன், இவ்வழியால் அவ்வழகையெல்லாம் நாம் காணப்பெறலாமென்று சொல்லி மகிழ்கின்றாள். .... .... .... .... (6)

260 சாலப்பன்னிரைப்பின்னேதழைக்காவின்கீழ்த் தன்திருமேனிநின்றொளிதிகழ *
நீலநன்னறுங்குஞ்சிநேத்திரத்தாலணிந்து பல்லாயர்குழாநடுவே *
கோலச்செந்தாமரைக்கண்மிளிரக் குழலூதியிசைபாடிக்குனித்து * ஆயரோ
டாலித்துவருகின்றவாயப்பிள்ளை அழகுகண்டெனமகளயர்க்கின்றதே. (7)

| | | | |
|---|---|---|---|
| சால பல் நிரை பின்னே | பற்பல பசுத்திரளின் பின்னே | கோலம் செந்தாமரை கண் மிளிர | அழகிய செந்தாமரை மலர்போன்ற (தனது) திருக்கண்கள் ஸ்புரிக்கப்பெற்று |
| தழை காவின் கீழ் | பீலிக்குடைகளாகிற சோலையின் கீழே | குழல் ஊதி | வேய்ங்குழலை ஊதிக்கொண்டும் |
| தன் திரு மேனி ஒளி திகழ நின்று | தன்னுடைய திருமேனியானது பளபளவென்று விளங்கும்படி நின்று | இசை பாடி | (அதுக்குத்தக்க) பாட்டுக்களைப் பாடிக்கொண்டும் |
| நீலம் நல் நறு குஞ்சி | நீல நிறத்தை யுடைத்தாய் சுருட்சி, நீட்சி முதலிய அமைப்பையுடைத்தாய் பரிமளம் வீசாநின்றுள்ள திருக்குழற்கற்றையை | குனித்து | கூத்தாடிக்கொண்டும் |
| நேத்திரத்தால் அணிந்து | பீலிக்கண்களினால் அலங்கரித்துக்கொண்டு | ஆயரோடு ஆலித்து வருகின்ற ஆயப்பிள்ளை | இடைப்பிள்ளைகளுடனே மகிழ்ந்து வருகின்ற இடைப் பிள்ளையான கண்ணபிரானுடைய |
| பல் ஆயர் குழாம் நடுவே | பல இடையர்களின் கூட்டத்தின் நடுவில் | அழகு என மகள் கண்டு அயர்க்கின்றது | வடிவழகை என் மகள் பார்த்து அறிவு அழியாநின்றாள். |

* * *—கண்ணபிரானுடைய வடிவழகில் ஈடுபட்டுச் சைதந்யத்தையிழந்து தம்பகம் போலத் திகைத்துநிற்பாளொரு ஆய்ப்பெண்ணின் தாய் சொல்லும் பாசுரம் இது. "சால உறு தவ நனி கூர் கழி மிகல்" என்ற நன்னூலின்படி மிகுதியைச் சொல்லக்கடவதான 'சால' என்ற உரிச்சொல்லோடணைந்த 'பல்' என்ற சொல், பசுக்கூட்டங்களின் எண்ணிறவைக் காட்டுமென்க. "என்மகள் அயர்க்கின்றாள்" என்னவேண்டியிருக்க, "அயர்க்கின்றது" என்று அஃறிணையாகக் கூறியது வழுவமைதியின் பாற்படுமென்க; அன்றி, அயர்க்கின்றதே திகைத்து நிற்கிறபடி என்னே! என்று முரைக்கலாம். .... .... (7)

261 சிந்துரப்பொடிக்கொண்டுசென்னியப்பித் திருநாமமிட்டங்கோரிலையந்தன்னால் *
அந்தரமின்றித்தன்னெறிபங்கியை அழகியநேத்திரத்தாலணிந்து *
இந்திரன்போல்வருமாயப்பிள்ளை யெதிர்நின்றங்கினவளையிழவேலென்ன *
சந்தியில்நின்றுகண்டீர் நங்கைதன்துகிலொடுசரிவளைகழல்கின்றதே. (8)

| | | | |
|---|---|---|---|
| சிந்தூரம் பொடி கொண்டு | "ஸிந்தூர சூர்ணத்தைக் கொணர்ந்து | ஆயர் பிள்ளை | இடைப்பிள்ளையான கண்ணபிரானுக்கு |
| தன் சென்னி அப்பி | தன்னுடைய திருமுடியிலே அப்பிக் கொண்டும், | எதிர் அங்கு நின்று | எதிர்முகமான இடத்தில் நின்று கொண்டு |
| அங்கு ஓர் இலை தன்னால் | திருநெற்றியில் ஒரு இலையினாலே | வளை இனம் இழ வேல் | கைவளைகளை நீ இழக்கவேண்டா" |
| திருநாமம் இட்டு | ஊர்த்வபுண்ட்ரம் சாத்திக் கொண்டும் | என்ன | என்று (என் மகளை நோக்கி நான் உறுத்திச்) சொல்லச் செய்தேயும் |
| செறி பங்கியை அழகிய நேத்திரத்தால அந்தரம் இன்றி அணிந்து | செறிதலிரா நின்றுள்ள திருக்குழலை அழகிய நீலிக் கண்களினால் இடைவெளி யில்லாதபடி [நெருங்க] அலங்கரித்துக் கொண்டும், | நங்கை | (எனது) மகளானவள் |
| | | சந்தியில் நின்று | அவன் வரும் வழியில் நின்று |
| | | தன் துகிலொடு | தனது துகிலும் |
| | | சரிவளை | கைவளைகளும் |
| இந்திரன் போல் | ஸாக்ஷாத் தேவேந்திரன் போல | கழல்கின்றது | கழன்றொழியப்பெற்றாள். |
| வரும | (ஊர்வலம்) வருகின்ற | ஏ | இதென்ன அநியாயம் !! |

262 வலங்காதில்மேல்தோன்றிப்பூவணிந்து மல்லிகைவனமாலைமௌவல்மாலை *
சிலிங்காரத்தால்குழல்தாழவிட்டுத் தீங்குழல்வாய்மடுத்தூதியூதி *
அலங்காரத்தால்வருமாயப்பிள்ளை அழகுகண்டேன்மகளாசைப்பட்டு *
விலங்கிநில்லாதெதிர்நின்றுசண்டீர் வெள்வளைசழன்றுமெய்ம்மெலிகின்றதே. (9)

| | | | |
|---|---|---|---|
| வலங் காதில் | வலது காதில் | ஆயர் பிள்ளை | இடைப்பிள்ளையான கண்ணபிரானுடைய |
| மேல் தோன்றிப் பூ | செங்காந்தள் பூவையும் | அழகு என் மகள் கண்டு | வடிவழகை என்மகள் பார்த்து |
| வனம மல்லிகை மாலை | (திருமார்பில்) காட்டுமல்லிகை மாலையையும் | ஆசைப்பட்டு | (அவனிடத்தில்) காமங்கொண்டு; |
| மௌவல் மாலை | மாலதீ புஷ்பமாலையையும் | | (இவ்வடிவழகு-கண்டவர்களை வருத்தும் என்று கண்ணைமாறவைத்துக் கடக்க நிற்கவேண்டியிருக்க,) |
| அணிந்து | அணிந்துகொண்டு | | |
| சிலிங்காரத்தால் | அலங்காரமாக | | |
| குழல் தாழவிட்டு | திருக்குழல்களை (திருமுதுகில்) தொங்கவிட்டுக்கொண்டு | | |
| தீம் குழல் வாய் மடுத்து ஊதி ஊதி | இனிமையான வேய்ங்குழலை திருப்பவளத்தில் வைத்து வாசித்து வாசித்துக்கொண்டு, | விலங்கி நில்லாது | (அப்படி) வழிவிலங்கி நில்லாமல் |
| | | எதிர் நின்று | (அவனுக்கு) எதிர்முகமாக நின்று |
| | | வெள் வளை கழன்று | (தனது) சங்குவளைகள் கழலப் பெற்று |
| அலங்காரத்தால் | (பூச்செண்டு) அலங்காரங்களோடே | | |
| வரும | வருகின்ற | மெய் மெலிகின்றது | உடலும் இளைக்கப் பெற்றாள். |

* * *—கண்ணன் பசுக்களை மேய்த்துவிட்டுப் பலவகையலங்காரங்களோடு திரும்பி வரும்போது என் பெண் அவனுடைய மநோஹரமான அழகைப்பார்த்து ஆசைகொண்டு 'இது கண்டவர்களை வருத்தும்' என்று கண்ணை மாறவைத்து விலங்கவேண்டியதாயிருக்க, அப்படி செய்யாமல் அவனழகைப்பார்த்துக்கொண்டு எதிரே நின்றதனால் வளைகழல உடம்பு மெலியப்பெற்றாளென்று—தன் பெண்ணின் தன்மையை வினவவந்தவர்கட்குச்சொல்லி வருந்துகின்றாளொருத்தி.

இடக்காதிற்கு ஒன்றும் சாத்திக்கொண்டதாகச் சொல்லாமையால், ஒரு காதுக்குச் சாத்திக்கொண்டிருக்குமிதுதானே ஓர் அழகாகக்கொண்டு வந்தானென்றாவது, ஒரு காதுக்குச் சாத்தினவளவிலே மல்லிகை மௌவல் மாலைகளைக் கண்டு மற்றொரு காதிற்குத் தோன்றிப் பூவைச் சாத்திக்கொள்ள மறந்தானென்றாவதுகொள்க. உடம்பு மெலிந்ததை முன்னே சொல்லாமல் வளைகழன்றதை முன்னே சொன்னதற்குக் காரணம்—வளைகழன்றபின்பே இவளுடம்பு மெலிந்ததைத்தானறிந்ததனாலென்க. வனம் என்று அழகுக்கும் பேர். மௌவல் என்று மல்லிகைக்கும் முல்லைக்கும் மாலதிக்கும் பேர்; "மல்லிகை மௌவல்," "மௌவலும

தளவும் கற்பு முல்லை," "மாலதி மௌவலாகுமென்ப" என்பவை – சேந்தன்திவாகரம். சிலிங்காரம்–ஶ்ருங்காரம்; அலங்காரமென்றபடி. தீம்–இனிமை; "தீமு மதுரமுந் தேமுந் தேக்கும, ஆமிநான்குந் தித்திப்பாகும்" என்பது நிகண்டு. மெய்மேலிகின்றது—இதுவும் கீழ்ப் பாட்டுக்களிற்போல, வழுவமைதி. .... .... .... (9)

263 விண்ணின்மீதமரர்கள்விரும்பித்தொழ மிறைத்தாயர்பாடியில்வீதியூடே *
கண்ணன்காலிப்பின்னேயெழுந்தருளக்கண்டு இளவாய்க்கன்னிமார்காமுற்ற
வண்ணம் * வண்டமர்பொழிற்புதுவையர்கோன் விட்டுசித்தன்சொன்னமாலைபத்தும் *
பண்ணின்பம்வரப்பாடும்பத்தருள்ளார் பரமானவைகுந்தம்நண்ணுவரே. (10)

| | | | |
|---|---|---|---|
| விண்ணின் மீது அமரர்கள் விரும்பி தொழ | பரமாகாசமாகிய ஸ்ரீவைகுண்டத்திலே நித்யஸூரிகள் ஆதரித்து ஸேவியா நிற்கச் செய்தேயும் | புதுவையர் கோன் | ஸ்ரீவில்லிபுத்தூரிலுள்ளார்க்குத் தலைவரான |
| கண்ணன் | ஸ்ரீக்ருஷ்ண பரமாத்மா | விட்டுசித்தன் | பெரியாழ்வார் |
| மிறைத்து | (அவர்களை மதியாமல்) மேறுணித்து | சொன்ன | அருளிச்செய்த |
| ஆயர் பாடியில் | திருவாய்ப்பாடியில் (வந்தவதரித்து) | | |
| வீதி ஊடே காலி பின்னே எழுந்தருள | தெருவேறப் பசுக்களின் பின்னே எழுந்தருளா நிற்க, | மாலை பத்தும் | சொல்மாலையாகிய இப்பத்துப் பாசுரங்களையும் |
| இள ஆய் கன்னிமார் | யுவதிகளான இடைப் பெண்கள் | இன்பம் வர பண் பாடும் பத்தர் உள்ளார் | இனிமையாகப் பண்ணிலே பாட வல்ல பக்தர்களா யிருக்குமவர்கள் |
| கண்டு | பார்த்து | | |
| காமுற்ற வண்ணம் | காமவிகாரமடைந்த படியை,— | | |
| வண்டு அமர் பொழில் | வண்டுகள் படிந்த சோலைகளையுடைய | பரமான வைகுந்தம் நண்ணுவர் | லோகோத்தரமான ஸ்ரீவைகுண்டத்தை அடையப்பெறுவார்கள். |

* * *—ஸ்ரீ வைகுண்டத்தில் நித்யஸூரிகளனைவரும் தன்னைத்தொழா நிற்கவும் எம்பெருமான் அவ்விடத்தே வீற்றிருந்து தனது பரத்துவத்தைப் பாராட்டலாமாயிருக்க, அங்ஙன் செய்யாது இடைச்சேரியில்வந்து பிறந்தது தனது ஸௌசீல்யத்தை வெளிப்படுத்துகைக்காகவென்க. காமுற்ற—'காமம் உற்ற' என்பதன் தொகுத்தல். .... (10)

அடிவரவு:—தழை வல்லி சுரிகை குன்று சுற்றி சிந்துரம சால சிந்துரப்பொடி வலம விண் அட்டு.

நான்காந்திருமொழி உரை முற்றிற்று.

---

## மூன்றாம்பத்து—ஐந்தாந்திருமொழி அட்டுக்குவி

---

அவதாரிகை:— திருவாய்ப்பாடியில் ஆயர்கள் வழக்கப்படி இந்திரபூஜைக்சென்று சமைத்த சோறு முதலியவற்றை யடங்கலும் கண்ணபிரான் அவவிந்திரனுக்கு இடவொட்டாமல் கோவர்த்தனமலைக்கு இடுவித்து பின்பு தானே ஒரு தேவதாரூபங்கொண்டு அவற்றை முற்றும் அமுதுசெய்துவிட, பிறகு இந்திரன் பசிக்கோபத்தினால் மேகங்களை ஏவி ஏழுநாள் விடாமழைபெய்விக்க, கண்ணபிரான் அக்கோவர்த்தனகிரியைக் குடையாகத்தூக்கிக் கோக்களையுங் கோவலரையுங் காத்தருளின பேருதவியை ஆழ்வார் பெருக்கமதித்து அவவரலாற்றை விரிவாக அருளிச்செய்து இனியராகிறார் இத்திருமொழியில் .... .... (*)

264 அட்டுக்குவிசோற்றுப்பருப்பதமும் தயிர்வாவியும்நெய்யளறுமடங்கப்
பொட்டத்துற்றி * மாரிப்பகைபுணர்த்த பொருமாகடல்வண்ணன்பொறுத்தமலை *
வட்டத்தடங்கண்மடமான்கன்றினை வலைவாய்ப்பற்றிக்கொண்டு * குறமகளிர்
கோட்டைத்தலைப்பால்கொடுத்துவளர்க்குங் கோவர்த்தனமென்னுங்கொற்றக்குடையே. (1)

| | |
|---|---|
| குற மகளிர் | குறப்பெண்கள், |
| வட்டம் தட கண் மடம் மான் கன்றினை | வட்டவடிவான பெரிய கண்களையுடையதும் (தனது தாய்க்கு) வசப்பட்டிருப்பதுமான மான் குட்டியை |
| வலை வாய் பற்றிக் கொண்டு | வலையிலே அகப்படுத்தி |
| | (பின்பு அதனைத் தங்களுடையதாக அபிமானித்து, அதற்கு) |
| கோட்டை தலை பால் கொடுத்து வளர்க்கும் | பஞ்சச்சுருளின் நுனியாலே பாலை எடுத்து ஊட்டி வளர்க்கைக்கு இடமான |
| கோவர்த்தனம் என்னும் | 'கோவர்த்தனம்' என்ற பெயரையுடையதும் |
| கொற்றம் குடை | வெற்றியையுடையதுமான குடையானது (யாதெனில்?) |
| அட்டு குவி சோறு பருப்பதமும் | சமைத்துக் குவிக்கப்பட்ட சோறாகிற பர்வதமும் |
| தயிர் வாவியும் | தயிர்த்திரளாகிற ஓடையும் |
| நெய் அளறும் | நெய்யாகிற சேறும் |
| அடங்க பொட்ட துற்றி | ஆகிய இவற்றை முழுதும் விரைவாக [ஒரே கபளமாக] அமுது செய்துவிட்டு, |
| | (இப்படி செய்கையினாலே இந்திரனுக்குக் கோபம் மூட்டி அவன் மூலமாக) |
| மாரி பகை புணர்த்த | மழையாகிற பகையை உண்டாக்கின |
| பொரு மா கடல் வண்ணன் | அலையெறிகிற பெரிய கடலினது நிறம்போன்ற நிறத்தையுடைய கண்ணபிரான் |
| பொறுத்த மலை | தனது திருக்கையினால் தூக்கின மலையாம். |

* * *—"துன்னுசகடத்தாற்புக்க பெருஞ்சோற்றை" என்றபடி வண்டி வண்டியாக வந்து திரண்டுகிடந்த சோற்றின் மிகுதியைக்கொண்டு 'சோற்றுப் பருப்பதம்' எனப்பட்டது. மலையில் ஓடைகளுஞ் சேறுகளும் இன்றியமையாதனவாதலால், இங்குத் தயிர்த்திரளை ஓடையாகவும் நெய்ப்பெருக்கைச் சேறாகவும் உருவகப்படுத்தினரென்க. சோற்றுத்திரளில் தொட்டியாகக்கட்டி அதில் தயிரையும் நெய்யையும் நிறைத்தமை தோற்றும். 'நெடுநாளாக இந்திரனுக்குச் செய்துவந்த இப்பூஜையை நீ உனக்காக்கிக் கொள்ளவொட்டோம்' என்று சில இடையர் மறுப்பார்களோ என்று சங்கித்துப் பொட்டத்துற்றினானாயிற்று; ஓர் இமைப்பொழுதளவில் அவற்றையெல்லா மமுதுசெய்திட்டனன். இவன் இவ்வாறு செய்யவே, பூஜையை இழந்த இந்திரன் பசிக்கோபத்தினால் புஷ்கலாவர்த்தம் முதலிய மேகங்களை ஏவி விடாமழை பெய்வித்ததனால் அம்மழையாகிற பகைக்குக் கண்ணபிரான் காரணமானமை பற்றி 'மாரிப்பகைபுணர்த்த' என்றார்.

பின்னிரண்டடிகளின் கருத்து :—குறப்பெண்கள் அழகிய மான்களை வளர்க்க விரும்பி அவற்றை வலைவைத்துப் பிடிப்பித்துத் தங்கள் குடங்காலில் அவற்றை இருத்திப் பஞ்சச்சுருள்களின் நுனியால் அவற்றுக்குப் பாலூட்டி வளர்க்கப்பெற்ற மலை என்றவாறு. அவை அப்பஞ்சச்சுருளின் நுனியைத் தன் தாய் முலையாகப் பாவித்து உறிஞ்சுமென்க.

அட்டு என்ற வினையெச்சத்தில் அடு என்ற குறிலிணைப்பகுதி ஒற்றிரட்டி இறந்தகாலங் காட்டிற்று. ஊர்வசியை உருப்பசி என்னுமாபோலே, பர்வதத்தைப் பருப்பத மென்கிறது. வாவி-வாவீ. வட்டம்-வ்ருத்தம் என்றவடசொல் விகாரம்; ந்ருத்தம் என்றவடசொல் 'நட்டம்' எனவருதல்போல. வலைவாய்=வாய்-ஏழனுருபு. குறமகளிர்—குறிஞ்சிநிலமக்கள். கோட்டைத்தலை — மூன்றும் வேற்றுமைத்தொகை. பசுக்களுக்குப் புல்லுந்தண்ணீரும் நியமமாகக் கொடுத்து வளர்த்ததனால் கோவர்த்தநம் என்பது காரணப்பெயர். பெருத்தமழையை வென்று ஒருவர்மேல ஒருதுளி விழாதபடி கவிந்து நின்றமைபற்றிக் 'கொற்றக்குடை'

எனப்பட்டது. கோற்றம் – ஜயம். கடல்வண்ணன் பொறுத்தமலை–கோவர்த்தனமென்னும் கொற்றக்குடையாம் என்று முறையே இயைப்பினு மிழுக்காகாது. துற்றி–'துற்று' என்னும் பகுதியினடியாப் பிறந்த வினையெச்சம். "துற்று" என்றே பலர் ஓதுவர். .... (1)

265 வழுவொன்றுமில்லாச்செய்கைவானவர்கோன் வலிப்பட்டுமுனிந்துவிடுக்கப்பட்ட *
மழைவந்தேழுநாள்பெய்துமாத்தடுப்ப மதுசூதனெடுத்துமறித்தமலை *
இழவுதரியாததோரீற்றுப்பிடி யிளஞ்சீயந்தொடர்ந்துமுடுகுதலும் *
குழவியிடைக்காலிட்டெதிர்ந்துபொருங் கோவர்த்தனமென்னுங்கொற்றக்குடையே. (2)

(இந்திரபட்டம் பெறுவதற்காகச் செய்த ஸாதனும்சத்தில)
ஒன்றும் வழு இல்லா செய்கை — ஒரு குறையுமற்ற செய்கைகளையுடைய
வானவர் கோன் — தேவேந்திரனுடைய
வலி பட்டு — பலாத்காரத்துக்கு உளபட்டும்
முனிந்து விடுக்கப் பட்ட — (அவ்விந்திரனால்) கோபத்துடன் ஏவப்பட்டுமுள்ள
மழை — மேகங்களானவை
வந்து எழு நாள் பெய்து மா தடுப்ப — (அக்காலத்திலே குமுறிக்கொண்டு) வந்து ஏழுநாளளவும (இடைவிடாமல்) வர்ஷித்து பசுக்களை (வெளியே போகக்கூடாதபடி) தகைய
மதுசூதன எடுத்து — கண்ணபிரான் (ஸர்வ ஜநங்களையும காப்பதற்காக அடிமண்ணோடு கிளப்பி) எடுத்த
மறித்த மலை — தலைகீழாகப் பிடித்தருளின மலையானது (எது எனனில்;)
இள சீயம தொடர்ந்து முடுகுதலும் — சிங்கக்குட்டியானது (யானைக்குட்டியை நலிவதாகப்) பினதொடாந்து வந்து எதிாத்தவளவிலே,
இழவு தரியாதது ஓர் ஈற்றுப்பிடி — (தன குட்டியின) வருத்தத்தைப் பொறுக்கமாட்டாத (அக்குட்டியைப்) பெற்றபெண்யானையானது
குழவி கால இடை இட்டு — (அந்தக்) குட்டியை (தனது) நானகு கால்களின நடுவில அடக்கிக்கொண்டு
எதிர்ந்து பொரும — (அந்தச் சிங்கக்குட்டியோடு) எதிர்த்து போராடப்பெற்ற
கோவர்த்தனம் ... குடையே—.

* * *—இங்கு இந்திரனை வழுவொன்று மில்லாச் செய்கையனாகக் கூறினது—தான் இந்திரபதவியைப் பெறும்போது அதற்குச் செய்யவேண்டிய ஸாதனங்களில் ஒன்றுங் குறைவில்லாமல் செய்தவனென்பதற்காக. வெகு வருத்தப்பட்டு ஸம்பாதித்த இந்திரபதவிக்குப் பிறர்களிடத்தில் பூஜை பெறுவதை ஒரு பெரிய கௌரவமாக இவன் கொண்டிருப்பதனால் அம்மரியாதைக்குக் குறைவுவரவே கோபங்கொண்டனனென்க; ஆகவே, "வழுவொன்று மில்லாச்செய்கை" என்பது கருத்துடை யடைமொழியாம். "மாத்தடுப்ப" என்பதில் 'மா' என்ற விலங்கின் பொதுப்பெயர் இங்கு, பசுக்களையுங் கன்றுகளையுங் குறிக்கும்; இடையர்கட்கும் உபலக்ஷணம். மதுசூதன்—மது என்ற அஸுரனைக் கொன்றவன்; மது–வேதத்தை அபஹரித்துக்கொண்டு சென்ற அஸுரர்களிருவரில் ஒருவன். பின்னிரண்டடிகளின் கருத்து;—ஒரு பெண்யானையானது தன் குட்டியை ஒரு சிங்கக்குட்டி நலிவதாகவந்து சீறின வளவிலே அத்துன்பத்தைப் பொறுக்கமாட்டாமல் அந்தத் தன குட்டியைத் தனது நான்கு கால்களினுள்ளே அடக்கி மறைத்துக்கொண்டு அச்சிங்கக்குட்டியை எதிர்த்துப் போர்செய்தற்கிடமான கோவர்த்தனமலை என்க. இனி, இழவு என்பதற்கு, விட்டுப்பிரிதல் என்று பொருள்கொண்டு வேறுவகையாகவும் கருத்துக்கூறலாம்; குட்டியுந் தானுமாயிருந்த ஒரு பெண்யானை, தன்னை நலியவந்த ஒரு சிங்கக்குட்டியோடு தான் பொரநினைத்து அப்போது தன் குட்டியை இறைப்பொழுதும தனித்துவிட்டிருக்கமாட்டாத தான அக்குழவியைத தன் காலிடையிலடக்கிக்கொண்டு போர்செய்ததாகக் கொள்க. .... .... (2)

266 அம்மைத்தடங்கண்மடவாய்ச்சியரு மானுயருமாநிரையுமலறி *
எம்மைச்சரணேன்றுகோள்ளேன்றிரப்ப விலங்காழிக்கையேந்தையெடுத்தமலை *

தம்மைச்சரணென்றதம்பாவையரைப் புனமேய்கின்றமானினங்காண்மினென்று *
கொம்மைப்புயக்குன்றர்சிலைகுனிக்குங் கோவர்த்தனமென்னுங்கொற்றக்குடையே. (3)

| | |
|---|---|
| அம் மை தட கண் மடம் ஆய்ச்சியரும் | அழகிய மை அணிந்த விசாலமான கண்களையுடைய இடைச்சிகளும் |
| ஆன் ஆயரும் | கோபாலர்களும் |
| ஆ நிரையும் | பசுக்கூட்டமும் |
| அலறி | (மழையின் கனத்தால்) கதறிக் கூப்பிட்டு |
| எம்மை சரண் என்று கொள் என்று இரப்ப | (‘எம்பிரானே! நீ) எமக்கு ரக்ஷகனாயிருக்குந் தன்மையை ஏற்றுக் கொள்ளவேணும்’ என்று பிரார்த்திக்க, |
| | (அவ்வேண்டுகோளின்படியே) |
| இலங்கு ஆழி கை எந்தை | விளங்காநின்ற திருவாழி ஆழ்வானை கையிலே உடையனாய் எமக்கு ஸ்வாமியான கண்ணபிரான் |
| எடுத்த மலை | (அவற்றை ரக்ஷிப்பதற்காக) எடுத்த மலையாவது (எது என்னில்?);— |
| கொம்மை புயம் குன்றர் | பருத்த புஜங்களையுடைய குறவர்கள், |
| தம்மை சரண் என்ற தம் பாவையரை | தங்களை சரணமென்று பற்றியிருக்கிற தங்கள் பெண்களை |
| | (கொல்லையிலே வியாபரிக்கிற அப்பெண்களின் கண்களைக் கண்டு இவை மானபேடைகள் என்று ப்ரமித்து) |
| புனம் மேய்கின்ற மான் இனம் காண்மின் என்று | (‘நம்முடைய) கொல்லையை மேய்ந்து அழிக்கின்ற மான் கூட்டங்களைப் பாருங்கோள்’ என்று (ஒருவர்க்கொருவர் காட்டி) |
| | (அவற்றின்மேல் அம்புகளை விடுவதாக) |
| சிலை குனிக்கும் | (தமது) வில்லை வளையாநின்றுள்ள கோவ * * * குடையே. |

* * *—“எம்மைச் சரணென்றுகொள் என்றிரப்ப”—எங்களை ரக்ஷித்தருள் என்று வேண்ட என்பது கருத்து. “சரணென்றுகொள்” என்ற பாடத்தை மறுக்க. கண்ணபிரான் மலையெடுத்தபோது, கையில் திருவாழி உள்ளதாகச்சொல்லுகிறவிதுக்குக் கருத்து என்னென்னில்; கண்ணபிரான் இந்திரனைத் தலையறுக்கவேண்டில் அது அரிய வேலையன்று, கையில் திருவாழியை ஏவிக் காரியம்செய்து முடிக்கவல்ல வல்லமையுண்டு. ஆகிலும் அங்ஙன் செய்யாதொழிந்தது—‘இந்திரனுடைய உணவைத்தான் கொண்டோமே, உயிரையுங் கொள்ளவேணுமா’ என்ற கருணையைத் தெரிவித்தவாறு. பின்னிரண்டடிகளின் கருத்து;— மலைக்குறவர் தமக்கு அன்பர்களான குறப்பெண்களின் கண்கள் கொல்லையிலே பரந்திருக்கக்கண்டு அவற்றை மான்களாகக் கருதி, ‘இவை நமது கொல்லையை மேய்ந்து அழிக்க வந்தன, இவற்றை நாம அம்பெய்து கொல்லும்படியைப் பாருங்கள்’ என்று சொல்லி வில்லை வளைக்கப்பெற்ற மலை என்க; பெண்ணின் நோக்குக்கு மானின் நோக்கை உவமை கூறுதல் கவிமரபாகையால், இம்மலையிலுள்ள குறத்திகள் * மானேய் மடநோக்கிகள் என்பதைப் பெறுவிக்கும் இவ்வர்ணனை. கொம்மை—வலிவு. புயம்—புஜம் என்ற வடசொல் விகாரம். (3)

267 கடுவாய்ச்சினவெங்கட்களிற்றினுக்குக் கவளமெடுத்துக்கொடுப்பானவன்போல் *
அடிவாயுறக்கையிட்டெழப்பறித்திட் டமரர்பெருமான்கொண்டுநின்றமலை *
கடல்வாய்ச்சென்றுமேகங்கவிழ்ந்திறங்கிக் கதுவாய்ப்படநீர்முகந்தேறி * எங்கும்
குடவாய்ப்படநின்றுமழைபொழியுங் கோவர்த்தனமென்னுங்கொற்றக்குடையே. (4)

| | |
|---|---|
| கடு வாய் சினம் வெம் கண் | பயங்கரமான வாயையும் மிக்க சீற்றத்தையும் தீக்ஷ்ணமான கண்களையுமுடைய |
| களிற்றினுக்கு | ஒரு யானைக்கு |
| கவளம் எடுத்து | சோற்றுக்கட்டைத் திரட்டியெடுத்து |
| கொடுப்பான் அவன் போல் | கொடுக்கின்ற யானைப்பாகனைப் போல, |
| அமரர் பெருமான் | தேவர்களுக்குத்தலைவனான கண்ணபிரான் |
| கை அடி வாய் உற இட்டு | (தனது) திருக்கைகளை மலையின்கீழ் வாய்பக்கத்திலே உறும்படியாகச் செலுத்தி (மற்றொரு திருக்கையினாலே மேலே பிடித்து) |
| எழ பறித்திட்டு | கிளப்பிடுங்கி |
| கொண்டு நின்ற மலை | (தானே) தாங்கிக்கொண்டு நின்ற மலையாவது (எது என்னில்,—) |
| மேகம் | மேகங்கள் |
| கடல்வாய் சென்று | கடலிடத்துச்சென்று |
| இறங்கி கவிழ்ந்து | (அங்கு) இறங்கிக்கவிழ்ந்துகிடந்து |

| | | | |
|---|---|---|---|
| கதுவாய்ப்பட்ட | (கடல்) வெறுந்தரையாம்படி (அங்குள்ள) நீர் முழுவதையும் | எங்கும் குடம் | எல்லாவிடத்தும் குடங்களில் நின்றும் நீரைச் சொரியுமாபோலே |
| நீர் முகந்து ஏறி | ஆகாசத்தில் ஏறி | மழை பொழியும் | மழைபொழியா நிற்கப்பெற்ற |
| | | | கோவர் * * * குடையே- |

* * *—கண்ணபிரான் மேகமழையைத் தடுப்பதற்காக மலையை உயரத் தூக்கிக்கொண்டு நின்றபடிக்கு ஓர் உவமை கூறுகின்றார்—முதலடியினால்; மேகத்தை யானையாகவும் மலையைக் கவளமாகவும், அம்மலையையெடுத்துப் பிடிக்கின்ற கண்ணனைக் கவளமெடுத்துக் கொடுக்கும் பாகனாகவும் உருவகப்படுத்தியவாறு: "மதயானைபோலெழுந்த மாமுகில்காள்" எனப் பிறவிடத்தும் மேகத்துக்கு யானையை உவமையாகக் கூறியுள்ளமைகாண்க. சடுவாய், சினம், வெங்கண் என்ற இம்மூன்றடைமொழிகளும் மேகத்துக்கும் இயையும்; கேட்டார் அஞ்சும்படியான முழக்கமும், அடர்த்துக்கொண்டு வர்ஷிக்கநிற்கிற ஆக்ரஹமும், கொள்ளிவட்டம்போன்ற மின்னற்சுழிப்பும் அமையப்பெற்றிருக்குமே மேகங்கள். கடு—சடா என்ற வடசொல்விகாரம். கவளம்—கபளம். யானையின் உணவு. [அடிவாய் இத்யாதி] ஒரு திருக்கையை மலையின்கீழ்ச்செலுத்தி மற்றொரு திருக்கையை மலையின்மேற்செலுத்திப் பறித்தெடுத்தானென்க. அடிவாய்—அடியிலே; வாய்—ஏழனுருபு. உற—ஊன்றும்படி. மேகங்களானவை திருவாய்ப்பாடியெங்கும் மழையைப்பொழிந்து வருத்த, அதனைத் தொலைப்பதற்காகத் தூக்கின குடையாமென்பது—பின்னடிகளின் கருத்து. கதுவாய்ப்படுதலாவது—குறைவுபடுதல்; எனவே, கடல் வெறுந்தரையாம்படி என உரைக்கப்பட்டது: வேறுவகையாகவுமுரைக்கலாம். .... .... ... (4)

268 வானத்திலுள்ளீர்வலியீருள்ளீரே லறையோவந்துவாங்குமினேன்பவன்போல் *
ஏனத்துருவாகியவீசனேந்தை யிடவனேழவாங்கியெடுத்தமலை *
கானக்களியானைதன்கோம்பிழந்து கதுவாய்மதஞ்சோரதன்கையெடுத்து *
கூனற்பிறைவேண்டியண்ணாந்துநிற்குங் கோவர்த்தனமேன்னுங்கோற்றக்குடையே. (5)

| | | | |
|---|---|---|---|
| ஏனத்து உரு ஆகிய ஈசன எந்தை | (முன்பு ஒரு காலத்திலே) வராஹ ரூபம் கொண்டருளி ஸ்வாமியாயும் எனக்குத் தந்தையாயுமுள்ள கண்ணபிரான், | | (கரைபொருது திரியும்போது ஓரிடத்திலே குத்துண்டு முறிந்து) |
| வானத்தில் உள்ளீர் வலியீர் உள்ளீர் ஏல் | "மேலுலகத்திலிருப்பவர்களே! (நீங்கள் என்னோடொக்க) வல்லமையுள்ளவர்களாயிருப்பீர்களாகில் | தன் கொம்பு இழந்து | தனது தந்தத்தை இழந்ததனால் |
| அறையோ வந்து வாங்குமின் என்பவன்போல் | அறையோ அறை! (இங்கே) வந்து (இம்மலையைக் கையால்) தாங்கிக்கொண்டு நில்லுங்கள்" என்று சொல்லுகிறவன் போல | கதுவாய் மதம் சோர தன் கை எடுத்து | அக்கொம்பு முறிந்து புண்பட்ட வாயிலே மதநீரானது ஒழுகாநிற்க தனது துதிக்கையை உயரத்தூக்கி |
| | | | (ஆகாசத்தில் தோற்றுகின்ற) |
| இடவன் எழ வாங்கி எடுத்த மலை | ஒரு மண்கட்டிபோலே (அநாயாஸமாகக்) கிளரப்பிடுங்கி எடுத்துக்கொண்டு நிற்கப்பெற்ற மலையாவது;— | கூன் நல் பிறை வேண்டி அண்ணாந்து நிற்கும் | வளைந்த அழகிய பிறையை (தானிழந்த கொம்பாக பரமித்து அதைப் பறித்துக்கொள்ள) விரும்பி மேல்நோக்கிப் பார்த்துக்கொண்டிருக்கப்பெற்ற |
| கானம் களி யானை | காட்டு நிலங்களில் செருக்கித்திரியக் கடவதான ஒரு யானையானது | | கோவர் * * * குடையே—; |

* * *—கண்ணபிரான் மலையை விடாது வருந்தாது தாங்கிக்கொண்டு நிற்றலை ஒருவகையாக உத்ப்ரேக்ஷிக்கின்றார்—முதலடியினால்: நாம் ஆகாசத்திலே முளைத்தோமென்று இறுமாந்திருப்பவர்களே! நீங்கள் மெய்யே வலிவுள்ளவர்களாகில் இம்மலையைச் சிறிது தாங்குங்கள் பார்ப்போம் என்று தேவர்களை அழைப்பவன் போன்றுளனென்க. அறையோ

என்றது-பௌருஷம்தோன்ற மீசைமுறுக்கிச்சொல்லும் வெற்றிப்பாசுரம். பாதாளலோகஞ் சென்று சேர்ந்த பூமியை ஓட்டுவிடுவித்தெடுத்துத் திருவயிற்றிலே தாக்கிநின்ற பெருமானுக்கு இம்மலையெடுக்கை அரிதன்றென்பார் "ஏனத்துருவாகியவீசன்" என்றார். இடவன்— மண்கட்டிக்குப்பெயர். பின்னடிகளின் கருத்து; ஒரு யானையானது கரைபொருது திரியும் போது ஓரிடத்திற் கொம்பைக்குத்தினவளவிலே அக்கொம்பு முறியப்பெற்று அவ்விடத்தில் மதநீரொழுகப்பெற்ற ஆற்றாமையாலே துதிக்கையைத் தூக்கிக்கொண்டு, வானத்தில் வளர்ந்து தோற்றும் இளந்திங்களைத் தானிழந்தகொம்பாக ப்ரமித்து அதனைப்பறித்துக்கொள்ளவேண்டு மென்ற ஆவலுடன் உயர்முகமாகவே யிருக்கும்படியைச் சொல்லியவாறு. கதுவாய்-குறை யுற்ற இடம் அண்ணாத்தல்—மேல் நோக்குதல். .... .... .... (5)

269 செப்பாடுடையதிருமாலவன்றன் செந்தாமரைக்கைவிரலைந்தினையும் *
கப்பாகமடுத்துமணிநெடுந்தோள் காம்பாகக்கொடுத்துக்கவித்தமலை *
எப்பாடும்பரந்திழிதெள்ளருவி யிலங்குமணிமுத்துவடம்பிறழ *
குப்பாயமெனநின்றுகாட்சிதருங் கோவர்த்தனமென்னுங்கொற்றக்குடையே, (6)

| | | | |
|---|---|---|---|
| செப்பாடு உடைய திருமால் அவன் | செவ்வைக்குணத்தையுடையனாய் ச்ரிய:பதியான அக்கண்ணபிரான் | கவித்த மலை | தலைகீழாக கவித்த மலையாவது,— |
| தன் செம் தாமரை கை விரல் ஐந்தினையும் | தன்னுடைய செந்தாமரை மலர் போன்ற திருக்கையிலுள்ள ஐந்து விரல்களையும் | எப் பாடும் பரந்து இழி தெள் அருவி | எல்லா பக்கங்களிலும் பரவிப் பெருகாநின்ற தெளிந்த சுனைநீ ரருவிகளானவை |
| கப்பு ஆக மடுத்து | (மலையாகிற குடைக்காம்படியி லுண்டான) கிளைக்கொம்புகளாக அமைத்து | இலங்கு மணி முத்து வடம் பிறழ | விளங்கா நின்ற அழகிய முத்தா ஹாரம்போலத் தனித் தனியே ப்ரகாசிக்க, |
| மணி நெடு தோள் | அழகிய நீண்ட திருத்தோள்களை | குப்பாயம் என நின்று | (கண்ணபிரானுக்கு இது ஒரு) முத்துச்சட்டை யென்று சொல் லும்படியாக, |
| காம்பு ஆக கொடுத்து | (அந்த மலைக்குடைக்குத் தாங்கு) காம்பாகக் கொடுத்து | காட்சி தரும் | காணப்படப்பெற்ற |
| | | கோவா * * * குடையே—. | |

* * *—செப்பாடாவது—இந்திரனுக்கிட்ட சோற்றையடங்கத் தானமுது செய்து மழைபெய்வித்து 'இவை பட்டதுபடுக' என்று ஈரமற்ற நெஞ்சனா யிருக்கையன்றிக்கே தான் முன்னின்று ரக்ஷித்தருளின செவ்வைக்குணம். இக்குணம் பிராட்டியோடே சேர்த்தியால் வந்ததென்பார் திருமால் என்றார். அவன்—முதல்வேற்றுமைச் சொல்லுருபு. கப்பு-குடைக் காம்பினடியிற் கிளைவிட்டாற்போன்றுள்ள வேத்ரதண்டங்கள். கோவர்த்தன மலையை ஒரு குடையாக உருவகப்படுத்தியதற்கேற்பத் தடங்கை விரலைந்தும் மலரவைத்த கண்ணபிரான் கைவிரல்களைக் கப்பாகவும் பாஹுதண்டத்தைக் காம்பாகவும் உருவகப்படுத்தியவாறுகாண்க. பின்னடிகளின் கருத்து;—(மலைகளில் சுனைநீரருவிகள் இன்றியமையாதன வாகையால்) இம் மலையில் கண்டவிடமெங்கும் பரவிப்பெருகுகின்ற தெள்ளருவிகளானவை அமைந்துள்ள படி யைப்பார்த்தால் கண்ணபிரானுக்காக முத்துச்சட்டை விசிக்கப்படுத்தப் பட்டுள்ளதுபோலும் என உத்ப்ரேக்ஷித்தவாறென்க. குப்பாயம்—சட்டை; "மெய்ப்பை சஞ்சுளி கஞ்சுகம் வாரணம், குப்பாயமங்கி சட்டையாகும்" என்பது—திவாகரம். இங்குச் சந்தர்ப்பம்நோக்கி முத்துச்சட்டை எனப்பட்டது. காட்சி—சி விகுதிபெற்ற தொழிற்பெயர். .... (6)

270 படங்கள்பலவுமுடைப்பாம்பரையன் படாபூமியைத்தாங்கிக்கிடப்பவன்போல் *
தடங்கைவிரலைந்தும்மலரவைத்துத் தாமோதரனதாங்குதடவரைதான் *

| | | | |
|---|---|---|---|
| கார் ஆர் கடலை அடைத்திட்டு | கருமை பொருந்திய கடலை (மலைகளினால்) அடைத்துவிட்டு [ஸேதுகட்டி] (அந்த ஸேதுவழியாக) | அவன் தம்பிக்கே நீள் அரசு ஈந்த | அவனது தம்பியான விபீஷணுக்கு வானுக்கு நெடுங்காலம் நடக்கும்படியான ஆதிராஜ்யத்தை அளித்தருளின |
| இலங்கை புக்கு | லங்கையிற்புகுந்து (அவ்விடத்தில்) | ஆரா அமுதனை | எவ்வளவு உண்டாலும் திருப்தியைத் தராத அம்ருதம்போல் இனியனை இராம பிரானை |
| ஓராதான் பொன் முடி ஒன்பதோடு ஒன்றையும் நேரா | (தன் வீரப்பாட்டை) மதியாத ராவணனுடைய அழகிய தலைகள் பத்தையும் அறுத்துப் போகட்டு | பாடிப் பற—; அயோத்தியார் வேந்தனை | அயோத்தியிலுள்ளவர்க்கு அரசனானவனை பாடிப் பற—. |

* * *—நேரா—'செய்யா' என்னும் வாய்பாட்டு உடன்பாட்டிறந்தகால வினையெச்சம்; சேர்ந்து [அறுத்து] என்றவாறு. நீளரசு—"என்னிலங்கு நாமத்தளவு மரசென்ற" என்றதை நினைக்க. .... .... .... .... .... (10)

317 நந்தன்மதலையைக் காகுத்தனைநவின்று *
உந்திபறந்த ஒளியிழையார்கள்சொல் *
செந்தமிழ்த்தேன்புதுவை விட்டுசித்தன்சொல் *
ஐந்தினோடைந்தும்வல்லார்க்கு அல்லலில்லையே. (11)

| | | | |
|---|---|---|---|
| நந்தன் மதலையை காகுத்தனை நவின்று | நந்தகோபன் குமாரனான கண்ணபிரானையும் இராமபிரானையும் (ஒருவருக்கொருவர் எதிரியாய் நின்று) சொல்லி | செம் தமிழ் தென் புதுவை விட்டு சித்தன் சொல் | அழகிய தமிழ்ப் பாஷையாலே, அழகிய ஸ்ரீ வில்லிபுத்தூர்க்குத் தலைவரான பெரியாழ்வார் அருளிச் செய்த |
| உந்தி பறந்த ஒளி இழையார்கள் சொல் | உந்தி பறக்கையாகிற லீலாரஸங் கொண்டாடின அழகிய ஆபரணமணிந்த ஆய்ப்பெண்களிருவருடையசொல்லை, | ஐந்தினோடு ஐந்தும் வல்லார்க்கு | கிருஷ்ணாவதார விஷயமான ஐந்தும் ராமாவதார விஷயமான ஐந்துமாகிய இப்பத்துப் பாசுரங்களை ஓதவல்லவர்களுக்கு |
| | | அல்லல் இல்லை | துன்பமொன்றுமில்லையாம். |

அடிவரவு:—என்னாதன் என்வில் உருப்பிணி மாற்று பஞ்சவர் முடி காளியன் தார் மாய காரார் நந்தன் நெறிந்த. .... .... .... (*)

ஒன்பதாந்திருமொழி உரை முற்றிற்று.

---

## மூன்றாம்பத்து—பத்தாந்திருமொழி—நெறிந்தகருங்குழல்.

அவதாரிகை:—பஞ்சவடியில் தனித்திருந்த பிராட்டியை இராவணன் மாயவகையினால் லங்கைக்குக் கொண்டுபோய் அசோகவனிகையிற் சிறைவைத்திட, பின்பு இராமபிரானால் தூதுவிடப்பட்ட சிறியதிருவடி அவ்விடத்தே வந்து பிராட்டியின் முன் நின்று, பல அடையாளங்களைச் சொல்லித் தான் ராமதூதனென்பதை அவள் நம்புமாறு தெரிவித்துப் பின்பு திருவாழிமோதிரத்தையுங் கொடுத்து அவள் திருவுள்ளத்தை மிகவும் மகிழ்வித்தபடியை ஆழ்வார் அநுஸந்தித்து, அதில் தமக்குண்டான ஆதராதிசயத்தாலே, அவன் அப்போது விண்ணப்பஞ்செய்த அடையாளங்களையும் திருவாழிமோதிரங் கொடுத்தபடியையும், அது கண்டு அவள் மகிழ்ந்தபடியையுமெல்லாம் அடைவேபேசி இனியராகிறார், இத்திருமொழியில்.

318 நெறிந்தகருங்குழல்மடவாய் நின்னடியேன் விண்ணப்பம் *
சேறிந்தமணிமுடிச்சனகன் சிலையிறுத்துநினைக்கொணர்ந்த
தறிந்து * அரசுகளைசட்ட அருந்தவத்தோனிடைவிலங்க *
செறிந்தசிலைகொடுதவத்தைச் சிதைத்ததுமோரடையாளம். (1)

நெறிந்த கருங்குழல் மடவாய் — நெறிப்புக்கொண்ட கரிய கூந்தலையுடைய பிராட்டி
நின் அடியேன் விண்ணப்பம் — உமது அடியவனான எனதுடைய (விண்ணப்பம் கேட்டருளவேணும்)
செறிந்த மணிமுடி சனகன் சிலை இறுத்து — நெருங்கின ரத்னங்களையுடைய கிரீடத்தை அணிந்த ஜநகமஹாராஜன் (கன்யாசுல்கமாக ஏற்படுத்தின) ருத்ர தனுஸ்ஸை முறித்து (இராமன்)
நினை கொணர்ந்தது அறிந்து — உம்மை மணம்புரிந்து கொண்டதைத் தெரிந்துகொண்டு
அரசுகளை கட்ட — (துஷ்ட) ராஜாக்களை (ப்பயிருக்கு)க் களை களைவதுபோலழித்த அரிய தவத்தையுடைய பரசுராமன்
இடை விலங்க — நடுவழியிலே தடுக்க
செறிந்த சிலை கொடு — தனக்குத் தகுந்த அப்பரசுராமன் கையிலிருந்த விஷ்ணு தநுஸ்ஸை வாங்கிக்கொண்டு
தவத்தை சிதைத்ததும் — அப்பரசுராமனுடைய தபஸ்ஸை அழித்ததும்
ஓர் அடையாளம் — ஒரு அடையாளமாகும்,

* * *—இராமபிரான் பிராட்டியை மணம்புரிந்து கொண்டபடியையும், வழியிடையிற் பரசுராமனை வென்றவகையையும் இதனால் அடையாளமாகக் கூறுகின்றனன் அநுமான். செம்பட்ட மயிராயிராமல் கறுத்துச் சுருண்டிருக்கும் மயிரையுடைமையே கூந்தலுக்குச் சிறப்பாதலால் "நெறிந்த கருங்குழல்" என்றது; இது, முன்னிருந்தபடியையிட்டுச் சொல்லியவாறு. மடப்பமாவது—பற்றிற்கொண்டது விடாமை; சிறையிருக்கும்போதும பிராட்டி பெருமானை யல்லது மற்றொருவனை நெஞ்சிற்கொண்டவளன்றே. பரசுராமனிடத்திலிருந்து வாங்கியதாயினும் வைஷ்ணவ தநுஸ்ஸாகையாலே "செறிந்தசிலை" என்கிறது. பிராட்டியின் திருவுள்ளத்தில் சங்கைநீங்குமளவும் பல அடையாளங்கள் சொல்லும்படி நினைத்திருப்பதனால் 'ஓரடையாளம்' என்கிறான். விலங்க—விலக்க எனப் பிறவினைப் பொருளில் வந்த தன்வினை; ஃணுவ-ஃவிதணிஃ என்பர் வடநூலார். (1)

319 அல்லியம்பூமலர்க்கோதாய் அடிபணிந்தேன்விண்ணப்பம் *
சொல்லுகேன்கேட்டருளாய் துணைமலர்க்கண்மடமானே *
எல்லியம்போதினிதிருத்தல் இருந்ததோரிடவகையில் *
மல்லிகைமாமாலைகொண்டு அங்கார்த்ததுமோரடையாளம். (2)

அல்லி அம் பூ மலர் கோதாய் — அகவிதழ்களையுடைய அழகிய பூக்களால் தொடுக்கப்பட்ட பூமாலை போன்றவளே!
அடி பணிந்தேன் விண்ணப்பம் — (உமது திருவடிகளில் வணங்கிய நான் விஜ்ஞாபந மொன்றை
சொல்லுகேன் —(உம்மிடத்தில்) சொல்லுவேன்;
துணை மலர் கண் மடம் மானே — ஒன்றோடொன்று ஒத்துத் தாமரை மலர்போன்ற கண்களையும் மடப்பத்தையுமுடைய மான் போன்றவளே!
கேட்டருளாய் — (அதைத்) திருச்செவி சாத்த வேணும்;
அம் எல்லி போது — அழகிய இராத்திரி வேளையில்
இனிது இருத்தல் இருந்தது — இனிமையான இருப்பாக இருந்ததான
ஓர் இடம் வகையில் — ஓரிடத்திலே
மல்லிகை மா மாலை கொண்டு ஆர்த்தது — மல்லிகைப் பூவினால் தொடுக்கப்பட்ட சிறந்த மாலையினால் (ஸ்ரீ இராமபிரானைக்) கட்டியதும
ஓர் அடையாளம்—.

* * *—இதனால் அயோத்தியிலிருந்த காலத்தில் பிராட்டியும் பெருமானும் ராத்ரி வேளையில் ஏகாந்தமான இடத்தில் உல்லாஸமாக இருக்கையில், பிரணய ரோஷத்தினால்

பிராட்டி பெருமானை மல்லிகைமாலையைக் கொண்டு கட்டியதை அநுமான் அடையாளமாகக் கூறுகின்றான்; இது மிகவும் அந்தரங்கமாக நடந்திருக்குமாதலால், இது மற்ற அடையாளங்களைப் போலன்றிச் சிறந்த அடையாளமாகுமென்க. வநவாஸஞ்சென்றமை இன்னுங் கூறப்படாமையால், இச்செயலை நாட்டிலிருந்தபோது நிகழ்ந்ததாகக் கொள்வது பொருந்துமேயன்றி, வநவாஸகாலத்து நிகழ்ந்ததாகக் கொள்ளுதல் பொருந்ாதென்க. முதலடியில் பிராட்டிக்கு மலர்மாலையுவமை—உடம்பின் இளைத்ததன்மையிலும், மென்மையிலும், துவட்சியிலு மென்க. ஸம்போகாநுபவத்துக்கு ஏகாந்தமான காலமாதலால் எல்லியம்போது எனப்பட்டது. ஈற்றடியில், அங்கு—அசை. ... ... (2)

**320** கலக்கியமாமனத்தனளாய்க் கைகேசிவரம்வேண்ட *
மலக்கியமாமனத்தனனாய் மன்னவனும்மறாதொழிய *
குலக்குமராகாடுறையப் போவென்றுவிடைகொடுப்ப *
இலக்குமணன்றன்னொடும் அங்கேகியதோரடையாளம். (3)

கைகேசி கலக்கிய மாமனத்தனள் ஆய் — கைகேயியானவள் (மந்தரையினால்) கலக்கப்பட்ட சிறந்த மனத்தையுடையவளாய்

வரம் வேண்ட — (தசரதர் முன் தனக்குக் கொடுத்திருந்த) வரங்களின் பயனைக் கேட்க

மலக்கிய மா மனத்தனன் ஆய் — (அக் கைகேயியின் வார்த்தையால்) கலக்கமடைந்த சிறந்த மனத்தையுடையவனாய்

மன்னவனும் — தசரதச்சக்ரவர்த்தியும்

மறாது ஒழிய — மறுத்துச்சொல்ல முடியாமல் வெறுமனே கிடக்க, (அந்த ஸந்தர்ப்பத்தில் கைகேயியானவள்.)

குலம் குமரா காடு உறைய போ என்று விடை கொடுப்ப — "உயர்குலத்திற்பிறந்த குமாரனே! காட்டிலே (பதினான்கு வருஷம்) வஸிக்கும்படி போவாய்" என்று சொல்லி விடைகொடுத்தனுப்ப

அங்கு இலக்குமணன் தன்னொடும் ஏகியது — அக்காட்டிலே லக்ஷ்மணனோடு கூட (இராமபிரான்) சென்றடைந்ததும்

ஓர் அடையாளம்—.

* * *—திருப்பாற்கடலை மந்தரமலை கலக்கினாற்போலப் பரிசுத்தமாயிருந்த கைகேயியின் மனத்தை மந்தரையென்னுங் கூனி கலக்க- கைகேயியானவள் தான் மனங்கலங்கியது போலவே தசரதனையும் ராமவிரஹத்தை நினைந்து கலங்கச் செய்து, அப்போது ஸுமந்த்ரனைக் கொண்டு தசரதர் முன்னிலையில் இராமபிரானை வரவழைத்துக் காட்டுக்கனுப்ப, அப்பிரான் லக்ஷ்மணனோடு காட்டுக்குப் புறப்பட்டதும் ஓரடையாளமென்பதாம். இவ்வரலாற்றின் விரிவை "மாற்றுத்தாய் சென்று" என்ற பாட்டின் உரையிற் காண்க. இலக்குமணன்றன்னொடும் என்றது—ஸீதையாகிய உம்மோடு என்பதற்கும் உபலக்ஷணமாம். கைசேசி—கைகேசி; யகரசகரப்போலி. மறாதொழிய=ஸத்யவாதியாதலால் மறுக்க மாட்டிற்றிலன் (3)

**321** வாரணிந்தமுலைமடவாய் வைதேவீவிண்ணப்பம் *
தேரணிந்தவயோத்தியர்கோன் பெருந்தேவீகேட்டருளாய் *
கூரணிந்தவேல்வலவன் குகனோடுங்கங்கைதன்னில் *
சீரணிந்ததோழமை கொண்டதுமோரடையாளம். (4)

வார் அணிந்த முலை மடவாய் வைதேவீ விண்ணப்பம் — கச்சை அணிந்த முலையையும் மடப்பத்தையுமுடைய பிராட்டி! ஒரு விஜ்ஞாபநம்,

தேர் அணிந்த அயோத்தியர் கோன் பெருந்தேவீ — தேர்களாலே அலங்காரமான அயோத்தியிலுள்ளார்க்கு அரசனாதற்கு உரிய இராமபிரானது பெருமைக்குத் தகுந்த தேவியே!

கேட்டருளாய் — (இவ் விண்ணப்பத்தைக்) கேட்டருளவேணும்;
கூர் அணிந்த வேல் வலவன் குகனோடும் — கூர்மை பொருந்திய வேலாயுதத்தில் வல்லவனாகிய குஹப்பெருமாளோடு கூட
கங்கை தன்னில் — கங்கைக் கரையிலே
சீர் அணிந்த தோழமை கொண்டதும் — சிறப்புப் பொருந்திய ஸ்நேஹத்தைப் பெற்றதும்
ஓர் அடையாளம்—.

* * *—இராமபிரான் ஏகதார வ்ரதமுடையனாதலால் அப்பெருமானுக்குச் சிறு தேவியர் பலரும் பெருந்தேவி யொருத்தியுமில்லை யாதலால், "பெருந்தேவி" என்பதற்கு, பெருமைக்குத்தக்க தேவியென வுரைக்கப்பட்டது.

இராமபிரான் மனைவியுடனும் தம்பியுடனும் அயோத்தியை நீங்கிக் கங்கைத் துறை சேர்கையில், கங்கையில் ஓடம் விடுபவனும், ஆயிரம் ஓடத்திற்குத் தலைவனும், கங்கைக் கரையிலுள்ள ச்ருங்கிபேரபுரத்திற்கு அதிபதியும், வேடர் தலைவனுமான குஹப்பெருமாள் இராமனைக் காணும்பொருட்டுக் காணிக்கைகளுடன் அருகில் வந்து சேர்ந்து வணங்கி நிற்க, ஸ்ரீராமன் அவனது பக்திபாரவச்யத்தைக்கண்டு மகிழ்ந்து "என் மனைவியான இந்தச் சீதை உன் தோழி, என் தம்பியான இவ்விலக்குமணன் உன் தம்பியே, நீ எனது உயிர்த்தோழன்; இதுவரை நாங்கள் உடன் பிறந்தார் நால்வராயிருந்தோம், இன்று உன்னுடன் ஐவராயினோம்" என்று ஒற்றுமை நயந்தோன்றக் கூறினமையை இதனால் அடையாளமாகக் கூறினன். "ஏழையேதலன் கீழ்மகனென்னாதிரங்கி மற்றவற்கின்னருள் சுரந்து, மாழைமான்மடநோக்கியுன்தோழி உம்பி எம்பியென்றொழிந்திலையுகந்து, தோழன் நீ யெனக்கிங்கொழியென்ற சொற்கள்" என்ற பெரிய திருமொழியுங் காண்க. "சீரணிந்த தோழமையைக் கொண்டதும்" என்றுஞ்சிலர் பாடங்கூறுவர். .... ... (4)

322 மானமருமென்னோக்கி வைதேவிவிண்ணப்பம் *
கானமருங்கல்லதர்போய்க் காடுறைந்தகாலத்து *
தேனமரும்பொழிற்சாரல் சித்திரகூடத்திருப்ப *
பான்மொழியாய்பரதநம்பி பணிந்ததுமோரடையாளம். (5)

மான அமரும் மென் நோக்கி வைதேவீ — மானை யொத்த மென்மையான கண்களையுடையவளான பிராட்டியே!
பால் மொழியாய் — பால்போல் இனிய பேச்சையுடையவளே!
விண்ணப்பம்—;
கான் அமரும் கல் அதர் போய் காடு உறைந்த காலத்து — காட்டில் பொருந்திய கல் நிறைந்த வழியிலேபோய் காட்டில் வசித்த போது
தேன அமரும் பொழில் சாரல் சித்திர கூடத்து இருப்ப — வண்டுகள் பொருந்திய சோலைகளையுடைய தாழ்வரையோடு கூடிய சித்திரகூட பர்வதத்தில் நீங்கள் இருக்கையில்
பரதன் நம்பி பணிந்ததும் — பரதாழ்வான் வந்து வணங்கியதும்
ஓர் அடையாளம்—.

* * *—பெருமாள் காட்டுக் கெழுந்தருளினபடியை அறிந்த பரதாழ்வான் எப்படியாயினும் அவரைமீட்டு எழுந்தருளப்பண்ணிக்கொண்டு வரவேணுமெனக்கருதிப் பரிவாரங்களுடன் புறப்பட்டுச் சித்திரகூடத்தில் வந்து பெருமாள் திருவடிகளில் ப்ரபத்திபண்ணினதை அடையாளமாகக் கூறியவாறு. தன் இனத்தைப் பிரிந்து செந்நாய்களின் திரளால் வளைக்கப்பட்டு அவற்றின் நடுவே நின்று மலங்க மலங்க விழிப்பதொரு மான்பேடு—அநுகூலஜனங்களைப் பிரிந்து கொடிய ராக்ஷஸிகளாங்களாற் சூழப்பட்டு அவர்களுடைய மருட்டலால் மனங்கலங்கியிருக்கும் பிராட்டிக்கு ஏற்ற உவமையாம். .... .... (5)

323 சித்திரகூடத்திருப்பச் சிறுகாக்கைமுலைதீண்ட *
அத்திரமேகொண்டோடிய அனைத்துலகுந்திரிந்தோடி *
வித்தகனேயிராமாவோ நின்னபயமென்றழைப்ப *
அத்திரமேயதன்கண்ணை அறுத்ததுமோரடையாளம். (6)

சித்திர கூடத்து இருப்ப — சித்திரகூட பர்வதத்தில (நீங்களிருவரும்) ஏகாந்தபவம் பண்ணிக் கொண்டிருக்கையில்

சிறு காக்கை முலை தீண்ட — சிறிய காக்கையின் வடிவு கொண்டு வந்த ஜயந்தன (உமது) திருமுலைத் தடத்தைத் தீண்ட

(அதனாற் சீற்றமுற்ற ஸ்ரீராமன்)

அத்திரமே கொண்டு எறிய — ப்ரஹ்மாஸ்த்ரத்தைத தொடுத்துப் பிரயோகிக்க.

(அக்காகம் அதற்குத் தப்புவதற்காக)

அனைத்து உலகும் திரிந்து ஓடி — உலகங்களிலெல்லாம திரிந்து ஓடிப் போய

(தப்ப முடியாமையால் மீண்டு இராமபிரானையே அடைந்து)

வித்தகனே இராமா ஓ நின் அபயம் என்று அழைப்ப — “ஆச்சரியமான குணங்களையுடையவனே! ஸ்ரீராமனே! ஓ!! (யான்) உனனுடைய அடைக்கலம்” என்று கூப்பிட

அத்திரமே — (உயிரைக் கவர வேணுமென்று விட்ட அந்த) அஸ்த்ரமே

அதன கண்ணை அறுத்ததும் — அந்தக காகத்தின் ஒரு கணணை மாத்திரம அறுத்து விட்டதும்

ஓர் அடையாளம்—.

* * *—வநவாஸ காலத்தில் சித்திரகூட மலைச்சாரலிலே பெருமாளும பிராட்டியும் ஏகாந்தமாக இருக்கிற ஸமயத்தில், இந்திரன் மகனான ஐயந்தன் பிராட்டியினழகைக்கண்டு மயங்கி அவளைத் தான் ஸ்பர்சிக்க வேண்டுமென்னுந் தீயகருத்தினனாய்த் தேவவேஷத்தை மறைத்துக் காகவேஷத்தைப் பூண்டு கொண்டு வந்து, பிராட்டியின் மடியிலே பெருமாள் பள்ளிகொண்டருளுகையில் தாயென்றறியாதே பிராட்டியின் திருமார்பினிற் குத்த, அவ்வளவிலே பெருமாள் உணர்ந்தருளி மிகக் கோபங்கொண்டு ஒரு தர்ப்பைப்புல்லை யெடுத்து அதில ப்ரஹ்மாஸ்த்ரத்தை ப்ரயோகித்து அதனை அந்தக் காகத்தின்மேல் மந்த கதியாகச் செலுத்த, அக்காகம் அந்த அஸ்த்ரத்துக்குத் தப்பவழிதேடிப் பல விடங்களிலும் ஓடிச் சென்று சேர்ந்த விடத்தும் ஒருவரும ஏற்றுக் கொள்ளாமையாலே மீண்டும பெருமானையே சரணமடைய, அப்பெருமான் அருள் கொண்டு, அக்காகத்துக்கு உயிரைக் கொடுத்து அந்த அஸ்திரம் வீண்படாமல் காகத்தின் ஒரு கண்ணை அறுத்தவளவோடு விடும்படி செய்தருளினன் என்ற வரலாறு இங்கு அடையாளமாகக் கூறப்பட்டது.

ஸ்ரீ ராமாயணத்தில ஸுந்தரகாண்டத்தில் இந்த வ்ருத்தாந்தம் திருவடிக்குப் பிராட்டியருளிச் செய்வதாகக் காணப்படுகின்றது; இங்குப் பிராட்டிக்குத் திருவடி கூறுவதாகச் சொல்லுகிற விது, கல்பாந்தரத்திலாதல், புராணாந்தரத்திலாதல் உண்டென்று கொள்ளக் கடவது. இனி, மற்றும பலவகைகளாலும ஸமாதானங் கூறலாம. அத்திரம்—அஸ்த்ரம் என்ற வடசொல் திரிபு. “அத்திரமே”—முதல் ஏகாரம்-இசைநிறை; இரண்டாவது-சிறப்புப் பொருளது. நின் அபயம்—யான அநந்யகதி என்றபடி. .... .... (6)

324 மின்னொத்தநுண்ணிடையாய் மெய்யடியேன்விண்ணப்பம் *
பொன்னொத்தமானொன்று புகுந்தினிதுவிளையாட *
நின்னன்பின்வழிநின்று சிலைபிடித்தெம்பிரானேக *
பின்னேயங்கிலக்குமணன் பிரிந்ததுமோரடையாளம். (7)

மின் ஒத்த நுண் இடையாய் — மின்னலைப்போன்ற மெலிய இடையை யுடையவளே!

மெய் அடியேன விண்ணப்பம — உண்மையான பக்தனாகிய எனது விண்ணப்பத்தைக (கேட்டருள வேணும்;)

பொன் ஒத்த மான் ஒன்று புகுந்து இனிது விளையாட — பொன் நிறத்தை யொதத (நிறமுடைய) (மாரீசனுகிய) ஒரு மான் (பஞ்சவடியில் நீரிருக்கும ஆச்ரமத்தருகில்) வந்து அழகாக விளையாடா நிறக, (அதை மாயமான் என்று இளையபெருமான் விலக்கவும்)
நின அன்பின் வழி நின்று — உம்முடைய ஆசைக்குக் கட்டுப் படடு நின்று
சிலை பிடித்து — வெடுப்புக்கொண்டு
எம்பிரான் ஏக — இராமபிரான் (அம்மானைப் பிடித்துக் கொணர்வதாக அதன் பினனேதொடாந்து) எழுந்தருள,
பின்னே அங்கு இலக்குமணன் பிரிந்ததும் — பிறகு அவ்விடத்தில இளைய பெருமாளும் பிரிந்ததுவும
ஓர் அடையாளம்—

* * *—சூர்ப்பணகையினுல் தூண்டப்பட்டுச் சீதாபிராட்டியைக் கவர்ந்து செல்லக் கருதிய இராவணனது கட்டளையினுல் அவனுக்கு மாமன் முறையான மாரீசன் என்ற ராக்ஷஸன் மாயையினுற் பொன்மானுருவங்கொண்டு தண்டகாரணியத்திற் பஞ்சவடியிலே பிராட்டியினெதிரிற் சென்று உலாவுகையில், இளையபெருமாள் இது மாயமா னென்று சொல்லவுங் கேளாமல், அப்பிராட்டியின் வேண்டுகோளின்படி அதனைப்பிடிப் பதற்கு இராமபிரான் நெடுந்தூரம் தொடர்ந்து சென்றும பின்னும் ஓட்டங்காட்டிய அதனை மாயமானென்றறிந்து அமபெய்து வீழ்த்த, அம்மாரீசன் இறக்கும்போது 'ஹா! ஸீதா! ஹா! லக்ஷ்மணு! ஹா!!' என்று இராமபிரான் கதறுவதுபோலக் கூப்பிட, அதனைக்கேட்ட ஸீதை, லக்ஷ்மணன் தேற்றவுந் தேருமல் இராமபிரானுக்கே ஆபத்து வந்திட்டதென்று பலவாறு இளையபெருமாள் மீது கடுஞ் சொற்களைச் சொல்ல, உடனே இளையபெருமாள் இராம பிரானுள்ள இடத்திற்குப் போவதாகச் சீதையை விட்டிட்டுச் சென்றனனென்ற இதுவும ஓரடையாள மென்பதாம். ... .... ... .... (7)

325 மைத்தகுமாமலர்க்குழலாய் வைதேவிவிண்ணப்பம் *
ஒத்தபுகழ்வானரக்கோன் உடனிருந்துநினைத்தேட *
அத்தகுசீரயோத்தியர்கோன் அடையாளமிவைமொழிந்தான் *
இத்தகையாலடையாளம் ஈதவன்கைமோதிரமே. (8)

மை தகு மா மலர் குழலாய் வைதேவி — மைபோல் விளங்குகிற, சிறந்த புஷ்பங்களை அணிவதற்கு உரிய கூந்தலையுடைய வைதேஹியே!
விண்ணப்பம்:—
ஒத்த புகழ் — "பெருமாளோடு இன்ப துனபங் களில் ஒத்திருக்கப் பெற்றவன்" என்கிற கீர்த்தியையுடைய
வானரர்கோன் — வானரங்களுக்கெல்லாம தலைவரான ஸுக்ரீவ மஹாராஜர்
உடன் இருந்து — (இராமபிரானேடு) கூட இருந்து
நினை தேட — உமமைத் தேடும்படி (ஆணையிடுகையில் என்னிடத்து விசேஷமாக அபிமானிக்க)
அ தகு சீர் அயோத்தியர் கோன் அடையாளம் இவை மொழிந்தான — (பிறகு) அந்த ஏற்கைக்குத் தகுதியான குணமுள்ள அயோத்தியிலுள்ளார்க்குத் தலைவரான பெருமாள் இவ்வடையாளங்களை (என்னிடத்தில்) சொல்லியருளினுர்;
(ஆதலால்)
அடையாளம் இத்தகையால் — (யான சொன்ன) அடையாளங்கள் இவ்வகைப்பட்டவை (யானலும்),
(அன்றியும்)
ஈது அவன் கை மோதிரம — இதுவானது அவ்விராமபிரானுடைய திருக்கையிலணிந்து கொள்ளும மோதிரமாகும்.

* * *—பெருமாள் உமமைத் தேடிக்கொண்டு வரும்போது வழியில் ஸுக்ரீவ மஹாராஜனேடு அக்நி ஸாக்ஷிகமாகத் தோழமை பூண்டுகொண்டு அவ்விருவருமொன்றுக விருந்து ஒவ்வொரு திக்குக்குப் பலகோடிக் கணக்கான வானரர்களை உம்மைத் தேடும்படி அனுப்பும்போது ஸுக்ரீவமஹாராஜன் என்னிடத்தில் விசேஷ அபிமானம் வைத்திருப்பதை உணர்ந்து, 'இவனுலே நமது காரியம் கைகூடும" என்று என்னிடத்தில் இராமபிரான்

விசேஷ கடாக்ஷம் செய்தருளி இவ்வடையாளங்களைச் சொல்லி யனுப்பியதனால், இப்படி அடையாளங்களை யான் கூறினேன்; அன்றியும், தனது நாமாங்கிதமான மோதிரத்தையுங் கொடுத்தருளினனென்று அநுமான் இராமபிரானுடைய திருவாழியையுங் காட்டித் தான் ராமதூதனென்பதை வற்புறுத்திப் பிராட்டியின் ஸந்தேஹத்தைப் போக்குகின்றனனென்க.

முதலடியில் விளி-முன்பிருந்த நிலைமையைப் பற்றியது. 'வைதேவி' என்றதனால், தனது உடம்பை உபேக்ஷிப்பவளென்பது விளங்குமென்பர். "நமக்கு இன்பமும் துன்பமும் ஒன்றே" என்று இளையபெருமாள் சொல்ல, அதன் பிறகு பெருமாளுடைய இன்ப துன்பங்களைத் தன்னதாக நினைத்து வந்தானாதலால், ஸுக்ரீவனை "ஒத்தபுகழ் வானரக்கோன்" என்றது. அத்தகு சீர்—உமமைப் பிரிந்த பின்பு ஊணும் உறக்கமுமற்றுக் கடித்ததும் ஊர்ந்ததும் அறியாதே ஏதேனும் போக்யபதார்த்தத்தைக் கண்டால் உமமையே நினைத்து வருந்தா நின்றுள்ள அந்த நிலைக்குத்தக்க அன்பென்னுங் குணத்தையுடையவன் என்று கருத்து. .... .... .... .... .... (8)

326 திக்குநிறைபுகழாளன் தீவேள்விச்சென்றநாள் *
மிக்கபெருஞ்சவைநடுவே வில்லிறுத்தான்மோதிரங்கண்டு *
ஒக்குமாலடையாளம் அனுமானென்றுச்சிமேல் *
வைத்துக்கொண்டுகந்தனளால் மலர்க்குழலாள்சீதையுமே. (9)

| | | | |
|---|---|---|---|
| திக்கு நிறை புகழ் ஆளன் தீ வேள்வி | திக்குகளிலே நிறைந்த கீர்த்தியையுடையவனான ஜநகராஜனுடைய அக்நிகளைக்கொண்டு செய்யும் யாகத்திலே | மலர் குழலாள் சீதையும் | பூச்சூடத்தக்க கூந்தலையுடையவளான ஸீதாபிராட்டியும் |
| சென்ற நாள் | —(விச்வாமித்திரருடன்) போன காலத்திலே | அனுமான் | —'வாராய் ஹநுமானே! |
| மிக்க பெரு சவை நடுவே வில் இறுத்தான் மோதிரம் | மிகவும் பெரிய ஸபையின் நடுவிலே (ருத்ர) தநுஸ்ஸை முறித்த இராமபிரானுடைய மோதிரத்தை | அடையாளம் ஒக்கும் என்று | நீ (சொன்ன) அடையாளங்களெல்லாம் ஒத்திரா நின்றுள்ளவையே' என்று (திருவடியை நோக்கிச்) சொல்லி |
| கண்டு | —பார்த்து | உச்சி மேல் வைத்துக்கொண்டு உகந்தனள் | (அந்தத் திருவாழியை) தன் தலையின்மீது வைத்துக்கொண்டு மகிழ்ந்தாள். |

* * *—மிதிலாநகரத் தரசனான ஜநகமஹாராஜன் தன் குலத்துப் பூர்விக ராஜனான தேவராதனிடம் சிவபிரானால் வைக்கப்பட்டிருந்ததொரு பெரிய வலிய வில்லை எடுத்து வளைத்தவனுக்கே தன் மகளான ஸீதையைக் கல்யாணஞ்செய்து கொடுப்பதென்று கந்யாசுல்கம் வைத்திருக்க, வேள்வி முடித்த விச்வாமித்திரனுடன் மிதிலைக்குச் சென்ற இராமபிரான் அவ்வில்லையெடுத்து வளைக்கத் தொடங்குகையில், முன்னமே ஹரிஹரயுத்தத்தில் சிறிது முறிபட்டிருந்த அவ்வில் இரண்டு துண்டாக நன்றாய் முறிந்து விழுந்திட்டதென்ற வரலாறு ஒன்றரையடிகளில் அடங்கி நிற்கும். தத்துவஞானத்தினாலும், ப்ராக்ருத விஷய விரக்தியினாலும், பயனை விரும்பாது கருமங்களை அநுட்டிப்பதனாலும் நாற்றிசைகளிலும் பரவின புகழையுடையனான ஜநகராஜனது யஜ்ஞவாடத்திலே விச்வாமித்ர முனிவனோடு கூட எழுந்தருளி அங்கு மஹாஸபாமத்யத்தில் வில்லை முறித்தருளின பெருமாளுடைய நாமாங்கிதமான திருவாழியைப் பிராட்டி சிரமேற்கொண்டு மகிழ்ந்து சிறிய திருவடியை மெய்யே ராமதூதனாக அறுதியிட்டனளென்க. "சபைநடுவே" என்றும் பாடம். ஒக்குமால்=ஆல்—அசை அநுமான்—விளி. ஈற்றடியில், ஆல்—மகிழ்ச்சிக் குறிப்பு. (9)

327 வாராரும்முலைமடவாள் வைதேவிதன்னைக்கண்டு *
சீராருந்திறலனுமன் தெரிந்துரைத்தவடையாளம் *
பாராரும்புகழ்ப்புதுவைப் பட்டர்பிரான்பாடல்வல்லார் *
ஏராரும்வைகுந்தத்து இமையவரோடிருப்பாரே. (10)

வார் ஆரும் முலை மடவாள் வைதேவி தன்னைக் கண்டு — கச்சு அணிந்திருக்கைக்கு உரிய முலையை யுடையளான ஸீதா பிராட்டியைப் பார்த்து
சீர் ஆரும் திறல் அநுமன் — சீர்மைபொருந்திய சக்தியையுடைய ஹநுமான் என்ற சிறிய திருவடி
தெரிந்து உரைத்த — (பெருமாளிடத்தில் நான்) அறிந்து கொண்டு, (பின்பு பிராட்டியிடத்திற்) சொன்ன
அடையாளம் — அடையாளங்களை(க் கூறுவதான),
பார் ஆரும் புகழ் புதுவை பட்டர் பிரான் பாடல் — பூமியெங்கும் பரவின கீர்த்தியை யுடையராய் ஸ்ரீவில்லிபுத்தூர்க்குத் தலைவரான பெரியாழ்வார் அருளிச்செய்த இப்பாடல்களை
வல்லார் — ஓதவல்லவர்கள்
ஏர் ஆரும் வைகுந்தத்து — எல்லா நன்மைகளும் நிறைந்த ஸ்ரீவைகுண்டத்தில்
இமையவரோடு இருப்பார் — நித்யஸூரிகளோடு கோவையா யிருக்கப் பெறுவர்கள்.

* * * — சீராருந் திறலநுமன் — வாநரங்கள் பலரிருக்கச் செய்தேயும் 'இவனே இக் காரியஞ் செய்யவல்லான்' என்று பெருமாள் திருவுள்ளம்பற்றி, அடையாளங்களுஞ் சொல்லித் திருவாழியுங் கொடுத்துவிடும்படி ஜ்ஞாநாதி குணங்களால பரிபூர்ணனாய், நினைத்தது முடிக்கவல்ல சக்திமானாயிருக்கிற திருவடி. ... ... (10)

அடிவரவு:— நெறி அல்லி கலக்கிய வாரணி மான் சித்திர மின் மைத்தகு திக்கு வாராரும் கதிர்.

மூன்றாம் பத்து உரை முற்றிற்று.

## நான்காம்பத்து—முதல் திருமொழி, கதிராயிரமிரவி.

அவதாரிகை:— ஒன்றாகிய முதற்கடவுள் ஒருவனே இராமபிரானாகவும் கண்ணபிரானாகவும் இப்படி பல அவதாரங்களைச் செய்கின்றமையால் இவ்வவதாரங்கள் யாவும் ஒற்றுமை நயத்தினால் ஏகாச்ரயமாகையாலே 'இப்படியிருக்கிற விஷயத்தைக் கண்ணாலே கண்டு அநுபவிக்கவேணும்' என்று தேடுகை தமக்கு ஒரு பக்கத்திற் செல்லுகிறபடியும், மாநஸாநுபவத்தின் கரைபுரட்சியினால், அவ்விஷயத்தைத் தாம தெளிவாகக் கண்டதாகவே ஒரு பக்கத்தில தோற்றியிருக்கிறபடியையும் அநுஸந்தித்த இவ்வாழ்வார், தமமை இரண்டு வகையாக வகுத்துக் கொண்டு, "ஸர்வேச்வரனைக் கண்ணாலே காணவேணும்" என்று தேடுகை ஒரு வகுப்பாகவும், "அப்படி தேடுகிறீர்களாகில் அவனை உள்ளபடி கண்டாருளர்" என்று விடை சொல்லுகை ஒரு வகுப்பாகவுமாய் இப்படி எமபெருமானுடைய பல அவதார குணங்களை அநுபவித்து இனியராகிறார் — இத்திருமொழியில்.

நாச்சியார் திருமொழியில் "பட்டிமேய்ந்தோர் காரேறு" என்ற திருமொழியை இத்திருமொழியோடு ஒப்பிடுக; "இங்கே போதக் கண்டீரே" என்று கேட்பார் சிலரும், "விருந்தாவனத்தே கண்டோமே" என்று விடையளிப்பார் சிலருமாய்ச் சென்றதிறே அத்திருமொழிதன்னிலும். ... ... ... (*)

328 கதிராயிரமிரவி கலந்தெரித்தாலொத்தநீண்முடியன் *
எதிரிற்பெருமையிராமனை யிருக்குமிடம்நாடுதிரேல் *
அதிருங்கழற்பொருதோள் இரணியனாகம்பிளந்தரியாய் *
உதிரமளைந்தகையோடிருந்தானை உள்ளவாகண்டாருளர். (1)

கதிர் ஆயிரம் இரவி கலந்து எரித்தால் ஒத்த நீள் முடியன் — (எண்ணிறந்த) கிரணங்களையுடைய ஆயிரம் ஆதித்யர்கள் ஏககாலத்திற் கூடி ஜ்வலித்தாற்போல் (மிகவும் பளபளவா நின்றுள்ள) நீண்ட திருவபிஷேகத்தையுடையவனும்

எதிர் இல் பெருமை இராமன் — ஒப்பற்ற பெருமையையுடையவனுமான இராமபிரானை

இருக்கும் இடம் நாடுதிரேல் — எழுந்தருளியிருக்குமிடத்தைத் தேடுகிறீர்களாகில்

(அவ்விடத்தைச் சொல்லுகிறேன்;)

அதிரும் கழல் — (கலகல என்று) ஒலிசெய்யா நின்றுள்ள வீரக்கழலையும்

பொரு தோள் — போர் செய்யப் பதைக்கிற தோள்களையுமுடைய

இரணியன் ஆகம் அரி ஆய் பிளந்து — ஹிரண்யாஸுரனுடைய மார்பை நரஸிம்ஹரூபியாய்க் (கிழித்து)

உதிரம் அளைந்த கையோடு இருந்தானை — (அதனாலுண்டான) ரக்தத்தை அளைந்த கைகளோடு கூடி (சிறந்தோற) எழுந்தருளியிருந்த நிலைமையில் (அவனை)

உள்ள ஆ கண்டார் உளர் — உள்ளபடி ஸேவித்தவர்கள் இருக்கின்றனர்.

* * *—இதனால் இராமனாய் அவதரித்ததும் நரஸிம்ஹமாய் அவதரித்ததுமெல்லாம் ஒரு ஈச்வர வ்யக்தியேயென்று தர்மியின் ஐக்கியத்தைக் கூறியவாறும்; மேலிற்பாட்டுக்களிலுமிங்ஙனமேகொள்க. .... .... .... .... (1)

329 நாந்தகஞ்சங்குதண்டு நாணொலிச்சார்ங்கம்திருச்சக்கரம் *
ஏந்துபெருமையிராமனை யிருக்குமிடம்நாடுதிரேல் *
காந்தள்முகிழ்விரற்சீதைக்காகிக் கடுஞ்சிலைசென்றிறுக்க *
வேந்தர்தலைவன்சனகராசன்றன் வேள்வியிற்கண்டாருளர். (2)

நாந்தகம் சங்கு தண்டு நாண் ஒலி சார்ங்கம் திரு சக்கரம் — நாந்தகம் என்னும் வாளையும் ஸ்ரீ பாஞ்சஜந்யத்தையும் கௌமோதகி என்னும் கதையையும் நாண் கோஷத்தையுடைய ஸ்ரீ சார்ங்க தநுஸ்ஸையும் திருவாழியாழ்வானையும்

ஏந்து பெருமை இராமன் — (திருக்கைகளில்) ஏந்தும்படியான பெருமையையுடைய இராமபிரான்

இருக்கும் இடம் நாடுதிர் எல்—.

காந்தள் முகிழ் விரல் சீதைக்கு ஆகி — செங்காந்தளரும்பு போன்ற விரல்களையுடைய பிராட்டிக்காக

வேந்தர் தலைவன் சனகராசன் தன் வேள்வியில் சென்று — ராஜாதிராஜனான ஜநகசக்ரவர்த்தியினுடைய யஜ்ஞவாடத்திலே எழுந்தருளி

கடு சிலை இறுக்க கண்டார் உளர் — வலிய வில்லை முறிக்கக் கண்டவர்கள் இருக்கின்றனர்.

330 கோலையானைகோம்புபறித்துக் கூடலர்சேனைபொருதழிய *
சிலையால்மராமரமெய்ததேவனைச் சிக்கெனநாடுதிரேல் *
தலையால்குரக்கினந்தாங்கிச்சென்று தடவரைகொண்டடைப்ப *
அலையார்கடற்கரைவீற்றிருந்தானை அங்குத்தைக்கண்டாருளர். (3)

கோலம் யானை கொம்பு பறித்து — கோலம் செய்யப்பட்டதே இயல்வாக உடைய (குவலயாபீடமென்னும்) யானையினுடைய தந்தங்களைப் பறித்துக் கொண்டவனும்

கூடலர் சேனை அழிய பொருது — (ஜனஸ்தானத்திலுள்ள ராக்ஷஸர்களாகிய) சத்ருக்களுடைய ஸேனை பாழாய் அழியும்படி போர் செய்தவனும்,

சிலையால் மராமரம் எய்த தேவனை — வில்லாலே ஸப்தஸால வ்ருக்ஷங்களை எய்தவனுமான எம்பிரானை

சிக்கென நாடுதிர் எல் — தப்பாதபடி உறுதியாகத் தேடுகிறீர்களாகில்

(அவனிருக்குமிடஞ் சொல்லுகிறேன்—;)

குரக்கு இனம் தட வரை தலையால் தாங்கிக்கொண்டு சென்று — வாநரஸேனையானது பெரிய மலைகளை (தமது) தலைகளினால் சுமந்து கொண்டுபோய் (கடலின் நடுவே அணையாக)

அடைப்ப —அடைக்க

அலை ஆர் கடல் கரை வீற்றிருந்தானை — அலையெறிகிற கடற்கரையிலே எழுந்தருளியிருந்த இராமபிரானை

அங்குத்தை —அந்த ஸந்நிவேசத்திலே

கண்டார் உளர்—.

கூடலர்—கூடமாட்டாதவர்; எனவே, சத்ருக்களாயினர்: ஸந்தர்ப்பம் நோக்கி, ஜநஸ்தாந வாஸிகளெனக் கொள்ளப்பட்டது; "மாரமாமெய்த தேவனை" என்றிறே உடன் கூறியது. .... .... .... .... .... (3)

331 தோயம்பரந்தநடுவுசூழலின் தொல்லைவடிவுகொண்ட *
மாயக்குழவியதனைநாடுறில் வம்மின்சுவடுரைக்கேன் *
ஆயர்மடமகள்பின்னைக்காகி அடல்விடையேழினையும் *
வீயப்பொருதுவியர்த்துநின்றானை மெய்ம்மையேகண்டாருளர். (4)

பரந்த தோயம் நடுவு—எங்கும் பரவின ஜலத்தின் நடுவே
சூழலின் —உபாயத்தினால்
தொல்லை வடிவு கொண்ட { பழமையான (பெரிய) வடிவைச் சுருக்கிக்கொண்ட
மாயம் குழவி அதனை—அந்த ஆச்சர்யக்குட்டியை
நாடுறில் —தேட முயன்றீர்களாகில்
வம்மின் —(இங்கே) வாருங்கள்;
சுவடு உரைக்கேன் { (உங்களுக்கு) அடையாளம் சொல்லுகிறேன்;
ஆயர் மகள் { (ஸ்ரீகும்பர் என்னும்) ஆயருடைய பெண்பிள்ளையும்
மடம் { மடப்பம் என்ற குணத்தை யுடையளுமான
பின்னைக்கு ஆகி —நப்பின்னைப் பிராட்டிக்காக
அடல் விடை எழினையும் வீய { வலிய ரிஷபங்களேழும் முடியும் படியாக
பொருது —(அவற்றோடு போர்செய்து (அந்த ஆயாஸத்தாலே)
வியர்த்து நின்றானை { குறுவெயர்ப்பரும்பின வடிவைந்தானு மாய் நின்றவனை
மெய்ம்மையே —உண்மையாகவே
கண்டார் உளர்—.

* * *—பரந்த என்றதன்பின் 'போது' எனவருவித்து, நடுவு சூழலில் தோயம்பரந்த போது என இயைத்து. (சுற்றுங் கடலாய்,) அதனிடையிலே உருண்டைவடிவாயிருக்கிற பூமியெங்கும் ஜலம் பரவின காலத்திலே என்றுரைக்கவுங் கூடும். இவ்வுலகத்தையடங்கலும் பிரளயவெள்ளம் வந்துமூட, அதில் ரக்ஷ்யவர்க்கம் அழியாதபடி அவற்றைத் திருவயிற்றில் வைத்து நோக்கித் தனது பெரிய வடிவைச் சிறிதாகச் சுருக்கிக்கொண்டு ஒரு ஆலந்தளிரிலே எம்பெருமான் சிறுகுழந்தைபோலத் துயின்ற வரலாறு முன்னடிகளிலடங்கியது. தோயம்—வடசொல். சூழல்—உபாயம்; அதாவது—பெரியவடிவைச் சிறியவடிவாகச் சுருக்கிக் கொண்டமை. .... .... ... .... .... (4)

332 நீரேறுசெஞ்சடைநீலகண்டனும் நான்முகனும்முறையால் *
சீரேறுவாசகஞ்செய்யநின்ற திருமாலைநாடுதிரேல் *
வாரேறுகொங்கையுருப்பிணியை வலியப்பிடித்துக்கொண்டு
தேரேற்றி * சேனைநடுவுபோர்செய்யச் சிக்கெனக்கண்டாருளர். (5)

நீர் ஏறு செம் சடை நீலகண்டனும் } (எம்பெருமானது ஸ்ரீபாத) தீர்த்தமானது ஏறப்பெற்ற சிவந்த ஜடையையும் (விஷமுண்டதனால்) கறுத்தமிடற்றையுமுடையனான சிவபெருமானும்
நான்முகனும் சதுர்முகப்ரஹ்மாவும்
முறையால் (சேஷ சேஷி பாவமாகிற) முறையின்படி
சீர் ஏறு வாசகம் செய்ய நின்ற } சிறந்த சொற்களைக்கொண்டு துதிக்கும்படி அமைந்து நின்ற
திருமாலை ச்ரிய:பதியாகிய எம்பெருமானை
நாடுதிர் ஏல் தேடுகிறீர்களாகில், இதைக்கேளுங்கள்;
வார் ஏறு கொங்கை உருப்பிணியை } கச்சை அணிந்த முலைகளையுடைய ருக்மிணிப்பிராட்டியை
வலிய பிடித்துக் கொண்டு தேர் ஏற்றி } பலாத்காரமாகப் பிடித்துக் கொண்டு (தனது) திருத்தேரின் மேல் ஏறவிட்டு
(அவ்வளவிலே சிசுபாலாதிகளான பல அரசர் எதிர்த்துவர)
சேனை நடுவு (அவ்வரசர்களுடைய) ஸேனாமத்யத்திலே
போர் செய்ய (அவ்வரசர்களோடு) யுத்தம் பண்ணும்போது
சிக்கன திண்மையாக [தருடமாக]
கண்டார் உளர்—.

333 பொல்லாவடிவுடைப்பேய்ச்சிதுஞ்சப் புணர்முலைவாய்மடுக்க
வல்லானை * மாமணிவண்ணனை மருவுமிடம்நாடுதிரேல் *
பல்லாயிரம்பெருந்தேவிமாரொடு பௌவமெறிதுவரை *
எல்லாருஞ்சூழச்சிங்காதனத்தே யிருந்தானைக்கண்டாருளர். (6)

பொல்லா வடிவு உடை பேய்ச்சி துஞ்ச — மஹாகோரமான வடிவையுடைய பூதனையானவள் மாளும்படியாக
புணர் முலை வாய் மடுக்க வல்லான் — தன்னில்தான் சேர்ந்திருந்துள்ள (அவளது) முலையிலே (தனது) வாயை வைத்து உண்ண வல்லவனும்
மாமணி வண்ணன் — நீலமணிபோன்ற நிறத்தையுடையவனுமான எம்பெருமான்
மருவும் இடம் நாடுதிர் எல் — பொருந்தி எழுந்தருளியிருக்குமிடத்தைத் தேடுகிறீர்களாகில்,
(இதைக்கேளுங்கள்)
பௌவம் எறி துவரை — கடலலைகள் வீசப்பெற்றுள்ள ஸ்ரீத்வாரகையிலே
எல்லாரும் சூழ — தேவிமார் எல்லாரும் சுற்றும் சூழ்ந்துகொண்டிருக்க,
பல் ஆயிரம் பெரு தேவிமாரொடு — (அந்தப்) பதினாறாயிரம் தேவிமாரோடுகூட
சிங்காசனத்து இருந்தானை — ஸிம்ஹாஸனத்தில் எழுந்தருளியிருக்கும்போது
கண்டார் உளர்—.

334 வெள்ளைவிளிசங்குவெஞ்சுடர்திருச்சக்கரம் ஏந்துகையன் *
உள்ளவிடம்வினவில் உமக்கிறைவம்மின்சுவடுரைக்கேன் *
வெள்ளைப்புரவிக்குரக்குவெல்கொடித் தேர்மிசைமுன்புநின்று *
கள்ளப்படைத்துணையாகிப் பாரதங்கைசெய்யக்கண்டாருளர். (7)

வெள்ளை விளி சங்கு வெம் சுடர் திரு சக்கரம் ஏந்து கையன் — வெண்மை நிறமுடையதும் (அநுபவகைங்கர்யங்களில் ருசியுடையீர்! வாருங்கள் என்று தன் த்வனியால்) அழைப்பது போன்றுள்ளதுமான ஸ்ரீபாஞ்சஜந்யத்தையும் தீக்ஷ்ணமான ஜ்யோதிஸ்ஸையுடைய திருவாழியாழ்வானையும் தரியாநின்றுள்ள திருக்கைகளையுடைய எம்பெருமான்
உள்ள இடம் வினவில் — எழுந்தருளியிருக்குமிடத்தைக் கேட்கிறீர்களாகில்
உமக்கு — (கேட்கிற) உங்களுக்கு
இறை சுவடு உரைக்கேன் — சிறிது அடையாளம் சொல்லுகிறேன்,
வம்மின் — வாருங்கள்;—
வெள்ளை புரவி குரக்கு வெல்கொடி தேர் மிசை முன்பு நின்று — வெள்ளைக் குதிரைகள் பூண்டிருப்பதும் குரங்காகிற வெற்றிக் கொடியையுடையதுமான அர்ஜுனனுடைய தேரின் மேலே ஸாரதியாய் முன்னே நின்று
படை கள்ளம் துணை ஆகி — ஸைந்யத்துக்கு க்ருத்ரிமத் துணையாயிருந்து
பாரதம் கைசெய்ய — பாரத யுத்தத்தை அணிவகுத்து நடத்தும்போது
கண்டார் உளர்—.

335 நாழிகைகூறிட்டுக்காத்துநின்ற அரசர்கள்தம்முகப்பே *
நாழிகைபோகப்படைபொருதவன் தேவகிதன்சிறுவன் *
ஆழிகொண்டன்றிரவிமறைப்பச் சயத்திரதன்தலையை *
பாழிலுருளப்படைபொருதவன் பக்கமேகண்டாருளர். (8)

நாழிகை கூறிட்டு காத்து நின்ற அரசர்கள் தம் முகப்பே — (பகல் முப்பது) நாழிகைகளைப் பங்கிட்டுக்கொண்டு (ஜயத்ரதனைக்) காத்துக்கொண்டிருந்த ராஜாக்கள் முன்னிலையில்
நாழிகை போக படை பொருதவன் — (பகல் முப்பது) நாழிகையும் போயிற்றென்று தோற்றும்படியாக (தன்) ஆயுதமாகிய திருவாழியாழ்வானைக்கொண்டு (ஸூர்யனை) மறைத்தவனும்
தேவகி தன் சிறுவன் — தேவகிப் பிராட்டியின் பிள்ளையுமான கண்ணபிரான்
உள்ள இடம் (வினவில்) — எழுந்தருளியிருக்குமிடத்தை கேட்கிறீர்களாகில்
(உரைக்கேன்) — சொல்லுகின்றேன்;—
அன்று — (அப்படி அவ்வரசர்கள் காத்துக்கொண்டு நின்ற) அன்றைக்கு
ஆழி கொண்டு — திருவாழியினால்
இரவி மறைப்ப — ஸூர்யனைத்தான் மறைக்க (அதனால் பகல் கழிந்ததாகத் தோற்றி வெளிப்பட்ட)
சயத்திரதன் தலை — ஜயத்ரதனுடைய தலையானது
பாழில் உருள படை பொருதவன் பக்கமே — பாழியிலே கிடந்துருளும்படி அம்பைச் செலுத்தின அர்ஜுனனருகில்
கண்டார் உளர் — அவ்வெம்பெருமானைக் கண்டாருண்டு.

* * *—அர்ஜுநன் பதின்மூன்றாநாட்போரில் தன்மகனான அபிமந்யுவைக்கொன்ற ஜயத்ரதனை 'நாளை அஸ்தமிப்பதற்கு முன்னே கொல்லாவிடின் தீக்குதித்து உயிர்விடுவேன்' என்று ப்ரதிஜ்ஞைபண்ண, அதற்கு இடமறும்படி புருஷப் பிரமாணமன்றியே தீர்க்கனான அவனை ஒரு புருஷப்பிரமாணமாகக் குழிக்குள்ளே நிறுத்தி 'நீங்கள் இத்தனை நாழிகை காத்துக்கொள்ளுங்கோள்; நாங்கள் இத்தனை நாழிகை காத்துக்கொள்ளுகிறோம்' என்று விபாகம் பண்ணிக்கொண்டு. பகல் முப்பது நாழிகையும் அவனுக்கு ஒருநலிவு வாராதபடி காத்துக்கொண்டு நின்ற அதிரத மஹாரதரான துரியோதநன் முதலிய ராஜாக்கள் முன்னே கண்ணபிரான் அர்ஜுநனுடைய சபதம் பொய்த்துவிடுமே யென்று சிந்தித்து, ஸூர்யாஸ்தமயமாவதற்குச் சில நாழிகைக்கு முன்னமே பகல்நாழிகை முப்பதுஞ் சென்றதாகத் தோற்றும்படி, நினைவறிந்து காரியஞ்செய்யுந் தனது திருவாழியைக் கொண்டு ஸூர்யனை மறைக்க, அதனால் எங்கும இருளடைந்தபொழுது அர்ஜுநன் அக்நிப்ரவேசஞ் செய்தலைக் களிப்புடனே காணுதற்குச் சயத்ரதனைக் குழியில நின்றும் அவர்கள் கிளப்பி நிறுத்தினவளவிலே இருள் பரப்பின திருவாழியைக் கண்ணபிரான் வாங்கிவிட, பகலாயிருந்ததனால் உடனே அர்ஜுநன் ஜயத்ரதனுடைய தலைபாழியிற் கிடந்துருளுமாறு அம்பாலே பொருதனன் [தலைதுணித்தனன்] என்பது இப்பாட்டிற் குறித்த வரலாறு. .... ... .... (8)

336 மண்ணும்மலையும்மறிகடல்களும் மற்றும்யாவுமெல்லாம் *
திண்ணம்விழுங்கியுமிழ்ந்ததேவனைச் சிக்கெனநாடுதிரேல் *
எண்ணற்கரியதோரேனமாகி யிருநிலம்புக்கிடந்து *
வண்ணக்கருங்குழல்மாதரோடு மணந்தானைக்கண்டாருளர். (9)

மண்ணும் மலையும் மறி கடல்களும் மற்றும் யாவும் எல்லாம் { பூமியையும் மலைகளையும் அலையெறியாநின்றுள்ள கடல்களையும் மற்றுமுண்டான எல்லாப் பொருள்களையும்
திண்ணம் விழுங்கி { நிச்சயமாக (ப்ரளயங் கொள்ளாதபடி) திருவயிற்றிலே வைத்து நோக்கி
(பின்பு ப்ரளயங்கழிந்தவாறே)
உமிழ்ந்த தேவனை { (அவற்றை வெளிநாடுகாண) உமிழ்ந்த எம்பெருமானை
சிக்கென நாடுதிர் ஏல் — ஊற்றத்துடனே தேடுகிறீர்களாகில் (இதனைக் கேளுங்கள்;)
எண்ணற்கு அரியது ஓர் ஏனம் ஆகி { நினைக்கமுடியாத (பெருமையையுடைய) ஒப்பற்ற வராஹமாய் அவதரித்து
புக்கு இரு நிலம் இடந்து { (ப்ரளய வெள்ளத்திற்) புகுந்து பெரிய பூமியை அண்டபித்தியில் நின்றும் ஒட்டு விடுவித்தெடுத்து
(அவ்வளவிலே பூமிப்பிராட்டி தானே வந்து அணைக்க)
வண்ணம் கரு குழல் மாதரோடு மணந்தானை { அழகியதும் கறுத்ததுமான கூந்தலையுடைய (அந்த) பூமிப்பிராட்டியோடு ஸம்ச்லேஷித்தருளினவனை
கண்டார் உளர்—.

337 கரியமுகிற்புரைமேனிமாயனைக் கண்டசுவடுரைத்து *
புரவிமுகஞ்செய்துசெந்நெலோங்கி விளைகழனிப்புதுவை *
திருவிற்பொலிமறைவாணன் பட்டர்பிரான்சொன்னமாலைபத்தும் *
பரவுமனமுடைப்பத்தருள்ளார் பரமனடிசேர்வர்களே. (10)

கரிய முகில் புரை மேனி மாயனை கண்ட சுவடு உரைத்து { காளமேகம் போன்ற திருமேனியுடையனும் ஆச்சரியச் செய்கைகளையுடையனுமான கண்ணபிரானை ஸேவித்த அடையாளங்களை அருளிச்செய்து;
செந்நெல் ஓங்கி புரவி முகம் செய்து விளை கழனி புதுவை { செந்நெற் பயிர்களானவை (ஆகாசமளவும்) உயர்ந்து குதிரை முகம் போலத் தலைவணங்கி விளையாநிற்கப்பெற்ற வயல்களையுடைய ஸ்ரீவில்லிபுத்தூருக்குத் தலைவரும்

திருவின் பொலி மறை வாணன் பட்டர்பிரான் — (விஷ்ணுபக்தியாகிற) செல்வத்தினால் விளங்காநின்றுள்ளவரும் வேதத்துக்கு நிர்வாஹகருமான பெரியாழ்வார்
சொன்ன மாலை பத்தும் — அருளிச்செய்த சொல்மாலையாகிற இப் பத்துப் பாட்டையும்
பரவும் மனம் உடை பத்தர் உள்ளார் — அநுஸந்திக்கைக்கீடான மநஸ்ஸையுடையவரும் பக்தியையுடையவருமா யிருப்பவர்கள்
பரமன் அடி சேர்வர்கள் — பரம புருஷனுடைய திருவடிகளைக் கிட்டப் பெறுவாரகள்.

அடிவரவு:—கதிர் நாந்தகம் கொலை தோயம் நீரேறு பொல்லா வெள்ளை நாழிகை மண் கரிய அலம்பா.

---

## நான்காம்பத்து—இரண்டாந்திருமொழி, அலம்பா வெருட்டா.

338 அலம்பாவெருட்டாக் கொன்றுதிரியுமரக்கரை *
குலம்பாழ்படுத்துக் குலவிளக்காய்நின்றகோன்மலை *
சிலம்பார்க்கவந்து தெய்வமகளிர்களாடுஞ்சீர் *
சிலம்பாறுபாயுந் தென்றிருமாலிருஞ்சோலையே. (1)

தெய்வம் மகளிர்கள் — தேவஸ்திரீகள்
சிலம்பு ஆர்க்க வந்து ஆடும் சீர் — (தமது) பாதச்சிலம்புகள் ஒலிக்கும்படி (பூலோகத்தில்) வந்து நீராடும்படியான பெருமையுடைய
சிலம்பு ஆறு — நூபுர கங்கையானது
பாயும் — (இடைவிடாமல்) பெருகப் பெற்றுள்ள
தென் திருமாலிருஞ்சோலை — அழகிய திருமாலிருஞ்சோலையானது,—
அலம்பா வெருட்டா கொன்று திரியும் அரக்கரை — (ப்ராணிகளை) அலையச் செய்தும் பயப்படுத்தியும் உயிர்க்கொலை செய்தும் திரிந்துகொண்டிருந்த ராக்ஷஸர்களை
குலம் பாழ்படுத்து — குடும்பமாகப் பாழாக்கி
குலம் விளக்கு ஆய் நின்ற கோன் மலை — (இக்ஷ்வாகு வம்சத்துக்கு விளக்காய் நின்ற பெருமாள் எழுந்தருளியிருக்குமிடமான) திருமலையாம்.

* * *—அலம்பா, வெருட்டா—'செய்யா' என்னும் வாய்பாட்டு உடன்பாட்டிறந்தகால வினையெச்சம்; அலம்பி, வெருட்டி என்றபடி; அலம்புதல்—'இவர்களின் கீழ் நமக்குக் குடியிருக்கமுடியாது' என்று நிலைதளும்பச் செய்தல், பிறவினையில் வந்த தன்வினை. [சிலம்புஆர்க்க இத்யாதி.] தேவஸ்த்ரீகள் முன்பு நூபுரகங்கையில் நீராடவருமபோது ராவணாதிராக்ஷஸர்களுக்கு அஞ்சித் தாங்கள் இருப்பிடத்தை விட்டுப் புறப்படுவது அவ்வரக்கர்கட்குத் தெரியாமைக்காகத் தம் காற்சிலம்புகளைக் கழற்றிவிட்டு வருவார் சிலரும், அவை ஒலிசெய்யாதபடி பஞ்சையிட்டடைத்துக்கொண்டு வருவார் சிலருமாயிருப்பர்கள்; எம்பெருமான் அவதரித்து, அரக்கரைக் குலம பாழ்படுத்த பின்புச் சிலம்புஒலிக்க வருவர்களென்க.

339 வல்லாளன்தோளும் வாளரக்கன்முடியும் * தங்கை
பொல்லாதமூக்கும் போக்குவித்தான்பொருந்தும்மலை *
எல்லாவிடத்திலுமெங்கும்பரந்து பல்லாண்டொலி *
செல்லாநிற்குஞ்சீர்த் தென்றிருமாலிருஞ்சோலையே. (2)

பல்லாண்டு ஒலி — மங்களாசாஸந கோஷமானது
எல்லா இடத்திலும் எங்கும் பரந்து செல்லாநிற்கும் சீர் — எல்லாரிடங்களிலும் பரப்பெங்கும் பரவிச் செல்லும்படியான பெருமையையுடைய
தென் திருமாலிருஞ்சோலை—;
வல் ஆளன் — வலிய ஆண்மையையுடையனும் (சிவனிடத்துப்பெற்ற) வாளையுடையனுமான
அரக்கன — ராவணனுடைய
தோளும் முடியும் — தோள்களும் தலைகளும்
தங்கை பொல்லாத மூக்கும் — (அவனது) தங்கையாகிய சூர்ப்பணகையினது கொடிய மூக்கும்
போக்கு வித்தான் — அறுப்புண்டுபோம்படி பண்ணின எம்பெருமான்
பொருந்தும் மலை — பொருந்தி எழுந்தருளியிருக்குமிடமான திருமலையாம்.

* * *—வல்லாளன் என்று - பாணாஸுரனைச் சொல்லிற்றாய். அவனது தோள்களை
யும் ராவணனது முடிகளையும் போக்குவித்தானென்று உரைத்தலுமொன்று. ... (2)

340 தக்கார்மிக்கார்களைச் சஞ்சலஞ்செய்யுஞ்சலவரை *
தெக்காநெறியேபோக்குவிக்குஞ் செல்வன்பொன்மலை *
எக்காலமுஞ்சென்று சேவித்திருக்குமடியரை *
அக்கானெறியைமாற்றும் தண்மாலிருஞ்சோலையே. (3)

| | |
|---|---|
| தக்கார் மிக்கார்களை | (க்ருபாவிஷயத்தில்) எம்பெருமானை ஒத்தவர்களும் (அவனிலும்) மேற்பட்டவர்களுமாயுள்ள மஹாத்மாக்களை |
| சஞ்சலம் செய்யும் சலவரை | அலைத்துவருத்தா நின்றுள்ள க்ருதரிமப்பயல்களை |
| தெக்கு ஆம் நெறியே போக்குவிக்கும் | தென்திசையிலுள்ள நரக மார்க்கத்திலே போகும்படி பண்ணுகின்ற |
| செல்வன் | ச்ரிய:பதியான எம்பெருமான் (எழுந்தருளி யிருக்குமிடமான) |
| பொன் மலை | அழகிய திருமலையாம். |
| எ காலமும் சென்று சேவித்திருக்கும் அடியரை | எப்போதும் போய் திருவடி தொழா நின்றுள்ள பாகவதர்களை |
| அ கான்நெறியை மாற்றும் | அப்படிப்பட்ட [கொடுமையான] (பாவக்) காட்டுவழியில் நின்றும் விலக்கக்கடவதும் |
| தண் | தாபஹரமுமான |
| மாலிருஞ்சோலை;— | |

கான் நெறி—காட்டுவழி, பாவக்காட்டுவழி; என்க; “இறவுசெய்யும் பாவக்காடு”
என்பது காண்க. ... .... .... .... .... (3)

341 ஆனாயர்கூடி அமைத்தவிழவை * அமரர்தங்
கோனார்க்கொழியக் கோவர்த்தனத்துச்செய்தான்மலை *
வானாட்டில்நின்று மாமலர்க்கற்பகத்தோத்திழி *
தேனாறுபாயுந் தென்திருமாலிருஞ்சோலையே. (4)

| | |
|---|---|
| ஆன் ஆயர் கூடி அமைத்த விழவை | பசுக்களுக்குத் தலைவரான இடையர்கள் ஒன்று சேர்ந்து (இந்திரனுக்காக) ஏற்படுத்தின ஸமாராதனையை |
| அமரர் தம் கோனார்க்கு ஒழிய | (அந்த) தேவேந்திரனுக்குச் சேரவொட்டாமல் தடுத்து |
| கோவர்த்தனத்து செய்தான மலை | கோவர்த்தன மலைக்குச் (சேரும்படி) செய்தருளின கண்ணபிரானுடைய திருமலையாம். |
| வான் நாட்டில் மா மலர் கற்பகம் தோத்தில் நின்று இழி தேன் | ஸ்வர்க்க லோகத்திலுள்ள பெரிய பூக்களை யுடைய கல்ப வ்ருக்ஷத்தினுடைய பூங்கொத்தில் நின்றும் பெருகா நின்ற தேனானது |
| ஆறு பாயும் | ஆறாய்க் கொண்டு ஓடா நின்ற |
| தென் | அழகையுடைய |
| திரு மாலிருஞ்சோலை—; | |

342 ஒருவாரணம்பணிகோண்டவன் போய்கையில் * கஞ்சன்றன்
ஒருவாரணமுயிருண்டவன் சென்றுறையும்மலை *
கருவாரணம் தன்பிடிதுறந்தோட * கடல்வண்ணன்
திருவாணைகூறத்திரியுந் தண்மாலிருஞ்சோலையே. (5)

| | |
|---|---|
| பொய்கையில் ஒரு வாரணம் பணி கொண்டவன் | பொய்கைக் கரையில் (ஸ்ரீகஜேந்திராழ்வானென்கிற) ஒரு யானையினிடத்து கைங்கரியத்தை ஸ்வீகரித்தருளினவனும், |
| கஞ்சன் தன் ஒரு வாரணம் உயிர் உண்டவன் | கம்ஸனுடைய (குவலயாபீடமென்ற) ஒரு யானையினுடைய உயிரை முடித்தவனுமான கண்ணபிரான் |

| | |
|---|---|
| சென்று உறையும் மலை | எழுந்தருளி நித்யவாஸம் பண்ணப் பெற்ற மலையாவது;— |
| கருவாரணம் | கருத்ததொரு யானை, |
| தன் பிடி | தன்னுடைய பேடையானது |
| துறந்து ஓட | (பிரணய ரோஷத்தினால், தன்னை விட்டுவிட்டு ஓடப்புக, |
| | (அதுகண்ட அவ்யானையானது) |
| "கடல் வண்ணன் திரு ஆணை கூற | "கடல்போன்ற நிறமுடைய அழகர்மேலாணை" என்று சொல்ல |
| திரியும் | (அப்பேடையானது அவ்வாணைக்குக் கட்டுப்பட்டு அப்புறம் போகமாட்டாமல்) மீளாநின்றுள்ள |
| தண் | குளிர்ந்த |
| மாலிருஞ் சோலை | திருமாலிருஞ்சோலை மலையாம். |

பின்னடிகளின் கருத்து;—திருமாலிருஞ் சோலைமலையிலுள்ள ஒருயானைக்கும் அதன் பேடைக்கும் பிரணயகலஹம் நேர்ந்து, அதனால் அப்பேடையானது அவ்யானையைச் சினந்து அதனைத் துறந்தோடப்புக, யானையானது அப்பேடையை மற்ற உபாயமொன்றினாலும் நிறுத்தமாட்டாமல், "அழகர் ஸ்ரீபாதத்தின்மேலாணை, நீ என்னைத்துறந்து அகலலாகாது" என்று ஆணையிட, அப்பேடையானது அவ்வாணையை மறுக்கமாட்டாமல் மீளாநிற்குமென்ற விசேஷத்தைக் கூறியவாறு. *ஸுந்தரதோர் திவ்யாஜ்ஞா* என்ற ஸுந்தரபாஹுஸ்தவ ச்லோகமும் இப்பொருளதேயென்றுணர்க. .... .... .... (5)

343 ஏவிற்றுச்செய்வான் ஏன்றெதிர்ந்துவந்தமல்லரை *
சாவத்தகர்த்த சாந்தணிதோட்சதுரன்மலை *
ஆவத்தனமென்று அமரர்களும்நன்முனிவரும் *
சேவித்திருக்குந் தென்திருமாலிருஞ்சோலையே. (6)

| | |
|---|---|
| ஏவிற்று செய்வான் | (கம்ஸன்) ஏவின காரியங்களை செய்து முடிப்பதற்காக |
| ஏன்று எதிர்ந்து வந்த மல்லரை | துணிந்து எதிரிட்டுவந்த (சாணூரன் முதலிய) மல்லர்களை |
| சாவ தகர்த்த | முடியும்படியாக நொறுக்கினவனும் |
| சாந்து அணி தோள் | (கூனியிட்ட) சாந்தை அணிந்து கொண்டுள்ள தோள்களையுடையனும |
| சதுரன் | ஸமர்த்தனுமான கண்ணபிரான் (எழுந்தருளியிருக்கிற) |
| மலை | மலையானது;— |
| அமரர்களும் நல் முனிவரும் | (பிரமன் முதலிய) தேவர்களும் (ஸநகர் முதலிய) மஹர்ஷிகளும் |
| ஆவத்து தனம் என்று சேவித்து இருக்கும் | ஆபத்துக் காலத்துக்குத் துணையாயிருக்குமிடமென்று (நினைத்து) ஸேவித்துக்கொண்டு இருக்குமிடமான |
| | தென் திருமாலிருஞ்சோலை—, |

344 மன்னர்மறுக மைத்துனன்மார்க்கொருதேரின்மேல் *
முன்னங்குநின்று மோழையெழுவித்தவன்மலை *
கொன்னவில்கூர்வேற்கோன் நெடுமாறன்தென்கூடற்கோன் *
தென்னன்கொண்டாடுந் தென்திருமாலிருஞ்சோலையே. (7)

| | |
|---|---|
| மன்னர் மறுக | (துர்யோதநாதி) அரசர்கள் குடல் குழம்பும்படி |
| மைத்துனன்மார்க்கு | மைத்துனன்மாரான பாண்டவர்களுக்கு (த்துணையாகி) |
| ஒரு தேரின்மேல் முன் அங்கு நின்று | ஒரு தேரிலே முற்புறத்திலே நின்றுகொண்டு |
| மோழை எழுவித்தவன் மலை | (ஜயத்ரதவதத்தின் வழியே) கிழுண்டான நீரானது பூமியில் பெருகிவருக்கும்படி பண்ணின கண்ணபிரான் (எழுந்தருளியிருக்கிற) மலையாவது—; |
| கொல் நவில் கூர் வேல் கோன் | கொலையையே தொழிலாகவுடைய கூர்மை பொருந்திய வேலையுடையவனும் ராஜநீதியை வழுவாமல் நடத்துபவனும |
| நெடுமாறன் தென் கூடல்கோன் | பெருமை பொருந்தியவனும் 'மாறன்' என்னும் பெயரையுடையனும் அழகிய 'நான்மாக்கூடல்' என்ற பெயரையுடைய மதுரைக்குத் தலைவனும் |
| தென்னன் | பாண்டிநாட்டுத் தலைவனுமான மலயத்வஜராஜனாலே |
| கொண்டாடும் | கொண்டாடப்பெற்ற |
| | தென் திருமாலிருஞ்சோலை—. |

* * *—அர்ஜுனனுடைய தேர்க்குதிரைகள் தண்ணீர்க்கு விடாய்த்து இளைத்தவள வில். அவன் பக்கல் பக்ஷபாதியான கண்ணபிரான், கடினமான ஸ்தலத்திலும் நீர் நரம்பு அறியவல்லவனாதலால், அங்கு வாருணாஸ்திரத்தைப் பிரயோகித்துக் கீழுள்ளநீரை வெளிக் கிளப்பிக் குதிரைகளைவிட்டு நீரூட்டிப் புரட்டியெழுப்பிக்கொண்டு போந்து பூட்டிக்கொண்டு வந்து முன்னேநிறுத்த, இதைக்கண்ட மாற்றரசரெல்லாம் "அர்ஜுநன்பக்கல் இக்கண்ண னுக்குப் பக்ஷபாதமிருந்தபடியென்!, இனி நாம் இவனை வெல்லுகையென்று ஒன்றுண்டோ? என்று குடல்மறுகினமை, முன்னடிகளிற் கூறப்பட்டது. மறுக—மனம் குழம்புகைக்காக, முன் அங்குநின்று—ஸாரத்யம் பண்ணுகைக்கு உரியஇடத்தில் நின்று என்றபடி. மோழை— கீழாறு; எழுவித்தலாவது-மேலெழும்படி செய்தல்.

அகஸ்தியமுனிவன் வீற்றிருக்கும் மலய பர்வதத்திற்சென்று 'தர்மமே நடத்தக்கட வேன்' என்று மலயபர்வதத்தையெழுதிக் கொடியெடுத்த 'மலயத்வஜன்' என்ற அரசன் தேரேறிக் கங்கைநீராடப் போகாநிற்கச் செய்தே.* மதிதவழ் குடுமியளவிலே சென்ற வாறே தேர் வடக்கு ஓடாமல்நிற்க, அவ்வரசன் அவ்விடத்திலே தேரை நிறுத்தி. 'இங்கே தீர்த்த விசேஷமும எம்பெருமானும் ஸந்நிதி பண்ணியிருக்கவேணும்' என்று நினைத்து இறங்கி ஆராய்ந்து பார்க்க, அவ்விடத்தில் நித்யஸந்நிஹிதரான அழகர் அவ்வரசனை நோக்கி, 'இவ் வாற்றிலே நீராடு' என்று நியமித்தருள, நாமங்கேட்டுணர்ந்து நீராட வேண்டுகையால் 'இவ் வாற்றுக்குப் பெயர் என்?' என்று அரசன்கேட்க, 'முன்பு நாம உலகளந்தபோது பிரமன் திருவடி விளக்கினகாலத்தில் நம பாதச்சிலம்பின் நீர் இதிலே தெறித்துச் 'சிலம்பாறு' என்று பெயர்பெற்றது' என்று அழகர் அருளிச்செய்ய, அதுகேட்ட அரசன் அவ்வாற்றில் நீராடி, கங்காஸ்நாந விருப்பத்தையும் தவிர்ந்து அத்திருமாலிருஞ் சோலைமலையிற்றனே பேரன்பு பூண்டிருந்தானென்ற வரலாற்றைத் திருவுள்ளம்பற்றித் "தென்னன் கொண்டாடும்" என்று அருளிச் செய்தார். .... .... .... .... .... (7)

**345** குறுகாதமன்னரைக்கூடுகலக்கி வெங்கானிடை *
சிறுகால்நெறியேபோக்குவிக்குஞ் செல்வன்பொன்மலை *
அறுகால்வரிவண்டுகள் ஆயிரநாமஞ்சொல்லி *
சிறுகாலைப்பாடுந் தென்றிருமாலிருஞ்சோலையே. (8)

குறுகாத மன்னரை கூடு கலக்கி — (திருமலையை) அணுகாத அரசர்களுடைய இருப்பிடத்தைக் குலைத்து [அழித்து]
வெம் கான் இடை சிறு கால் நெறியே போக்குவிக்கும் — தீக்ஷ்ணமான காட்டிலே சிற்றடி வழியாக (அவ்வரசர்களை) ஓட்டுகின்ற
செல்வன் — திருமால் (எழுந்தருளியிருக்கிற)
பொன் மலை — சிறந்த மலையாவது;—
அறு கால வரி வண்டுகள் — ஆறுகால்களையுடைய அழகிய வண்டுகளானவை
சிறு காலை — விடியற்காலத்திலே
ஆயிரம் நாமம் சொல்லிபாடும் — (எம்பெருமானுடைய ஸஹஸ்ர நாமங்களை ஆளத்திவைத்துப் பாடுமிடமான
தென் திருமாலிருஞ்சோலை—.

**346** சிந்தப்புடைத்துச்செங்குருதிகொண்டு பூதங்கள் *
அந்திப்பலிகொடுத்து ஆவத்தனஞ்செய்யப்பன்மலை *
இந்திரகோபங்கள் எம்பெருமான்கனிவாயொப்பான் *
சிந்தும்புறவில் தென்றிருமாலிருஞ்சோலையே. (9)

| | | | |
|---|---|---|---|
| பூதங்கள் சிந்த புடைத்து | ஸ்ரீ வைஷ்ணவ பூதங்களானவை (தேஹபோஷணமே பண்ணிக் கொண்டு திரியும் நாஸ்திகர்களைக் கண்டால், அவர்களை) (அவயவங்கள்) சிதறும்படி அடித்துக் கொன்று | ஆவத்து தனம் செய் அப்பன் | ஆபத்காலத்துக்குத் துணையாமிடமென்று ஸேவிக்குமிடமும் ஸ்வாமி (எழுந்தருளியிருக்குமிடமுமான) |
| செம் குருதி கொண்டு | (அதனால் அவர்களுடலினின்று புறப்படுகிற) சிவந்த ரத்தத்தைக்கொண்டு | மலை | மலையாவது;— |
| | | இந்திர கோபங்கள் | பட்டுப் பூச்சிகளானவை |
| | | எம்பெருமான் கனி வாய் ஒப்பான் | அனைவர்க்கும் ஸ்வாமியான அழகருடைய (கொவ்வைக்) கனி போன்ற திருவதரத்திற்குப் போலியாக |
| அந்தி பலிகொடுத்து | அந்திப்பொழுதிலே (எம்பெருமானுக்கு) ஆராதன ரூபமாக ஸமர்ப்பித்து | சிந்தும் புறவில் | (கண்டவிடமெங்கும்) சிதறிப் பறக்கப்பெற்ற தாழ்வரையையுடைய தென் திருமாலிருஞ்சோலை—. |

* * *—பூதயோநியாயிருக்கச் செய்தேயும், வைஷ்ணவநாம ரூபங்களோடுகூடி, பகவத்பாகவத பக்தியையுடையனவாய்த் திரியும் பூதங்கள் திருமாலிருஞ்சோலைமலையிற் பல உண்டு; அவை அத்திருமலையில் யாரேனும் ஆஸ்திகர்களாக எழுந்தருளக் கண்டால், அவர்களெதிரில் நிற்கமாட்டாமல் அஞ்ஜலி பண்ணிவிட்டு மறைந்திருக்கும்; தேஹபோஷணமே பண்ணித்திரியும் நாஸ்திகர்களைக்கண்டால், அவர்களை அவயவங்கள் சிதற அடித்துக்கொன்று, அவர்களுடைய தேஹத்தில் நின்றும் பெருகுகின்ற ரத்தத்தைத் தம்முடைய சாதிக்குத்தக்கபடி தாம் பருகும்போது, அதனை அழகருக்கு ஆராதநரூபேண ஸமர்ப்பித்துப் பருகிக்கொண்டு, இதுவே ஆபத்துக்கு உதவுமிடமென்று இத்திருமலையிலே வாழுமென்க. ஆவத்தனஞ்செய்—ப்ரதக்ஷிணஞ் செய்யுமிடமான என்னவுமாம். .... .... (9)

**347** எட்டுத்திசையும் எண்ணிறந்தபெருந்தேவிமார் *
விட்டுவிளங்க வீற்றிருந்தவிமலன்மலை *
பட்டிப்பிடிகள் பகடுறிஞ்சிச்சென்றுமாலைவாய் *
தேட்டித்திளைக்குந் தென்திருமாலிருஞ்சோலையே. **(10)**

| | | | |
|---|---|---|---|
| எண் இறந்த பெரு தேவிமார் | கணக்கிட முடியாதவர்களும் பெருமை பொருந்தியவர்களுமான தேவிமாரானவர்கள் | பட்டிபிடிகள் | வேண்டினபடி திரியுமவையான யானைப்பேடைகளானவை |
| எட்டு திசையும் விட்டு விளங்க | எட்டுத்திக்குகளிலும் மிகவும் ப்ரகாசிக்க (அவர்கள் நடுவே) | மாலை வாய் | இரவிலே |
| வீற்றிருந்த | பெருமை தோற்ற எழுந்தருளியிருந்த | பகடு உறிஞ்சி சென்று | ஆண்யானையோடு ஸம்ச்லேஷித்துப் போய் |
| விமலன் மலை | நிர்மலனான கண்ணபிரான் (எழுந்தருளியிருக்கிற) மலையாவது; | தேட்டித் திளைக்கும் | (அந்த ஸம்ச்லேஷரஸம்) முற்றிக் களியா நிற்குமிடமான தென் திருமாலிருஞ்சோலை—. |

**348** மருதப்பொழிலணி மாலிருஞ்சோலைமலைதன்னை *
கருதியுறைகின்ற கார்க்கடல்வண்ணனம்மான்றன்னை *
விரதங்கொண்டேத்தும் வில்லிபுத்தூர்விட்டுசித்தன்சொல் *
கருதியுரைப்பவர் கண்ணன்கழலிணைகாண்பர்களே. **(11)**

| | | | |
|---|---|---|---|
| மருதம் பொழில் அணி மாலிருஞ் சோலைமலை தன்னை | மருதஞ் சோலைகளை அலங்காரமாகவுடைய திருமாலிருஞ்சோலைமலையை | கருதி உறைகின்ற கார் கடல் வண்ணன் அம்மான் தன்னை | விரும்பி (அதில்) எழுந்தருளியிருக்கின்ற கருங்கடல்போன்ற நிறத்தையுடைய அழகப்பிரானை |

| | | | |
|---|---|---|---|
| விரதம் கொண்டு ஏத்தும் | (மங்களா சாஸநத்தையே) வ்ரதமாகக்கொண்டு துதிக்குமவரும் | கருதி உரைப்பவர் | விரும்பி ஓதுமவர்கள் |
| வில்லிபுத்தூர் விட்டுசித்தன் சொல் | ஸ்ரீவில்லிபுத்தூரில் அவதரித்தவருமான பெரியாழ்வார் அருளிச்செய்த இவற்றை | கண்ணன் கழல் இணை காண்பர்கள் | கண்ணபிரானுடைய திருவடிகளை ஸேவிக்கப் பெறுவர்கள். |

அடிவரவு:—அலம் வல்லாளன் தக்கார் ஆனாயர் ஒரு எவிற்று மன்னர் குறுகாத சிந்த எட்டு மருதம் உருப்பிணி.

---

## நான்காம்பத்து—மூன்றாந்திருமொழி, உருப்பிணி நங்கை

349 உருப்பிணிநங்கைதன்னைமீட்பான் தொடர்ந்தோடிச்சென்ற *
உருப்பனையோட்டிக்கொண்டிட் டுறைத்திட்டவுறைப்பன்மலை *
பொருப்பிடைக்கொன்றைநின்று முறியாழியுங்காசுங்கொண்டு *
விருப்பொடுபொன்வழங்கும் வியன்மாலிருஞ்சோலையதே. (1)

| | | | |
|---|---|---|---|
| உருப்பிணி நங்கை தன்னை | ருக்மிணிப்பிராட்டியை | கொன்றை | கொன்றை மரங்களானவை |
| மீட்பான் | (கண்ணனுடையதேரில் நின்றும்) திருப்பிக்கொண்டு போவதற்காக | பொருப்பு இடை நின்று | மலையிலே நின்று |
| தொடர்ந்து ஓடி சென்ற உருப்பனை | (அதைத்தரை) பின்தொடர்ந்துகொண்டு ஓடிவந்த 'ருக்மன்' என்றவனை | முறிபொன் ஆழியும் காசும் கொண்டு | முறிந்த பொன்மயமான மோதிரங்கள் போன்ற பூநரம்புகளையும் (பொற்காசு) போன்ற பூவிதழ்களையும் வாரிக்கொண்டு |
| ஓட்டிக்கொண்டிட்டு | ஓட்டிப் பிடித்துக்கொண்டு (தேர்த்தட்டிலே) இருத்தி | விருப்பொடு வழங்கும் | ஆதரத்துடனே [பிறர்க்குக்] கொடுப்பவை போலிருக்கப்பெற்ற |
| உறைத்திட்ட | (அவனைப்) பரிபவப்படுத்தின | | |
| உறைப்பன மலை | மிடுக்கையுடைய கண்ணபிரான் (எழுந்தருளியிருக்கிற) மலையாவது | வியன்மாலிருஞ் சோலைஅதே | ஆச்சரியமான அந்தத்திருமாலிருஞ் சோலையேயாம். |

பின்னடிகளின் கருத்து:—திருமாலிருஞ்சோலை மலையிலுள்ள கொன்றை மரங்கள், நரம்பும் இதழுமாகப் பூக்களைச் சொரிகின்றமை, முறிந்த பொன் மோதிரங்களையும் பொற்காசுகளையும் வாரிப் பிறர்களுக்குக் கொடுப்பது போன்றுள்ளது என்ற உத்ப்ரேக்ஷையைத் திருவுள்ளத்திற்கொண்டு, உபமேயார்த்தத்தை வெளிப்படையாக அருளிச்செய்யாமல் கூறுகின்றனரென்க. கொன்றைப்பூவிலுள்ள நரம்பும் இதழும்-முறிந்த பொன்மோதிரமும் பொற்காசுமபோலே யிருக்குமபடி காண்க. .... .... .... (1)

350 கஞ்சனுங்காளியனுங் களிறுமருதுமெருதும் *
வஞ்சனையின்மடிய வளர்ந்தமணிவண்ணன்மலை *
நஞ்சுமிழ்நாகமெழுந்தணவி நளிர்மாமதியை *
செஞ்சுடர்நாவளைக்குந் திருமாலிருஞ்சோலையதே. (2)

| | | | |
|---|---|---|---|
| கஞ்சனும் காளியனும் களிறும் மருதும் எருதும் | கம்ஸனும் காளிய நாகமும் [குவலயாபீடமென்ற] யானையும இரட்டை மருதமரங்களும் [அரிஷ்டாஸுரனாகிற] ரிஷபமும | வஞ்சனையின் மடிய | [தாந்தாமுடைய] வஞ்சனைகளாலே [தாம் தாம] முடியும்படி |
| | | வளர்ந்த | [திருவாய்ப்பாடியிலே] வளர்ந்தருளினவனும் |

| | | | |
|---|---|---|---|
| மணி வண்ணன் மலை | நீலமணிபோன்ற நிறமுடையவனுமான கண்ணபிரான் (எழுந்தருளியிருக்கும் மலை யாவது;— | | (தமக்கு உணவாக நினைத்து) |
| நஞ்சு உமிழ் நாகம் | விஷத்தை உமிழா நின்றுள்ள (மலைப்) பாம்பானவை | எழுந்து அணவி செம் சுடர் நா அளைக்கும் | (படமெடுத்துக்) கிளர்ந்து கிட்டி சிவந்த தேஜஸ்ஸையுடைய(தனது) நாக்கினால் (சந்திரனை) அளையா நிற்கு மிடமான |
| களிர் மா மதியை | குளிர்ந்த (மலைச்சிகரத்தின்மேல் தவழுகின்ற) பூர்ண சந்திரனை | | திருமாலிருஞ்சோலை அதே—. |

***—திருமலையிலுள்ள மலைப்பாம்புகள் பூர்ணசந்திரனைப் பார்த்து, அவனைத் தமக்கு ஆமிஷமாகக்கருதி, மேற்கிளர்ந்து தமது நாவினால் அச்சந்திரமண்டலத்தை அளையா நிற்குமென்று—இத்திருமலையின் ஓக்கத்தைக் கூறியவாறும். .... ... ... (2)

351 மன்னுநரகன்றன்னைச் சூழ்போகிவளைத்தெறிந்து *
கன்னிமகளிர்தம்மைக் கவர்ந்தகடல்வண்ணன்மலை *
புன்னைசெருந்தியொடு புனவேங்கையுங்கோங்கும்நின்று *
பொன்னரிமாலைகள்சூழ் பொழில்மாலிருஞ்சோலையதே. (3)

| | | | |
|---|---|---|---|
| மன்னு நரகன் தன்னை சூழ் போகி | (தன்னை அழிவற்றவனாக நினைத்துப்) பொருந்திக்கிடந்த நரகாஸுரனை கொல்லும் வகைகளை ஆராய்ந்து | கடல் வண்ணன் | கடல்போன்ற நிறமுடையனான கண்ணபிரான் (எழுந்தருளியிருக்கிற) |
| | | மலை | மலையாவது;— |
| வளைத்து | (அவனைத் தப்பிப்போகமுடியாதபடி) வளைத்துக் கொண்டு | புன்னை செருந்தியொடு புனம் வேங்கையும் கோங்கும் நின்று | புன்னை மரங்களும் சுரபுன்னை மரங்களும் புனத்திலுண்டாகிற வேங்கை மரங்களும் கோங்குமரங்களும் (புஷ்பங்களால் நிறைந்து ஒழுங்குபட) நின்று |
| எறிந்து | (திருவாழியாலே) நிரஸித்து | | |
| | (அவனால் சிறையிலடைத்துவைக்கப் பட்டிருந்த) | பொன்னரி மாலைகள் சூழ் பொழில் | (திருமலைக்குப்) பொன்னரி மாலைகள் சுற்றினாற்போலே யிருக்கப்பெற்ற சோலைகளையுடைய |
| கன்னி மகளிர் தம்மை கவர்ந்த | (பதினாறாயிரத் தொருநூறு) கன்னிகைகளையும் தான கொள்ளை கொண்ட | | மாலிருஞ்சோலை அதே—. |

புன்னை, செருந்தி, வேங்கை, கோங்கு என்ற இம்மரங்களின் பூக்கள் பொற்கென்ற நிறம் பெற்றிருக்கும்; அப்படிப்பட்ட பூக்கள் நிறைந்த மரங்கள் இத்திருமலையில் ஒழுங்குபட நிற்பது-மலைக்குப் பொன்னரிமாலை என்னும் ஆபரணம் ஸமர்ப்பிப்பது போன்றுள்ளதென்ற உத்ப்ரேக்ஷை, பின்னடிகளுக்குக்கருத்து. பொன்னரிமாலை என்பது—பொன்னாற்செய்யப் பட்ட ஒரு ஆபரண விசேஷம். ... ... .... ... (3)

352 மாவலிதன்னுடைய மகன்வாணன்மகளிருந்த *
காவலைக்கட்டழித்த தனிக்காளைகருதும்மலை *
கோவலர்கோவிந்தனைக் குறமாதர்கள்பண்குறிஞ்சி *
பாவொலிபாடிநடம்பயில் மாலிருஞ்சோலையதே. (4)

| | | | |
|---|---|---|---|
| மாவலி தன்னுடைய மகன் வாணன் மகள் இருந்த காவலை கட்டு அழித்த | மஹாபலியினுடைய புத்திரனாகிய பாணாஸுரனுடைய மகளான உஷை இருந்த சிறைக்கூடத்தை அரணோடே அழித்தருளினவனும் | கோவலர் கோவிந்தனை | இடையர்களுக்குள் கோவிந்தாபிஷேகம் பணணப்பெற்ற கண்ணபிரான் விஷயமாக |
| தனி காளை | ஒப்பற்ற யுவாவுமான கண்ணபிரான் | குறிஞ்சி பண் பா ஒலி பாடி நடம் பயில் | குறிஞ்சி ராகத்தோடுகூடினபாட்டுக்களை இசைபெறப் பாடிக்கொண்டு (அப்பாட்டுக்குத்தகுதியாக) கூத்தாடு மிடமான |
| கருதும் மலை | விரும்புகிற மலையாவது;— | | |
| குற மாதர்கள் | குறத்திகளானவர்கள் | | மாலிருஞ்சோலை அதே—. |

353 பலபலநாழஞ்சொல்லிப் பழித்தசிசுபாலன்றன்னை *
அலவலைமைதவிர்த்த அழகனலங்காரன்மலை *
குலமலைகோலமலைகுளிர்மாமலைகொற்றமலை *
நிலமலைநீண்டமலை திருமாலிருஞ்சோலையதே. (5)

| | |
|---|---|
| பல பல நாழம் சொல்லி பழித்த சிசுபாலன் தன்னை அலவலைமை தவிர்தத அழகன் | பல பல குற்றங்களைச் சொல்லி தூஷித்த சிசுபாலனுடைய அற்பத்தனத்தை (சரமதசையில்) போக்கியருளின அழகை யுடையனும் |
| அலஙகாரன் | அலங்காரததை யுடையவனுமான கண்ணபிரான் (எழுந்தருளி யிருக்கிற) |
| மலை | மலையாவது;— |
| குலம் மலை | தொண்டக் குலத்துக் குத்தலையான மலையும் |
| கோலம் மலை | அழகையுடைய மலையும் |
| குளிர் மா மலை | குளிர்ந்த பெரிய மலையும் |
| கொற்றம் மலை | ஜயத்தையுடைய மலையும் |
| நிலம் மலை | (நல்லமரங்கள் முளைக்கைக்குப் பாங்கான) நிலத்தை யுடைய மலையும் |
| நீண்ட மலை | நீட்சியையுடைய மலையுமான திருமாலிருஞ்சோலை அதே—. |

* * *—காதுகொண்டு கேட்கமுடியாதபடி தூஷித்துக் கொண்டிருந்த சிசுபாலனுக்குச் சரமதசையில் கண்ணபிரான் தன் அழகைக்காட்டித் தன்னளவில் பகையை மாற்றியருளினமை, முன்னடிகளிற் கூறப்பட்டது. நாழம்என்பதில், அம்-சாரியை. நாழ் என்ற சொல், குற்றமென்னும் பொருளது; * நாமமிகவுடையோம் நாழ் * என்ற நம்மாழ்வார் பிரயோகமும் காண்க. .... .... .... .... (5)

354 பாண்டவர்தம்முடைய பாஞ்சாலிமறுக்கமெல்லாம் *
ஆண்டங்குநூற்றுவர்தம் பெண்டிர்மேல்வைத்தவப்பன்மலை *
பாண்டகுவண்டினங்கள் பண்கள்பாடிமதுப்பருக *
தோண்டலுடையமலை தோல்லைமாலிருஞ்சோலையதே. (6)

| | |
|---|---|
| பாண்டவர் தம் முடைய பாஞ்சாலி மறுக்கம் எல்லாம் | பஞ்சபாண்டவர்களுடைய (மனைவியாகிய) த்ரௌபதியினுடைய மனக்குழப்பத்தை யெல்லாம் |
| ஆண்டு | (தன்) திருவுள்ளததிற் கொண்டு. |
| அங்கு | (அவள் பரிபவப்பட்ட) அப்போது அத்துன்பங்களை யெல்லாம்) |
| நூற்றுவர் தம் பெண்டிர் மேல் வைதத | (துரியோதநாதிகள்) நூற்றுவருடைய மனைவியர்களின் மேல் சுமத்தின |
| அப்பன் | ஸ்வாமியான கண்ணபிரான் (எழுந்தருளியிருக்கிற) |
| மலை | மலையாவது,— |
| பாண் தகு வண்டு இனங்கள் | பாட்டுக்குத் தகுதியான (ஜன்மத்தை யுடைய) வண்டுத்திரளானவை |
| பண்கள் பாடி மது பருக | ராகங்களைப்பாடிக்கொண்டு தேனைக் குடிப்பதற்குப் பாங்காக (ச்சோலைகள் வாடாமல் வளர) |
| தோண்டல் உடைய மலை | ஊற்றுக்களையுடைய மலையாகிய |
| தொல்லை மாலிருஞ் சோலை அதே | அநாதியான அந்தமாலிருஞ் சோலையேயாம். |

355 கனங்குழையாள்பொருட்டாக் கணைபாரித்து * அரக்கர்தங்கள்
இனங்கழுவேற்றுவித்த எழில்தோளெம்மிராமன்மலை *
கனங்கொழிதெள்ளருவி வந்துசூழ்ந்தகன்ஞாலமெல்லாம் *
இனங்குழுவாடும்மலை யெழில்மாலிருஞ்சோலையதே. (7)

| | |
|---|---|
| கனம் குழையாள் பொருட்டா | ஸ்வர்ணமயமான காதணியை யுடையளான பிராட்டிக்காக |
| கணை பாரித்து | அம்புகளைப் பிரயோகிதது |
| அரக்கர் தங்கள் இனம் கழு எற்று வித்த | ராக்ஷஸகுலத்தை சூலத்தின்மேல் எற்றினவனும் |
| எழில் தோள் எம் இராமன் | அழகிய தோள்களையுடையவனும் எமக்குத தலைவனுமான இராம பிரான் (எழுந்தருளியிருக்கிற) |
| மலை | மலையாவது,— |
| கனம் கொழி தெள் அருவி | பொன்களைக் கொழித்துக் கொண்டு வாராநின்ற தெளிந்த அருவிகளிலே |

அகல் ஞாலம் எல்லாம் — விசாலமான பூமியிலுள்ளாரெல்லாரும்
இனம் குழு — திரள் திரளாக
வந்து சூழ்ந்து — வந்து சூழ்ந்துகொண்டு
ஆடும் — கீராடப் பெற்ற
எழில் — அழகிய
மாலிருஞ் சோலை மலை அதே—.

356 எரிசிதறுஞ்சரத்தால் இலங்கையனை * தன்னுடைய
வரிசிலைவாயிற்பெய்து வாய்க்கோட்டந்தவிர்த்துகந்த *
அரையனமரும்மலை அமரரோடுகோனுஞ்சென்று *
திரிசுடர்சூழும்மலை திருமாலிருஞ்சோலையதே. (8)

எரி சிதறும் சரத்தால் — நெருப்பைச் சொரியா நின்றுள்ள அம்புகளினால்
இலங்கையனை — லங்கைக்கரசனான ராவணனை
தன்னுடைய வரிசிலை வாயில் பெய்து — தன்னுடைய நீண்ட வில்லின் வாயிலே புகுரச் செய்து
வாய் கோட்டம் தவிர்த்து உகந்த — (அவனுடைய) வாக்கின் வக்ரதையைத் தொலைத்து (தான் வெற்றி பெற்றமையாலே) மகிழ்ந்தருளின
அரையன் — ஸ்வாமியான இராமபிரான்
அமரும் மலை — எழுந்தருளியிருக்கிற மலையாவது
அமரரொடு கோனும் திரி சுடர் சென்று சூழும் — தேவர்களோடுகூட (அவர்களுக்குத்) தலைவனான இந்திரனும் (இரவும் பகலும்) திரியாநின்ற சந்த்ர ஸூர்யர்களும் வந்து பிரதக்ஷிணம் பண்ணப்பெற்ற
திருமாலிருஞ்சோலை மலை அதே—.

357 கோட்டுமண்கொண்டிடந்து குடங்கையில்மண்கொண்டளந்து
மீட்டுமதுண்டுமிழ்ந்து விளையாடும்விமலன்மலை *
ஈட்டியபல்பொருள்கள் எம்பிரானுக்கடியுறையென்று *
ஓட்டருந்தண்சிலம்பாறுடை மாலிருஞ்சோலையதே. (9)

[illegible] — (ஹிரண்யாக்ஷனாலே பாயாகச் சுருட்டிக்கொண்டு போகப்பட்ட) பூமியை [வராஹரூபியாய் அவதரித்து]
இடந்து — [அண்டபித்தியில் நின்றும்] ஒட்டுவிடுத்தெடுத்து
கோடு — [தனது] திரு எயிற்றிலே
கொண்டு — ஏன்றுகொண்டு
மண் — [மஹாபலியினால் தன் வசமாக்கிக் கொள்ளப்பட்ட] பூமியை [வாமனரூபியாய் அவதரித்து]
குடங்கையில் — அகங்கையில்
கொண்டு — [நீரேற்று] வாங்கிக்கொண்டு
அளந்து — அளந்தருளியும்
மீட்டும் — மறுபடியும் [அவாந்தர ப்ரளயத்திலே அந்தப்பூமி அழியப் புக]
அது உண்டு — அப்பூமியைத் திருவயிற்றில் வைத்து நோக்கி,
[பின்பு பிரளயங்கழிந்தவாறே]
உமிழ்ந்து — (அதனை) வெளிப்படுத்தியும்
[இப்படிப்பட்ட ஆச்சரியச் செயல்களாலே]
விளையாடும் விமலன் மலை — விளையாடாநின்றுள்ள நிர்மல ஸ்வரூபியான எம்பெருமான் [எழுந்தருளியிருக்கிற] மலையாவது;—
ஈட்டிய — [பெருகி வரும்போது] வாரிக்கொண்டுவரப்பெற்ற
பல் பொருள்கள் — பலவகைப்பட்ட [பொன் முத்து, அகில் முதலிய] பொருள்களை
எம் பிரானுக்கு — எம்பெருமானுக்கு
அடியுறை என்று — ஸ்ரீ பாதகாணிக்கையென்று
ஓட்டரும் — [பெருகி] ஓடிவாரா நின்றுள்ள
தண் — குளிர்ந்த
சிலம்பாறு உடை — நூபுர கங்கையையுடைய
மாலிருஞ் சோலை அதே—.

358 ஆயிரந்தோள்பரப்பி முடியாயிரமின்னிலக *
ஆயிரம்பைந்தலைய அனந்தசயனனாளும்மலை *
ஆயிரமாறுகளுஞ் சுனைகள்பலவாயிரமும் *
ஆயிரம்பூம்பொழிலுமுடை மாலிருஞ்சோலையதே. (10)

| | |
|---|---|
| ஆயிரம் தோள் பரப்பி | பலவாயிருந்துள்ள திருத்தோள்களைப் பரப்பிக்கொண்டு |
| முடி ஆயிரம் | ஆயிரந் திருமுடிகளும் |
| மின் இலக | [திருவபிஷேகத்திலுள்ள ரத்நங்களிலுல்] மிகவும் விளங்கும்படியாகவும் |
| பை ஆயிரம் தலைய அனந்தன் | பரந்த ஆயிரந்தலைகளையுடைய திருவனந்தாழ்வான்மீது |
| சயனன் | பள்ளிகொண்டருளுமவனான எம்பெருமான் |
| ஆளும் மலை | ஆளுகின்ற மலையாவது; |
| | ஆயிரம் ஆறுகளும் பல நதிகளையும் |
| பல ஆயிரம் சுனைகளும் | அநேகமாயிரந் தடாகங்களையும் |
| ஆயிரம் பூ பொழிலும் உடை | பல பூஞ்சோலைகளையுமுடைய |
| | மாலிருஞ்சோலையதே—. |

359 மாலிருஞ்சோலையென்னும் மலையையுடையமலையை *
நாலிருமூர்த்திதன்னை நால்வேதக்கடலமுதை *
மேலிருங்கற்பகத்தை வேதாந்தவிழுப்பொருளில் *
மேலிருந்தவிளக்கை விட்டுசித்தன்விரித்தனவே. (11)

| | |
|---|---|
| மாலிருஞ் சோலை என்னும் மலையை உடைய | திருமாலிருஞ்சோலை என்கிற திருமலையை [தனக்கு இருப்பிடமாக] உடையவனும் |
| மலையை | ஒரு மலை சாய்ந்தாற்போன்றுள்ளவனும் |
| நால் இருமூர்த்தி தன்னை | திருவஷ்டாக்ஷர ஸ்வரூபியானவனும் |
| நாலவேதம் கடல் அமுதை | நான்கு வேதங்களாகிற கடலில் ஸாரமான அம்ருதம் போன்றவனும் |
| மேல் இருங் கற்பகத்தை | [ஸ்வர்க்கலோகத்திலுள்ள கல்பவ்ருக்ஷத்திலும்] மேற்பட்டதும் பெரிதுமான கல்ப வ்ருக்ஷமாயிருப்பவனும் |
| வேதாந்தம் விழுப்பொருளில் மேல் இருந்த விளக்கை | வேதாந்தங்களிற் கூறப்படுகின்ற சிறந்த அர்த்தங்களுள் மேற்பட்ட அர்த்தங்களுள மேற்பட்ட அர்த்தமாயிருப்பவனும், தனக்குத் தானே விளங்குமவனுமான எம்பெருமானைக்குறித்து |
| விட்டுசித்தன் விரித்தன | பெரியாழ்வார் அருளிச் செய்தவை இப்பாசுரங்கள். |

* * *—இத்திருமொழி கற்றார்க்குப் பலஞ்சொல்லித் தலைக்கட்டாதொழிந்தது—இப்பாசுரங்களின் பொருளை அறிகையே இதுகற்கைக்குப் பயனென்று திருவுள்ளம்பற்றியென்க. [நாலிருமூர்த்தி தன்னை] வாஸுதேவன், ஸங்கர்ஷணன், ப்ரத்யும்நன், அநிருத்தன் என்று நால்வகையாகக் கூறப்பட்ட பெரிய வடிவை யுடையவனென்பதும் பொருளாம்; அப்போது, இரு என்பதற்கு—இரண்டு என்று பொருளன்று; இருமை—பெருமை. (11)

அடி வரவு:—உருப்பிணி கஞ்சன் மன்னு மாவலி பல பாண்டவர் கனம் எரி கோட்டு ஆயிரம மாலிரு நா.

---

## நான்காம்பத்து—நான்காந்திருமொழி, நாவகாரியம்.

360 நாவகாரியஞ்சொல்லிலாதவர் நாடோறும்விருந்தோம்புவார் *
தேவகாரியஞ்செய்து வேதம்பயின்றுவாழ்திருக்கோட்டியூர் *
மூவர்காரியமுந்திருத்தும் முதல்வனைச்சிந்தியாத * அப்
பாவகாரிகளைப்படைத்தவன் எங்ஙனம்படைத்தான்கொலோ. (1)

நா அகாரியம் சொல்லாதவர் — நாவினால் சொல்ல வொண்ணாதவற்றை [ஒரு நாளும்] சொல்லியறியாத ஸ்ரீ வைஷ்ணவர்கள்
நாள் தோறும் விருந்து ஓம்புவார் — நாடோறும் [ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு] விருந்தளித்துக்கொண்டும்
தேவர் காரியம் செய்து — பகவதாராதனம் பண்ணிக்கொண்டும்
வேதம் பயின்று வாழ் திருக்கோட்டியூர் — வேதங்களை ஓதிக்கொண்டும் வாழுமிடமான திருக்கோட்டியூரில் [எழுந்தருளியிருப்பவனும்,]
மூவா காரியமும் திருத்தும் முதல்வனை — பிரமன், ருத்ரன், இந்திரன் என்ற மூவருடைய காரியங்களையும் செய்து தலைக்கட்டுமவனும், எல்லார்க்கும்] தலைவனுமான எம்பெருமானை
சிந்தியாத — நெஞ்சாலும் நினையாத
அப் பாவ காரிகளை — அப்படிப்பட்ட [மிகவுங்கொடிய] பாவஞ்செய்த பிராணிகளை
படைத்தவன் — ஸ்ருஷ்டித்தவன்
எங்ஙனம் படைத்தான் கொல் ஓ — எதுக்காக ஸ்ருஷ்டித்தானோ! [அறியோம்]

361 குற்றமின்றிக்குணம்பெருக்கிக் குருக்களுக்கனுகூலராய் *
செற்றமொன்றுமிலாத வண்கையினார்கள்வாழ்திருக்கோட்டியூர் *
துற்றியேழுலகுண்ட தூமணிவண்ணனறன்னைத்தொழாதவர் *
பெற்றதாயர்வயிற்றினைப் பெருநோய்செய்வான்பிறந்தார்களே. (2)

குற்றம் இன்றி — ஒருவகையான குற்றமில்லாமல்
குணம் — (சமம், தமம் முதலிய) குணங்களை
பெருக்கி — வளரச்செய்துகொண்டு
குருக்களுக்கு — (தம்தம்) ஆசாரியர்களுக்கு
அனுகூலர் ஆய் — (கைங்கர்யம் பண்ணுவதற்குப்) பாங்காயிருப்பவர்களும்
செற்றம் ஒன்றும் இலாத — பொறாமை யென்பது சிறிதுமில்லாதவர்களும்
வண் கையினார்கள் — உதாரமான கையையுடையவர்களுமான ஸ்ரீவைஷ்ணவர்கள்
வாழ் — வாழ்ந்திருக்குமிடமான
திருக்கோட்டியூர் — திருக்கோட்டியூரில் (எழுந்தருளியிருப்பவனும்)
ஏழ் உலகு துற்றி உண்ட — ஸப்தலோகங்களையும் ஒரு கபளமாகத் திரட்டியுண்டவனும்
தூமணி வண்ணன் தன்னை — பழிபற்ற நீலமணிபோன்ற நிறத்தையுடையவனுமான எம்பெருமானை
தொழாதவர் — வணங்காதவர்
பெற்ற தாயர் வயிற்றினை — (தங்களைப்) பெற்ற தாய்மாருடைய வயிற்றை
பெரு நோய் செய்வான் பிறந்தார்கள் — மிகவும் நோவுபடுத்துகைக்காகப் பிறந்தார்கள் அத்தனை.

362 வண்ணநன்மணியும் மரதகமுமழுத்தி * நிழலெழுந்
திண்ணைசூழ்திருக்கோட்டியூர்த் திருமாலவன்றிருநாமங்கள் *
எண்ணக்கண்டவிரல்களால் இறைப்போழுதுமெண்ணகிலாதுபோய் *
உண்ணக்கண்டதம்மூத்தைவாய்க்குக் கவளமுந்துகின்றார்களே. (3)

நல் வண்ணம் மணியும் மரதகமும் அழுத்தி — நல்ல நிறத்தையுடைய ரத்னங்களையும் மரதகங்களையும் (ஒழுங்குபட) இழைத்ததனால்
நிழல் எழும் — ஒளிவிடாநின்றுள்ள
திண்ணை சூழ் திருக்கோட்டியூர் — திண்ணைகளாலே சூழப்பெற்ற திருக்கோட்டியூரில் [எழுந்தருளியிருக்கிற]
திருமால் அவன் திருநாமங்களை — திருமாமகள் கொழுநனுடைய திருநாமங்களை
எண்ண கண்ட — [ஒன்று, இரண்டு என்று] எண்ணுகைக்காகப் படைக்கப்பட்ட
விரல்களால் — விரல்களாலே
[அந்தத்திருநாமங்களை]
இறைப் பொழுதும் எண்ணகிலாது — க்ஷணகாலமும் எண்ணமாட்டாமல்
போய் — புறம்பேசென்று
உண்ணக் கண்ட தம் ஊத்தை வாய்க்கு — [சரீரபோஷணார்த்தமாக] உண்ணுகின்ற தங்களுடைய அசுத்தமான வாயிலே
கவளம் உந்துகின்றார்களே — சோற்றுத்திரளைகளை அள்ளிக்கவிழ்க்கின்றார்களே! [இதென்ன கொடுமை!.]

363 உரகமெல்லணையான்கையில் உறைசங்கம்போல்மடவன்னங்கள் *
நிரைகணம்பரந்தேறுஞ் செங்கமலவயல்திருக்கோட்டியூர் *
நரகநாசனைநாவிற்கொண்டழையாத மானிடசாதியர் *
பருகுநீருமுடுக்குங்கூறையும் பாவஞ்செய்தனதான்கொலோ. (4)

| | | | |
|---|---|---|---|
| உரகம் மெல் அணையான கையில் உறைசங்கம் போல | திருவனந்தாழ்வானை ஸுகுமாரமான படுக்கையாகவுடைய எம்பெருமானது திருக்கையில் உள்ள ஸ்ரீ பாஞ்சஜந்யம்போல் வெளுத்த | நரகம் நாசனை | [தன்னடியார்க்கு] நரகப்ரவேசத்தை ஒழித்தருளுமவனுமான எம்பெருமானை |
| மட அன்னங்கள் | மடப்பம்பொருந்திய ஹம்ஸங்களானவை | நாவில் கொண்டு அழையார் | நாவினால் அழைக்கமாட்டாத |
| நிரை கணம் பரந்து ஏறும் செம் கமலம் வயல் | திரள்திரளாகப் பரவி ஏறியிருக்கப் பெற்ற செந்தாமரை மலர்களையுடைய வயல்களாலே சூழப்பட்ட | மானிட சாதியர் | மனுஷ்ய ஜாதியிற் பிறந்தவர்கள் |
| திருக்கோட்டியூர் | திருக்கோட்டியூரில் [எழுந்தருளியிருப்பவனும] | பருகும் நீரும் உடுக்கும் கூறையும | குடிக்கின்ற தண்ணீரும் உடுத்திக்கொள்ளுகிற வஸ்திரமும் |
| | | பாவம் செய்தன தான் கொல் ? | பாவஞ்செய்தனவோ தான். |

364 ஆமையின்முதுகத்திடைக்குதிகொண்டு தூமலர்சாடிப்போய் *
தீமைசெய்திளவாளைகள் விளையாடுநீர்த்திருக்கோட்டியூர் *
நேமிசேர்தடங்கையினானை நினைப்பிலாவலநெஞ்சுடை *
பூமிபாரங்களுண்ணுஞ்சோற்றினைவாங்கிப் புல்லைத்திணிமினே. (5)

| | | | |
|---|---|---|---|
| இள வாளைகள் | இளமை பொருந்திய 'வாளை' என்னும் மீன்கள் | நேமி சேர் தட கையினானை | திருவாழியாழ்வானோடு சேர்ந்திருக்கிற பெரிய திருக்கையையுடையனுமான எம்பெருமானை |
| ஆமையின் முதுகத்திடை குதிகொண்டு | ஆமைகளினுடைய முதுகின்மேல் குதித்துக் கொண்டும் | நினைப்பு இலா வலி நெஞ்சு உடை பூமி பாரங்கள் | (ஒருகாலும்) நினையாத கடினமான நெஞ்சை உடையவர்களும் பூமிக்குச் சுமையாயிருப்பவர்களுமான பாவிகள் |
| தூ மலர் சாடிப் போய் | நல்ல புஷ்பங்களை உழக்கிக் கொண்டும் | உண்ணும் சோற்றினை வாங்கி | உண்கிற சோற்றைப் பிடுங்கி விட்டு, (எதிர்த்த) |
| தீமை செய்து | (க்ஷுத்ர ஜந்துக்களைக் கலக்கி ஓட்டுகையாகிற) தீம்புகளைச் செய்துகொண்டும் | புல்லை | (அவர்கள் வாய்க்குள்ளே) புல்லைக் கொண்டு |
| விளையாடு | விளையாடுமிடமான | திணிமின் | அடையுங்கள் (என்னுடைய தந்த விதிகளை) |
| நீர் | நீரையுடைய | | |
| திருக்கோட்டியூர் | திருக்கோட்டியூரில (எழுந்தருளியிருப்பவனும்.) | | |

365 பூதமைந்தொடுவேள்வியைந்து புலன்களைந்துபொறிகளால் *
ஏதமொன்றுமிலாத வண்கையினார்கள்வாழ்திருக்கோட்டியூர் *
நாதனைநரசிங்கனை நவின்றேத்துவார்களுழக்கிய *
பாததூளிபடுதலால் இவ்வுலகம்பாக்கியஞ்செய்ததே. (6)

| | | | |
|---|---|---|---|
| பூதம் ஐந்தொடு | பஞ்சபூதமயமாகிய சரீரத்தினாலும் | திருக்கோட்டியூர் | திருக்கோட்டியூரில் (எழுந்தருளியிருப்பவனும்,) |
| ஐந்து வேள்வி | பஞ்சமஹாயஜ்ஞங்களினாலும் | நாதனை நரசிங்கனை | (எமக்கு) ஸ்வாமியும் நரஸிம்ஹரூபியுமான எம்பெருமானை |
| ஐந்து புலன்கள் | (சப்தம் முதலிய) ஐந்து விஷயங்களினாலும் | நவின்று ஏத்துவார்கள் உழக்கிய பாத தூளி படுதலால் | அநுஸந்தித்துத் துதிக்குமவர்களான பாகவதர்களின் திருவடிகளினால் மிதித்தருளின தூளியினுடைய ஸம்பந்தத்தினால் |
| (ஐந்து) பொறிகளால் | பஞ்சேந்திரியங்களினாலும் (ஸம்பவிக்கக்கூடிய) | | |
| ஏதம் ஒன்றும் இலாத—குறைமொன்றுமில்லாதவர்களும் | | இ உலகம் பாக்கியம் செய்ததே | இந்த லோகமானது பாக்யம் பண்ணினதாகக் கொள்ளப்படும். |
| வண் கையினார்கள் | உதாரமான கைகளையுடையவர்களுமான ஸ்ரீவைஷ்ணவர்கள் | | |
| வாழ் | வாழுமிடமான | | |

நிலம், நீர், தீ, கால், விசும்பு என்கிற பஞ்சபூதமயமாகிய சரீரத்தைப் பூதமைந்து என்றது - ஆகுபெயரால். வேள்வி ஐந்து - தேவயஜ்ஞம், பித்ருயஜ்ஞம், பூதயஜ்ஞம், மநுஷ்ய யஜ்ஞம், ப்ரஹ்மயஜ்ஞம் என்பவை. புலன்கள் ஐந்து - சப்தம், கந்தம், ரூபம், ரஸம், ஸ்பர்சம் என்பவை. பொறிகள் ஐந்து - செவி, வாய், கண், மூக்கு, உடல். திருக்கோட்டியூரிலுள்ள

ஸ்ரீவைஷ்ணவர்கள், தங்கள் தேஹத்தைப் பாகவத விஷயத்தில் ஆட்படுத்துமவர்கள் என்றும் பகவத் பாகவதர்களின் முகமலர்த்திக்காகப் பஞ்சயஜ்ஞாநுஷ்டாநம் பண்ணுமவர்கள் என்றும், பஞ்சஜ்ஞாநேந்திரியங்களையும் பாகவத விஷயத்தில் உபயோகப்படுத்துமவர்கள் என்றுங் கூறியவாறு. .... .... .... .... (6)

366 குருந்தமொன்றொசித்தானொடுஞ்சென்று கூடியாடிவிழாச்செய்து *
திருந்துநான்மறையோரிராப்பகல் ஏத்திவாழ்திருக்கோட்டியூர் *
கருந்தடமுகில்வண்ணனைக் கடைக்கொண்டு கைதொழும்பத்தர்கள் *
இருந்தவூரிலிருக்குமானிடர் எத்தவங்கள்செய்தார்கொலோ. (7)

| | |
|---|---|
| திருந்து | (எம்பெருமான் ஸ்வரூபங்களைப் பிழையறக் கூறுகையாகிற) திருந்தத்தையுடைய |
| நான்மறையோர் | நான்கு வேதங்களையு மோதின ஸ்ரீவைஷ்ணவர்கள் |
| ஒன்று குருந்தம் ஒசித்தானொடும் சென்று கூடி ஆடி | ஒரு குருந்தமரத்தை முறித்தருளின கண்ணபிரானைச் சென்று சேர்ந்து (அவனுடைய குணங்களிலே) அவகாஹித்து |
| விழா செய்து | (விக்ரஹ சேவையாகிற உத்ஸவத்தை அநுபவித்துக்கொண்டு |
| இரா பகல் ஏத்தி வாழ் திருக்கோட்டியூர் | இரவும் பகலும் மங்களாசாஸநம் பண்ணிக்கொண்டு வாழுமிடமான திருக்கோட்டியூரில் (எழுந்தருளியிருப்பவனும்,) |
| கரு தட முகில் வண்ணனை | கறுத்துப் பெருத்த மேகம் போன்ற நிறத்தையுடையனுமான எம்பெருமானைக் குறித்து |
| கடைக்கொண்டு கைதொழும் பத்தர்கள் | நைச்சியாநுஸந்தாநத்துடன் அஞ்ஜலிபண்ணுகின்றுள்ள பக்தியையுடைய ஸ்ரீவைஷ்ணவர்கள் |
| இருந்த ஊரில் இருக்கும் மானிடர் | எழுந்தருளியிருக்குமிடமான ஊரிலே நித்யவாஸம் பண்ணுகிற மநுஷ்யர்கள் |
| எ தவங்கள் செய்தார் கொலோ | எப்படிப்பட்ட தபஸ்ஸுக்களை அநுஷ்டித்தார்களோ (அறியேன்.) |

367 நளிர்ந்தசீலன்நயாசலன் அபிமானதுங்கனைநாடொறும் *
தெளிந்தசெல்வனைச்சேவகங்கொண்ட செங்கண்மால்திருக்கோட்டியூர் *
குளிர்ந்துறைகின்றகோவிந்தன் குணம்பாடுவாருள்ளநாட்டினுள் *
விளைந்ததானியமுமிராக்கதர் மீதுகொள்ளகிலார்களே. (8)

| | |
|---|---|
| நளிர்ந்த சீலன் | குளிர்ந்த ஸ்வபாவத்தை யுடையவரும் |
| நய அசலன் | நீதிநெறி தவறாதவரும் |
| அபிமான துங்கனை | இடைவிடாது எம்பெருமானை அநுபவிக்கையாலுண்டான) அஹங்காரத்தால உயர்ந்தவரும் |
| நாள்தொறும் தெளிந்த செல்வனை | நாடோறும் தெளிந்துவாரா நின்றுள்ள கைங்கர்ய ஸம்பத்தை யுடையவருமான செல்வநம்பியை |
| சேவகம் கொண்ட | அடிமை கொண்டவனாய் |
| செம் கண் மால் | செந்தாமரை போன்ற கண்களை யுடையவனாய் (அடியார்பக்கல்) மோஹமுடையனாய் |
| திருக்கோட்டியூர் | திருக்கோட்டியூரில் |
| குளிர்ந்து உறைகின்ற கோவிந்தன் குணம் பாடுவார் | திருவுள்ளமுகந்து எழுந்தருளியிருப்பவனான எம்பெருமானுடைய திருக்கல்யாண குணங்களைப் பாடுமவரான ஸ்ரீவைஷ்ணவர்கள் |
| உள்ள நாட்டினுள் விளைந்த தானியமும் | எழுந்தருளியிருக்கிற நாட்டிலே விளைந்த தாந்யத்தையும் |
| இராக்கதர் மீது கொள்ளகிலார்கள் | ராக்ஷஸர்கள் அபஹரிக்க மாட்டார்கள். |

368 கொம்பினார்பொழில்வாய்க் குயிலினங்கோவிந்தன்குணம்பாடுசீர் *
செம்பொனார்மதிள்சூழ் செழுங்கழனியுடைத்திருக்கோட்டியூர் *
நம்பனைநரசிங்கனை நவின்றேத்துவார்களைக்கண்டக்கால் *
எம்பிரான்றனசின்னங்கள் இவரிவரென்றாசைகள்தீர்வனே. (9)

| | |
|---|---|
| கொம்பின் ஆர் பொழில்வாய்குயில் இனம் கோவிந்தன் குணம் பாடு | கிளைகளாலே நெருங்கின சோலைகளிலே குயில்களின் திரள கண்ணபிரானுடைய சீர்மைகளைப் பாடாநிற்கப்பெறறதும், |
| சீர் செம் பொன் ஆர் மதிள் சூழ் | சிறந்த செம்பொன்னாலே சமைந்த மதிள்களாலே சூழப்பட்டதும, |
| செழு கழனி உடை திருக்கோட்டியூர | செழுமை தங்கிய கழனிகளையுடையதுமான திருக்கோட்டியூரில் (எழுந்தருளியிருப்பவனும்,) |
| நம்பியை | [ரக்ஷகன் என்று] விச்வஸிக்கக் கூடியவனும |
| நரசிங்கனை | நரஸிம்ஹரூபியுமான ஸர்வேச்வரனை |
| நவின்று எத்துவார்களை | அநுஸந்தித்துத் துதிக்கும் பாகவதர்களை |
| கண்டக்கால் | [யான்] ஸேவிக்கப் பெறுவேனாகில் |
| இவர் இவர் எம்பிரான் தன சின்னங்கள் என்று | "இந்த இந்த ஸ்ரீவைஷ்ணவர்கள் எம்பெருமானுடைய அடையாளமாயிருப்பவர்கள்" என்று அநுஸந்தித்து |
| ஆசைகள் தீர்வன் | [நெடுநாளாய்ப் பிறந்துள்ள] ஆசைகளை நிலைக்கட்டிக் கொள்வேன். |

* * *—திருக்கோட்டியூரெம்பெருமானடியார்களை ஸேவிக்கும்போதே 'அவ்வெம்பெருமான் ஸாத்விகர்களினால் ஸேவிக்கப்படுமவன்' என்கிற லக்ஷணம் வெளியாமாதலால் 'இவர்கள் எம்பெருமானது சிறப்பைத் தெரிவிக்கவல்ல சின்னங்கள்' என்று அநுஸந்தித்து, யான் நெடுநாளாய்க்கொண்டுள்ள பலவகை ஆசைகளையுந் தீர்வேனென்கிறார், பாகவதர்களின் ஸேவை, பகவத் ஸேவையினும அரிது என்பார் கண்டக்கால் என்கிறார். .... (9)

369 காசின்வாய்க்கரம்விற்கிலும் கரவாதுமாற்றிலிசோறிட்டு *
தேசவார்த்தைபடைக்கும் வண்கையினார்கள்வாழ்திருக்கோட்டியூர் *
கேசவாபுருடோத்தமா கிளர்சோதியாய்குறளாவென்று *
பேசுவாரடியார்கள் எந்தம்மைவிற்கவும்பெறுவார்களே. (10)

| | |
|---|---|
| காசின் வாய் கரம் விற்கிலும் | ஒரு காசுக்கு ஒருபிடி நெல்விற்கும்படியான துர்ப்பிக்ஷ காலத்திலும் |
| கரவாது | (தமக்குள் பொருள்களை) மறைத்திடாது |
| மாறு இலி | பதில் உபகாரத்தை எதிர்பாராமல் |
| சோறு இட்டு | (அதிதிகளுக்கு) அன்ன மளித்து |
| தேச வார்த்தை படைக்கும் வண் கையினார்கள் | புகழ்ச்சியான வார்த்தைகளை ஸம்பாதித்துக் கொள்ளுமவரும் உதாரமான கையையுடையவர்களுமான ஸ்ரீவைஷ்ணவர்கள் |
| வாழ் | வாழுமிடமான |
| திருக்கோட்டியூர் | திருக்கோட்டியூரில் (எழுந்தருளியிருக்கிற) |
| கேசவா | கேசவனே! |
| புருடோத்தமா | புருஷோத்தமனே! |
| கிளர் சோதியாய | மிகுந்த தேஜஸ்ஸையுடையவனே! |
| குறளா | வாமந வேஷம்பூண்ட எம்பெருமானே! |
| என்று பேசுவார் அடியார்கள் | என்றிப்படி (எம்பெருமான் திருநாமங்களைப்) பேசுமவரான பாகவதர்கள |
| எந்தம்மை விற்கவும் பெறுவார்கள | அடியோங்களை (தம் இஷ்டப்படி) விற்றுக்கொள்ளவும் அதிகாரம் பெறுவார்கள். |

* * *—ஒருகாசுக்கு ஒருபிடி நெல் விற்கும்படியான காலத்தில் தம வயிற்றைத் தாம் நிறைத்துக்கொள்வதே அரிது; தம்வயிற்றைப்பட்டினிகொண்டு பிறர்வயிற்றை நிறைப்பதென்றால் ஏதேனுமொரு ப்ரத்யுபகாரத்தைக் கணிசித்தாராகவேணும், இது உலகத்தில் ஸாமாந்ய ஜநங்களின் இயல்பு; திருக்கோட்டியூரி லெழுந்தருளியிருக்கும் ஸ்வாமிகளோவென்றால், காசின்வாய்க் கரம்விற்குங்காலத்திலும் [மஹத்தான துர்ப்பிக்ஷ காலத்திலும்] கைம்மாறு கருதாது அதிதிகளுக்கு அந்நதானம்பண்ணி நாடெங்கும் புகழ் பெற்றிருப்பர்களாம். அப்படிப்பட்ட மஹாநுபாவர் வாழுமிடத்துள்ள எம்பெருமானது திருநாமங்களை அநுஸந்திக்குமவர்கள் அடியேனைத் தங்களிஷ்டப்படி உபயோகப்படுத்திக்கொள்ளுமாறு யான் உடன்பட்டிருக்கத்தட்டில்லை யென்று—தம்முடைய சரமபர்வ நிஷ்டையின் பரமகாஷ்டையை அருச்செய்தவாறு. .... .... .... .... .... (10)

370 சீதநீர்புடைசூழ் செழுங்கழனியுடைத்திருக்கோட்டியூர் *
ஆதியானடியாரையும் அடிமையின்றித்திரிவாரையும் *
கோதில்பட்டர்பிரான் குளிர்புதுவைமன்விட்டுசித்தன்சொல் *
ஏதமின்றியுரைப்பவர் இருடீகேசனுக்காளரே. (11)

| | |
|---|---|
| சீதம் நீர் புடை சூழ் செழு கழனி உடை திருக் கோட்டியூர் ஆதியான் | குளிர்ந்த நீராலே சுற்றும் சூழப் பெற்ற செழுமை தங்கிய கழனிகளையுடைய திருக்கோட்டியூரில் (எழுந்தருளியிருக்கிற) எம்பெருமானுக்கு |
| அடியாரையும் | அடிமை செய்யும் பாகவதர்களையும் |
| அடிமை இன்றி திரிவாரையும் | அடிமை செய்யாமல் திரிகின்ற பாவிகளையும் குறித்து, |
| கோது இல் | குற்றமற்றவரும் |
| பட்டர் பிரான் | அந்தணர்கட்குத் தலைவரும் |
| குளிர் புதுவை மன் | குளிர்ந்த ஸ்ரீ வில்லிபுத்தூர்க்கு நிர்வாஹகருமான |
| விட்டு சித்தன் | பெரியாழ்வார் |
| சொல் | அருளிச்செய்த இப்பாசுரங்களை |
| ஏதம் இன்றி உரைப்பவர் | பழுதில்லாதபடி ஓதுமவர்கள் |
| இருடீ கேசனுக்கு ஆளர் | எம்பெருமானுக்கு ஆட்செய்யப் பெறுவர். |

அடி வரவு:—நா குற்றம் வண்ணம் உரகம் ஆமை பூதம் குருந்தம நளிர்ந்த கொம்பின் காசின் சீதநீர் ஆசை.

---

## நான்காம்பத்து—ஐந்தாந்திருமொழி, ஆசைவாய்ச்சென்ற

371 ஆசைவாய்ச்சென்றசிந்தையராகி அன்னையத்தனென்புத்திரர்பூமி *
வாசவார்குழலாளென்றுமயங்கி மாளுமெல்லைக்கண்வாய்திறவாதே *
கேசவாபுருடோத்தமாவென்றுங் கேழலாகியகேடிலீயென்றும் *
பேசுவாரவரெய்தும்பெருமை பேசுவான்புகில்நம்பரமன்றே. (1)

| | |
|---|---|
| ஆசை வாய் சென்ற சிந்தையர் ஆகி | (தனக்கு) ஆசையுள்ள விடத்திலே போய்ப் பதிந்த நெஞ்சையுடையராய்க் கொண்டு |
| என் அன்னை | என்னுடைய தாய் |
| என் அத்தன் | என்னுடைய தகப்பன் |
| என் புத்திரர் | என்னுடைய பிள்ளைகள் |
| என் பூமி | என்னுடைய நிலம்; |
| வாசம் வார் | பரிமளம் வீசாநின்றுள்ள |
| என் குழலாள் | கூந்தலையுடையளான என மனைவி |
| என்று | என்று சொல்லிக்கொண்டு |
| மயங்கி | (அவர்கள் பக்கல்) மோஹமடைந்து (பழுதே பல பகலும் போக்கினாலும்) |
| மாளும் எல்லைக்கண் | சரமதசையிலே |
| வாய் திறவாதே | வாயைத்திறந்து (அவர்கள் பேரைச்) சொல்லியழையாமல், |
| கேசவா | கேசவனே!' என்றும் |
| புருடோத்தமா என்றும் | புருஷோத்தமனே' என்றும |
| கேழல் ஆகிய கேடு இலீ என்றும் | 'வராஹரூபியாய் அவதரித்தவனும் அழிவில்லாதவனுமான எம்பெருமானே!' என்றும |
| பேசுவார் அவர் | சொல்லுமவர்கள் |
| எய்தும் பெருமை | அடையக்கூடிய பெருமைகளை |
| பேசுவான் புகில் | பேசப்புக்கால் |
| நம பரம அன்று | நம்மால பேசித்தலைக்கட்டப் போகாது. |

* * *—அஹங்காரமமகாரங்களை வளரச்செய்யக்கடவதான ஸம்ஸாரத்தில் ஆழங்காற்பட்டுப்பழுதே பலபகல்களைப் போக்கினாலும், உயிர் முடியுமளவிலாகிலும அந்த ஸம்ஸாரத்தில நெஞ்சைச் செலுத்தாது எம்பெருமான் திருநாமங்களை வாய்விட்டுச்சொல்லுமவர்கள் மேலுலகத்திற் பெறும பரிசுகளைச் சொல்லித்தலைக்கட்ட நாம் வல்லரல்லோ மென்கிறார். வாழ்நாள் முழுவதையும பகவந்நாமஸங்கீர்த்தநத்தாலேயே போக்கினவர்கள் பெறும் பெருமையை எம்பெருமான்றானும் பேசித் தலைக்கட்டவல்லனல்லனென்பது வெளிப்படை. "என்றுமயங்கி வாய்திறவாதே மாளுமெல்லைக்கண்" என இயைத்து, அம்மா, அண்ணா, பிள்ளை, பூமி, பெண்டாட்டி என்று சொன்னதும் மூர்ச்சையடைந்து, அவர்கள் பேரைச் சொல்லி யழைக்கவும் மாட்டாமல் மாள்வதற்குள் என்று பொருளுரைப்பாருமுளர். (1)

372 சீயினாற்செறிந்தேறியபுண்மேல் செற்றலேறிக்குழம்பிருந்தெங்கும் *
ஈயினாலரிப்புண்டுமயங்கி யெல்லைவாய்ச்சென்றுசேர்வதன்முன்னம் *
வாயினால்நமோநாரணாவென்று மத்தகத்திடைக்கைகளைக்கூப்பி *
போயினாற்பின்னையித்திசைக்கென்றும் பிணைக்கொடுக்கிலும்போகவொட்டாரே. (2)

சீயினால் செறிந்து ஏறிய புண் மேல் — சீயாலே மிகவும் நிறைந்த புண்ணின்மேல்
செற்றல் ஏறி — ஈ இருந்து முட்டையிட்டு
குழம்பிருந்து — அவை புழுத்து நீராய்ப் பாயுமளவில்
எங்கும் — உடல் முழுதும்
ஈயினால் அரிப்புண்டு — ஈயாலே அரிக்கப்பட்டு
மயங்கி — (வேதனை பொறுக்கமாட்டாமல்) மூர்ச்சையடைந்து
எல்லை வாய் சென்று சேர்வதன் முன்னம் — சரம காலத்தைக் கிட்டுவதற்கு முன்னே,
வாயினால் நமோ நாரணா என்று — வாயாலே 'நமோநாராயணாய' என்று சொல்லிக்கொண்டு
மத்தகத்திடை — உச்சியிலே
கைகளை கூப்பி — அஞ்ஜலி பண்ணி
(சரீர வியோகமான பின்பு)
போயினால் — (பரமபதம்) போய்ச்சேர்ந்தால்
பின்னை — பிறகு
பிணைக்கொடுக்கிலும் — (நித்யமுக்தர்கள்) 'நாங்கள் உத்தரவாதம் பண்ணுகிறோம்' என்றாலும்
இத்திசைக்கு என்றும் போக ஒட்டார் — (பூலோகமாகிற) இந்தத் திக்கைக் குறித்து ஒரு நாளும் (இந்த முக்தர்களைப்) போகவொட்டார்கள்;

* * *—"திண்டாவழும்புஞ் செந்நீருஞ் சீயுநரம்புஞ் செறிதசையும், வேண்டாநாற்ற மிகு முடலை!" என்ற ஐயங்கார் பாசுரத்தின்படி-பற்பல அஸஹ்யங்களுக்கு ஆகரமான இவ்வுடம்பின் வேதனைக்கனத்தினால் மயக்கமுற்று மரணமடைவதற்குமுன், வாயாலே திருவஷ்டாக்ஷரத்தை அநுஸந்தித்துக்கொண்டு முடிமேல் கைகூப்பித் தொழுமவர்கள் பரமபதம் போய்ச் சேருவர்களென்பதில் இறையும் ஐயமில்லை; அப்படி அவர்கள் அங்குப்போய்ச் சேர்ந்தபின்னர், "இவர்கள் இரண்டுநாளைக்குப் பூமண்டலத்தில் இருந்து வரட்டும்; மீண்டு வருவர்களோ வாரார்களோ என்று ஸம்சயமுண்டாகில், நாங்கள் அதற்கு உத்தரவாதம் பண்ணக்கடவோம்" என்று சில நித்யஸூரிகள் தங்களை ஈடுகாட்டினாலும்; இவர்களை அவ்விடத்திலிருந்து இந்தப்பிரக்ருதி மண்டலத்துக்கு அனுப்பவல்லார் யாருமில்லையென்கிறார்; இதனால்; * ஒழிவில் காலமெல்லாமுடனாய்மன்னி வழுவிலாவடிமை செய்யப்பெறுவர் என்றவாறு. .... ... .... ... .... (2)

373 சோர்வினாற்பொருள்வைத்ததுண்டாகில் சொல்லுசொல்லென்றுசுற்றுமிருந்து *
ஆர்வினவிலும்வாய்திறவாதே அந்தகாலமடைவதன்முன்னம் *
மார்வமென்பதோர்கோயிலமைத்து மாதவனென்னுந்தெய்வத்தைநாட்டி *
ஆர்வமென்பதோர் பூவிடவல்லார்க்கு அரவதண்டத்திலுய்யலுமாமே. (3)

சோர்வினால் — ஞாபகப் பிசகாக
பொருள் வைத்தது உண்டு ஆகில் — (எங்கேனும் ஏதாவதொரு) பொருள் வைக்கப்பட்டிருக்குமாகில்
சொல்லு சொல் என்று — (அதைச்) 'சொல்லு சொல்லு' என்று
சுற்றும் இருந்து — சூழ்ந்துகொண்டு
ஆர் வினவிலும் — எப்படிப்பட்ட அன்பர்கள் கேட்டாலும்
வாய் திறவாதே — (அவர்களுக்கு மறுமாற்றஞ் சொல்லுகைக்கும்) வாயைத் திறக்கமாட்டாதபடி
அந்த காலம் அடைவதன் முன்னம் — மரணகாலமானது வந்து கிட்டுவதற்கு முன்னமே;
மார்வம் என்பது ஓர் கோயில் அமைத்து — 'ஹ்ருதயம்' என்கிற ஒரு ஸந்நிதியை ஏற்படுத்தி
(அந்த ஸந்நிதியில்)
மாதவன் என்னும் தெய்வத்தை நாட்டி — 'திருமால்' என்கிற தேவதையை எழுந்தருளப்பண்ணி
(அந்தத்தெய்வத்தைக் குறித்து)
ஆர்வம் என்பது ஓர் பூ இட வல்லார்க்கு — 'பக்தி' என்கிற ஒரு புஷ்பத்தை ஸமர்ப்பிக்க வல்லவர்களுக்கு
அரவ தண்டத்தில் உய்யலும் ஆம் — யமபடர்களால் வரும் துன்பத்தினின்றும் தப்பிப் பிழைக்கலாகும்.

374 மேலெழுந்ததோர்வாயுக்கிளர்ந்து மேல்மிடற்றினையுள்ளேழவாங்கி *
காலுங்கையும்விதிர்விர்த்தேறிக் கண்ணுறக்கமதாவதன்முன்னம் *
மூலமாகியவொற்றையெழுத்தை மூன்றுமாத்திரையுள்ளேழவாங்கி *
வேலைவண்ணனைமேவுதிராகில் விண்ணகத்தினில்மேவலுமாமே. (4)

மேல் எழுந்தது ஓர் வாயு — ஊர்த்துவச்வாஸமானது
கிளர்ந்து — மேலெழுந்ததனால்
மேல் மிடறு — நெஞ்சானது
உள் எழ வாங்கி — கீழே இடிந்துவிழப்பெற்று
காலும் கையும் விதிர் விதிர்த்து ஏறி — கால்களும் கைகளும் பதை பதைக்கப்பெற்று
கண் உறக்கம் அது ஆவதன் முன்னம் — தீர்க்க நித்திரையாகிய மரணம் ஸம்பவிப்பதற்கு முன்னே,
மூலம் ஆகிய ஒற்றை எழுத்தை — (ஸகல வேதங்களுக்கும் காரணமாகிற 'ஓம்' என்ற பிரணவத்தை
மூன்று மாத்திரை உள் எழ வாங்கி — உச்சரிக்கவேண்டிய முறைப்படி உச்சரித்து,
வேலை வண்ணனை மேவுதிர் ஆகில் — கடல்போன்ற நிறத்தையுடையனான எம்பெருமானை ஆச்ரயித்தீர்களாகில
விண் அகத்தினில் மேவலும் ஆம — ஸ்ரீ வைகுண்டத்தில் (அடியார்கள் குழாங்களை) உடன் கூடவும் பெறலாம்.

* * *—உயிர் உடலைவிட்டு நீங்குவதற்குப் பூர்வக்ஷணத்திற் பிறக்கும் விகாரங்கள், மூன்றடிகளாற் கூறப்படுகின்றன; அவையாவன—மேல்முகமாக சுவாஸம் [மூச்சுக்] கிளம்புதலும் நெஞ்சு இடிந்து விழுதலும், கைகால்கள் பதைபதைத்தலுமாம். இப்படிப் பட்ட விகாரங்களையடைந்து மாளுவதற்கு முன்னமே, ஸகலவேதஸாரமாகிய ஓம் என்னும் பிரணவத்தை உச்சரிக்கவேண்டிய முறை வழுவாது உச்சரித்து எம்பெருமானை இறைஞ்ச வேணு மென்கிறது.

விதிர் விதிர்த்தல்—'படபட' என்று துடித்தல். [மூலமாகிய இத்யாதி] பிரணவத்திற்கு ஒரு மாத்திரையும் உண்டு; இரண்டு மாத்திரையும் உண்டு, மூன்று மாத்திரையும் உண்டு; ஒன்று இரண்டு மாத்திரைகளையுடையதாகப் பிரணவத்தை உச்சரிக்குமவர்களுக்கு க்ஷுத்ரபல ப்ராப்தியேயுள்ளது; அதனை மூன்று மாத்திரையுள்ளெழவாங்குமவர்களுக்கே பரமபத ப்ராப்தியுண்டு என்பதை ஸ்ரீபாஷ்யத்தில் ஈக்ஷதி கர்மாதிகரணத்தில் தெளியக்காணலாம்: மூன்று மாத்திரைகளிற் குறைபடாமல் உச்சரித்தலே மூன்று மாத்திரையுள்ளெழவாங்குதலாம். ... ... ... ... ... ... (4)

375 மடிவழிவந்துநீர்ப்புலன்சோர வாயிலட்டியகஞ்சியும்மீண்டே *
கடைவழிவாரக்கண்டமடைப்பக் கண்ணுறக்கமதாவதன்முன்னம் *
துடைவழியும்மைநாய்கள்கவரா சூலத்தாலும்மைப்பாய்வதுஞ்செய்யார் *
இடைவழியில்நீர்கூறையுமிழவீர் இருடீகேசனென்றேத்தவல்லீரே. (5

(யமகிங்கரர்களைக்கண்ட பயத்தினால்)

மடி புலன் வழி வந்து நீர் சோர — லிங்கத்தின் வழியாக வந்து மூத்திரநீர் பெருகவும்,
வாயில் அட்டிய கஞ்சியும் கண்டம் அடைப்ப — வாயிலே பெய்த பொரிக் கஞ்சியானது கழுத்தை அடைக்கவும்,
மீண்டும் கடை வழி வார — மறுபடியும் கடைவாய் வழியாலே (அந்தப் பொரிக் கஞ்சி வழியா நிற்கவும்
கண் உறக்கம் அது ஆவதன் முன்னம்—:
இருடீகேசன என்று ஏத்த வல்லீர் — 'ஹ்ருஷீகேசன்' என்று (எம்பெருமான் திருநாமத்தைச் சொல்லி) ஸ்தோத்திரம்பண்ண வல்லவர்களே!
நாய்கள் உம்மை துடை வழி கவரா — (யமலோகத்திலுள்ள) செந்நாய்களானவை உங்களைத் துடையிலே கவ்வமாட்டா;
(மங்கிங்கரர்கள்,)
உம்மை சூலத்தால் பாய்வதும் செய்யார் — உங்களை சூலாயுதத்தினால் குத்தவும் மாட்டார்கள்,
நீர் இடை வழியில் கூறையும் இழவீர் — நீங்கள் நடுவழியில் வஸ்திரத்தையும் இழக்க மாட்டீர்கள்.

* * *—மரணகாலம் கிட்டும்போது, கண்டவிடமெங்கும் யமகிங்கரர்கள் தென்படுவ நாக நினைத்து, அதனாலுண்டான அச்சத்தினால் கிடந்தபடியே மூத்திரம்விட்டுக்கொள்ளுவர் கள்; வாயில்விட்ட பொரிக்கஞ்சி உள் இழியமாட்டாது கழுத்தையடைத்துக் கடைவாய் வழியாகப் பெருகும்; இப்படிப்பட்ட அவஸ்தைகள் பட்டுக்கொண்டு கிடக்கும்போதே, எம்பெருமான் பேர்சொல்லக் காலம வாய்க்காது மாளப்பெற்றால், யமலோகம் போக நேர்ந்து, வழியிடையில் செந்நாய்களால் தொடை கவ்வப்பட்டும், யமகிங்கரர்களினால் சூலங் கொண்டு குத்தப்பட்டும், அரையிற் கூறையை இழக்கப்பெற்றும; இப்படி பல துன்பங்கள் படவேண்டி வருமாதலால், அவற்றுக்கெல்லாம் இடமறும்படி முந்துறமுன்னமே எம்பெரு மானை ஏத்தப்பெறில் இடர்ப்பாடு ஒன்றும படநேராது என்கிறார். ... (5)

**376** அங்கம்விட்டவையைந்துமகற்றி ஆவிமூக்கினிற்சோதித்தபின்னை *
சங்கம்விட்டவர்கையைமறித்துப் பையவேதலைசாய்ப்பதன்முன்னம் *
வங்கம்விட்டுலவுங்கடற்பள்ளிமாயனை மதுசூதனைமார்பில்
தங்கவிட்டுவைத்து * ஆவதோர்கருமஞ்சாதிப்பார்க்கு என்றுஞ்சாதிக்கலாமே. (6)

| | |
|---|---|
| அவை ஐந்தும் அங்கம் விட்டு அகற்றி | பஞ்ச பிராணன்களும் உடலை விட்டு அகன்று போக, |
| | (பின்பு) |
| அவர் | அருகு உள்ளவர்கள் |
| மூக்கினில் ஆவி சோதித்த பின்னை | மூக்கில (கையை வைத்து) 'பிராணன இருக்கிறதா இல்லையா' என்று சோதித்துப் பார்த்து, இல்லையென்றறிந்த பின்பு |
| சங்கம் விட்டு | (அவருடைய உயிரில் ஆசையை விட்டு, |
| | (அங்குள்ளாரை நோக்கி, 'இப்போதை நிலைமை என்?' என்று வந்தவர்கள் கேட்க;) (அவர்களுக்குப் பதிலாக) |
| கையை மறித்து | கையை விரித்துக்காட்டி |
| பைய தலை சாய்ப்பதன் முன்னம் | மெள்ள மெள்ள (தங்கள் தலையைத் தொங்கவிட்டுக் கொள்வதற்கு முன்னே,— |
| வங்கம் விட்டு உலவும் கடல் பள்ளி மாயனை | கப்பல்களானவை இடைவிடாமல் திரியப்பெற்ற கடலில் பள்ளி கொள்பவனும் ஆச்சரிய சக்தி யுக்தனும் |
| மது சூதனை | மதுவைக் கொன்றவனுமான எம் பெருமானை |
| மார்பில் தங்கவிட்டு வைத்து | ஹ்ருதயத்தில் அமைத்து, |
| ஆவது ஓர் கருமம் சாதிப்பார்க்கு | ஸ்வரூபத்துக்குச் சேர்ந்ததொரு (உபாயவரணமாகிற) காரியத்தை ஸாதிக்குமவர்களுக்கு |
| என்றும் சாதிக்கலாம் | எக்காலும் பகவதநுபவம்பண்ணப் பெறலாம். |

* * *—பிராணம், அபாநம், வியாநம, உதாநம, ஸமாநம என்ற பஞ்ச ப்ராணன்க ளும உடலைவிட்டொழிந்தபின்பு, அருகிலுள்ள பந்துக்கள் அந்தப்பிணத்தின் மூக்கில் கையை வைத்துப் பார்த்து 'ஆவிபோயிற்று' என்று உறுதியாகத் தெரிந்துகொண்டு அவ்வுடலில் ஆசையை விட்டிட்டு, யாரேனும் வந்து 'அவர்க்குத் திருமேனி எப்படியிருக்கின்றது?' என்று கேட்கில், அதற்கு அவர்கள் வாய்விட்டு மறுமொழி சொல்லமாட்டாமல், 'உயிர்போயிற்று' என்பதைக்காட்டும்படி கையைவிரித்துக்காட்டிவிட்டு, ஒரு மூலையிலிருந்துகொண்டு தலை கவிழ்ந்து அழுமபடியான தசை நேரிடுவதற்குமுன், க்ஷீராப்திசாயியான எம்பெருமானை நெஞ்சால் நினைத்துக்கொண்டு ஸ்வரூபாநுரூபமான ப்ரபத்தியை அநுஷ்டிப்பவர்கள், எந்நா ளும் அநுபவிக்கக்கூடிய பேற்றைப் பெறுவர்களென்கிறார். ... ... (6)

**377** தென்னவன்றமர்செப்பமிலாதார் சேவதக்குவார்போலப்புகுந்து *
பின்னும்வன்கயிற்றாற்பிணித்தெற்றிப் பின்முன்னாகவிழுப்பதன்முன்னம் *
இன்னவனினையானென்றுசொல்லி யெண்ணியுள்ளத்திருளறநோக்கி *
மன்னவன்மதுசூதனனென்பார் வானகத்துமன்றுடிகள்தாமே. (7)

| | | | |
|---|---|---|---|
| செப்பம் இலாதார் தென்னவன்தமர் | ருஜுவான செய்கை இல்லாதவர்களான யமகிங்கரர்கள் | என்று சொல்லி | என்று (அவனுடைய ஸ்வரூப ஸ்வபாவங்களைச்) சொல்லி |
| சே அதக்குவார் போல புகுந்து | எருதுகளை அதக்கி ஓட்டுமவர்களை போல வந்து, | எண்ணி | (அவற்றை) நெஞ்சாலும் மநநம் பண்ணி |
| பின்னும் | அதன்மேல் | | |
| வல் கயிற்றால் பிணித்து எற்றி | வலிவுள்ள பாசங்களினால் கட்டி அடித்து | உள்ளத்து இருள் அற நோக்கி | ஹ்ருதயத்திலுள்ள (அஜ்ஞாந மாகிற) அந்தகாரம் நீங்கும்படி (அவ்வெம்பெருமானை) ஸாக்ஷாத் கரித்து, |
| பின் முன் ஆக இழுப்பதன் முன்னம் | தலைகீழாக (யமலோகத்துக்கு) இழுத்துக்கொண்டு போவதற்கு முன்னே,— | மதுசூதனன் என்பார் | (தேஹமுள்ளதனையும்) 'மதுஸூத நனே' என்று அவன் திருநாமங் களையே சொல்லிக்கொண்டிருக்கு மவர்கள் |
| மன்னவன் | (அந்தத் தென்னவனுக்கும்) மன்ன வனான எம்பெருமான் | வான் அகத்து | ஸ்ரீவைகுண்டத்திலே |
| இன்னவன் இனை யான் | இப்படிப்பட்ட ஸ்வரூபத்தை யுடையவன் இப்படிப்பட்ட ஸ்பாவத்தை யுடையவன் | மன்றுடிகள் தாம் | (எம்பெருமானோடே நித்ய ஸூரி களின் கைங்கரியத்துக்காக) மன்றுடப் பெறுவார்கள். |

* * *—ஈரநெஞ்சு: ஈரநெஞ்சு அற்றவர்களான யமகிங்கரர்கள், தயாதாக்ஷிண்ய மின்றி எருதுகளை அதக்குவார்போலவந்து கட்டியடித்து, செத்தநாய்களை இழுத்துக் கொண்டு போவது போலத்தலைகீழாக இழுத்துக்கொண்டு யமலோகத்துக்குப் போமபடி யான துர்த்தசை நேரிடுவதற்குமுன்னமே, அந்த யமனுக்கும் தலைவனான எம்பெருமானு டைய ஸ்வரூபஸ்வபாவங்களை வாயாற் சொல்லியும நெஞ்சால் நினைத்தும், இவ்வகைகளாலே அவ்வெம்பெருமானை ஸாக்ஷாத்கரிக்கப்பெற்று, மேலுள்ளகாலத்தையும் திருநாமஸங்கீர்த்த நத்தினாலேயே போக்கவல்லவர், பரமபதமபோய்ச்சேர்ந்து, நித்யஸூரிகளுடைய கைங்கரி யத்தைத் தாம் பெறுதற்கு எம்பெருமானோடு மன்றுடப் பெறுவர்கள் என்கிறார்; எனவே, பரமபத ப்ராப்தியில் ஸந்தேஹமில்லை யென்றவாறு. தென்னவன்—தக்ஷிணதிக்குக்குத் தலை வன், யமன். செப்பம்—செவ்வை. எற்றுதல்–அடித்தல். "நாமடிதலென்னையனேக தண்டஞ் செய்வதா நிற்பர் நமன்றமர்கள்." என்பதைநினைக்க. [வானகத்துமன்றுடிகள்.] மன்றுதல்-- இரந்துகேட்டல். "வானகம மன்றாத்து ஆடிகள்."—என இயைத்து, பரமபதத்தின்ள நித்திய ஸூரி ஸபையில் ஸஞ்சரிக்கப்பெறுவர் கள் என்று பொருளுரைப்பாருமுளர். .... (7)

378 கூடிக்கூடியுற்றார்களிருந்து குற்றம்நிற்கநற்றங்கள்பறைந்து *
பாடிப்பாடியோர்பாடையிலிட்டு நரிப்படைக்கொருபாகுடம்போலே *
கோடிமூடியெடுப்பதன்முன்னங் சௌத்துவவுடைக்கோவிந்தனோடு *
கூடியாடியவுள்ளத்தரானால் குறிப்பிடங்கடந்துய்யலுமாமே. (8)

| | | | |
|---|---|---|---|
| | (ஏராளமான பிரைபு,) | நரிப்படைக்கு ஒரு பாகுடம் போலே | நரிக்கூட்டத்துக்கு ஒரு பாகுக் குடத்தைப பச்சையாகக் கொடுப்பதுபோல (இப்பிணத் தைக் கொடுக்கைக்காக,) |
| உற்றார்கள் கூடி கூடி இருந்து | பந்துக்களானவர்கள் திரள் திர ளாகக் கூடியிருந்து கொண்டு | | |
| குற்றம் நிற்க நற்றங்கள் பறைந்து | (செத்தவன்செய்த) குற்றங்கள் (பல) கிடக்க (அவற்றையெல் லாம் விட்டு விட்டு) (சிறிது) நன்மையாகத் தோன்றும்படி யான வற்றைச்சொல்லி, | எடுப்பதன் முன்னம் | (சுடுகாட்டுக்குக் கொண்டு போவ தாக) எடுப்பதற்கு முன்னே,— |
| | | கௌத்துவம் உடை கோவிந்தனோடு | கௌஸ்துபத்தை (திருமார்பிலே) உடைய எம்பெருமான் பக்கலில் |
| பாடிப் பாடி | (அழுகைப் பாட்டுக்களைப்) பலகால் பாடி | கூடி ஆடிய உள்ளத்தர் ஆனால் | சேர்ந்து அவகாஹித்த நெஞ்சை யுடையவர்களாக ஆனால், |
| ஓர் பாடையில் இட்டு | ஒரு பாடையிலே படுக்க வைத்து | குறிப்பு இடம் கடந்து உய்யலும் ஆம் | யமலோகத்தை அதிக்ரமித்து (பரமபதம்போய்ச்சேர்ந்து) உஜ் ஜீவிக்கப் பெறலாம். |
| கோடி மூடி | வஸ்திரத்தையிட்டு மூடி | | |

* * *—உலகத்தில் ஒருவன் மரணமடைந்தானாகில், அவனுடைய சுற்றத்தார்கள் அங்குக் கூட்டங்கூட்டமாக இருந்துகொண்டு,

அப்பா! நீ,—

காலையெழுந்து குளஞ்சென்றுநீராடி
மாலேவணங்கி மனமகிழ்ந்த மகனன்றே?
பாகவதபாரதங்கள் பாஷ்யங்கள் பளபளவென்
றோதியுணர்ந்திவ்வுலகில் உகந்துய்ந்தமகனன்றே?
சவைநடுவிற் சதிராகச்சென்றுநீ வாய்திறந்தால்
கவிகளெல்லாமாநந்தக் கண்ணநீர் சொரியாரோ?
சேலத்துச்சேலையைநீ சீருறவேயுடுத்தக்கால்
ஞாலத்து மாதரெல்லாம நெஞ்சுருகி நையாரோ?
அடியிணையுமங்கைகளு மகல்மார்புமந்தோளும்
முடியணியுமலரழகும் ஆர்க்கேனும் வாய்க்கும்மோ?
இரந்தவர்கட் கெப்பொருளுமில்லையெனச் சொல்லாதே
சுரந்துநீ பெற்றபுகழ் சொல்லித்தான் முடியும்மோ?
வெள்ளென்ற வேஷ்டியொடும் விளங்குபுரி நூலினொடும்?
மெள்ளநீபுறப்பட்டால் மன்மதனும் மறையானோ?

என்றாற்போல, அவன் விஷயமாகச்சில நன்மைகளை யேறிட்டுப் பாட்டுப்பாடிப் பின்பு பாடையிற்படுக்கவைத்து அதனை வஸ்திரத்தினால் மூடிக்கட்டிக் காட்டுக்கெடுத்துக்கொண்டு போவர்கள்; பின்பு பகவந்நாமஸங்கீர்த்தநத்துக்கு அவகாசமபெறாது யமகிங்கரர்கையில் அகப்பட்டுத் திகைக்கவேண்டி வருமாதலால் மரணகாலத்துக்கு முன்னமே எம்பெருமான் பக்கலில் நெஞ்சைச் செலுத்தினால் யமலோகத்துக்குத் தப்பிப்பிழைக்கலாமென்றவாறு.

குற்றம் நிற்க நற்றங்கள் பறைந்து—துஷ்கர்மங்கள் எத்தனை செய்யப்பட்டிருந்தாலும், அவற்றிலொன்றையுஞ் சொல்லமாட்டார்கள்; ஸத்கர்மம ஒன்று செய்யப்பட்டிருப்பினும், அதனைப் பலவாகப்பன்னிப் பகர்வர் என்க. [நரிப்படைக்கோரு பாகுடம்போலே.] கட்டிடிருந்த பாடையை மூடிக்கொண்டு போவதைப்பார்த்தால், சுடுகாட்டிலுள்ள நரிப்படைகளுக்கு உணவாமபடி பாகுக்குடங்கொண்டுபோகிறார்களோ என்று நினைக்கும்படியாயிருக்குமென்க; அன்றி, 'யமலோகத்திற் பாபிஷ்டர்களை நலிவதற்கென்று ஏற்படுத்தப்பட்டுள்ள நரிப்படைகளுக்குப் பாகுக்குடம கொண்டுபோவதுபோல' என்றும உரைக்கலாமென்பர் சிலர்; பாகு—குடம, பாகுடம், தொகுத்தல் விகாரம: "ஒண்சங்கதை" போல. இனி, பாகுடம் என்றவிது—"ப்ராப்ருதம்" என்ற வடசொல்லின் விகாரமென்றுங்கொள்ளலாம்; அப்போது, நரிப்படைகளுக்குப் பாதகாணிக்கை கொண்டுபோவதுபோல என்பது பொருள்; ப்ராப்ருதம் பாதகாணிக்கை; "ப்ரபவுவரஜிநப்ராப்ருதஸ்ருதாம்". என்று தயாசதகத்தில் தூப்புல்பிள்ளை அருளிச்செய்தமைகாண்க. கௌததுவம்—கௌஸ்துபம் குறிப்பிடம்—பாபங்களின்பலனை அநுபவிப்பதற்கென்று குறிக்கப்பட்ட இடம்; எனவே, யமலோகமாயிற்று. கடத்தல்—அங்குச்செல்லாதொழிதல். ... ... ... .... (8)

379 வாயொருபக்கம்வாங்கிவலிப்ப வார்ந்தநீர்க்குழிக்கண்கள்மிழற்ற *
தாயொருபக்கந்தந்தையொருபக்கந் தாரமுமொருபக்கமலற்ற *
தீயொருபக்கஞ்சேர்வதன்முன்னஞ் செங்கண்மாலொடுஞ்சிக்கனச்சுற்றமாய் *
ஒருபக்கம்நிற்கவல்லாருக்கு அரவதண்டத்திலுய்யலுமாமே. (9)

| | |
|---|---|
| வாய் ஒரு பக்கம் வாங்கிவலிப்ப | வாயானது (வாயுவினாலே) ஒருக்கடுத்து வலிக்கவும் |
| வார்ந்த நீர் குழி கண்கள் மிழற்ற | பெருகாநின்ற நீரையுடையதும் உள்ளே இடிய இழிந்தது மான கண்ணானது அலமந்து நிற்கவும், |
| ஒரு பக்கம் தாய் ஒரு பக்கம் தந்தை ஒரு பக்கம் தாரமும் | ஒரு பக்கத்தில் தாயாரும் மற்றொரு பக்கத்தில் தகப்பனாரும் இன்னொரு பக்கத்தில் மனைவியும் (இருந்து கொண்டு) |
| அலற்ற | கதறி அழவும், |
| ஒரு பக்கம் தீ சேர்வதன் முன்னம் | மற்றொரு பக்கத்திலே நெருப்பானது (மார்வில் வந்து) சேருவதற்கு முன்னே |
| செம்கண் மாலொடும் | புண்டரீகாக்ஷனான எம்பெருமானை |
| சிக்கன சுற்றம் ஆய் | நிருபாதிக பந்துவாகக் கொண்டு |
| ஒரு பக்கம் நிற்க வல்லாருக்கு | அவனொருவனிடத்திலேயே பக்ஷபாதமாய் நிலைத்து நிற்கவல்லவர்களுக்கு |
| அரவ தண்டத்தில் உய்யலும் ஆம் | யமதண்டனையில் நின்றும் தப்பிப் பிழைக்கப் பெறலாம். |

***—மரணஸமயத்தில் வாயுவிகாரத்தாலே வாய் ஒருக்கடுத்து வலிக்கும்; நெடுநாளாக ஆஹாரமற்றுக்கிடப்பதனால் உள்ளிழிந்துள்ள கண்கள் மருளமருளவிழிக்கும்; இவ்விகாரங்களைக்கண்டு தாயர், தந்தையர், மனைவியர் முதலானோர் மூலைக்கொருவராக உட்கார்ந்துகொண்டு கண்ணீர்விட்டுக்கதறி அழுவர்கள்; இப்படிப்பட்ட ஸந்நிவேசத்தில், உயிர்போயிற்றென்று சிலர் வந்து மார்பில் நெருப்பைக்கொட்டுவர்கள்; ஆனபின்பு, சரீரம் வலிவுற்றிருக்குங்காலங்களைப் பாழேகழித்தவர்கள் சரமஸமயத்திற்படும்பாடு இதுவாகையால், அப்போது பகவந்நாமஸங்கீர்த்தநத்துக்கு அவகாசம்பெறாமல் யமகிங்கரர்களின் நலிவுக்கு ஆளாகவேண்டிவரும்; ஆதலால் சரீரம் கட்டுக்குலைவதற்கு முன்னமே எம்பெருமான்றன்னையே ஸர்வவித பந்துவுமாகப் பற்றப்பெற்றால் யமதண்டனைக்குத் தப்பிப்பிழைக்கலாமென்றவாறு.

தாரம்—தாரா: என்ற வடசொல் விகாரம். "சிக்கன நிற்கவல்லாருக்கு" என்று இயைப்பினுமாம்; த்ருடாத்யவஸாய யுக்தராயிருப்பவர்கட்கு என்று பொருளாம். (9)

380 செத்துப்போவதோர்போதுநினைந்து செய்யுஞ்செய்கைகள்தேவபிரான்மேல் *
பத்தராயிறந்தார்பெறும்பேற்றைப் பாழித்தோள்விட்டுசித்தன்புத்தூர்க்கோன் *
சித்தம்நன்கொருங்கித்திருமாலைச் செய்தமாலையிவைபத்தும்வல்லார் *
சித்தம்நன்கொருங்கித்திருமால்மேல் சென்றசிந்தைபெறுவர்தாமே. (10)

| | |
|---|---|
| செத்துப்போவது ஓர் போது | இறந்துபோகுங் காலத்திலே |
| செய்யும் | (யமபடர்களால்) செய்யப்படுகிற |
| செய்கைகள் | (கடுஞ்) செயல்களை |
| நினைந்து | நினைந்து |
| தேவபிரான்மேல் | தேவபிரான் பக்கலில் |
| பத்தர் ஆய் | அன்பு பூண்டவர்களாய் இருந்து |
| இறந்தார் | (பின்பு) இறந்தவர்கள் |
| பெறும் பேற்றை | அடையக்கூடிய பலன்களைக் குறித்து, |
| பாழி தோள் | (ஸம்ஸாரத்தை வென்ற) மிடுக்கையுடைய தோள்களையுடையவரும் |
| புத்தூர் | வில்லிபுத்தூருக்கு |
| கோன் | தலைவருமான |
| விட்டுசித்தன் | பெரியாழ்வார் |
| சித்தம் | (தம்முடைய) நெஞ்சை |
| திருமாலை | திருமால் திறத்தில |
| நன்கு | நன்றாக |
| ஒருங்கி | ஒருப்படுத்தி |
| செய்த | அருளிச்செய்த |
| மாலை | சொல்மாலையாகிய |
| இவை பத்தும் | இப்பத்துப் பாட்டுக்களையும் |
| வல்லார் | ஓதவல்லவர்கள் |
| சித்தம் நன்கு ஒருங்கி | (ஆழ்வார்க்குப் போல) நெஞ்சு ஒருபடிப்படப் பெற்று |
| திருமால்மேல் | திருமால் பக்கலிலே |
| சென்ற | குடிகொண்ட |
| சிந்தை | மநஸ்ஸை |
| பெறுவர் | உடையராவர் |

* * *—'மரணகாலத்தில் யமபடர்கள் பொறுக்கவொண்ணாதபடி நலிவர்களே!' என்று நினைத்துத் தீவழியிற் செல்லாமல் எம்பெருமான் பக்கலில் அன்புபூண்டிருந்து, பின்பு இறப்பவர்கள் பெறும்பேற்றைக் குறித்துப் பெரியாழ்வாரருளிச்செய்த இப்பாசுரங்களை ஓதவல்லவர்கள், எம்பெருமானிடத்துக் குடிகொண்ட நெஞ்சையுடையராகப் பெறுவர்களென்று பலஞ்சொல்லித் தலைக்கட்டியவாறு.

அடிவரவு:—ஆசை சீ சோர்வு மேல் மடி அங்கம் தென்னவன் கூடி வாய் செத்து காசு.

## நான்காம்பத்து—ஆறுந்திருமொழி, காசுங் கறையுடை.

அவதாரிகை:—விஷயாந்தரங்களிற் பற்றற்று எம்பெருமான் திருநாமங்களை இனிமையாகப் பேசவல்லா ரல்லாதாரையும் ஒரு வழியால் அவனது திருநாமத்திலே அந்வயிப்பித்து உய்வு பெறுவிக்கவேணுமென்று திருவுள்ளம்பற்றி, ஒரு பயனுக்கு முறுப்பாகாதபடி க்ஷுத்ரதேவதைகளின் பெயர்களைத் தந்தம் பிள்ளைகளுக்கு இடுமவர்களை விளித்து, 'எம்பெருமானது திருநாமத்தை நீங்கள் பெற்ற பிள்ளைகளுக்கு இட்டு வாயார வாழ்த்தினீர்களாகில் அப்பிள்ளைகளினுடைய தாய்மார் நற்கதிபெற்று உய்ந்து போவார்' என்று ஆழ்வார் உபதேசித்தருளுகிறார் இத்திருமொழியில். .... .... ... (*)

381 காசுங்கறையுடைக்கூறைக்கும் அங்கோர்சற்றைக்கு
மாசையினால் * அங்கவத்தப்பேரிடும்ஆதர்காள் *
கேசவன்பேரிட்டு நீங்கள்தேனித்திருமினோ *
நாயகன்நாரணன் தமமன்னைநரகம்புகாள். (1)

காசுக்கும் கறை உடை கூறைக்கும் ஓர் சற்றைக்கும் ஆசையினால் — ஒரு காசுக்காகவும் (தலைப்புகளில் நல்ல) கறைகளையுடைய வஸ்திரத்துக்காகவும் ஒரு கட்டுக் கற்றைக்காகவும் (உண்டான) ஆசையாலே

அவத்தம் பேர் இடும் ஆதர்காள் — மிகவும் தீயதான க்ஷுத்ரதேவதைகளின்) பெயர்களை (உங்கள பிள்ளைகளுக்கு) இடுகிற அறிவு கெட்டவர்களே! நீங்கள்—;

கேசவன் நாயகன் நாரணன் பேர் இட்டு — கேசவனென்னும் திருநாமத்தையுடையவனும் ஸர்வ சேஷியுமான நாராயணனுடைய திருநாமங்களை (உங்கள் பிள்ளைகளுக்கு) இட்டு

தேனித்து இருமின் — மகிழ்ச்சிகொண்டிருங்கள்; (அப்படி நாமகரணஞ் செய்தால்)

தம் மன்னை நரகம் புகாள் — (அப்பிள்ளைகளுடைய) தாய்மார் துர்க்கதியை அடையமாட்டார்கள்.

* * *—உலகத்திற் பலர் தமமக்களுக்கு இந்திரன், சந்திரன், குபேரன் என்றிவை போன்ற பெயர்களை இடுவது—ஸ்வயம் ப்ரயோஜநமாகவுமன்று, ஆமுஷ்மிகமான பயனைக் கருதியுமன்று; பின்னை என் கொண்டென்னில்; அப்பெயர்களை இட்டால் நாலுகாசுகிடைக்கும், நல்ல ஆடை கிடைக்கும், ஒரு கட்டுக்கற்றை கிடைக்கும் என்றிப்புடைகளிலே உண்டான விருப்பத்தினாலாம். இவ்விருப்பங்கொண்டு அப்பெயர்களை இடுமவர்கள் இறையும் அறிவுள்ளவரல்லர்; அவர்கள் இடுமபெயர்களும் (ஸ்வரூபத்துக்குத்) தீங்குவிளைக்கத்தக்கவை; ஆதலால் அவற்றை ஒழித்து அப்பிள்ளைகளுக்கு எம்பெருமான் திருநாமங்களை இட்டால்,

அவர்களைப்பெற்ற தாய் தந்தையர் நமன்றமர் கையிலகப்பட்டு நலிவுபடாமல் உய்ந்து போவர் என்று உபதேசித் தருளியவாறு. இங்ஙனிடாதொழியில், அவர்கள் நரகம்புகுவ ரென்பது வெளிப்படை.

கூறைக்கும் என்றவிடத்துள்ள ஆறனுருபு, காசும் என்பதனோடுங் கூட்டியுரைக்கப் பட்டது. முதலடியிலும் இரண்டாமடியிலும் உள்ள 'அங்கு' என்பவை—அசைச்சொற்கள். கற்றை—கதிர்த்தொகுதி. அவத்தம்—அவஸ்யம் என்னும் வடசொல்விகாரம்; தீங்கு என்பது அதன் பொருள். அன்றி, அபத்யம் என்னும் வடசொல்லின் விகாரமாமென்பது சிறவா தென்க: "அவத்தங்கள் விளையும்" என்ற திருவாய்மொழியையுங் காண்க. ஆதர்—குருடர்க் கும், அறிவில்லாதார்க்கும் பெயர்; தம்மனை—'தமப்பன்' என்பதுபோல ஒரு சொல்லாக வழங்கு மென்க. இங்கு அன்னையைக்கூறியது பிதாவுக்கும் உபலக்ஷணமென்க.

நான்காமடியை அடைவே அந்வயித்துப் பொருள்கொள்ளுதலும் ஒக்கும்; நாயக னுகிய நாராயணனுடைய பெயர்பூண்ட பிள்ளையின் தாய் நரகப்புகாள் எனக் கருத்துக் காண்க. .... .... .... ... ... (1)

382 அங்கொருகூறை அரைக்குடுப்பதனாசையால் *
மங்கியமானிடசாதிப் பேரிடுமாதர்காள் *
செங்கணெடுமால் சிரீதராவென்றழைத்தக்கால் *
நங்கைகாள்நாரணன் தம்மன்னைநரகம்புகாள். (2)

| | | | |
|---|---|---|---|
| | | (நீங்கள் உங்கள் பிள்ளையை) | |
| அங்கு ஒரு கூறை அரைக்கு உடுப்ப தன் ஆசையால் | அந்த ரீசரிடத்தில ஒருவஸ்த்ரத்தை (ப்பெறறு) அரையில உடுக்க வேணுமென்னுமாசையினுல் | செம் கண் நெடு மால் சிரீ தரா என்று அழைத்தக்கால் | புண்டரீகாக்ஷனை ஸர்வேச்வரனே! ஸ்ரீ தரனே! என்று [இபபெயா களை இட்டு] அழைததீர்களாகில் |
| மங்கிய மானிடசாதி பேர் இடும் ஆதர்காள | கெட்டுக் கிடக்கிற மநுஷ்யஜாதியிற் பிறநதவர்களுடைய பெயரை இடுகிற குருடர்களே! | நாரணன தம்மனனை | நாராயணநாமததைப் பூணட அப் பிள்ளையினுடைய தாயானவள |
| நங்கைகாள் | சொல்லிறறை அறியவல்ல மதியினுல் நிறைநதவர்களே! | | நரகம் புகாள்—. |

* * *—அஸத்கல்பமாய்க்கிடக்கிற மநுஷ்யஜாதியின் பெயரைச சில அறிவு கேடர் தங்கள் பிள்ளைகளுக்கிடுவதற்குக் காரணம யாதெனில்? 'இப்பெயரை இட்டால் சில தநிகர் கள் இதற்கு உகந்து, அரையிலுடுக்க ஆடை கொடுப்பர்கள்' என்ற விருப்பமேயாம்; நல்ல அர்த்தத்தைத் தாமாக அறியமாட்டாதொழியினும, பிறர் சொல்லில் கேட்டுணரத்தக்க புத்தியினுல் நிறைந்தவர்களே! உங்கள் பிள்ளைகளுக்கு எம்பெருமான் திருநாமத்தை யிட்டழைத்தால் அப்பிள்ளைகளின் தாய்தந்தையர் நரகம் புகாதொழிவர் என்கிறுர்.

"விரதங்கெட்டும் சுகமபெறவில்லை" என்ற உலகநீதிப்படி—மேலுத்தரீயத்துக்காக மற்றொருவனைத் தேடியோடவேண்டிய அருமையுண்டென்பார், "ஒரு கூறை அறைக் குடுப்பதனாசையால்" என்றுர். அங்கு என்பதை அசைச்சொல்லாகவுங் கொள்ளலாம். அரைக்கு—அரையில்; உருபுமயக்கம. மங்குதல்—கெட்டுப்போதல. "மானிடசாதியின் பேரிடும்" என்றும பாடமுண்டு. .... .... .... (2)

383 உச்சியிலெண்ணெயுஞ் சுட்டியும்வளையுமுகந்து *
எச்சம்பொலிந்தீர்காள் என்செய்வான்பிறர்பேரிட்டீர் *
பிச்சைபுக்காகிலும் எம்பிரான்திருநாமமேநச்சுமின் *
நாரணன் தம்மன்னைநரகம்புகாள். (3)

எச்சம் பொலிந்தீர்காள் — ஸந்தாநத்திஞல் விளங்குமவர்களே !
உச்சியில எண்ணெயும் சுட்டியும் வளையும் உகந்து — உச்சியில் (தடவத்தக்க) எண்ணெயையும் (நெற்றியில் தொங்கும்படி கட்டத்தக்க) சுட்டியையும் (கையில் அணியத்தக்க) வளையையும் விரும்பி
என் செய்வான் — ஏதுக்காக
பிறர் பேர் இட்டீர் — [எம்பெருமானை யொழிந்த] மற்றவர்களுடைய பெயர்களை [உங்கள பிள்ளைகளுக்கு] இட்டீர்கள்?

பிச்சை புக்கு ஆகிலும் — பிச்சையெடுத்து ஜீவித்தாகிலும்
எம்பிரான் திருநாமமே நச்சுமின் — எம்பெருமானுடைய திருநாமத்தையே விரும்பி இடுங்கள;
[அப்படி இட்டால்]
நாரணன் *** இத்யாதி பூர்வவத்—.

* * *—ஸந்ததி பெற்றவர்கள் அந்தப் பிரஜைகளுக்கு உடம்பிலணியத்தக்க சில ஆபரணம் முதலியவற்றைப் பெறுவிக்கவேணுமென விரும்பி, அதற்குறுப்பாகப் பிறர் பெயரை இடுவர்கள்; அதனுல் ஒரு பயனும் பெறமுடியாது; மேலும் பின்பு நரகாநுபவமாகிற அநர்த்தமும விளையும். எம்பெருமானது திருநாமத்தை உங்கள் பிரஜைகளுக்கு இட்டால், அதனுல் ஒருவகை ஐச்வரியமும கிடைக்கமாட்டாதென்று உங்களுக்குக் கருத்தாகில் ஆயிடுக; பிச்சையெடுத்துப் பிழைத்தாகிலும பகவந்நாமத்தைப் பேணிஞல் பரலோக வாழ்ச்சிக்குப் பாங்காயிடுமென்று உபதேசித்தவாறு.

ஒரு அந்தணன் தன் மகனுக்கு நாமகரண காலத்தில், “ஐச்வரியம் தாவல்லாஞெருவனுடைய பெயரை இப்பிள்ளைக்கு இடவேணும்” என்றெண்ணிக் ‘குபேரன் பெயரை இடு’ என்றவளவிலே, “ஐளிபிளி என்று பேரிட்டழைத்து ஜீவிப்பதிற் காட்டிலும், நாராயணன் என்ற திருநாமத்தைச் சாத்திப் பிச்சை புக்காகிலும ஜீவிக்கவமையும்” என்ருர் ஒரு ஆஸ்திகர் என்பதொரு கதை இங்கு அறியத்தக்கது. (ஐளிபிளி—குபேரன் பெயர்; ஜைளபிளஃ என்பது வடமொழிப் பெயர்.) .... .... .... .... (3)

384 மானிடசாதியில்தோன்றிற்ருேர் மானிடசாதியை *
மானிடசாதியின்பேரிட்டால் மறுமைக்கில்லை *
வானுடைமாதவா கோவிந்தாவென்றழைத்தக்கால் *
நானுடைநாரணன் தம்மன்னைநரகம்புகாள். (4)

மானிட சாதியில் தோன்றிற்று ஓர் மானிட சாதியை — மநுஷ்யஜாதியில் உண்டான ஒரு மநுஷ்ய ஜந்துவை
மானிட சாதியின் பேர் இட்டால் — [கர்ம பலன்களை அநுபவிக்கப் பிறந்த] மனுஷ்ய சாதியர்க்கு உரிய பெயரை இட்டழைத்தால்
மறுமைக்கு இல்லை — அதருஷ்டபலம் [மோக்ஷம்] பெறுகைக்கு யாதொருவழியு மில்லையாம்;

வான் உடைமாதவா கோவிந்தா என்று அழைத்தக்கால் — பரமபதத்தை [விபூதியாக] உடைய ச்ரிய:பதியே! கோவிந்தனே! என்று [எம்பெருமான் திருநாமத்தையிட்டு] அழைத்தால்,
நானுடை நாரணன் — எனக்கு நாதனை நாராயணனுடைய திருநாமத்தைப்பூண்ட அப்பிள்ளையினுடைய
தம்மன்னை நரகம்புகாள—.

* * *—ஜீவாத்துமா, கருமங்களுக்கிணங்கத் தேவயோநி முதலிய பல யோநிகள்தோறும் பிறக்கக்கடவனுகையாலே புண்ணிய பாபங்களிரண்டையும் அநுபவித்தற்கும ஸம்பாதிப்பதற்கும உறுப்பாகவன்ருே மநுஷ்ய யோநியிற் பிறப்பது; இப்படிக் கருமத்துக்கு வசப்பட்டு மநுஷ்ய ஜாதியிற் பிறக்கும் பிராணியை, ஐஹிகமானதொரு பயனைவிரும்பிக், கர்மவச்யமான மநுஷ்ய ஜாதியில் ஒன்றின் பெயரை யிட்டழைத்தால், இஹலோகத்திற் சில க்ஷுத்ர பலன்கள் கிடைக்கிலும பரலோகப்பேற்றுக்கு யாதொரு வழியுமில்லையாம்;

இங்ஙனன்றி, எம்பெருமான் திருநாமத்தைச்சாத்தி யழைத்தால் அப்பேறு பெறக்குறையில்லை யென்றவாறு. மறுமை—ஆமுஷ்மிகம்; (இம்மை—ஐஹிகம்,) என்னுடை என்ன வேண்டுமிடத்து, "நானுடை" என்றது, "மானிட சாதியில்" என்றெடுத்த முறைக்குச் சேரவேண்டுகையால்; எனவே, எதுகை நோக்கிய தென்றபடி: திருமங்கையாழ்வாரும் பெரிய திருமொழியில் "ஊனுடைச்சுவர் வைத்து" என்ற பாட்டின் ஈற்றடியில், எதுகைக்குச் சேர, "நானுடைத் தவத்தால்" என்றருளிச் செய்துள்ளமை காண்க. .... (4)

385 மலமுடையூத்தையில்தோன்றிற்றோர் மலவூத்தையை *
மலமுடையூத்தையின்பேரிட்டால் மறுமைக்கில்லை *
குலமுடைக்கோவிந்தா கோவிந்தாவென்றழைத்தக்கால் *
நலமுடைநாரணன் தம்மன்னைநரகம்புகாள். (5)

மலம் உடை ஊத்தையில் தோன்றிற்று ஓர் — மலத்தையுடையதும் ஹேயமுமான சரீரத்தில் நின்றும் தோன்றினதொரு
மலம் ஊத்தையை — [தானும் அப்படியே] மலமுடையதும் ஹேயமுமான சரீரத்தோடே கூடியிருக்கிற ஜந்துவை
மலம் உடை ஊத்தையின் பேர் இட்டால் — [கீழ்ச்சொன்னபடியே] மலத்தையுடையதும் ஹேயமுமான சரீரத்தையுடைய மற்றொரு ஜந்துவினுடைய பெயரை இட்டு அழைத்தால்,
[அதனால் இம்மையிலே சில அல்பபலன் கிடைத்தாலும்,]
மறுமைக்கு இல்லை — அத்ருஷ்ட பலத்துக்கு ஒரு வழியுமில்லையாம்
குலம் உடை கோவிந்தா கோவிந்தா என்று அழைத்தக்கால் — நற்குலத்திற்பிறந்த கோவிந்தனே! கோவிந்தனே! என்று [பகவந் நாமத்தையிட்டு] அழைத்தால்,
நலம் உடை நாரணன் — [தன திருநாமத்தைச் சொன்னவர்களை வாழ்விக்கையாகிற] நன்மையையுடைய எம்பெருமானுடைய திருநாமம்பூண்ட அப்பிள்ளையினுடைய
தம்மன்னை நரகம் புகாள்—.

* * *—"தீண்டாவழும்புஞ் செந்நீருஞ் சீயுநரம்புஞ் செறிதசையும், வேண்டா நாற்றம் மிகுமுடல்" என்றபடி மாம்ஸரக்தம் முதலிய மலங்களோடு கூடிஹேயமாயிருக்கிற மாதாபித்ரு சரீரத்தினின்று தோன்றினதாயும், 'காரண வஸ்துவுக்கிணங்கவே கார்யவஸ்து பிறக்கும்' என்ற நீதியின்படி, மாதாபிதாக்களுடைய சுக்ல சோணிதங்களாலே பரிணதமாகையாலே தத்ஸ்வரூபமாகவே யிருக்கிற சரீரத்தோடே கூடினதாயுமிருக்கிற ஜந்துவைக், கீழ்ச்சொன்னபடியே மிகவும ஹேயமாயிருந்துள்ள சரீரத்தைப் பூண்டுகொண்டிருக்கிற ஒரு கர்மவச்ய ஜந்துவின் பெயரையிட்டழைத்தால், இம்மையிற் சிலபயன் பெறினும் ஆமுஷ்மிகத்தில் ஒருபயனும் பெறமுடியாது என்பது முன்னடிகளின் கருத்து. மூன்றாமடியில், குலம்—இடைக்குலம். .... ... .... ... (5)

386 நாடுநகருமறிய மானிடப்பேரிட்டு *
கூடியழுங்கிக் குழியில்வீழ்ந்துவழுக்காதே *
சாடிறப்பாய்ந்ததலைவா தாமோதராவென்று
நாடுமின் * நாரணன் தம்மன்னைநரகம்புகாள். (6)

நாடும் நகரும் அறிய — [க்ராமங்களிலுள்ள ஸாமாந்ய ஜ்ஞானிகளும் நகரவாஸிகளான விசேஷஜ்ஞானிகளும் [இவன் உபாகதவன்' என்று] அறியும்படி.—
மானிடப் பேர் இட்டு — [க்ஷுத்ர] மனுஷ்யர்கள் பெயரையிட்டு
கூடி அழுங்கி குழியில் வீழ்ந்து — அவர்களோடு கூடி ஒளிமழுங்கி [அவர்கள் விழுந்த] குழியிலே விழுந்து
வழுக்காதே — தவறிப்போகாமல்
சாடு இற பாய்ந்த தலைவா — சகடாஸுரன முறியும்படி உதைத்தருளின பெரியோனே!' [என்றும்
தாமோதரா என்று — 'தாமோதரனே!' என்றும்
நாடுமின் — வாழ்த்திக்கொண்டு திரியுங்கள்;
[இங்ஙனேயாகில்,]
நாரணன் தம்மன்னை நரகம் புகாள்—.

* * *—"நாடு நகருமறிய" என்கிறவிது ஈற்றடியில், "நாடுமின்" என்ற வினைமுற்றோடு இயையும். அழுங்கி—ஆத்துமாவுக்கு இயற்கையாயுள்ள ஸ்வரூப ப்ரகாசம மழுங்கி என்றபடி.

இப்பாட்டின் பெரிய ஜீயருரை அச்சுப்பிரதிகள் பலவற்றிலும், "அவர்களோடே கூடி அவர்கள் பக்கலிலே கால்தாழ்ந்து அவர்கள் விழுந்த குழியிலே விழுந்து தவற வர்த்தியாதே" என்று காணப்படுதலால், அழுங்கி என்பதற்கு, '(அவர்கள் பக்கலிலே) கால் தாழ்ந்து' என்பது பொருளாமென்று சிலர் மயங்குவர்; அதற்கு அது பொருளல்ல; அவ்வச்சுப்பிரதிகளில், "கால்தாழ்ந்து" என்றதற்குப்பின் "ஒளிமழுங்கி" என்கிற வாக்கியம் விடுபட்டதென்றுணர்க. பிராசீநதாளகோசங்களில் அதனைக்காண்க. "அவர்கள் பக்கலிலே கால்தாழ்ந்து" என்கிறவிது, "அவர்களோடே கூடி" என்கிற ஸ்வவாக்யத்திற்கே விவரணமாய்க்கிடக்கிறது; குழி—நரகக்குழி. .... ... .... 6

387 மண்ணிற்பிறந்துமண்ணாகும் மானிடப்பேரிட்டு * அங்
கெண்ணமொன்றின்றியிருக்கும் ஏழைமனிசர்காள் *
கண்ணுக்கினிய கருமுகில்வண்ணன்நாமமே
நண்ணுமின் * நாரணன் தம்மன்னைநரகம்புகாள். (7)

மண்ணில் பிறந்து மண் ஆகும் மானிடப் பேர் இட்டு — மண்ணில் நின்றுமுண்டாய் பின்பு மண்ணாய்விடுகிற அல்ப மநுஷ்யர்களுடைய பெயரை(த் தங்கள பிள்ளைகளுக்கு) இட்டு

அங்கு எண்ணம் ஒன்று இன்றி இருக்கும் ஏழை மனிசர்காள் — ஆமுஷ்மிக பலத்தில் ஒரு விசாரமுமற்றிருக்கிற அறிவற்ற மநுஷ்யர்களே!

கண்ணுக்கு இனிய கருமுகில் வண்ணன் — கண்ணுக்கு காட்சிக்கு போக்யமுமான காளமேகம்போன்ற நிறத்தையுடையவனுமான எம்பெருமானுடைய

நாமமே நண்ணுமின் — திருநாமத்தையே விரும்பிடுங்கள்;

நாரணன் தம்மன்னை நரகம் புகாள்—.

* * *—"மண்ணாய் நீர் எரிகால் மஞ்சுலாவு மாகாசமுமாம புண்ணாராக்கை" "மஞ்சு சேர்வானெரி நீர் நிலங் காலிவை மயங்கி நின்ற அஞ்சு சேராக்கை" என்னபடி—தேஹத்திற்குப் பஞ்சபூதங்களும் உபாதாநமாகிலும் அவற்றுள் பார்த்திவபாகமே [—அதாவது மண்பாகம்] அதிகமாயிருப்பது பற்றி, அம்மண்ணில் நின்றும் தேஹத்துக்கு உற்பத்தி யென்பார், "மண்ணிற் பிறந்து" என்றார்.

தேஹம உருக்குலைந்தால், காரியத்திற்குக் காரணத்திலே லயமாகக்கடவது' என்ற முறைமையின்படி—மறுபடியும் மண்ணாய்ப்போகக் கடவதானமைபற்றி, "மண்ணாகும" என்றார். அங்கு—பரமபதத்திலே என்றபடி. ... ... ... (7)

388 நம்பிபிம்பியென்று நாட்டுமானிடப்பேரிட்டால் *
நம்பும்பிம்புமெல்லாம் நாலுநாளிலழுங்கிப்போம் *
செம்பெருந்தாமரைக்கண்ணன் பேரிட்டழைத்தக்கால்
நம்பிகாள்நாரணன் தம்மன்னைநரகம்புகாள். (8)

நம்பி பிம்பி என்று நாட்டு மானிடப் பேர் இட்டால் — நம்பி என்றும பிம்பி என்றும் க்ஷுத்ர மநுஷ்யர்களுடைய பெயரை (உங்கள் பிள்ளைகளுக்குச் சிலர்) இட்டால்

நம்பும் பிம்பும் எல்லாம் — 'நம்பி' பிம்பி' என்னும் பெயர்களுக்கு உண்டான முதன்மையெல்லாம்

நாலுநாளில் அழுங்கிப் போம் — நாலு நாளைக்குள் அழிந்துபோம்;
செம் பெரு தாமரைக் கண்ணன் பேர் இட்டு — சிவந்தும் பெருத்துமிருக்கிற தாமரைப் பூப்போன்ற திருக்கண்களையுடைய எம்பெருமானுடைய திருநாமத்தை இட்டு
அழைத்தக்கால் — அழைத்தால்
நம்பிகாள் — (அறிவினால்) குறைவற்றவர்களே!
நாரணன் தம்மனை நரகம் புகாள்—.

* * *—நம்பி என்னுஞ்சொல், 'குறைவற்றவன்' என்னும் பொருளையுடையதாதல் பற்றி, 'இப்பெயரை நமது பிள்ளைக்கு இட்டால் ஒரு குறையுமின்றிப் பூர்ணனாயிருப்பன்' என நினைத்து அப்பெயரை இடுகிறவர்களைக் குறித்து ஏசுகிறார் இப்பாட்டில்.

பிம்பி என்பதற்கு (இங்கு) ஒரு பொருளுமில்லை. இச்சொல் எப்படி பொருளற்றதோ, அப்படியேதான் நீங்கள் விரும்பியிடுகிற நம்பி என்கிற சொல்லும் பொருளற்றது என்று கேலிபிக்கிற படியாய், நம்பிக்கு எதிர்த்தட்டாக ஒரு பிம்பியை அருளிச் செய்கிறாரென்க. இங்ஙனே வெறுப்புத்தோற்றச் சொல்லுமிடங்களிலெங்கும், கூட மற்றொருசொல் பொருளின்றி வழங்கப்படுவது உலக இயற்கை; (உதாரணம்;) ஒருவன் 'உப்பு உளதோ?' என்று ஒருவனைக் கேட்டால், அதற்கு அவன் வெறுப்புக்கொண்ட காலத்தில் "உப்பு மில்லை, பப்பு மில்லை" என்று கூறுவான்; அது போலவே, இங்கும் நம்பி என்னும் பெயரில் வெறுப்புக்கொண்ட ஆழ்வார், பிம்பி என்ற மற்றொரு பொருளில்லாப் பெயரைக்கூட இணைத்துக் கூறுகின்றார்.

நெடுங்காலங் குறைவற்று வாழவேணுமென்னும் விருப்பத்தினால், நம்பி, பிம்பி, என்றாற்போலச் சிலநாட்டு மானிடப் பெயர்களைத் தங்கள் பிள்ளைகளுக்கு இட்டால், இதனால் அவர்கள் தங்கள் வாழ்நாளுள்ளளவும் குறைவொன்று மின்றியிருப்பர்கள் என்கிற எண்ணம் தமது மூடத்தனத்தினாலுண்டாவதேயாம்: "வாழ்ந்தார்கள் வாழ்ந்தே நிற்பரென்பதில்லை" என்று ஆழ்வாரருளிச் செயலின்படியே அந்த வாழ்ச்சி நாலுநாளில் கெட்டுப்போம் என்கிறார்.

"நம்பும் பிம்பு மெல்லாம்" என்றது—நம்பி, பிம்பி என்ற பெயர்களின் பகுதியை யெடுத்துக்காட்டியபடி. ... ... ... ... (8)

389 ஊத்தைக்குழியில் அமுதம்பாய்வதுபோல் * உங்கள்
மூத்திரப்பிள்ளையை என்முகில்வண்ணன்பேரிட்டு *
கோத்துக்குழைத்துக் குணலைமாடித்திரிமினோ *
நாத்தகுநாரணன் தம்மன்னைநரகம்புகாள். (9)

ஊத்தைக் குழியில் அமுதம் பாய்வது போல — அசுத்தமானதொரு குழியிலே அம்ருதம் பாய்ந்தாற்போலே
உங்கள் மூத்திரம் பிள்ளையை — உங்களுடைய அசுத்தனான பிள்ளைக்கு
என் முகில் வண்ணன் பேர் இட்டு — எனக்குத் தலைவனும் காளமேகம் போன்ற திருநிறத்தையுடையனுமான எம்பெருமானுடைய திருநாமத்தை நாமகரணம்பண்ணி
அதனால் அப்போதே நீங்கள் எம்பெருமானுடைய பரிக்ரஹமாகப்பெற்று)
கோத்து குழைத்து — (அவ்வெம்பெருமானோடு) கூடிக் கலந்து
(அதனாலுண்டாகும் ஆனந்தத்துக்குப் போக்குவீடாக)
குணலம் ஆடி திரிமின் — குணலைக்கூத்தாடிக்கொண்டு திரியுங்கள்;
(இப்படியாகில்,)
நா தகு நாரணன் — நாவினால் துதிக்கத்தக்க நாராயணனுடைய பெயரைப்பூண்ட அப்பிள்ளையினுடைய
தம்மனை நரகம் புகாள்—.

* * *- -பரமபாவநமாகிய எம்பெருமான் திருநாமத்தை பரமஹேயரான மானிட மக்களுக்கு இடுவது-அசுத்தமாகிய ஒரு எச்சிற்குழியில் அம்ருதத்தைப் பாய்ச்சுவதை ஒக்குமென்க. ஊத்தைக்குழியில் அமுதம் பாய்ந்தால், அவ்வமுதந்தானும் அத்தோஷத்தோடேகூடி அசுத்தமாய் அபோக்யமாயொழியும்; எம்பெருமானுடைய திருநாமமோவென்றால் அங்ஙனன்றியே தனக்கு ஒரு ஸ்பர்சதோஷமில்லாதபடி தான் புகுந்தவிடத்தையும் பரிசுத்தமாக்கி விலக்ஷண பரிக்ராஹ்யமாம்படி பண்ணுமென்று அமுதத்திற்காட்டில் திருநாமத்திற்கு வாசி அறியத்தக்கது.

இப்படி தமது பிள்ளைகளுக்கு எம்பெருமான் திருநாமத்தை நாமகரணம் பண்ணும்போதே தாம் அவ்வெம்பெருமானுக்கு அந்தரங்கபூதர்களாக ஆவதனால், அவனோடு கூடிக்கலந்து களித்துத் திரியப்பெறுவர். குணலைக் கூத்தாவது 'ஆநந்தத்துக்குப் போக்குவிடாகத் தலைகீழாக ஆடுவதொருகூத்து. ஆநந்தம் தலைமண்டைகொண்டால் மெய்ம்மறந்து கூத்தாடும்படி யாகுமென்பதைத திருவாய்மொழியில் "மொய்ம்மாம் பூம்பொழிற்பொய்கை" என்ற திருவாய்மொழியினால் அறிக. கோத்துக்குழைத்து—ஒரு பொருட்பன்மொழி; "கூடிக்கலந்து" என்பதுபோல. குழைத்து என்கிறவிது—'குழைந்து' என்ற தன்வினைப்பொருளில்வந்த பிறவினை. "நாத் தகும்" என்பதற்கு. ('பிள்ளைக்குத் திருநாமத்தையிட்டு அதனைப்பலகாலுஞ் சொல்லுகையாகிறவிது) உங்கள் நாவுக்குச்சேரும்' என்று முரைப்பர். .... (9)

390 சீரணிமால் திருநாமமேயிடத்தேற்றிய *
வீரணிதோல்புகழ் விட்டுசித்தன்விரித்த *
ஓரணியோண்டமிழ் ஒன்பதோடொன்றும்வல்லவர் *
பேரணிவைகுந்தத்து என்றும்பேணியிருப்பரே. (10)

| | | | |
|---|---|---|---|
| சீர் அணி மால் திருநாமமே இடத்தேற்றிய | கல்யாண குணங்களை ஆபரணமாகவுடையனும் (அடியார் பக்கல்) வ்யாமோஹமுடையனுமான எம்பெருமானுடைய திருநாமத்தையே (தம் தம் பிள்ளைகளுக்கு) இடும்படி உபதேசித்தருளினவரும் | விரித்த | விரிவாக அருளிச்செய்தவையும் |
| வீரம் அணி தொல் புகழ் விட்டுசித்தன் | (இந்திரியங்களை வெல்லுகையாகிற) வீரப்பாட்டை ஆபரணமாகவுடையவரும் சாச்வதமான கீர்த்தியையுடையவருமான பெரியாழ்வார் | ஓர் அணி ஒண் தமிழ் ஒன்பதோடு ஒன்றும் வல்லவர் | (கற்பார்க்கு) ஒப்பற்ற ஆபரணம் போன்றவையும் அழகிய தமிழ் பாஷையுமாயிருந்துள்ள இப்பத்துப்பாட்டுகளையும் ஓதவல்லவர்கள் |
| | | பேர் அணி வைகுந்தத்து | பெரியதும் அழகியதுமான ஸ்ரீவைகுண்டத்தில் |
| | | என்றும் பேணி இருப்பர் | (எந்நாளும் எம்பெருமானுக்கு) மங்களாசாஸனம் பண்ணிக்கொண்டு வாழப்பெறுவர். |

* * *—எம்பெருமானுடைய திருநாமங்களையே தந்தமபிள்ளைகளுக்கு நாமகரணம் பண்ணும்படி நாட்டாரைநோக்கி உபதேசித்துப் பெரியாழ்வாரருளிச் செய்த இப்பத்துப் பாட்டையும் ஓதவல்லவர்கள் பரமபதத்தில் எம்பெருமானுக்குப் பல்லாண்டுபாடப்பெறுவர் என்று இத்திருமொழி கற்றார்க்குப் பலஞ்சொல்லித் தலைக்கட்டுகின்றார். மால்—பெரியோனுமாம. தேற்றுதல் — அறிவித்தல், தெளிவித்தல் வீரம்+அணி=வீரணி; தொகுத்தல் விகாரம். .... .... .... .... .... (10)

அடிவரவு:—காசும அங்கொரு உச்சி மானிட மல நாடு மண் நம்பி ஊத்தை சீரணி தங்கை.

---

## நான்காம்பத்து—ஏழாந்திருமொழி, தங்கையை மூக்கும்.

391 தங்கையைமூக்குந்தமையனைத்தலையுந் தடிந்தவெந்தாசரதிபோய் *
எங்குந்தன்புகழாவிருந்தரசாண்ட எம்புருடோத்தமனிருக்கை *
கங்கைகங்கையென்றவாசகத்தாலே கடுவினைகளைந்திடகிற்கும் *
கங்கையின்கரைமேற்கைதொழநின்ற கண்டமென்னுங்கடிநகரே. (1)

| | | | |
|---|---|---|---|
| கங்கை கங்கை என்ற வாசகத்தாலே | 'கங்கை, கங்கை' என்ற சப்தத்தைச் சொல்லுவதனால் | தமையனை தலையும் | (அவளுடைய) தமையனான ராவணனுடைய தலையையும் |
| கடு வினை களைந்திடகிற்கும் கங்கையின் கரைமேல் | கடினமான பாபங்களை ஒழிக்கவல்ல கங்காநதியினுடைய கரையிலே | தடிந்த | அறுத்தொழித்தவனும் |
| கை தொழ நின்ற | (பக்தர்கள்) கைகூப்பித் தொழும்படியாக நின்ற | போய் எங்கும் தன் புகழா இருந்து அரசு ஆண்ட | (அயோத்திமாநகர்க்கு) எழுந்தருளி நாடெங்கும் தன்னுடைய கீர்த்தியேயாம்படி பதினோராயிரம் ஸம்வத்ஸரம் எழுந்தருளியிருந்து ராஜ்யபரிபாலனஞ் செய்தருளினவனும |
| கண்டம் என்னும் கடி நகர் | 'கண்டம்' என்னும் பெயரையுடைய சிறந்த நகரமானது (எதுவென்னில்;—) | எம் தாசரதி எம் புருடோத்தமன இருக்கை | எமக்குத் தலைவனுமான இராமபிரானாகிய எமது புருஷோத்தமப் பெருமானுடைய வாஸஸ்தானமாம். |
| தங்கையை மூக்கும் | (இராவணனுடைய) தங்கையாகிய சூர்ப்பணகையினுடைய மூக்கையும் | | |

அவதாரிகை:—கீழ்த்திருமொழியில் சேதநர் திருந்துகைக்கு உறுப்பான ஹிதத்தை உபதேசித்தபின்பு, மறுபடியும் எம்பெருமான் உகந்தருளின திருப்பதிகளில் எழுந்தருளி நிற்கிற நிலையை அநுபவிக்கவேணுமென்னு மாசை கிளர்ந்து, கங்கைக்கரையிலுள்ள திருக்கண்டங்கடி நகரிலே பல அவதாரகுண சேஷ்டிதங்களெல்லாம் நன்கு விளங்கும்படி எழுந்தருளி நிற்கிற புருஷோத்தமனை அநுபவியா நின்றுகொண்டு, அவ்வெம்பெருமானிற்காட்டில் அவன் எழுந்தருளியிருக்கிற தேசமே ப்ராப்யத்தில் சரமாவதியாகையாலே, அத்தேசத்தினுடைய வைபவத்தையும் பலபடியாகப்பேசி அநுபவிக்கிறார், இத்திருமொழியில். .... (*)

* * *—தங்கைமூக்கைத் தடிந்த விவரணமும், அதன்மேல் தோன்றும் ஆக்ஷேபத்திற்குப் பரிஹாரமும், கீழ்—என்னுதன் தேவியில் எட்டாம்பாட்டினுரையிற் கூறப்பட்டது. தாசரதி—வடமொழித் தத்திதாந்தநாமம. [எங்குந்தன்புகழா இத்யாதி.] "ராஜொராஜொ பாஜதி ஸூஜா நாஜஸவநு கஜா: । ராஜஹாஜிதம ஜமஜஹாஜித் ராஜொராஜ்யம் ஸூமாவதி ।" என்ற ச்லோகம இங்கு நினைக்கத்தக்கது. புருடோத்தமன்—திருக்கண்டங்கடி நகரில் எழுந்தருளியிருக்கும எம்பெருமானுடைய திருநாமம. இருக்கை—தொழிலாகு பெயர்.

பின்னடிகளின் கருத்து;—ஏதேனுமொரு குளத்தில் நீராடுமவர்கள் அந்த நீரைக் கங்கையாக நினைத்து, 'கங்கை, கங்கை' என்று உச்சரித்தால் உடனே அவர்களுடைய பெருப்பெருத்த பாபங்களையெல்லா மொழிக்கும்படியான பெருமை பொருந்திய கங்கையின் கரையிலுள்ள கண்டமென்ற நகரவிசேஷ மென்பதாம.

திருக்கண்டங்கடிநகர்—வடநாட்டுத் திருப்பதிகள் பனிரண்டினுள் ஒன்று; கண்டம் என்னுமிவ்வளவே இத்திருப்பதியின் பெயர்; கடி என்னுஞ்சொல் இங்குச் சிறப்புப் பொருளது. "மத்தாற் கடல் கடைந்து வானோர்க்கமுதளித்த, அத்தா வெனக்குன்னடிப் போதில்—புத்தமுதைக், கங்கைக் கரைசேருங் கண்டத்தாய் புண்டரிக, மங்கைக் கரசே வழங்கு" என்ற ஐயங்கார் பாடலில் "கண்டத்தாய்" என்ற விளி நோக்கத்தக்கது. ... (1)

392 சலம்பொதியுடம்பில்தழலுமிழ்பேழ்வாய்ச் சந்திரன்வெங்கதிரஞ்ச *
மலர்ந்தெழுந்தணவுமணிவண்ணவுருவின் மால்புருடோத்தமன்வாழ்வு *
நலந்திகழ்சடையான்முடிக்கொன்றைமலரும் நாரணன்பாதத்துழாயும் *
கலந்திழிபுனலாற்புகர்படுகங்கைக் கண்டமென்னுங்கடிநகரே. (2)

| | | | |
|---|---|---|---|
| நலம் திகழ் சடையான் முடி கொன்றைமலரும் | (எம்பெருமானுடைய ஸ்ரீபாததீர்த்தத்தை வஹிக்கின்றமையாலுண்டான) நன்மை விளங்கா நிற்கிற ஜடையையுடையனான சிவபெருமானுடைய தலையில் (அணியப்பெற்றுள்ள செந்நிறமுடைய) கொன்றைப்பூவோடும் | சலம்பொதி உடம்பின் சந்திரன் | ஜலத்தைப் பொதிந்துகொண்டிருக்கிற வடிவையுடைய சந்திரனும் |
| | | தழல் உமிழ் பேழ் வாய் வெம் கதிர் | நெருப்பை உமிழாநின்றுள்ள பெரிய கிரணங்களையுடையனாய் வெம்மையே இயல்வாகவுடையனான ஸூர்யனும் |
| | | அஞ்ச | அஞ்சும்படியாக |
| நாரணன் பாதத் துழாயும் கலந்து | (அச்சிவபிரானுக்குந் தலைவனான) நாரணனுடைய திருவடிகளிற் புனைந்த (பசுமை நிறமுடைய) திருத்துழாயோடும் சேர்ந்து | மலர்ந்து எழுந்து அணவு | மிகவும் பரம்பின சரீரத்தையெடுத்துக்கொண்டு கிளர்ந்து (இந்த சந்த்ர ஸூர்யர்களுடைய இருப்பிடத்தைச்) சென்று கிட்டின |
| இழி | ஆகாசத்தில் நின்றும் பூமியில் இழிந்து வெள்ளமிடாநின்ற | மணிவண்ணம் உருவின் | நீலமணிபோன்ற நிறம் பொருந்திய வடிவையுடையவனும் |
| | | மால் | (அடியார்பக்கல்) வ்யாமோஹமுடையவனுமான |
| புனலால் | ஜலத்தினால் | | |
| புகர்படு | விளங்கா நின்றுள்ள | புருடோத்தமன் | புருஷோத்தமன் |
| கங்கை | கங்கைக்கரையிலுள்ள | வாழ்வு | வாழுமிடம். |

* * *—எம்பெருமான் மாவலி கையில் நீரேற்றுப்பெற்று உலகளக்கத் தொடங்கி ஓங்கியுயர்ந்தபோது சந்த்ரஸூர்யர்கள் "இதுவென் புகுந்ததிங்கந்தோ" என்றாற்போல அஞ்சினராம்; அப்படி அவர்கள் அஞ்சும்படி விம்மி வளர்ந்த எம்பெருமான் பொருந்தியெழுந்தருளியிருக்குமிடம் கண்டமென்னுங் கடிநகரென்க. சந்திரன் அம்ருதமயமான கிரணங்களையுடையவனாதலால், சலம்பொதியுடம்பினனாகக் கூறப்படுவன். பேழ்—பெருமை. "சலம்பொதியுடம்பிற் சந்திரன், தழலுமிழ்பேழ்வாய் வெங்கதிர்" என இயைத்துரைக்கப்பட்டது.

பின் ஒன்றரையடிகளால், கங்கையை வருணிக்கின்றார்:—இக்கங்கை முதலில் எம்பெருமானது திருவடியினின்றும் பெருகிப்பின்பு சங்கரன் சடையினில் தங்கி, ஆகாசத்தில் நின்றும் நிலவுலகத்தில் ப்ரவஹித்தமையால், எம்பெருமானுடைய பாதத்துழாய்மலரோடும் சிவபிரானுடைய முடிக்கொன்றைமலரோடுங்கலந்து பசுமைநிறமும் செந்நிறமுமாகத் தோற்றுகின்ற நீர்ப்பெருக்கினால் விலக்ஷணமானதொரு புகரைப்பெறுமென்க. "நலந்திகழ்" என்பதைச் சடையோடும் இயைக்கலாம், சடையானோடும் இயைக்கலாம். எம்பெருமானுடைய ஸ்ரீபாததீர்த்தத்தைத் தனக்குத்தூய்மை விளைக்குமதாக ப்ரதிபத்திபண்ணித் தலையால் தரிக்கைக்கு மேற்பட்ட நன்மையில்லையிறே சடையானுக்கு. .... .... (2)

393 அதிர்முகமுடையவலம்புரிகுமிழ்த்தி அழலுமிழாழிகொண்டெறிந்து * அங்
கெதிர்முகவசுரர்தலைகளையிடறும் எம்புருடோத்தமனிருக்கை *
சதுமுகன்கையிற்சதுப்புயன்றாளில் சங்கரன்சடையினில்தங்கி *
கதிர்முகமணிகொண்டிழிபுனற்கங்கைக் கண்டமென்னுங்கடிநகரே. (3)

| | |
|---|---|
| | (எம்பெருமானுடைய திருவடியை விளக்குகிறபோது) |
| சதுமுகன் கையில் | சதுர்முகப்ரஹ்மாவினுடைய கையிலும் |
| சதுப்புயன் தாளில் | சதுர்ப்புஜனை எம்பெருமானுடைய திருவடியிலும் (பின்பு,) |
| சங்கரன் சடையினில் | சிவபெருமானுடைய ஜடையிலும |
| தங்கி | தங்கி, |
| கதிர் முகம் மணி கொண்டு இழி புனல் கங்கை | ஒளியையுடையனவும் சிறந்தவையுமான ரத்னங்களை கொழித்துக் கொண்டு இழிகிற தீர்த்தத்தையுடைய கங்கைக் கரையிலுள்ள |
| | கண்டமென்னும கடிநகர்—; |
| அங்கு | உலகமளந்த அப்போது, |
| அதிர்முகம் உடைய வலம்புரி குமிழ்த்தி | முழங்காநின்ற முகத்தையுடைய ஸ்ரீபாஞ்சஜந்யத்தை திருப்பவளத்தில் வைத்து ஊதியும் |
| அழல் உமிழ் | நெருப்பை வீசாநின்றுள்ள |
| ஆழி கொண்டு எறிந்து | திருவாழியை எடுத்துவிட்டெறிந்தும், |
| எதிர்முகம் | (போர செய்வதாக) எதிர்த்த முகத்தையுடைய |
| அசுரர் | அஸுரர்களுடைய |
| தலைகளை | தலைகளை |
| இடறும் | உருட்டியருளின |
| எம் புருடோத்தமன் இருக்கை | எமது புருடோத்தமனுடைய வாஸஸ்தானமாகும். |

* * *—திருமால் உலகமளந்தகாலத்தில் மேலே ஸத்யலோகத்திற்சென்ற அப்பிரானது திருவடியைப் பிரமன் தன் கைக்கமண்டல தீர்த்தத்தாற் கழுவி விளக்க, அந்த ஸ்ரீபாத தீர்த்தமாகப்பெருகித் தேவலோகத்திலிருந்த ஆகாய கங்காநதியை, ஸூர்யகுலத்துப்பகீரத சக்ரவர்த்தி கபிலமுனிவனது கண்ணின் கோபத்தீக்கு இலக்காகி உடலெரிந்து சாமபலாய் நற்கதியிழந்த தனது மூதாதையரான ஸகர புத்திரர் அறுபதினாயிரவரை நற்கதிபெறுவிக்கும் பொருட்டு நெடுங்காலந்தவஞ்செய்து மேலுலகத்திலிருந்து கீழுலகத்துக்குக் கொணர்கையில், அவனது வேண்டுகோளாற் சிவபிரான் அந்நதியை முடியின்மேல் ஏற்றுச் சிறிது சிறிதாகப் பூமியில் விட்டனன் என்ற வரலாறு அறியத்தக்கது.

ஓங்கி உலகளந்தருளும்போது நமுசிமுதலிய அசுரர்கள் "என்னிதுமாய மென்னப் பனறிந்திலன், முன்னையவண்ணமே கொண்டளவாய்" என்று தடை செய்ய, அப்போது சங்கை முழக்கியும், ஆழியை எறிந்தும் அவர்களைத் தொலைத்தருளினமை முன்னடிகளிற் கூறியது. "குமிழ்த்தி" "எறிந்து" என்ற வினையெச்சமிரண்டும, "இடறும" என்ற பெயரெச்சத்தோடு இயையும. இம்முன்னடிகளிற்கூறிய வரலாறு, ஸாதாரணமாகத் தேவாஸுர யுத்த காலங்களில் நடந்ததாகக்கொள்ளவுங்கூடும். "தலைகளையிடறும" என்றது அவர் களைத் தொலைத்தமையைக் கூறியவாறு. ... ... ... (3)

394 இமையவரிறுமாந்திருந்தரசாள ஏற்றுவந்தெதிர்பொருசேனை *
நமபுரம்நணுகநாந்தகம்விசிறு நம்புருடோத்தமன்நகர்தான் *
இமவந்தந்தொடங்கியிருங்கடலளவும் இருகரையுலகிரைத்தாட *
கமையுடைப்பெருமைக்கங்கையின்கரைமேல் கண்டமென்னுங்கடிநகரே. (4)

| | |
|---|---|
| இமவந்தம் தொடங்கி இரு கடல் அளவும் | இமயமலையின உச்சிமுதற்கொண்டு பெரிய கடல்வரைக்கும் |
| இரு கரை உலகு இரைத்து ஆட | இரண்டு கரைகளிலுமுள்ள உலகத்தவர்கள் ஆரவாரித்துக்கொண்டு நீராட, |
| கமை உடை பெருமை | (அவர்களது பாபங்களைப்) பொறுக்கையால் வந்த பெருமையையுடைய |
| கங்கையின் கரைமேல் | கங்கைக்கரையில் |
| | கண்டம் எனனும் கடிநகர்—, |
| இமையவர் | (இந்திரன் முதலிய) தேவர்கள் |
| இறுமாந்து இருந்து அரசு ஆள | அஹங்காரப்பட்டுக்கொண்டிருந்து ராஜ்யம் நிர்வஹிப்பதற்காகவும், |
| ஏற்று வந்து எதிர் பொரு சேனை | துணிந்துவந்து (தனமேலும் அத்தேவர்கள மேலும்) எதிராக போர் செய்கிற (அஸுர ராக்ஷஸ) ஸேனையானது |
| நமபுரம் நணுக | யமலோகத்தைக் கிட்டுகைக்காகவும் |
| நாந்தகம் விசிறு | நாந்தகமெனனும் வாளை வீசாநிற்குமவனும் |
| நம் புருடோத்தமன் நகர் | நமக்குத் தலைவனுமான புருஷோத்தமப் பெருமானுடைய நகரமாகும், |

* * *—அசுரர்களு மரக்கர்களும் இந்திரன் முதலிய தேவர்களைக் குடியிருக்கவொட்டாதபடி அலைத்து அடர்த்து எதிர்ந்து போர்புரியப்புக, அப்போது எம்பெருமான் இந்திராதிகளுக்குப் பக்ஷபாதியாயிருந்து அவர்களை இடையூறின்றி அரசாள்விக்குமாறு அவ்வசுரர் மீது தனது நந்தகவாளைவீசி யெறிந்து அவர்களை யொழித்தமை முன்னடிகளிற்கூறியது. இறுமாந்திருக்கையாவது—"கண்டவாற்றால் தனதேயுலகென நின்றான்றன்னை" என்றாற்போல வீற்றிருக்கை. "அரசாள....நாந்தகம்விசிறு" என இயையும். ஏற்றுவந்து—என்று வந்து; அஹங்கரித்துவந்து. நாந்தகம்—நீட்டல் விகாரம. நகர்தான்=தான்—அசை.

இமவந்தந் தொடங்கி யிருங்கடலளவும்—"ஆஸேது-ஹிமாசலம்" என்பது வடசொல்வழக்கு. ஹிமவத்பர்வதத்தின் உச்சி தொடங்கிப் பெரியகடலளவும் இரண்டுகரையிலுள்ள லோகத்தாருந் திரண்டு ஆரவாரித்துக்கொண்டுவந்து நீராட, அவர்களுடைய பாபங்களை யெல்லாம பொறுத்து அவர்களைத் தூயராக்கும பெருமையையுடையது கங்கை யென்க. கமை—க்ஷமா என்ற வடசொல்திரிபு. "கமை பெருமை உடை" எனமாற்றி இயைத்து, (பாவங்களை) க்ஷமிக்கையாகிற பெருமையையுடைய என்றுரைப்பாருமுளர். (4)

395 உழுவதோர்படையுமுலக்கையும்வில்லும் ஒண்சுடராழியுஞ்சங்கும் *
மழுவொடுவாளுமபடைக்கலமுடைய மால்புருடோத்தமன்வாழ்வு *
எழுமையுங்கூடியீண்டியபாவம் இறைப்பொழுதளவினிலெல்லாம் *
கழுவிடும்பெருமைக்கங்கையின்கரைமேல் கண்டமென்னுங்கடிநகரே. (5)

எழுமையும் கூடி ஈண்டிய பாவம எல்லாம் — எழு ஜன்மங்களில் சேர்ந்து திரண்ட பாவங்களை யெல்லாம்
இறைப்பொழுது அளவினில் கழுவிடும பெருமை — க்ஷணகாலத்துக்குள்ளே போக்கிவிடும்படியான பெருமையையுடைய
கங்கையின் கரைமேல்
கண்டம என்னும் கடி நகர—;
உழுவது ஓர் படையும் — உழுவதற்கு உரிய கருவியாகிய கலப்பையையும
உலக்கையும் — உலக்கையையும்
வில்லும் — ஸ்ரீ சார்ங்கத்தையும்
ஒண்சுடர் ஆழியும — அழகிய தேஜஸ்ஸையுடைய திருவாழியையும்
சங்கும் — ஸ்ரீ பாஞ்சஜன்யத்தையும்
மழுவொடு — கோடாலியையும்
வாளும — நாந்தக வாளையும்
படைக்கலம் உடைய — ஆயுதமாக வுடையவனும்
மால — ஸர்வேச்வரனுமான
புருடோததமன் — புருஷோத்தமப் பெருமான்
வாழ்வு — எழுந்தருளியிருக்குமிடம்.

* * *—கலப்பையும் உலக்கையும—பலராமாவதாரத்திலும, மழு—பரசுராமாவதாரத்திலுங் கொள்ளப்பட்ட ஆயுதங்களென்க, படைக்கலமுடைய=படை, கலம், உடைய என்று பிரித்து, (இவற்றை) ஆயுதமாகவும் ஆபரணமாகவுமுடைய என்று முரைக்கலாம.

அநேக ஜந்மஸஞ்சிதமான பாவங்களனைத்தையும் ஒரு நொடிப்பொழுதில் ஒழித்துவிடும்படியான பெருமையையுடையது கங்கையென்பது பின்னடி. கழுவிடும்—கழுவியிடும். (5)

396 தலைப்பெய்துகுமுறிச்சலம்பொதிமேகஞ் சலசலபொழிந்திடக்கண்டு *
மலைப்பெருங்குடையால்மறுத்தவன்மதுரை மால்புருடோத்தமன்வாழ்வு *
அலைப்படைத்திரைவாயருந்தவமுனிவர் அவபிரதங்குடைந்தாட *
கலப்பைகள்கொழிக்குங்கங்கையின்கரைமேல் கண்டமென்னுங்கடிநகரே. (6)

அரு தவம் முனிவர் — அரிய தவங்களைப் புரிந்த மஹர்ஷிகள்
அலைப்பு உடை திரைவாய் — அலைத்தலையுடைய (கரையெறியாநின்றுள்ள) அலையிலே
அவபிரதம் குடைந்து ஆட — அவப்ருதஸ்நாநம் பண்ண,
(பிறகு பெருக்காறுய்)

கலப்பைகள் கொழிக்கும் — (யாக பூமியிலுண்டான) கலப்பை முதலிய உபகரணங்களெல்லா வற்றையும் எடுத்துத் தள்ளிக் கொண்டு போகா நிற்கிற
கங்கையின் கரை மேல்
கண்டம் என்னும் கடி நகர்—;
சலம் பொதி — (கடலிலுள்ள) ஜலத்தைப் பொதிந்துகொண்டிரா நின்ற
மேகம் — மேகங்களானவை
தலைப்பெய்து — திருவாய்ப்பாடியில் வந்து கிட்டி
குமுறி — கர்ஜனைபண்ணி
சலசல பொழிந்திட கண்டு — சள சளவென்று மழை பொழிய (அதைக்) கண்டு
மலை பெரு குடையால் மறுத்தவன் — கோவர்த்தந மலையாகிற பெரிய குடையாலே (அம்மழையைத்) தடுத்தருளினவனும்
மதுரை மால் புருடோத்தமன் — திரு வடமதுரையில் விருப்பமுடையனுமான ஸ்ரீ புருஷோத்தமப் பெருமான்
வாழ்வு — எழுந்தருளியிருக்குமிடம்.

* * *—முன்னடிகளிற் கூறிய கோவர்த்தநோத்தாண வரலாறு கீழ்ப்பல விடங்களில் விரித்துரைக்கப்பட்டது. சலசல—ஒலிக்குறிப்பு. மறைத்தவன் என்றும் பாடமுண்டென்பர்.

பின்னடிகளின் கருத்து;—தபஸ்விகளான மஹர்ஷிகள் பகவத்ஸமாராதந ரூபங்களான யாகங்களைக்குறையற அனுட்டித்து, அந்திமதிநத்தில் அவப்ருத ஸ்நாநஞ்செய்ய, அநந்தரம் பெருக்காறுய்ப்பெருகி யாகபூமியிலுள்ள கலப்பை முதலிய உபகரணங்களெல்லா வற்றையும் எடுத்துத்தள்ளிக்கொண்டு போகா நிற்குமதான கங்கைக்கரையிலுள்ள கண்டமென்னுங் கடிநகர் என்பதாம். அவபிரதம்—வேள்வியின்முடிவிற் செய்யவேண்டிய ஸ்நாநம்; अवभृथम् என்ற வடசொல் விகாரம். .... .... ... (6)

397 விற்பிடித்திறுத்துவேழத்தைமுறுக்கி மேலிருந்தவன்தலைசாடி *
மற்பொருதெழப்பாய்ந்தரையனையுதைத்த மால்புருடோத்தமன்வாழ்வு *
அற்புதமுடையவைராவதமதமும் அவரிளம்படியரொண்சாந்தும் *
கற்பகமலருங்கலந்திழிகங்கைக் கண்டமென்னுங்கடிநகரே. (7)

அற்புதம் உடைய ஐராவதம் மதமும் — ஆச்சர்யகரமான 'ஐராவதம்' என்னும் (தேவேந்திரனது) யானையினுடைய மத நீரும்,
அவர் இள படியர் ஒண் சாந்தும் — அத்தேவர்கள் (விரும்பத்தக்க) இளம்பருவத்தையுடையவர்களான தேவமாதர்கள் (அணிந்த) சிறந்த சந்தநமும்
கற்பகம் மலரும் — (அவர்களது குழலில் சொருகியிருந்த) கற்பகப் பூக்களும்
கலந்து இழி கங்கை — ஒன்று சேர்ந்து இழியா நின்றுள்ள கங்கையின் கரையில்
கண்டம் என்னும் கடி நகர்—;
வில் பிடித்து இறுத்து — (கம்ஸனுடைய ஆயுதச்சாலையிலிருந்த) வில்லைப்பிடித்து முறித்தும்,
வேழத்தை முறுக்கி — (குவலயாபீடம் என்ற) யானையைப் பங்கப்படுத்தியும்,
மேல் இருந்தவன் தலை சாடி — (அந்த யானையின்) மேலிருந்த யானைப்பாகனுடைய தலையைச் சிதறப்புடைத்தும்,
மல் பொருது — (சாணூரமுஷ்டிகாதி) மல்லர்களோடு போர் செய்து
அரையனை — உயர்ந்த கட்டிலின் மேலிருந்த அரசனாகிய கம்ஸனை
எழ பாய்ந்து உதைத்த — அவன்மேற் பாய்ந்து (கீழே தள்ளித் திருவடிகளால்) உதைத்தருளின
மால புருடோத்தமன் வாழ்வு—;

* * *—எவ்வகையினாலாவது கண்ணபிரானை நலிய நினைத்த கம்ஸன் தான் ஒரு தநுர்யாகஞ்செய்வதாக, அதற்கு அப்பிரானை உறவுமுறைமையால் அழைக்க, அவ்வண்ணமே கண்ணபிரான் அங்கேற எழுந்தருளிச்செய்த செயல்களைக் கூறுவது, முன்னடி. .... (7)

398 திரைபொருகடல்சூழ்திண்மதிள்துவரை வேந்துதன்மைத்துனன்மார்க்காய் *
அரசனையவியவரசினையருளும் அரிபுருடோத்தமனமர்வு *
நிரைநிரையாகநெடியனயூபம் நிரந்தரமொழுக்குவிட்டு * இரண்டு
கரைபுரைவேள்விப்புகைகமழ்கங்கைக் கண்டமென்னுங்கடிநகரே. (8)

| | |
|---|---|
| நெடியன | நீண்டவையாயிராநின்றுள்ள |
| யூபம் | (பசுக்கள் கட்டுகிற) யூபஸ்தம்பங்களானவை |
| நிரை நிரை ஆக | திரள் திரளாக |
| நிரந்தரம் | இடைவிடாமல் |
| ஒழுக்குவிட்டு | நெடுக ஓடாநிற்பதும் |
| இரண்டு கரை புரை | இருபக்கத்துக் கரைகளும் தம்மிலே ஒத்து |
| வேள்வி புகை கமழ் | யாகத்திலுண்டாகும் புகைகளால பரிமளியாநிற்பதுமான |
| கங்கை | கங்கைக் கரையில் |
| கண்டம் என்னும் கடி நகா—; | |
| திரை பொரு கடல் சூழ் திண் மதிள் | அலையெறியாநின்றுள்ள கடலால சூழப்பெற்ற திண்மையான மதிள்களையுடைய |
| துவரை | த்வாரகைக்கு |
| வேந்து | தலைவனும் |
| தன் மைத்துனன்மார்க்கு ஆய் | தன்னுடைய மைத்துனன்மாரான பாண்டவர்களுக்குப் பக்ஷபாதியாய் நின்று |
| அரசனை அவிய | துரியோதனாதி ராஜாக்களை அழியச் செய்து |
| அரசினை அருளும் | ராஜ்யத்தை (அப்பாண்டவர்கட்குக்) கொடுத்தருளினவனும் |
| அரி | (ஸகல பாபங்களையும்) போக்குமவனுமான |
| புருடோத்தமன் | புருஷோத்தமப் பெருமான் |
| அமர்வு | பொருந்தி யெழுந்தருளியிருக்குமிடம். |

* * *—முன்னடிகளிற் குறித்த வரலாறு கீழ் "மெச்சூது சங்கமிடத்தான்" என்ற பாட்டின் உரையிற் காணத்தக்கது. அரி—ஹரி:. கங்கையிற் பற்பல யூபஸ்தம்பங்கள் இடைவிடாது நெடுக அடித்துக்கொண்டு ஓடுமென்பது மூன்றாமடி. யூபம்—யாகப் பசுவைக்கட்டுந்தறி; வடசொல். நிரந்தரம்—வடசொல், இரண்டு கரைபொரு—இரண்டு கரைகளும் ஒருபடிப்பட; இரண்டு கரைகளிலும் என்றவாறு. .... .... (8)

399 வடதிசைமதுரைசாளக்கிராமம் வைகுந்தந்துவரையயோத்தி *
இடமுடைவதரியிடவகையுடைய எம்புருடோத்தமனிருக்கை *
தடவரையதிரத்தரணிவிண்டிடியத் தலைப்பற்றிக்கரைமரஞ்சாடி *
கடலினைக்கலங்கக்கடுத்திழிகங்கைக் கண்டமேன்னுங்கடிநகரே. (9)

| | |
|---|---|
| தட வரை அதிர | (மந்தரம் முதலிய) பெரிய மலைகளானவை சலிக்கும் படியாகவும |
| தரணி விண்டு இடிய | பூமியானது பிளவுபட்டு இடிந்து விழும்படியாகவும் |
| தலைப்பற்றி | (மரங்களினுடைய) தலையளவுஞ் செல்லக் கிளம்பி |
| கரை மரம் சாடி | கரையிலுள்ள மரங்களை மோதி முறித்தும் |
| கடல் கலங்க | (ஒன்றாலுங் கலங்காத) கடலுங்கூட கலங்கும்படி |
| கடுத்து இழி கங்கை | வேகங்கொண்டு இழியாநின்றுள்ள கங்கா தீரத்திலுள்ள |
| கண்டம் என்னும் கடி நகர்—; | |
| வட திசை மதுரை சாளக்கிராமம் | வடதிக்கிலுள்ள ஸ்ரீ மதுரையும் ஸ்ரீ ஸாளக்ராமமும் |
| வைகுந்தம் | ஸ்ரீவைகுண்டமும் |
| துவரை | ஸ்ரீத்வாரகையும் |
| அயோத்தி | திருவயோத்யையும் |
| இடம் உடை | இடமுடைத்தான [விசாலமான] |
| வதரி | ஸ்ரீபதரிகாச்ரமமுமாகிற இவற்றை |
| இடவகை உடைய | வாஸஸ்தானமாக வுடையனான |
| எம் புருடோத்தமன் இருக்கை—. | |

* * *—பகீரத சக்கரவர்த்தி தனது தபோபலத்தினால் கங்கையை இறக்கிக்கொண்டு வருகிறபோது வந்திழிகிற வேகத்தைச் சொல்லுவன பின்னடிகள். கடுத்து=கடுமை—வேகம். .... .... ... .... .... .... (9)

400 மூன்றெழுத்ததனைமூன்றெழுத்ததனால் மூன்றெழுத்தாக்கி * மூன்றெழுத்தை
ஏன்றுகொண்டிருப்பார்க்கிரக்கநன்குடைய எம்புருடோத்தமனிருக்கை *
மூன்றடிநிமிர்த்துமூன்றினில்தோன்றி மூன்றினில்மூன்றுருவானான் *
கான்தடம்பொழில்சூழ்கங்கையின்கரைமேல் கண்டமேன்னுங்கடிநகரே. (10)

கான் தட பொழில் சூழ் — நறுநாற்றம் கமழா நின்றுள்ள பெரிய சோலைகளினால் சூழப் பெற்ற

கங்கையின் கரைமேல் கண்டம் என்னும் கடி நகர்—;

மூன்று எழுத்ததனை — அகார, உகார, மகார ஸ்வரூபமான 'ஓம்' என்னும் பிரணவத்தை

மூன்று எழுத்ததனால் — ('நிருக்தம்' என்ற மூன்றக்ஷரமான பெயரையுடைத்தான நிர்வசந ப்ரக்ரியையாலே

மூன்று எழுத்து ஆக்கி — (மூன்று பதமாய் மூன்று அர்த்தத்துக்கு வாசகமாயிருக்கும்) மூன்றெழுத்தாகப் பிரித்து

மூன்று எழுத்தை — [அந்த] மூன்றெழுத்தை [பிரணவத்தை]

என்று கொண்டிருப்பார்க்கு — [தஞ்சமாக நினைத்து] அநுஸந்திக்குமவர்கள் பக்கலில்

இரக்கம் நன்கு உடைய — சிறந்த கருணையையுடையவனும்

மூன்று அடி நிமிர்த்து — [அந்த பிரணவத்தை நம: பதத்தோடும் நாராயணபதத்தோடும் கூட்டி] மூன்று பதமாக்கி [திருவஷ்டாக்ஷரமாக்கி]

மூன்றினில் — [அந்த] மூன்று பதங்களிலும்

தோன்றி — ஆத்மாவினுடைய அநந்யார்ஹ சேஷத்துவம், அநந்ய சரணத்துவம், அநந்ய போக்யத்வமாகிற மூன்று ஆகாரங்களையும்] தோன்றுவித்து

மூன்றினில் — அந்த ஆகாரத்ரயத்துக்கும் பிரதி ஸம்பந்தியாக

மூன்று உரு ஆனான் — [தானும்] சேஷித்வம், சரண்யத்வம், ப்ராப்யத்வம் என்கிற மூன்று ஆகாரங்களையுடையனுமான

எம புருடோத்தமன் இருக்கை—.

* * *—ருக், யஜுஸ், ஸாமம என்ற மூன்று வேதங்களினின்றும் அடைவே, பூ:, புவ: ஸுவ: என்ற மூன்று வ்யாஹ்ருதிகளையுந் தோன்றுவித்து, பொன்வாணியன் பொன்னைப் புடபாகம் வைப்பதுபோலே எம்பெருமான் தனது ஸங்கல்பத்தினால் அவற்றை ஓட வைத்து, அவற்றில் நின்றும் அகார உகார மகாரங்களாகிற மூன்று அக்ஷரங்களைத் தோன்றுவித்து, அம்மூன்றையும் ஸந்திக்ரமத்தில் 'ஓம்' என்று ஏகாக்ஷரமாக்கி, இப்படி ஏகாக்ஷரமாக்கப்பட்ட மூன்றக்ஷரமாகிய பிரணவத்தை நிருக்திக்ரமத்தினால் [அதாவது—ப்ரக்ரியை பண்ணும் க்ரமத்தினால்] மூன்றுபதமாய் மூன்று அர்த்தங்களுக்கு வாசகமாயிருக்கும் அகார உகார மகாரங்களாகிற மூன்றெழுத்தாகப் பிரித்து, அவற்றுள் அகாரம் ஜீவாத்மாவுக்குள்ள பகவச்சேஷத்துவத்தைக் கூறுகையாலும், உகாரம் அவதாரணார்த்தத்தைக்கூறி, அதனால் கீழ்ச் சொன்ன சேஷத்துவம் ஸ்ரீமந்நாராயணன் பக்கலிலன்றி வேறிடத்து வஹிக்கத்தகாதது என்னுமிடத்தைத் தெளிவிக்கையாலும், மகாரம் "மந-ஜ்ஞாநே" என்கிற தாதுவினின்றும் பிறந்து ஞானத்தைக் கூறுமதாயும், அநந்யார்ஹ சேஷத்வத்துக்கு ஆச்ரயமான ஆத்துமா, தேஹம் முதலியவற்றிற்காட்டில் விலக்ஷணன் என்று புலப்படுத்துமதாயு மிருப்பதாலும், இம்மூன்றெழுத்தையுமே தமக்குத் தஞ்சமாக நினைத்து அநுஸந்திக்குமவர் பக்கலில் பரமகிருபையைச் செய்தருள்பவனும், அந்தப்ரணவத்தை நம:பத நாராயணபதங்களோடு கூட்டி மூன்று பதமாக வளர்த்து, அம்மூன்று பதங்களிலும் ஆத்மாவினுடைய அநந்யார்ஹ சேஷத்துவம், அநந்ய சரணத்வம், அநந்யபோக்யத்வமாகிற மூன்று ஆகாரங்களையுந் தோன்றுவித்து, அவ்வாகாரங்களுக்கு எதிர்த்தட்டாகத்தான் சேஷித்வம், சரண்யத்வம், ப்ராப்யத்வம என்கிற மூன்று ஆகாரங்களை யுடையனுமான எம்பெருமான் எழுந்தருளியிருக்குமிடம் கண்டமென்னுங் கடிநகராம்.

"மூன்றெழுத்ததனை மூன்றெழுத்ததனால் மூன்றெழுத்தாக்கி"—பிரித்துப்பார்த்தால் மூன்றெழுத்தாகத் தோற்றும்படியாய், ஸ்தூலதர்சநத்தில் ஏகாக்ஷரமாகத் தோற்றும்படியாயுள்ள 'ஓம்' என்கிற பிரணவத்தை நிர்வசநக்ரமத்தினால் மூன்றெழுத்தாகப்பிரித்து என்றபடி. "வநுவஸயீமஹொவ்யாக்ரி யாநிவ-ஜெஆஹஜ்ம" என்ற ஸ்ரீரங்கராஜஸ்தவஸூக்தியின்படி நிர்வசநத்துக்குப் பதஸமதிகமஹேதுத்வ முண்டென்பது அறியத்தக்கது இவ்விடத்தில் நிர்வசநமாவது— "ஹமௌ தீஸதெஹநூஜாயத। ஸுவரி தியஜுவெஹூாக। ஸுவரி திஸாமவெஹூாக।

தாநேநகயாவஸஹ ந்தெ தநொதி ॥ என்கிற சுருதி “நிருக்தம்” என்ற சொல் அக்ஷரத்ரயாத்மகமானது பற்றி ‘மூன்றெழுத்ததனால்’ என்றுசொன்க. நிருக்தம்—வேதாங்கங்கள் ஆறினுள் ஒன்று. மூன்றுமடியில், தோன்றி—பிறவினையில் வந்த தன்வினை. .... (10)

401 பொங்கோலிகங்கைக்கரைமலிகண்டத் துறைபுருடோத்தமனடிமேல் *
வெங்கலிநலியாவில்லிபுத்தூர்க்கோன் விட்டுசித்தன்விருப்புற்று *
தங்கியவன்பால்செய்தமிழ்மாலை தங்கியநாவுடையார்க்கு *
கங்கையில்திருமால்கழலிணைக்கீழே குளித்திருந்தகணக்காமே. (11)

| | | | |
|---|---|---|---|
| பொங்கு ஒலி கங்கைக் கரை மலி கண்டத்து உறை | [நீர்க்கொழிப்பால் வந்த] கிளர்த்தியை யுடையதும் கோஷத்தை யுடையதுமான கங்கைக் கரையிலுள்ளதும் எல்லாவகை ஏற்றங்களையுடையதுமான திருக்கண்டங் கடிநகரில நித்யவாஸம் பண்ணுகின்ற | விருப்புற்று | ஆசைப்பட்டு |
| | | தங்கிய அன்பால் செய் | நிலைநின்ற பக்தியினால் அருளிச்செய்த |
| | | தமிழ் மாலை | தமிழ் மாலையாகிய இப்பாசுரங்கள் |
| | | தங்கிய | நிலைநின்றிருக்கப்பெற்ற |
| | | நா உடையார்க்கு | நாக்கையுடையவர்களுக்கு |
| புருடோத்தமன் | புருஷோத்தமப் பெருமானுடைய | கங்கையில் குளித்து | கங்கா நதியில் நீராடி |
| அடி மேல் | திருவடிகளில்,— | திருமால் இணை கழல் கீழே இருந்த கணக்கு ஆம் | ச்ரிய:பதியினுடைய ஒன்றோடொன்றொத்த திருவடிகளின் கீழே நிரந்தர ஸேவை பண்ணுகையாகிற பயன்பெற்றதாகும். |
| வெம் கலி நலியா வில்லிபுத்தூர் கோன் விட்டுசித்தன் | கொடிய கலியினால் நலியப்பெறாத ஸ்ரீவில்லிபுத்தூருக்குத் தலைவரான பெரியாழ்வார் | | |

* * *—இதனால் இத்திருமொழி கற்றார்க்குப் பலஞ்சொல்லித் தலைக்கட்டியவாறு. நலிவு—துன்பம்.

அடிவரவு:—தங்கை சலம அதிர் இவையவர் உழு தலை வில் திறைவட மூன்று பொங்கு மாதவ.

---

## நான்காம்பத்து—எட்டாந்திருமொழி, மாதவத்தோன்

அவதாரிகை:— திருவரங்கம் பெரியகோயிலில் ஸகலாவதார குணசேஷ்டிதங்களும் நன்கு விளங்குமபடி எம்பெருமான் எழுந்தருளியிருக்குமாற்றை அநுஸந்தித்து ஆழங்காற்பட்டு அத்திருப்பதியையே ப்ராப்யத்தில் சரமாவதியாகக்கொண்டு அநுபவித்து இனியராகிறார் இத்திருமொழியில். .... .... ... .... (*)

402 மாதவத்தோன்புத்திரன்போய் மறிகடல்வாய்மாண்டானை *
ஓதுவித்ததக்கணையா உருவுருவேகொடுத்தானூர் *
தோதவத்தித்தூய்மறையோர் துறைபடியத்துளும்பியெங்கும் *
போதில்வைத்ததேன்சோரியும் புனலரங்கமென்பதுவே. (1)

| | | | |
|---|---|---|---|
| மறி கடல் வாய் போய் மாண்டான் | அலையெறியா நின்றுள்ள கடலிற் புகுந்து (முதலைவாயி லகப்பட்டு) உயிரொழிந்த | உரு உருவே கொடுத்தான | (அப்புத்திரன் மரணமடையும் போதுள்ள ரூபம் மாறாதபடி) யதாரூபமாக (கொணர்ந்து) கொடுத்தருளின எம்பெருமானுடைய |
| மாதவத்தோன் புத்திரனை | மஹா தபஸ்வியான ஸாந்தீபினியினுடைய பிள்ளையை | | |
| ஓதுவித்த தக்கணையா | (ஸாந்தீபினி தன்னை) அத்யயநம் பண்ணுவித்ததற்கு தக்ஷிணையாக | ஊர் | திருப்பதியாவது;— |

| | | | |
|---|---|---|---|
| தோதம் வத்தி | பரிசுத்தமாகத் தோய்த்து உலர்த்தின வஸ்திரங்களை அணியா நிற்பவரும் | | (அதனால்) |
| | | எங்கும் துளும்பி | அக்காவேரி முழுதும் அலைமோதப் பெற்று |
| தூய் மறையோர் | நிர்த்தோஷ ப்ரமாணமான வேதத்தைத் தமக்கு நிரூபகமாக வுடையவருமான ஸ்ரீவைஷ்ணவர்கள | | (அதனால் தாமரை மலர்களின் நாளங்கள அலைய) |
| | | போதில் வைத்த தேன் சொரியும் | (அநதப்) பூக்களில் இராநின்றுள்ள தேனானது பெருகப்பெற்ற |
| | | புனல் | நீரையுடைய |
| துறை படிய | காவேரித் துறைகளில் அவகாஹிக்க | அரங்கம் என்பது | திருவரங்கமென்னுந திருப்பதியாம். |

* * *—கண்ணபிரான் ஸாந்தீபிநி யென்னும் ப்ராஹ்மணோத்தமர் பக்கல் ஸகல சாஸ்திரங்களையும் அத்யயனம பண்ணின அனந்தரம குருதக்ஷிணை கொடுக்கத் தேடுகின்றவளவிலே, அவ்வாசாரியரும் இவனுடைய அதிமாநுஷசேஷ்டிதங்களை அறிந்தவராகையாலே, 'பன்னிரண்டு வருஷங்களுக்குமுன்பு ப்ரபாஸ தீர்த்தகட்டத்திற் கடலில் முழுகி இறந்துபோன என் புத்திரனைக் கொண்டுவந்து தரவேண்டும' என்று அபேக்ஷிக்க, 'அபபடியே செய்கிறோம்' என்று, அப்புத்திரனைக் கொண்டுபோன சங்கின் உருவம் தரித்துச் சமுத்திரத்தில் வாஸஞ்செய்கின்ற பஞ்சஜநன் என்ற அஸுரனைக்கொன்று, யமபட்டணத்துக்கு எழுந்தருளி, அங்கு யாதனையிற்கிடந்த அக்குமாரனைப் பூர்வதேஹத்தில் ஒன்றும் விசேஷமறக்கொணர்ந்து கொடுத்தருளிய வரலாறு முன்னடிகளிற் கூறியது. "மாண்டானை என்ற விடத்துள்ள இரண்டனுருபு, "புத்திரன்" என்ற பெயரோடு கூட்டியுரைக்கப்பட்டது. தக்கணை—த³க்ஷிணா என்ற வடசொல் விகாரம்.

பின்னடிகளின் கருத்து:— * கங்கையிற் புனிதமாய காவிரியில் பெரிய பெருமாளுடைய திருக்கண்நோக்கான திருமுகத்துறை முதலான பலதுறைகளில் ஆசாரபரரான வைதிக ஸ்ரீ வைஷ்ணவர்கள் திரள் திரளாகவந்து குடைந்து நீராட, அதனால் அக்காவேரியடங்கலும் அலைமோதப்பெற்று, அவ்வலைகளினால் தாமரை மலர்களின் நாளங்கள் அலைக்கப்பட, அதனால் அப்பூக்களினின்றும் தேன் பெருக, அத்துடன் சேர்ந்த தீர்த்தத்தையுடைய திருவரங்கமென்பதாம். தோதவத்தி—தௌ⁴தவஸ்ரீ என்ற வடசொல்விகாரம். ... (1)

**403** பிறப்பகத்தேமாண்டொழிந்த பிள்ளைகளைநால்வரையும் *
இறைப்பொழுதிற்கொணர்ந்துகொடுத்து ஒருப்படுத்தவுறைப்பனூர் *
மறைப்பெருந்தீவளர்த்திருப்பார் வருவிருந்தையளித்திருப்பார் *
சிறப்புடையமறையவர்வாழ் திருவரங்கமென்பதுவே. (2)

| | | | |
|---|---|---|---|
| பிறப்பு அகத்தே மாண்டு ஒழிந்த பிள்ளைகளை நால் வரையும் | ஸூதிகாக்ருஹத்திலேயே இறந்தொழிந்த வைதிக புத்திரர்கள் நால்வரையும் | மறை பெருந்தீ வளர்த்து இருப்பார் | வேதங்களிற்கூறப்பட்டுள்ள [வைதிகமான] சிறந்த [மூன்று] அக்நிகளையும் [அவிச்சிந்நமாக] வளர்த்துக் கொண்டிருப்பவர்களும் |
| இறைப் பொழுதில் கொணர்ந்து கொடுத்து | ஒரு நொடிப் பொழுதில் [ஸ்ரீ வைகுண்டத்தினின்றும்] கொண்டுவந்து [மாதாபிதாக்கள் கையில்] கொடுத்து | வரு விருந்தை அளித்திருப்பார் | [தம தம திருமாளிகைக்கு] எழுந்தருளுகிற அதிதிகளான ஸ்ரீ வைஷ்ணவர்களை ஆதரித்துப் போருமவர்களும் |
| ஒருப்படுத்த | [இப்பிள்ளைகள் எம்பிள்ளைகள் தான் என்று] ஸம்மதி பண்ணுவித்த | சிறப்பு உடைய மறையவர் வாழ் | [இப்படிப்பட்ட] உத்கர்ஷங்களையுடையவர்களுமான வைதிகர்கள் வாழப்பெற்ற |
| உறைப்பன் ஊர் | சக்தியுக்தன் [எழுந்தருளியிருக்கிற] திருப்பதியாவது,— | | திரு அரங்கம என்பதுவே—. |

* * *—இதில் முன்னடிகளிற் கூறிய வரலாறு, கீழ் முதற்பத்தில் * உய்யவுலகில், "துப்புடையாயர்கள் தம்" என்ற பாட்டின் உரையில் விரித்துரைக்கப்பட்டுளது. மூன்றாமடியில், விருந்து என்றசொல் ஆகுபெயரால் விருந்தினரை உணர்த்திற்று. .... (2)

404 மருமகன்றன்சந்ததியை உயிர்மீட்டுமைத்துனன்மார் *
உருமகத்தேவீழாமே குருமுகமாய்க்காத்தானூர் *
திருமுகமாய்ச்செங்கமலந் திருநிறமாய்க்கருங்குவளை *
பொருமுகமாய்நின்றலரும் புனலரங்கமென்பதுவே. (3)

| | | | |
|---|---|---|---|
| மருமகன் தன் சந்ததியை உயிர் மீட்டு | மருமகனான அபிமந்யுவினுடைய புத்திரனான பரீக்ஷித்தை மறுபடியும் பிழைப்பித்து, | திருமுகம் ஆய் | (பெரிய பெருமாளுடைய) திருமுகத்துக்குப் போலியாகவும், |
| மைத்துனன்மார் உரு | மைத்துனன்மாரான பாண்டவர்களுடைய சரீரமானது | கருங்குவளை | நீலோத்பல புஷ்பங்கள் |
| மகத்து | (பாரதயுத்தமாகிற) நரமேதத்திலே | திரு நிறம் ஆய் | திருமேனி நிறத்துக்குப் போலியாகவும் |
| வீழாமே | விழுந்து அழிந்து போகாதபடி | பொரு முகம் ஆய் நின்று | (ஒன்றுக்கொன்று) எதிர் பொருகிற முகத்தையுடையனவாய்க் கொண்டு |
| குருமுகம் ஆய் | ஆசார்ய ரூபியாய் (ஹிதோபதேசங்களைப்பண்ணி) | | |
| காத்தான் | ரக்ஷித்தருளின கண்ணபிரானுடைய | அலரும் | விகஸிக்கப்பெற்ற |
| ஊர் | திருப்பதியாவது;— | புனல் | நீர்வளத்தையுடைய |
| செம் கமலம் | செந்தாமரை மலர்களானவை | | அரங்கம் என்பது—. |

* * *—பண்டு பாரதப்போரில், அர்ஜுநன் மகனான அபிமந்யுவின் மனைவியாகிய உத்தரை என்பவளுடைய கருவைநோக்கி அச்வத்தாமாவினால் பிரயோகிக்கப்பட்ட அபாண்டவாஸ்திரத்தினால் அக்கருவிலிருந்த சிசு [பரீக்ஷித்] நீறாயொழிய, அச்சிசுவை மீண்டும் உயிர் பெறுத்தவேணுமென்று ஸுபத்திரையினால் பிரார்த்திக்கப்பட்ட கண்ணபிரான் தனது செந்தாமரை மலர்போன்ற திருவடியினால் அச்சிசுவை அடிதொடங்கி முடியீறாக ஸ்பர்சித்தருள, உத்தரக்ஷணத்திலேயே அச்சிசு உயிர்பெற்ற வரலாறு முதலடியிற் கூறப்பட்டது. இவ்வரலாறு மஹாபாரதத்தில் ஆச்வமேதிகபர்வத்துக்கு உள்ளீடான அநுகீதாபர்வத்தில், 66, 67, 68, 69, 70 அத்தியாயங்களிற் பரக்கக் காணத்தக்கது. அபிமந்யு என்பவன் கண்ணபிரானுக்கு உடன் பிறந்தவளான ஸுபத்திரையின் மகனாதலால் மருமகனாயினன். சந்ததி வடசொல்விகாரம்.

[மைத்துனன்மார் இத்யாதி.] பஞ்சபாண்டவர்களுக்குத் தான் துணையாய் நின்று, கௌரவர்களால் அவர்கட்கு ஒரு நலிவு நேராதபடி பலவகைகளால் காத்தருளினமையைக் கூறியவாறு. இரண்டாமடியில், "மகத்தே" என்றவிடத்து, மகம்—மகமென்ற வடசொல் விகாரம்; யாகமென்பது பொருள்; சந்தர்ப்பம் நோக்கி, நரமேதயாகமென்று உரைக்கப்பட்டது; மநுஷ்யர்களைப் பலிகொடுத்து நடைபெறும் யாகம்—நரமேதயாகமெனப்படும். "மல்லாச்சேனையிருநிலத்தவித்த" என்றபடி உபயஸேனையிலும் பூமிக்குச் சுமையாயிருப்பவர்களை யெல்லாம் ஒழிப்பதாக நடத்தப்பட்டதும், * மண்ணின்பாரம் நீக்குதற்கே வடமதுரைப்பிறந்தவனுடைய திருவுள்ளத்திற்கு உகப்பாயிருப்பதுமான பாரதயுத்தத்தை நரமேதயாகமாகக் கூறுவது ஏற்குமென்க. பகவத்கீதை முதலியவற்றால் ஆசார்யனாய்த் தோற்ற ஹிதோபதேசம் பண்ணினபடியைப்பற்றக் "குருமுகமாய்க் காத்தான்" என்றருளிச்செய்தனரென்க. குருமுகம்—ஆசார்யத்வம்.

பின்னடிகளின் கருத்து:—திருவரங்கத்தைச் சூழ்ந்து பெருகாநின்ற காவிரிநீரில், பெரியபெருமாளது திருமுகம்போன்ற செந்தாமரை மலர்களும், அவரது திருமேனி நிறம் போன்ற கருநெய்தல் பூக்களும் பரபாகத்தாலே ஒன்றுக்கொன்று எதிர்பொருகிற முகத்தை யுடைத்தாய்க்கொண்டு விகஸிக்குமென்று நீர்வளஞ் சொல்லியவாறு. [பொருமுகமாய்] குவ ளையுங் கமலமும் எம்பெருமானது திருநிறத்தோடும் திருமுகத்தோடும் பொர்செய்யப் புகு வனபோல அலரா நின்றபடியைக்கூறும் என்றுரைப்பாருமுளர் ... .... (3)

405 கூன்தோழுத்தைசிதகுரைப்பக் கொடியவள்வாய்க்கடியசொற்கேட்டு *
ஈன்றெடுத்ததாயரையும் இராச்சியமுமாங்கொழிய *
கான்தொடுத்தநெறிபோகிக் கண்டகரைக்களைந்தானூர் *
தேன்தொடுத்தமலர்ச்சோலைத் திருவாங்கமென்பதுவே. (4)

கூன் தொழுத்தை — கூனையுடைய வேலைக்காரியாகிய மந்தரையானவள்
சிதகு உரைப்ப — (ஸ்ரீராம பட்டாபிஷேக மஹோத்ஸவத்துக்கு) விநாசகமான தீய சொற்களைச் சொல்ல
{அச் சொற்களை அங்கீகரித்துக் காட்டுக்கு எழுந்தருளச்சொன்ன
கொடியவள் வாய் கடிய சொல் கேட்டு — மஹாக்ரூரையான கைகேயியினுடைய வாயிலுண்டான கடினமான சொல்லைக் கேட்டு,
ஈன்று எடுத்த தாயரையும் — (தன்னைப்) பெற்று வளர்த்த தாயான ஸ்ரீ கௌஸல்யாரையும்
இராச்சியமும் — ராஜ்யத்தையும்
ஆங்கு ஒழிய — கைவிட்டு
கான் தொடுத்த நெறி போகி — காடுகளடர்ந்திரா நின்றுள்ள வழியே (ஸ்ரீதண்டகாரணியத்திற்கு) எழுந்தருளி
கண்டகரை — (முனிவர்களுக்கு) முள் போலப் பாதகராயிருந்த (ஜநஸ்தாநவாஸிகளான) ராக்ஷஸரை
களைந்தான் — நிரஸித்தருளின எம்பெருமான் [எழுந்தருளியிருக்கிற]
ஊர் — திருப்பதியாவது—;
தேன தொடுத்த மலர்-தேன் மாறாத மலர்களையுடைய
சோலை — சோலைகளை யுடைத்தான
திரு அரங்கம் என்பது—.

* * *—தண்டகாரணியத்தில் வைஜயந்தமென்ற பட்டணத்தில் வஸிப்பவனும திமித் வஜன் என்று மறுபெயருள்ளவனும் இந்திரனை வென்றவனுமான சம்பராஸுரனை இந்திர னது வேண்டுகோளின்படி வெல்லுதற் பொருட்டுக் கைகேயியுடன் சென்ற தசரதசக்ர வர்த்தி அவ்வஸுரனை எதிர்த்துச்செய்த பெரும்போரில் அவனால் விரணப்பட்டு மூர்ச்சை யடைந்தபொழுது, அச்சக்கரவர்த்தியை அசுரர்கள் வதைசெய்யாதபடி கைகேயி போர்க் களத்திலிருந்து எடுத்துச்சென்று பாதுகாக்க, மூர்ச்சை தெளிந்தவுடன் தசரதன் தனக்கு கைகேயிசெய்த உயிருதவிக்காக மிகமகிழ்ந்து தான் அவட்கு அவள் வேண்டும் இரண்டு வரங்கள் கொடுப்பதாக வாக்கு அளிக்க, அவள் அவற்றைப் பின்பு தனக்கு வேண்டும பொழுது கேட்டுப் பெற்றுக்கொள்வதாகச் சொல்லியிருந்தாள்; அவ்வரங்களில் ஒன்றாகப் பரதனது பட்டாபிஷேகத்தையும், மற்றொன்றாக இராமபிரானது வநவாஸத்தையுங் கேட்கும படி ஞாபகப்படுத்தி உபாயங்கூறித் தூண்டின கூனியின் சொற்படி தன்னைக் காட்டுக் கெழுந்தருளச்சொன்ன கைகேயியின் நியமநத்தின்படி ராஜ்யம் முதலியவற்றை யெல்லாந் துறந்து இராமபிரான் தண்டகாரணியத்திற்சென்று புகுந்து, அங்கு ஜநஸ்தாநத்தில இருந்து கொண்டு ஸாதுக்களை நலிந்து திரிந்த அரக்கர்களை அழித்தருளினமை அறிக.

தொழுத்தை—அடிமைப் பெண். சிதகு—விபரீதம். தாயர்-பூஜையிற்பன்மை. இராச் சியம்—ராஜ்யம். கண்டகர்—முள்ளைப்போன்றவர்; "கண்டகம்" என்ற வடசொல், முள் என்னப் பொருள்படும். .... ... .... ... (4)

406 பெருவரங்களவைபற்றிப் பிழக்குடையவிராவணனை *
உருவரங்கப்பொருதழித்து இவ்வுலகினைக்கண்பெறுத்தானூர் *
குரவரும்பக்கோங்கலரக் குயில்கூவுங்குளிர்பொழில்சூழ் *
திருவரங்கமென்பதுவே யென்திருமால்சேர்விடமே. (5)

| | |
|---|---|
| குரவு அரும்ப | குரவ மரங்களானவை அரும்புவிடா நிற்க, |
| கோங்கு அலர | கோங்கு மரங்களானவை அலரா நிற்க, |
| குயில் கூவும் | குயில்களானவை [களித்துக்] கூவும்படியான |
| குளிர் பொழில் சூழ் | குளிர்ந்த சோலைகளாலே சூழப் பெற்ற |
| திரு அரங்கம் என்பது | திருவரங்கமென்னுந் திருப்பதி யானது;— |
| பெரு வரங்கள் அவை பற்றி | பெருமை பொருந்திய வரங்களைப் பலமாகக்கொண்டு |
| பிழக்கு உடைய | [தேவர் முனிவர் முதலாயினோரி டத்துப்] பிழை செய்கையையே இயல்வாகவுடைய |
| இராவணனை | இராவணனுடைய |
| உரு அரங்க பொருது அழித்து | உடலானது சிக்கசிக்கமாம்படி போர் செய்து [அவனைத்] தொலைத்து |
| இ உலகினை கண் பெறுத்தான் | இந்த லோகத்தைக் காத்தருளின வனும் |
| என திருமால் சேர்வு இடம் | எனக்குத் தலைவனும் சிரிய:பதியு மான எம்பெருமான் சேருமிட மாகிய |
| ஊர் | திருப்பதியாம். |

* * *.—பிரமன் முதலியோரிடத்துப் பெற்ற வரங்களினால் தனக்கு எவ்வகையாலும் அழிவு நேராதென்று துணிந்து, நெஞ்சினால் நினைக்கவும் வாயினால் மொழியவு மொண்ணாத பற்பல பிழைகளைச் செய்து உலகத்தை யெல்லாம் படவடித்துக்கிடந்து கூப்பிடும்படி பண்ணித் திரிந்த இராவணனைக்கொன்று உலகத்தையெல்லாம் வாழ்வித்தருளின எம்பெருமான் எழுந்தருளி யிருக்குமிடம்—நித்யவஸந்தமான சோலைகளையுடைய திருவரங்கமென்பதாம். வாம்—தற்சமவடசொல். பிழக்கு—பிழை. ... .... .... (5)

407 கீழுலகிலசுரர்களைக் கிழங்கிருந்துகிளராமே *
ஆழிவிடுத்தவருடைய கருவழித்தவழிப்பனூர் *
தாழைமடலூடுரிஞ்சித் தவளவண்ணப்பொடியணிந்து *
யாழினிசைவண்டினங்கள் ஆளம்வைக்குமரங்கமே. (6)

| | |
|---|---|
| கீழ் உலகில் அசுரர்களை கிழங்கு இருந்து கிளராமே | பாதாள லோகத்திலுள்ள அசுரர் களை அடிக்கிடந்து கிளம்ப வொட்டாதபடி |
| ஆழி விடுத்து அவருடைய கரு அழித்த | திருவாழியாழ்வானை ஏவி அவர்களு டைய கர்ப்பமளவாக அழித்தருளினவனும் |
| அழிப்பன் | சத்ருக்களைத் தொலைத்தருளு வதையே இயல்வாகவுடையனு மான எம்பெருமான் [எழுந் தருளியிருக்கிற] |
| ஊர் | திருப்பதியாவது;— |
| யாழ் | வீணையினுடைய [ஓசை போன்ற] |
| இன் இசை | இனிய இசையையுடைய |
| வண்டு இனங்கள் | வண்டுகளின் திரள்களானவை |
| தாழை மடலூடு உரிஞ்சி | [மலரத் தொடங்குகிற] தாழை மடலினுள்ளே உடம்பை உரோசிக்கொண்டு [புகுந்து] |
| தவளம் வண்ணம் பொடி அணிந்து | [அம்மடலிலுள்ள] வெளுத்த நிறத்தையுடைய சுண்ணத்தை [உடம்படங்கலும்] அணிந்து கொண்டு |
| | [அதனாற் களிப்பாலே] |
| ஆளம் வைக்கும் | தென, தென என்று ஆளத்தி வைத்துப் பாடுமிடமான |
| அரங்கம் | திருவரங்கமாம். |

* * *—பாம்புகளானவை புற்றுக்களில் பாங்காகக்கிடந்து வஸிப்பதுபோல, அசுரர்களும் பாதாளலோகத்திற் பாங்காகக்கிடந்து, சிலசில காலங்களில் அங்குநின்றும் போந்து தேவர்களை அடர்த்துப் போர்செய்வர்கள்; அப்போது எம்பெருமான் அத்தேவர்கட்குத் துணையாய்நின்று அவ்வசுரரை அழித்தொழித்தருள்வன்; இவ்வாறு அவ்வசுரர்கள் பலகால்

போர்புரிய வருவதையும் அவ்வப்போதுகளிலெல்லாம் தான் அவர்களை ஒழிக்கவேண்டிய வருத்தத்தையும் நோக்கி, அவ்வசுரரைக் கிழங்கோடு களையவேணுமெனத் திருவுள்ளம்பற்றித் தனது திருவாழியைச் செலுத்தி அங்ஙனமே நிறைவேற்றிக் கொண்டானென்பன, முன்னடிகள். [கிழங்கு இருந்து கிளராமே.] மரத்தின்வேரை மாத்திரம் நிறுத்திவிட்டு மற்ற பாகத்தை வெட்டினால், அவ்வேரடியாக மீண்டும் அம்மரம் செழிப்புற்றோங்கிவளரும்; அவ் வேர்தன்னையு மொழித்திட்டால் பின்பு ஒன்றுமின்றி யொழியும்; இவ்வாறே எம்பெருமான் அசுரர்களை ஸமூலோந்மூலநம பண்ணியருளினனென்க. கிழங்கு—வேரானது, இருந்து—மிகுந்திருந்து கிளராமே-மறுபடியும் முன்போல மூளைக்க வொட்டாதபடியென்கை. கரு—மூலம்; இதனால் மூலத்தைச் சொல்லியவாறு. அழிப்பன்=வடமொழியில் ஹரி: என்ற திருநாமம்போல

செவிக்கினிய ஸ்வரத்தையுடைய வண்டுகள் திரள்திரளாகக்கூடி, விகாஸோந்முகமான தாழைமடலினுள் வருந்திப்புகுந்து அங்குப்புரண்டு அதிலுள்ள வெண்ணிறச் சுண்ணங்களைத் தம உடலில் அணிந்துகொண்டு, தென, தென என்று ஆளத்திவைத்துப் பாடும்படியைக்கூறுவன—பின்னடிகள் [உரிஞ்சி] நெருக்கமானத்வாரத்தில் நுழையவேண்டும்போது உடம்பு உராய்தல் இயல்பு. உரிஞ்சுதல—உராய்தல்; ஸம்ஶ்லேஷம். தவளவண்ணம்—தவளவர்ண என்ற வடசொல் விகாரம். தாழைமடலினுள் வெளுத்தபொடிகள் உள்ளமை அறிக. "ஶ்ரமாஸ்பதாரக்தகேஸரரேணுபிர்ப்ருஷ்பாத்ர தவலி க்ருதா: ..." [ரகுவம்சம்] என்றச்லோகம் நோக்கத்தக்கது.

யாழின், இசை, என்று பிரிப்பதும் ஒக்கும். ஆளம் வைத்தல்—அநக்ஷரமாக இசைத்தல்; ஆலாபனை எனப்படும். ... .... ... (6)

408 கொழுப்புடையசெழுங்குருதி கொழித்திழிந்துகுமிழ்த்தெறிய *
பிழக்குடையவசுரர்களைப் பிணம்படுத்தபெருமானூர் *
தழுப்பரியசந்தனங்கள் தடவரைவாயீர்த்துக்கொண்டு *
தெழிப்புடையகாவிரிவந்து அடிதொழுஞ்சீரரங்கமே. (7)

| | | | |
|---|---|---|---|
| கொழுப்பு உடைய செழு குருதி | கொழுப்பை யுடையதும் செழுமை யுடையதுமான ரக்தமானது | தழுப்பு அரிய சந்தனங்களை | [ஒருவரிருவரால்] தழுவ முடியாத சந்தனமரங்களை |
| கொழித்து இழிந்து குமிழ்த்து எறிய | ஊற்றுமாறாமல் கிளர்ந்து நிலத்தில் பரவிக் குமிழி கிளம்பி அலை யெறியும்படி | தட வரை வாய் ஈர்த்துக்கொண்டு வந்து | பெரிய மலைகளினின்று [வேரோடே பிடுங்கி] இழுத்துக்கொண்டு வந்து |
| பிழக்கு உடைய | [பரஹிம்சையாகிய] தீமையைச் செய்கின்ற | [இவற்றைத் திருவுள்ளம் பற்றவேணும் என்று எம்பெருமானைப் பிரார்த்திக்கின்றதோ என்னலாம்] | |
| அசுரர்களை | அசுரர்களை | தெழிப்பு உடைய | இரைச்சலையுடைய |
| பிணம் படுத்த | பிணமாக்கி யருளின | காவிரி | திருக்காவேரி நதியானது |
| பெருமானார் | எம்பெருமான் [எழுந்தருளியிருக்கிற] | அடி தொழும் சீர் அரங்கம் | [எம்பெருமானது] திருவடிகளைத் தொழுகையாகிற சீர்மையைப் பெற்ற திருவரங்க நகரம். |
| ஊர் | திருப்பதியானது:— | | |

* * *—ஊட்டுப் பன்றிபோலே கிளர்ந்தொழுக்கும்படி போஷக வஸ்துக்களை ஊட்டிக்கொண்டு உடலை வளரச்செய்து திரிகையாலே கொழுப்புடைத்தாயும் அழகியதாயுமிருக்கிற ரத்தமானது ஊற்று மாறாமல் கிளர்ந்து அருவி குதித்தாற்போலே நிலத்திலே யிழிந்து குமிழி கிளம்பி அலையெறியும்படியாக உலகங்களையெல்லாம் நலிந்துதிரியும பிழைகளையுடையரான அசுரர்களை நிரவசேஷமாக்கிவிட்டவாறு கூறுவன முன்னடிகள்.

[தழுப்பரிய இத்யாதி. மலையினிடத்து வளர்ந்துள்ள பெருப்பெருத்த சந்தனவ்ருக்ஷங்களை வேரோடு கிளப்பி இழுத்துக்கொண்டு, "இவற்றைக் கைக்கொண்டருளவேணும்" என்று இரப்பதுபோல இரைச்சலிடாநின்ற காவேரியானது தான் கொணர்ந்த சாத்துப்படியைப் பெரியபெருமாளுக்கு ஸமர்ப்பித்துத் திருவடிகளைத் தொழாநிற்குபடியைக் கூறிய வாறு,

தழுப்பரிய—சந்தனமரம் சிறிதாயிருந்தால் ஒருவரிருவரால் தழுவமுடியும்; அளவிட்டுக் காட்ட வொண்ணுதபடி மிகவும் ஸ்தூலமாயிருப்பதனால் தழுவமுடியாமை கூறப்பட்டது. தழுவுதல்—கைகளால் அணைத்துக்கொள்ளுதல்.

"ஸஹ்யாத்ரிஜந்மா ஜநகோ ஜநந்யா ஹரிப்ரியம் ஸ்ரீ ரேவ வாஹிநீ வா: ஸ்ரீரங்கராஜம் வனதேவதா ஹஸிதாஹ ஸிந்துகாவேரீ ... காவேரீ ஹரீ கவேரகந்யா ... " [ஸ்ரீரங்கராஜஸ்தவம்] என்ற ச்லோகத்தைப் பின்னடிகளோடு ஒருபுடை ஒப்பிடுக. .... ... .... (7)

409 வல்லெயிற்றுக்கேழலுமாய் வாளெயிற்றுச்சீயமுமாய் *
எல்லையில்லாத்தரணியையும் அவுணனையுமிடந்தானூர் *
எல்லியம்போதிருஞ்சிறைவண்டு எம்பெருமான்குணம்பாடி *
மல்லிகைவெண்சங்கூதும் மதிளரங்கமென்பதுவே. (8)

| | | | |
|---|---|---|---|
| வல் எயிறு கேழலும் ஆய் | வலிவுள்ள பற்களையுடைய வராஹமாய்த் திருவவதரித்ததும், | இரு சிறை வண்டு | பெரிய சிறகுகளையுடைய வண்டுகளானவை |
| வாள் எயிறு சீயமும் ஆய் | ஒளியையுடைய பற்களையுடைய நரஸிம்ஹமாய்த் திருவவதரித்ததும், | எல்லியம்போது | அந்திப்பொழுதிலே |
| எல்லை இல்லாத் தரணியையும் அவுணனையும் இடந்தான் | எல்லையில்லாத பூமியையும் ஹிரண்யாஸுரனையும் கீண்டருளின எம்பெருமான் (எழுந்தருளியிருக்கிற) | எம்பெருமான் குணம்பாடி | பெரிய பெருமாளுடைய திருக் குணங்களைப் பாடிக்கொண்டு |
| ஊர் | திருப்பதியாவது,— | மல்லிகை வெண் சங்கு ஊதும் | மல்லிகைப்பூவாகிற வெளுத்த சங்கை ஊதப்பெற்றதும் |
| | | மதிள் | திருமதிள்களையுடையதுமான |
| | | | அரங்கம் என்பது— |

* * *—ஹிரண்யாக்ஷனையும் ஹிரண்யனையும் ஸம்ஹரித்தபடியைக் கூறுவன முன்னடிகள். வல்லெயிற்றுக் கேழலாய்த் தரணியை இடந்தான், வாளெயிற்றுச்சீயமாய் அவுணனை இடந்தான் என இயையும்; எனவே, நிரநிறைப் பொருள்கோளாம். இவ்வரலாறுகள் கீழ்ப்பலவிடங்களிலுங் குறிக்கப்பட்டுள்ளன. வராஹத்தின் எயிற்றுக்குப் பூமியைக் கீண்டெடுக்கும்படியான வன்மை இன்றியமையாததனது பற்றி "வல்லெயிற்றுக் கேழல்" என்றார்; நரஸிம்ஹத்தின் எயிறுகள் அழகுக்குறுப்பாதல் பற்றி "வாளெயிற்றுச்சீயம்" என்றார். தரணிக்கு எல்லை யில்லாமையாவது—கடல்களும் தீவுகளும் போலன்றி, எல்லாம் தன்னுள்ளேயாம்படி * பஞ்சாசத்கோடி விஸ்தீர்ணையாயிருக்கை. அவுணனுக்கு எல்லையில்லாமையாவது—தான் பெற்ற வரங்களுக்கீடாக எல்லையில்லாத தபஸ்ஸுகளை யுடையனாயிருக்கை.

வண்டுகள் அந்தியம்போதில் எம்பெருமான் குணங்களைப் பாடிக்கொண்டு திரிதலைக் கூறுவது, மூன்றாமடி. கீழ் திருமாலிருஞ் சோலையைப் பாடும்போது "அறுகால் வரிவண்டுகள் ஆயிரநாமஞ்சொல்லிச், சிறுகாலைப்பாடும்" என்றார்; இங்கு "எல்லியம்போது" என்கிறார்;

இதனால், திவ்யதேசங்களிலுள்ள வண்டுகள் காலத்துக்கேற்பப் பண்களிலே பகவத்குணங்களை நியதமாகப் பாடும்படியைக் கூறியவாறு.

[மல்லிகை இத்யாதி.] ஸாயங்கால புஷ்பமான மல்லிகைப்பூவில் வண்டுகளிருந்து ஊதும்போது அந்தப்பூவானது அலருவதுக்குமுன்பு தலைகுவிந்து மேல்பருத்துக் காமபடி நேர்ந்து வெளுத்த நிறத்தையுடைத்தாய் சங்கைப் போன்றிருத்தலால் வெண்சங்கை ஊதுவது போல்வதுபற்றி இங்ஙனருளிச் செய்தாரென்க. .... .... (8)

410 குன்றுடுகோழுமுகில்போல் குவளைகள்போல்குரைகடல்போல் *
நின்றுடுகணமயில்போல் நிறமுடையநெடுமாலூர் *
குன்றூடுபொழில்நுழைந்து கொடியிடையார்முலையணவி *
மன்றூடுதென்றலுலாம் மதிளரங்கமென்பதுவே. (9)

| | |
|---|---|
| குன்று ஆடு கொழு முகில் போல | மலையுச்சியிற் சார்ந்த நீர் நிறைந்த மேகம்போலவும் |
| குவளைகள்போல் | கருநெய்தல் பூப்போலவும் |
| குரை கடல் போல் | ஒலிசெய்யாநின்ற கடல் போலவும் |
| நின்று ஆடு மயில் கணம் போல் | (களிப்பாலே) நின்று ஆடாநின்றுள்ள மயில்களின் திரள்போலவும் (இராநின்ற) |
| நிறம் உடைய | வடிவழகையுடையனான |
| நெடுமால் | எம்பெருமான் (எழுந்தருளியிருக்கிற) |
| ஊர் | திருப்பதியாவது |
| தென்றல் | தென்றற்காற்றானது |
| குன்று பொழில் ஊடு நுழைந்து | (மலய) பர்வதத்திலுள்ள சோலைகளினிடையிலே நுழைந்து (அங்குள்ள பூக்களின் தாதுகளை அளைந்து பரிமளத்தைக் கொய்துகொண்டு) |
| கொடி இடையார் முலை அணவி | கொடிபோன்ற இடையையுடையரான பெண்களினுடைய (கலவைச்சாந்தணிந்த) முலைகளை வியாபித்து (அந்தப் பரிமளத்துடனே) |
| மன்று ஊடு உலாம் | நாற்சந்திகளினூடே உலாவப்பெற்ற மதிள் அரங்கம் என்பது—. |

* * *—நிறம் என்று திருமேனி நிறந்தன்னையே சொல்லிற்றாகக் கொள்ளில் கண்டகண் மயிர்க்குச்சி விடும்படியான குளிர்த்திக்கு—நீர்கொண்டெழுந்த காளமேகத்தின் நிறத்தையும், செவ்விக்கு—குவளைப்பூவின் நிறத்தையும், இருட்சிக்கு—கடலின் நிறத்தையும், புகர்ப்புக்கு—மயில் கழுத்தின் நிறத்தையும் உவமைகூறுவதாக நியமித்துக் கொள்ளவேணும். எம்பெருமான் வடிவுக்கு ஒன்றே உபமானமாகப் போராமை இதனால் அறியத்தக்கது.

"தென்னன் பொதியில் செழுஞ்சந்தின் தாதளைந்து" என்றபடி மலய மலையில் சந்தந வ்ருக்ஷங்களையுடைய பொழில்களூடே நுழைந்து அங்குள்ள பூக்களின் தாதுகளை அளைந்து அவற்றின் பரிமளத்தைக் கொய்துகொண்டும், * வல்லிசேர் நுண்ணிடை மாதர்களுடைய சந்தநகுங்குமாதி அலங்காரமணிந்த முலைகளை ஸ்பர்சித்து அங்குள்ள பரிமளத்தை அளைந்துகொண்டும் வருகின்ற தென்றல் வெளிநிலத்திற் புறப்பட்டு நாற்சந்திகளில் வீசும்படியைக் கூறுவன, பின்னடிகள். இடைக்குக் கொடியுவமை—நேர்மையிலும் நுடங்குதலிலுமென்க. .... .... .... .... .... (9)

411 பருவரங்களவைபற்றிப் படையாலித்தெழுந்தானை *
செருவரங்கப்பொருதழித்த திருவாளன்திருப்பதிமேல் *
திருவரங்கத்தமிழ்மாலை விட்டுசித்தன்விரித்தனசொண்டு *
இருவரங்கமெரித்தானை யேத்தவல்லாரடியோமே. (10)

| | |
|---|---|
| பரு வரங்கள் அவை பற்றி | (பிரமன் முதலியோரிடத்துப் பெற்ற) பெரியவரங்களைப் பலமாகக் கொண்டு |
| படை ஆலித்து எழுந்தானை | யுத்த விஷயமாகக் கோலாஹலஞ் செய்து வெளிப்புறப்பட்ட இராவணனை |

செரு அரங்க பொருது அழித்த — யுத்தத்திலே ஒழியும்படி போர் செய்து ஒழித்தருளின

திரு ஆளன் — (வீர்யமாகிற) லக்ஷ்மியைத் தனக்கு நிரூபகமாக உடையனான எம்பெருமானுடைய

திருப்பதி மேல் — (திருவரங்கமெனனும்) திருப்பதி விஷயமாக

விட்டுசித்தன் — பெரியாழ்வார்

விரித்தன — அருளிச்செய்த

திரு அரங்கம் தமிழ் மாலை கொண்டு — (பாட்டுத்தோறும்) 'திருவரங்கம்' என்கிற திருநாமத்தையுடைய தமிழ் மாலையாகிய இப்பத்துப் பாசுரங்களையுங்கொண்டு,

இருவர் அங்கம் எரித்தானை — (மதுகைடபர்களாகிற) இருவருடைய உடலை (திருவனந்தாழ்வானுடைய மூச்சு வெப்பத்தினால்) கொளுத்திப் போகட்ட எம்பெருமானை

ஏத்த வல்லார் — துதிக்க வல்லவர்களுக்கு

அடியோம் — அடிமை செய்யக்கடவோம்.

* * *—"தீதிலாதவொண்டமிழ்களிவையாயிரத்துளிப்பத்தும், ஓத வல்லபிராக்கள் நம்மை ஆளுடையார்கள் பண்டே" என்று—தம் அருளிச்செயலைக் கற்பார்க்குத் தாம் அடிமைசெய்வதாக அருளிச்செய்த நம்மாழ்வாரைப் போல், இவ்வாழ்வாரும் இப்பத்தைக் கற்பார்க்கு அடிமைசெய்யப்பெறுவோம் யாமென்கிறார்.

வரங்கள் அவை = அவை—முதல் வேற்றுமைச் சொல்லுருபு. படை என்று சேனைக்கும் பெயர். யுத்தத்துக்கும் பெயர். ஆலிப்பு—கோலாஹலம். அரங்கல—அழிதல். இருவரங்கமெரித்தானை.] "ஏய்ந்த பணக்கதிர்மேல் வெவ்வுயிர்ப்ப—வாய்ந்த, மதுகைடபரும் வயிறுருகி மாண்டார்" என்றது காண்க. "தமிழ்மாலை கொண்டு ஏத்தவல்லார்" என இயையும். (10)

அடிவரவு:—மாதவ பிறப்பு மருமகன் கூன் பெரு கீழ் கொழுப்பு வல்லெயிறு குன்று பரு மரவடி.

---

## நான்காம்பத்து—ஒன்பதாந்திருமொழி, மரவடியை.

அவதாரிகை:—கீழ்த்திருமொழியில், ராமக்ருஷ்ணாதி அவதாரகுண சேஷ்டிதங்கள் நன்கு விளங்கும்படி எம்பெருமான் திருவரங்கம் பெரியகோயிலில் எழுந்தருளியிருக்கும்படியை ஒருபடி அநுபவித்தமாத்திரத்தால் தாம் பர்யாப்தி பெறாமல், மீண்டும் மற்றொருபடியாக அத்திருப்பதிதன்னையே அநுபவிக்கிறார், இத்திருமொழியில்.

412 மரவடியைத்தம்பிக்கு வான்பணயம்வைத்துப்போய்வானோர்வாழ *
செருவுடையதிசைக்கருமம் திருத்திவந்துலகாண்டதிருமால்கோயில் *
திருவடிதன்திருவுருவும் திருமங்கைமலர்கண்ணுங்காட்டிநின்ற *
உருவுடையமலர்நீலங் காற்றாட்டவோசலிக்குமொளியரங்கமே. (1)

தம்பிக்கு — (சித்திரகூடத்தில் வந்து ப்ரபத்தி பண்ணின) பரதாழ்வானுக்கு

மர அடியை — ஸ்ரீபாதுகைகளை

வான பணயம் வைத்து — நன்றாக நம்புகைக்கு உரிய அடைக்கலமாக அளித்து

வானோர் வாழ — தேவர்கள் வாழும்படி

போய் — (சித்திரகூடத்தைவிட்டு அவ்வருகே) எழுந்தருளி

செரு உடைய திசை கருமம் — யுத்தத்துக்கு உரிய தெற்குத்திக்கில் செய்ய வேண்டிய காரியங்களை

திருத்தி — குறையறச்செய்து முடித்துவிட்டு

வந்து — பிராட்டியுடனே அயோத்திக்கு எழுந்தருளி

உலகு ஆண்ட — ராஜ்ய பரிபாலனம் செய்தருளின

திருமால் கோயில் — ச்ரிய:பதி (எழுந்தருளியிருக்கிற) கோயிலாவது;

| | | | |
|---|---|---|---|
| திரு அடி தன் | ஸர்வஸ்வாமியான பெரிய பெருமாளுடைய | காட்டி நின்ற | பிரகாசிப்பியாநின்ற |
| | | உரு உடைய | அழகு பொருந்திய |
| திரு உருவும் | திருமேனி நிறத்தையும் | நீலம் மலர் | கருநெய்தற் பூக்களானவை |
| திரு மங்கை | பெரிய பிராட்டியாருடைய | காற்று ஆட்ட சலிக்கும் | காற்று அசைக்க அசைந்து கொண்டிருக்கப்பெற்ற |
| மலர் கண்ணும் | மலர்ந்த திருக்கண்களின் நிறத்தையும் | ஒளி | ஒளியையுடைய |
| | | அரங்கம் | திருவரங்கமாம். |

* * *—"ஓசலிக்கும்" என்றவிடத்து, ஓ—உயர்வு சிறப்பு; அசையுமாம். "காட்டி நின்று" என்ற பாடத்தில் செய்யுளோசை குன்றுதலாலும், வியாக்கியான விரோத மூண்டாகையாலும் "காட்டிநின்ற" என்ற பாடங் கொள்ளப்பட்டது; "ப்ரகாசிப்பியா நின்ற அழகையுடைத்தான நீலமலரானது" (தாள கோச பாடம்) என்ற ஜீயருரை வாக்கிய மறியத்தக்கது.

இராமபிரான், தன்னை அயோத்திக்கு வந்து முடிசூடி அரசாளுமாறு சித்திரகூடத்திற் பணிந்து வேண்டிய பரதாழ்வானை நோக்கி, 'தந்தை சொற்பழுதுபடாதபடி பதினான்கு வருடம் வனவாசங்கழித்தன்றி யான் அரசாளமீளமாட்டேன' என்றருளிச்செய்ய, பரதன் 'இனி நாம் நிர்ப்பந்திக்கலாகாது' என்றிசைந்து, "அடியேனுடைய பாரதந்திரியமே விளங்குகைக்கும், தேவர் மீண்டெழுந்தருள்வீர் என்று நம்புவதற்கும அடி என்?" என்று கேட்க, அவ்விரண்டிற்கு முறுப்பாகப் பாதுகைகளை அளித்தருளினபடியைக் கூறுவது, முதலடி. மரவடி—மரமயமான திருவடி; பாதுகை. பணயம்—அடகு; உலகத்தில் ஒருவர் ஒரு பொருளை மற்றொருவரிடத்து அடகுவைப்பது, நம்பிக்கைக்காகவாம; அதுபோல இராமபிரானும் பரதனுடைய நம்பிக்கைக்காக அவனிடத்து இம்மரவடியை வைத்தருளினமையால் "பணயம வைத்து" என்றார். வான் என்று பெருமையைச் சொன்னபடி; 'பணயம' என்பதன் பொருளின் ஏகதேசமாகிய நம்பிக்கையில் அப்பெருமைக்கு அந்வயம; இதனால், உறுதியான நம்பிக்கையைக் கூறியவாறு. பணையம் எனினும், பணயம் எனினும ஒக்கும.

ராவணாதி ராக்ஷஸரெல்லாங் கூடிக்கொண்டிருப்பது தென்திசையிலாதலால், அதனைச் செருவுடையதிசை என்றார். இத்திசைக்கருமந்திருத்துகையாவது — ஜநஸ்தாநவாஸிகளான அரக்கரை அழித்ததும், ஸுக்ரீவனுக்குப் பகையறுத்து அரசாட்சி செய்வித்ததும,* இலங்கை பாழாளாகப் படைபொருததும, விபீடணனுக்கு அரசீந்ததும் முதலியன.

திருவடி என்ற—ஸ்வாமிக்கும் பெயர். திருவரங்கச் சோலைகளில் அழகிய கருநெய்தற் பூக்கள் பூத்திருக்கின்றன வென்னவேண்டுவதை ஒருவகைச்சமத்காரமாகக் கூறுகின்றார்; எம்பெருமானது திருமேனி நிறத்துக்கும, உத்தமஸ்த்ரீகளுடைய கண்களுக்கும கருநெய்தற் பூவை உவமை கூறுவது, கவிமரபு:

"திருமங்கை மலர்கண்ணும்" என்பதற்குப் "பெரிய பிராட்டியாருடைய விகஸிதமான திருக்கண்களின் நிறத்தையும்" என்ற மணவாளமாமுனிகளின் வியாக்கியானமாதலால் 'மலர்க்கண்' என்றபாடம மறுக்கப்பட்டது; மலர் போன்ற கண் என்று பொருள் கூறப்படின், அப்பாடம் தகும; (அப்போது, உவமைத்தொகை.) 'மலர்ந்தகண்' எனக் ககரமிரட்டாது, 'மலர்கண்' என இயல்வேயாம; "வளர்பிள்ளை, உயர்தாமரை, உணர்பொருள், தாழ் குழல், ஆழ்கடல்" என்பன காண்க. மலர் நீலம்—"நீலம மலர்" என மொழிமாற்றிப் பொருள் கொள்க. .... .... .... .... (1)

| | |
|---|---|
| வான் ஏய் வானவர் தங்கள் ஈசா | பரமபதத்திற் பொருந்தியிரா நின்ற நித்ய முக்தர்களுக்குத் தலைவனே! |
| மதுரை பிறந்த மாமாயனே | திருவடமதுரையில் அவதரித்த மிக்க ஆச்சரிய சக்தியை யுடையவனே! |
| என் ஆனாய் | (பாகனுக்கு வசப்பட்டொழுகு கின்ற) யானை போல எனக்கு வசப்பட்டிருப்பவனே! |
| அரங்கத்து அரவு அணைப் பள்ளியானே; | |
| நான் உன் மாயம் ஏது ஒன்றும் அறியேன் | அடியேன் உன் மாயைகளில் யாதொன்றையும் அறியமாட்டேன்; |
| நமன் தமர் பற்றி நலிந்திட்டு | யமகிங்கரர்கள் (என்னைப்) பிடித்து (இந்த சரீரத்தை விட்டு) [illegible] வேண்டிய ஹிம்ஸைகளையும் [illegible] பண்ணிவிட்டு, (பின்பு) |
| இந்த ஊன் புக்கு என்று | 'இந்த யாதநா சரீரத்திலே பிரவேசி' என்று |
| மோதும்போது | அடிக்கும்போது |
| அங்கு | அவ்விடத்தில் |
| | உன்னை நான் ஒன்றும் நினைக்க மாட்டேன்;— |
| | நீ என்னைக் காக்கவேண்டும். |

* * *—"அங்கேதும் நானுன்னை நினைக்கமாட்டேன்" என்றும் பாடமுண்டு. "நானேதுமுன்மாய மொன்றறியேன்" என்ற விடத்தில், (கீழ் இரண்டாம் பாட்டில்,) "போமிடத்துன் திறத்தெத்தனையும் புகாவண்ணம் நிற்பதோர் மாயைவல்லை" என்றதை நினைக்க. இந்த ஊன்—விட்ட சரீரத்திற்காட்டில் பிரவேசிக்கிற சரீரத்தின் கொடுமையைச் சுட்டிக்காட்டுகிறது, இந்த என்று. நரகத்தில் அதி தீவ்ரமான வேதனைகளை அநுபவிப்பதற்காக யமகிங்கரர்களினால் பூட்டப்படும் சரீரத்திற்கு 'யாதநாசரீரம்' என்று பெயர் அறிக. ஊனே, புகே—ஏ இரண்டும் இசைநிறை என்னலாம். .... .... (8)

431 குன்றெடுத்தாநிரைகாத்தவாயா கோநிரைமேய்த்தவனேயெம்மானே *
அன்றுமுதலின்றறுதியாக ஆதியஞ்சோதிமறந்தறியேன் *
நன்றுங்கொடியநமன்றமர்கள் நலிந்துவலிந்தென்னைப்பற்றும்போது *
அன்றங்குநீயென்னைக்காக்கவேண்டும் அரங்கத்தரவணைப்பள்ளியானே. (9)

| | |
|---|---|
| குன்று எடுத்து | கோவர்த்தநமலையைக் குடையாக) எடுத்து(ப் பிடித்து) |
| ஆநிரை | பசுக்களின் திரளை |
| காத்த ஆயா | ரக்ஷித்தருளின ஆயனே! [கோபாலனே!] |
| கோநிரை மேய்த்தவனே | மாடுகளின் கூட்டத்தை மேய்த்தருளினவனே! |
| எம்மானே | எனக்கு ஸ்வாமியானவனே! |
| அரங்கத்து அரவு அணைப் பள்ளியானே;— | |
| அன்று முதல் இன்று அறுதி ஆக | (உனக்குப் பல்லாண்டு பாடும்படி ஆக்கிக்கொண்ட) அந்நாள் தொடங்கி இன்றளவாக |
| ஆதி அம் சோதி | [illegible] விலக்ஷண [illegible] திவ்யமங்கள [illegible] |
| மறந்து அறியேன் | (அடியேன்) மறந்[illegible] |
| நன்றும் கொடிய நமன் தமர்கள் | மிக்க கொடுமை [illegible] யமகிங்கரர்கள் |
| என்னை நலிந்து வலிந்து பற்றும் போது அன்று | என்னை ஹிம்ஸித்து [illegible] பிடிக்கும் காலம் [illegible] [illegible] |
| அங்கு | அவ்விடத்தில் |
| | நீ என்னை காக்கவேண்டும்.— |

* * *—அன்று முதல்—கர்ப்பவாஸம் முதலாக என்றுங் கொள்வர். அறுதி—முடிவு. "அன்று முதலின்றறுதியா" என்ற பாடம் செய்யுளின்பத்துக்கு மாறுபாடாம். அன்று முதல் இன்றளவாக ஆதியஞ்சோதியை மறந்தறியேன் என்று நின்றுகொண்டு, "நன்றுங் கொடியநமன்றமர்கள் நலிந்து வலிந்தென்னைப் பற்றும் போதன்றங்கு நீயென்னைக் காக்க வேண்டும்" என்றால் விருத்தமன்றோவென்னில்; அதிசங்காமூலமான கலக்கத்தினால் வந்த அச்சத்தாலே இங்ஙனே வேண்டுகிறபடி. (இத்திருமொழியின் அவதாரிகையில் இதுவிரியும்.) "பற்றும்போது அங்கு என்னைக் காக்கவேண்டும்" என்றிவ்வளவே போதுமாயிருக்க, அன்று என்று அதிகமாக ஒரு சொல் சொன்னது அவ்வவஸ்தையின் கொடுமையைக் கருதியாமென்க. கோ—பசு. .... .... .... ... (9)

432 மாயவனைமதுசூதனனை மாதவனைமறையோர்களேத்தும் *
ஆயர்களேற்றினையச்சுதனை அரங்கத்தரவணைப்பள்ளியானை *
வேயர்புகழ்வில்லிபுத்தூர்மன் விட்டுசித்தன்சொன்னமாலைபத்தும் *
தூயமனத்தனராகிவல்லார் தூமணிவண்ணனுக்காளர்தாமே. (10)

மாயவனை — ஆச்சரியசக்தியை யுடையவனும்
மது சூதனனை — மது என்ற அசுரனை ஒழித்தருளினவனும்
மாதவனை — பெரிய பிராட்டியாக்கு வல்லபனும்
மறையோர்கள் ஏத்தும் ஆயர்கள் ஏற்றினை — வைதிகர்களினால் துதிக்கப்படுமவனும் இடையர்களுக்குத் தலைவனும
அச்சுதனை — (அடியாரை ஒரு நாளும்) நழுவவிடாதவனும்
அரங்கத்து அரவணைப் பள்ளியானை — கோயிலில் சேஷசயநத்தில கண்வளர்ந் தருள்பவனுமான எம்பெருமானை நோக்கி
வேயர் புகழ் வில்லி புத்தூர மன் விட்டுசித்தன் சொன்ன — தாம் திருவவதரித்த குடியிலுள்ளாரெல்லாராலும் புகழப்பட்டவரும் ஸ்ரீவில்லிபுத்தூர்க்கு நிர்வாஹகருமான பெரியாழ்வார் அருளிச்செய்த
மாலை பத்தும — சொல்மாலையான இப்பத்துப் பாசுரங்களையும்
தூய மனத்தனர் ஆகி வல்லார் தாம் — நிர்மலமான நெஞ்சையுடையராய்க் கொண்டு ஓதவல்லார்கள்
தூ மணி வண்ணனுக்கு ஆளர் — பழிப்பற்ற நீலமணிபோன்ற வடிவையுடைய எம்பெருமானுக்கு அடிமை செய்யப் பெறுவர்.

* * *—இப்பாட்டால், இத்திருமொழி கற்பார்க்குப் பலஞ்சொல்லித் தலைக்கட்டுகிறார். மேன்மைக்கு "அமரரேறு" என்பதுபோல, நீர்மைக்கு "ஆயர்களேறு" என்பதாம். நம்பூர்வாசாரியர்கள் பெரிய பெருமாளைக் கிருஷ்ணாவதாரமாக அநுஸந்தித்துப் போருவர்கள்; "கொண்டல் வண்ணனைக் கோவலனாய் வெண்ணெயுண்டவாயன் என்னுள்ளங் கவர்ந்தானை, அண்டர்கோனணியரங்கன் என்னமுதினை" என்றார் திருப்பாணாழ்வார். திருப்பவளத்தை மோந்து பார்த்தால் இப்போதும் வெண்ணெய் மணக்கும் என்றருளிச் செய்வர். "கௌஸ்துபஸ்யாபி நவவரிஷ்டம் அஹநீயஶோதா நஸூஜௌதாஸஹாணம் உபிகம் நஷ்டாயிமியிநோதி"—என்று யசோதைப்பிராட்டி பிள்ளைப்பணியாகச் சாத்தின திருவாபரணம் இப்போதும் பெரிய பெருமாள் திருக்கழுத்திற் கிடக்கிறதென்று நேரில்கண்டநுபவித்து அருளிச்செய்தார் பட்டரும்.

தூயமனத்தனராகி வல்லார்—அநந்யப்ரயோஜநராக ஓதவல்லவர்கள் என்றபடி; இதனால், சோறுகூறைகளையே முக்கிய பிரயோஜநமாகநச்சி ஓதுமவர்களை வியாவர்த்திக்கின்றதென்க. .... ... .... .... .... (10)

அடிவரவு:—துப்பு சாமிடம எல்லே ஒற்றை பை தண்ணனவு செஞ்சொல் நான் குன்றுமாய வாக்கு.

---

## ஐந்தாம்பத்து—முதல் திருமொழி, வாக்குத் தூய்மை.

---

அவதாரிகை:—பெரிய பெருமாளுடைய போக்யதையில் தமது மனமொழி மெய்களாகிற காரணத்ரயமும மேல்விழுகிறபடியை அருளிச்செய்கிறார், இத்திருமொழியில்.

433 வாக்குத்தூய்மையிலாமையினாலே மாதவாவுன்னைவாய்க்கொள்ளமாட்டேன் *
நாக்குநின்னையல்லாலறியாது நானதஞ்சுவனென்வசமன்று *
மூர்க்குப்பேசுகின்றானிவனென்று முனிவாயேலுமேன்நாவினுக்காற்றேன் *
காக்கைவாயிலுங்கட்டுரைகொள்வர் காரணாகருளக்கொடியானே. (1)

| | | | |
|---|---|---|---|
| மாதவா | ச்ரிய:பதியானவனே! | அது நான் அஞ்சுவன் | அசக்தமான நாக்கு இங்ஙனே உனக்கு ஈடுபடாநின்றதைக் குறித்து நான் அஞ்சுகிறேன்; |
| காரணா | (உலகங்கட்கெல்லாம்) ஆதிகாரணமானவனே | (அது) | அந்த நாக்கானது |
| கருளக் கொடியானே | பெரிய திருவடியை த்வஜமாக வுடையவனே | என வசம் அன்று | எனக்கு வசப்பட்டு நிற்பதன்று; |
| வாக்கு தூய்மை இலாமையினாலே | (என்னுடைய) வாய்மொழிக்கு பரிசுத்தி இல்லாமையாலே | இவன் மூர்க்கு பேசுகின்றான் என்று முனிவாய் எனும் | "இவன் மூடர் பேசும் பேச்சைப் பேசாநின்றான்" என்று திருவுள்ளம் பற்றி சீறியருளினாலும் |
| உன்னை | (ஹேயப்ரதிபடனான) உன்னை | என நாவினுக்கு ஆற்றேன் | என்னுடைய நாக்கின் பதற்றத்தை நான் ஸஹிக்க வல்லேனல்லேன்; |
| வாய் கொள்ள மாட்டேன் | வாய்கொண்டு துதிக்க யோக்யதை அற்றவனாயிராநின்றேன்; (வெறுமனே கிடப்போமென்று பார்த்தாலும்) | காக்கை வாயிலும் கட்டுரை கொள்வர் | காக்கையினுடைய வாயிலுண்டான சொல்லையும் நற்சொல்லாக (அறிவுடையார்) கொள்ளுவார்கள். |
| நாக்கு நின்னை அல்லால் அறியாது | (ரஸமறிந்த எனது) நாக்கானது உன்னையொழிய மற்றொருவரை (வாய்க்கொள்ள) அறியாது; | | |

* * *—"எம்பெருமான் ஸந்நிதியிற் பொய் சொல்லுகை, க்ஷுத்ர ப்ரயோஜநங்களை விரும்புகை, க்ஷுத்ரர்களைப் புகழ்கை முதலியவையாகிற அசுத்திகள் என்னுடைய வாய்மொழிக்கு அளவற்றிருப்பதனால், அவ்வாய்மொழி கொண்டு உன் பெருமையைப் புகழுகைக்கு நான் அர்ஹனல்லனென்று ஒழிந்தாலும், நாக்கு ரஸமறிந்ததாகையால், உன்னைத் தவிர்த்து மற்றொருவரை வாயிற்கொள்ள அறியமாட்டாது" என்று எம்பெருமானை நோக்கி ஆழ்வார் அருளிச் செய்ய; அதுகேட்டு எம்பெருமான், "ஆழ்வீர்! ஆகில் நீரும் அந்த நாக்குடன்கூடிச் சொல்லும்" என்று நியமிக்க; அதற்கு ஆழ்வார் "நாக்கின் தோஷத்தை நினைத்து நான் அஞ்சாநின்றேனே" என்ன; அதற்கு எம்பெருமான், "ஆழ்வீர்! நாக்கு ரஸமறிந்ததாகையாலே மேல்விழாநின்றது, அதன் தோஷத்தை அறிந்துள்ள நீர் அதுமேல் விழாதபடி அதை உமக்கு வசப்படுத்தி நியமித்துக்கொள்ளும்" என்ன; அதுகேட்டு ஆழ்வார், "அந்த நாக்கு எனக்கு வசப்பட்டிருந்தாலன்றோ அதை நான் நியமிக்கவல்லேன்! அதுதான் உனக்கு வசப்பட்டுவிட்டதே" என்ன; அதற்கு எம்பெருமான், "ஆழ்வீர்! சால அழகிதாயிருந்தது; 'உன்னை வாய்க்கொள்ளமாட்டேன்' என்கிறீர், 'நாக்கு நின்னையல்லால் அறியாது' என்கிறீர், 'நானதஞ்சுவன் என்வசமன்று' என்கிறீர்; இவ்வாக்கியங்கள் ஒன்றோடொன்று சேருவது எங்ஙனே? ஆராய்ந்துபார்த்தால் நீர்பேசும் பேச்சுக்களெல்லாம் மூர்க்கர்பேசும் பேச்சாயிராநின்றன! என்ன; ஆழ்வார், "அது உண்மையே; என்னுடைய பேச்சுக்கள் மூர்க்கப் பேச்சுகளாகத்தோற்றும்; அதனால் உனக்குச் சீற்றமும் பிறக்கும்; ஆகிலும் அச்சீற்றத்தை ஒருவாறு என்னால் ஸஹிக்கமுடியும்; இந்நாக்குப்படுத்துகிறபாடு அப்பப்ப! ஸஹிக்கவேமுடியவில்லையே" என்ன; அதற்கு எம்பெருமான், "அந்நாக்கைக்கொண்டு என்னை நீர் புகழத்தொடங்கினீராகில், அது எனக்கு அவத்யாவஹமாய்த் தலைக்கட்டுமே!" என்ன; அதற்கு ஆழ்வார் "எம்பெருமானே, மூர்க்கர் பேசும் பாசுரங்கள் அறிவுடையார்க்குக் குற்றமாகத் தோற்றுதலேயன்றிக் குணமாகவுந் தோற்றும்; காக்கை ஓரிடத்திலிருந்துகொண்டு தனக்குத் தோன்றினபடி கத்திவிட்டுப்போனாலும், அதனை அறிவுடையார் கேட்டு, 'இது நமக்கு (உறவினர் வரவாகிற) நன்மையைச் சொல்லாநின்றது' என்று கொள்ளக் காணாநின்றோம்; அதுபோல அடியேன் நாவினுக்கு ஆற்றமாட்டாமல் வாய் வந்தபடி சிலவற்றைப் பிதற்றினாலும் அவற்றை நீ நற்றமாகவே கொள்ள வேணும்" என்றருளிச் செய்ய; எம்பெருமான், "ஆழ்வீர்! அப்படியாகிலும் குற்றத்தை நற்றமாகக் கொள்ளவேண்டிய கடமை எனக்கு என்ன உண்டு?" என்று கேட்க; [காரணா]

அது கேட்டு ஆழ்வார், "அப்படியா! நன்று சொன்னாய்; உலகங்களை யெல்லாம் படைத்தவனல்லையோ நீ? ரக்ஷிக்கிறேனென்று கொடிகட்டிக் கிடக்கிறாயில்லையோ நீ?" என்பதாய்ச் செல்லுகிறது, இப்பாட்டு.

மூர்க்கு—'[illegible]' என்ற வடசொல்லடியாப் பிறந்தது; மூடத்தனம் என்பது பொருள். முனிதல்—கோபித்தல். "நாவினுக்கு ஆற்றேன்" என்றது—நாவினுடைய பதற்றத்துக்கு ஆற்றேன் என்றபடி. காக்கைவாயிலும—காக்கைவாயில் நின்றும; ஐந்தாம் வேற்றுமை. கட்டுரை—ஏற்றசொல், பொருளுள்ள சொல். கருளன்—[illegible] என்ற வடசொல்விகாரம். (1)

434 சழக்குநாக்கொடுபுன்கவிசொன்னேன் சங்குசக்கரமேந்துகையானே *
பிழைப்பராகிலும்தம்மடியார்சொல்பொறுப்பது பெரியோர்கடனன்றே *
விழிக்குங்கண்ணிலேன்நின்கண்மற்றல்லால் வேறொருவரோடென்மனம்பற்றாது *
உழைக்கோர்புள்ளிமிகையன்றுகண்டாய் ஊழியேழுலகுண்டுமிழ்ந்தானே. (2)

சங்கு சக்கரம் ஏந்து கையானே!—,

| | |
|---|---|
| ஊழி ஏழ் உலகு உண்டு உமிழ்ந்தானே | பிரளய காலத்தில் எல்லா வுலகங்களையும் திருவயிற்றில் வைத்து நோக்கி (பின்பு அவற்றை) வெளிப்படுத்தினவனே! |
| சழக்கு நாக்கொடு புன் கவி சொன்னேன் | பொல்லாத நாக்கினால் அற்பமான பாசுரங்களை நான் சொன்னேன்; |
| பிழைப்பர் ஆகிலும் | (தாஸபூதர்கள்) பிழை செய்தார்களே யாகிலும் |
| தம் அடியார் சொல் | தமக்கு அடிமைப்பட்டவர்களுடைய சொல்லை |
| பொறுப்பது | பொறுத்தருளுகை |
| பெரியோர் கடன் அன்றே | பெருந்தன்மை யுடையவர்களுக்குக் கடமையன்றோ? |
| நின் கண் அல்லால் மற்று விழிக்கும் கண் இலேன் | உன்னுடைய கடாக்ஷமொழிய வேறொருவருடைய கடாக்ஷத்தை (ரக்ஷகமாக) உடையேனல்லேன; |
| (அன்றியும) | |
| வேறு ஒருவரோடு என் மனம் பற்றாது | மற்று ஒருவர் பக்கலிலும எனது நெஞ்சானது பொருந்தமாட்டாது; |
| உழைக்கு ஓர் புள்ளி மிகை அன்று கண்டாய் | புள்ளிமானுக்கு ஒரு புள்ளி (ஏறுவது) குற்றமானறன்றோ? |

* * *—"எம்பெருமானே! நீ கையுந்திருவாழியுமாயிருக்கிற இருப்புக் கண்டநான் உன்னைக் கவிபாடாதிருக்கமாட்டாமல் எனது பொல்லாத நாக்கினால் சில அற்பமான பாசுரங்களைப்பாடினேன்" என்று ஆழ்வார் அருளிச்செய்ய; அதற்கு எம்பெருமான் "ஆழ்வீர்! நமது பெருமையையும் உமது சிறுமையையும் பார்த்தால், இங்ஙனே பாசுரம் பேசவும உமக்கு யோக்யதையுண்டோ?" என்ன; அதற்கு ஆழ்வார், "அநந்யார்ஹ சேஷபூதர்கள் பேசும் பாசுரம் அவத்யாவஹமாயிருந்தாலும் அதனைப் பொறுக்கவேண்டிய கடமை பெரியோர்க்கு உளதன்றோ?" என்னை; அதுகேட்டு எமபெருமான், ஆழ்வீர்! அப்படி நான் பொறுக்கும்படி நீர் அநந்யார்ஹசேஷபூதரோ?" என்று கேட்க; அதற்கு ஆழ்வார், "உன்னுடைய கடாக்ஷமொழிய மற்றொருவருடைய கடாக்ஷத்தையும நான் ஒரு பொருளாக மதிப்பவனல்லேன்; உன்னைப்போல் ரக்ஷகனும் இனியனுமானவன் மற்றொருவன் உண்டாகிலும்; உன்னிடத்தில் எனக்குள்ள தாஸ்யம குணமடியாகப் பிறந்ததன்றி ஸ்வரூபப்ரயுக்தமானதனால், அவர்களிடத்து என் மனம பொருந்தாது" என்ன; அதற்கு எமபெருமான், "உமக்குப் புறம்பு போக்கில்லையாகில் ஆயிடுக; பல குற்றங்களுக்குக் கொள்கலமான உம்மைக் கைப்பற்றினால் அது எனக்கு அவத்யாவஹமாகாதோ?" என்ன; அது கேட்டு ஆழ்வார், "எமபெருமானே! புள்ளிமானுக்கு உடம்பில் ஒரு புள்ளி ஏறினால் என்? குறைந்தால் என்? எல்லா உயிர்களுடையவும அபராதங்களைப் பொறுப்பதற்கென்றே காப்புக்கட்டிக் கொண்டிருக்கிற உனக்கு என்னொருவனுடைய அபராதத்தைப் பொறுத்தருளுகை அவத்யாவஹமாய்விடப்போகிறதோ?" என்ன; அதற்கு எம்பெருமான், "இப்படி நான் அங்கீ

கரித்தவிடம் உண்டோ?" என்று கேட்க; ஆழ்வார், ஸம்ஸாரிகளில் உனக்கு அபராதம் பண்ணுதிருப்பார் யாரேனுமுண்டோ? அவர்களது அபராதங்களைப் பாராதே அவர்களை நீ வயிற்றில் வைத்துக் காத்தருளினவனல்லையோ? அப்படியே அடியேனையும் அங்கீகரித்தருள வேணும் என்பதாய்ச் செல்லுகிறது, இப்பாட்டு.

[உழைக்கோர் புள்ளி மிகையன்று கண்டாய்] உடம்பு முழுவதும் புள்ளிமயமாயிருக்கிற மானுக்கு ஆரோபிதமாக ஒரு புள்ளி ஏறி அதிகமாகத் தோற்றினால், அதனால் அந்த மானுக்கு ஒரு குற்றமுமில்லை; அதுபோல, அபராதஸஹத்வமே வடிவாயிருக்கிற உனக்கு என்னொருவனுடைய அபராதத்தைப் பொறுப்பதனால் ஒரு குற்றமும் வாராது என்றவாறு. இவ்வகைப் பொருளில், உழையின் ஸ்தானத்தில எம்பெருமான் நின்றதாகப் பெறலாகும்; அன்றி, அந்த ஸ்தானத்தில் ஆழ்வாரே நின்றதாகவுங் கொள்ளலாம்; புள்ளிமானுக்கு ஒரு புள்ளி அதிகமானால், அதனால் அதற்கொரு குற்றமில்லாதவாறு போல, அபராதமயனான அடியேனுக்கு ஒரு அபராதமேறினால், அதனால் உன்னுடைய அங்கீகாரத்திற்கு ஒரு குறையுமில்லைகாண் என்றவாறும். முன்னர் உரைத்தபடியே வியாக்கியானப் போக்குக்கு ஒக்குமென்க. மிகை—குற்றத்துக்கும் பெயர்; "மிகையே குற்றமுங் கேடுந் துன்பமும், மிகுதியும வருத்தமுமைமபொருட்டாகும" என்பது நிகண்டு. இனி, இங்கு மிகை என்பதற்கு கேடு என்று பொருள் கொள்ளுதலும பொருந்துமென்க. ... .... (2)

435 நன்மைதீமைகளொன்றுமறியேன் நாரணனென்னுமித்தனையல்லால் *
புன்மையாலுன்னைப்புள்ளுவம்பேசிப் புகழ்வானன்றுகண்டாய்திருமாலே *
உன்னுமாறுன்னையொன்றுமறியேன் ஓவாதேநமோநாரணவென்பன் *
வன்மையாவதுன்கோயிலில்வாழும் வைட்டணவனென்னும்வன்மைகண்டாயே.(3)

| | | | |
|---|---|---|---|
| திருமாலே | ஸ்ரிய:பதியானவனே! | ஒன்றும | ஒரு வழியையும் |
| நாரண என்னும் இத்தனை அல்லால | 'நாராயணா!' என்று கூப்பிடுகையாகிற இவ்வளவொழிய | அறியேன் | அறிகிறேனில்லை; |
| நன்மை தீமைகள ஒன்றும் அறியேன | (வேறு) நன்மை தீமை ஒன்றையும் அறிகிறேனில்லை, | ஓவாதேநமோ நாரண என்பன | (ஒரு நொடிப்பொழுதும்) ஓழிவின்றி [இடைவிடாமல்] 'நமோ நாராயணாய' என்னுகிறேன்; |
| புன்மையால் | (எனக்கு இயற்கையாக உள்ள) அற்பத்தனத்தினால் | வன்மை ஆவது | (அடியேனுக்கு) மிடுக்காவது |
| உன்னை புள்ளுவம் பேசி | உன்னைக்குறித்து வஞ்சகமான சொற்களைச் சொல்லி | உன் கோயிலில் வாழும் வைட்டணவன என்னும் வன்மை | 'உன்னுடைய கோயிலில் வாழாநின்றுள்ள வைஷ்ணவன்' என்கிற மிடுக்கேயாம். |
| புகழ்வான அன்று கண்டாய் | புகழுமவனல்லென் (அடியேன); | | |
| உன்னை உன்னும ஆறு | உன்னை இடைவிடாது ஸ்மரித்துக் கொண்டிருக்கத்தக்க வழிகளில் | | [கண்டாய—முன்னிலையசைச் சொல.] |

* * *—"எம்பெருமானே! அடியேன் 'நாராயணா! நாராயணா!' என்று இத்திருநாமத்தையிட்டுக் கூப்பிடுகையாகிற இதொன்றை மாத்திரம அறிவேனேயொழிய, இத்திருநாமஞ் சொல்லுகை நன்மையாய்த் தலைக்கட்டுகிறதோ, அன்றித்தீமையாய்த் தலைக்கட்டுகிறதோ என்பதையும் நான் அறிகின்றிலேன்" என்று ஆழ்வார் அருளிச்செய்ய; அதற்கு எம்பெருமான், "ஆழ்வீர்! என்ன பயனை விரும்பி நீர் இங்ஙனே திருநாமஞ் சொல்லாநின்றீர்? பிரயோஜநாந்தரபரராய் ஏனிப்படி கபடம பேசுகின்றீர்!" என்று கேட்க; அதுகேட்டு ஆழ்வார், "அப்பனே! பிரயோஜநத்தைப் பேணுகையாகிற அற்பத்தனத்தினால் நான் நாராயணா!' என்று சொல்லி உன்னைக் கபடமாகப் புகழுமவனல்லன்காண்" என்ன; அது

கேட்டு எம்பெருமான், "நீர் ஒரு பிரயோஜனத்தையும் மெய்யே விரும்பினீரில்லையாகில் மோக்ஷமாகிற பரமபுருஷார்த்தத்தை விரும்பி, அது பெறுகைக்கு உறுப்பான வழிகளில் முயலப்பாரீர்" என்ன; அதுகேட்டு ஆழ்வார், "நாரணனே! மோக்ஷப்ராப்திக்குடலாக நிரந்தர ஸ்மரணாதிகள் வேண்டுமென்று சாஸ்திரங்களிற் சொல்லியபடி அடியேன் அனுட்டிக்க வல்லவனல்லன்; ஒரு நொடிப்பொழுதும் வாய்மாறாமல் திருவஷ்டாக்ஷரத்தையே அடியேன் அநுஸந்திக்கவல்லேன்; ஒருக்ஷணம் அது மாறினும் எனக்கு ஸத்தை குலையுமே" என்ன; அதுகேட்டு எம்பெருமான், "ஆழ்வீர்! நீர் சொல்வதெல்லாம் சால அழகிதாயிருந்தது; ஒரு க்ஷணம் திருநாமம் சொல்லாதொழியில் ஸத்தை குலையு மென்கிறீர், 'என் வாயாற் சொல்லில் உனக்கு அவத்யாவஹமாகும்' என்றுஞ் சொல்லா நின்றீர்; இதெல்லாம் பெருத்த மிடுக்காயிருந்ததே!" என்ன; அதற்கு ஆழ்வார், "மிடுக்கா? அந்த மிடுக்குக்கு என்ன குறை? உன்னுடைய அபிமானம் குறைவற்றிருக்கும்படி உன்கோயில் வாசலிலேயே வாழப்பெற்ற வைஷ்ணவன் என்கிற ஆகாரத்தினாலுண்டான மிடுக்குக்குக் குறைவில்லை" என்பதாய்ச் செல்லுகிறது, இப்பாட்டு. நன்மை—ஸ்வரூபாநுரூபம். தீமை—அவத்யாவஹம். புள்ளுவம்—வஞ்சகம். வைட்டணவன்—வைஷ்ணவ: என்ற வடசொல் விகாரம். வன்மை—திண்ணி(ண்ண)ரான அத்யவஸாய மென்றும் கொள்க. .... .... .... (3)

436 நெடுமையாலுலகேழுமளந்தாய் நின்மலாநெடியாயடியேனை *
குடிமைகொள்வதற்கையுறவேண்டா கூறைசோறிவைவேண்டுவதில்லை *
அடிமையென்னுமக்கோயின்மையாலே அங்கங்கேயவைபோதருங்கண்டாய் *
கொடுமைக்கஞ்சனைக்கொன்றுநின்தாதை கோத்தவன்தளைகோள்விடுத்தானே. (4)

| | | | |
|---|---|---|---|
| நெடுமையால் உலகு ஏழும் அளந்தாய் | (குறிய மாணுருவைமாற்றி) நெடுக வளர்ந்ததனால் எல்லா வுலகங்களையும் அளந்தருளினவனே! | குடிமை கொள்வதற்கு ஐயுற வேண்டா | கிங்கரனாகக் கொள்வதற்கு ஸந்தேஹிக்க வேண்டியதில்லை; |
| நின்மலா | பரிசுத்தனானவனே! | கூறை சோறு இவை வேண்டுவது இல்லை | (இக்கூறையையுஞ் சோற்றையும் (நான் உன்னிடத்து) விரும்புகிறேனில்லை; |
| நெடியாய் | (அனைவர்க்கும்) தலைவனானவனே! | அடிமை என்னும் அக்கோயின்மையாலே | அடிமையென்கிற அந்தராஜகுல மாஹாத்மியத்தினால் |
| கொடுமை கஞ்சனை கொன்று | கொடிய கம்ஸனை உயிர்க்கொலை செய்து, | அவை அங்கு அங்கு போதரும் | அக்கூறை சோறுகள் அவ்வவ்விடங்களில் (தாமாகவே) கிடைக்கும். |
| நின் தாதை கோத்த வன் தளை கோள் விடுத்தானே | உனது தந்தையாகிய வஸுதேவருடைய காலில் பூட்டப்பட்டிருந்த வலிய விலங்கின பூட்டைத் தறித்துப் போகட்டவனே! | | |
| அடியேனை | (உனக்கு) அடிமைப் பட்டுள்ள என்னை | | |

[கண்டாய்—முன்னிலையசைச் சொல்]

* * *—நெடுக வளர்ந்த திருவடியினால் அளந்தாய் என்னாமல், "நெடுமையால் அளந்தாய்" என்றது—ஒருவகைச் சமத்காரமென்க. அவிகார ஸ்வரூபனான தன்னைச் சிறியனாகவும் பெரியனாகவும் ஆக்கிக்கொண்டவிதனால் தனக்கொரு கொத்தையுமில்லை யென்பார், நின்மலா! என்று விளிக்கின்றார். ஐச்வரியத்தை விரும்பின தேவேந்திரனது வேண்டுகோளாற் செய்த உலகளப்பையிட்டு விளித்தது 'அவ்விந்திரனைப்போல் நான் ஐச்வரியத்தை விரும்பி வேண்டுகிறேனில்லை' என்று ஸ்வஸ்வரூபத்தின் வாசியைத் தெரிவித்தவாறாம். அன்றி, உனது திருவடி ஸ்பர்சத்தில் விருப்பமற்றிருந்தார் தலையிலும் திருவடியை வைத்தருளின நீ, உன் திருவடியையே பரமப்ராப்யமாக ப்ரதிபத்தி பண்ணியிருக்கிற அடியேனை ஆட்படுத்திக் கொள்ளாதொழிவது தகுதியன்றென்று உணர்த்துகிறவாறாம்.

"திரிவிக்கிரமாபதாநத்தில் அனைவரையு மடிமைகொண்ட நீ அடியேனையுமடிமை கொள்ளவேணும்" என்று ஆழ்வார் பிரார்த்திக்க; அதற்கு எமபெருமான், "உம்முடைய ஸ்வரூபத்தின் உண்மை எனக்கு விளங்கவில்லையே" என்ன; அதற்கு ஆழ்வார், "அடியேனுக்கு ஸ்வாதந்திரியமும் ஸ்வப்ரயோஜந பரத்வமும உண்டென்று நீ ஸந்தேஹிக்கவே வேண்டியதில்லை. அடியேன் அநந்யப்ரயோஜநன்" என்ன; அதுகேட்டு எம்பெருமான், "நீர் அநந்யப்ரயோஜநன் என்றால், அதை நான் எங்ஙனே ஏற்றுக்கொள்வேன்; தேஹமுடையவரன்றோ? அத்தேஹத்திற்குத் தாரகமாயுள்ளவற்றில் உமக்கு விருப்பமின்றி யொழியுமோ?" என்ன; அதற்கு ஆழ்வார், "தேஹதாரகமான சோறு கூறை முதலியவற்றை நான் உன்னிடத்துப்பெற விரும்புகிறிலேன்" என்ன; "ஆகில் அவை பெறுவதற்காகச் சில அரசர்களைத்தேடி ஓடுகிறீரோ?" என்று எமபெருமான் கேட்க; அதற்கு ஆழ்வார், "அவற்றை நான் அபேக்ஷித்துப் பெறவேண்டிய அருமையில்லை, அவற்றுக்காகக் குக்கர்களைத் தேடிநான் ஓடவேண்டியதில்லை; 'உனக்கு நான் அடிமைப்பட்டவன்' என்கிற சிறப்பு என்னிடத்துள்ளதாதலால் ஆங்காங்கு அவரவர்கள் தாமாகவே என்னை அழைத்து அவற்றைத் தந்திடுவர்கள்: ஆகையால் நான் பிரயோஜநாந்தரத்தை நச்சித் திரிபவனல்லன்; அநந்யப்ரயோஜநனே; இனி அடியேனை அடிமை கொண்டருளவேணும்" என்பதாய்ச் செல்லுகிறது, இப்பாட்டு.

இனி, "கூறை சோறிவை வேண்டுவதில்லை" என்பதற்கு, * உண்டியே உடையே உகந்தோடுகின்ற இம்மண்டலத்தவர்களால் விரும்பப்படுகிற கூறையும சோறும் எனக்குத் தாரகங்களல்லாமையாலே, இவை எனக்கு வேண்டியதில்லை என்று கருத்தாமிடத்து, மூன்றுமடிக்கு வேறுவகையாகப் பொருள் கொள்ளவேணும்; அதாவது;—அடிமை என்னும் அக்கோயின்மையாலே—, அங்கு அங்கு—அந்த அந்தக் கைங்கரியங்களுக்குள்ளே, அவை—அக்கூறை சோறுகள், போதரும்—அந்தர்ப்பவிக்கும்; என்று. இதன் கருத்து; * ஒழிவில் காலமெல்லாமுடனாய்மன்னி வழுவிலா வடிமை செய்கையே எனக்குக் கூறையுடுக்கையும் சோறு உண்கையு மென்கிறார் என்பதாம. "உண்ணுஞ்சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையு மெல்லாங் கண்ணன்" என்றது இங்கு நினைக்கத்தக்கது,

ஆழ்வார் தம்மை அடிமை கொள்ளுகையாவது—பிரகிருதி ஸம்பந்தத்தையும் ஊழ்வினைத் தொடர்களையும ஒழித்தருளுகையே யென்பதை, ஈற்றடியிலுள்ள இரண்டு ஸமபோதந வாக்கியங்களினால் ஸூசிப்பிக்கிறார்; கஞ்சனைக் கொன்றதுபோலப் பிரகிருதி ஸம்பந்தத்தைக் கொல்லவேணும ; தந்தைகாலில் விலங்கையறுத்ததுபோல ஊழ்வினைத்தொடர்களை அறுக்க வேணு மென்றவாறு.

தாதை கோத்தவன்றளைக்கோள் விடுத்தது முன்னும, கஞ்சனைக் கொன்றது பின்னுமாயிருக்க, மாறுபடக்கூறியது—கிரமவிவக்ஷ யில்லாமையாலாம; அன்றி, கண்ணபிரான் திருவவதரித்தருளினவன்றே கமஸன் ஜீவச்சவமானமையால் அங்ஙன் கூறக்குறையில்லை யெனினுமாம. தாதை—தாதஃ; இங்குத் தாதை யென்றது, தாய்க்கு முபலக்ஷணம். கோள்—முதனிலை திரிந்த தொழிற் பெயர். "வன்றளை கோள்விடுத்தானே" எனறும் ஓதுவர்.

தேவகியினுடைய அஷ்டமகர்ப்பம தனக்கு விநாசக மென்றறிந்த கமஸனால் விலங்கிட்டுச் சிறைவைக்கப்பட்டிருந்த தேவகி வஸுதேவர்களுடைய கால் விலங்குகள் கண்ணபிரான் அவதரித்தவுடனே இற்று முறிந்தொழிந்தமை அறிக. (4)

437 தோட்டமில்லவளாத்தோழுவோடை துடவையுங்கிணறுமிவையெல்லாம் *
வாட்டமின்றியுன்பொன்னடிக்கீழே வளைப்பகம்வகுத்துக்கொண்டிருந்தேன் *
நாட்டுமானிடத்தோடெனக்கரிது நச்சுவார்பலர்கேழலொன்றாகி *
கோட்டுமண்கொண்டகொள்கையினனே குஞ்சரம்வீழக்கொம்பொசித்தானே . (5

| | | | |
|---|---|---|---|
| கேழல் ஒன்று ஆகி கோடு மண் கொண்ட கொள் கையினனே | ஒப்பற்ற வராஹரூபியாய்க்கொண்டு (தனது) கோரப்பல் நுனியில் பூமியைத் தாங்குகையாகிற ஸ்வ பாவத்தை யுடையவனே! | வாட்டம் இன்றி | குறைவில்லாமல் |
| குஞ்சரம் வீழ கொம்பு ஒசித் தானே | (குவலயாபீடமென்ற) யானையானது முடியும்படி (அதன்) தந்தத்தை முறித்தெறிந்தவனே! | அகம் | அடியேன் |
| தோட்டம் இல்ல வள் ஆ தொழு ஓடை துடவையும் | தோட்டமும் மனைவியும் பசுக்களும் மாட்டுத் தொழுவமும் குளமும் விளை நிலமும் | உன் பொன் அடி கீழ் | உனது அழகிய திருவடியிலே |
| கிணறும் இவை எல்லாம் | கிணறுமாகிற இவை எல்லாவற்றை யும் | வளைப்ப வகுத்துக் கொண்டிருந்தேன் | திரள வகுத்துக்கொண்டிரா நின்றேன், |
| | | எனக்கு நாடு மானி டத்தோடு அரிது | (எல்லாம் உன திருவடியே என்றிரு கிற) எனக்கு நாட்டிலுள்ள மநுஷ்யரோடு (ஸஹவாஸம் செய் வது) அஸஹ்யம்; |
| | | பலர் நச்சுவார் | பலபேர் (இந்த ஸஹவாஸத்தை) விரும்புவார்கள் |

* * *—கீழ்ப்பாட்டில், தாரகபதார்த்தம் [-சோறு] கைங்கர்யரஸத்தில் அந்தர்ப்பூ மென்றார்; இப்பாட்டில், போஷக பதார்த்தங்களும் உன் திருவடிகளை அநுபவிக்கையாகி ரஸத்தில் அந்தர்ப்பூதங்களென்கிறார்.

தோட்டம் முதலிய போஷக வஸ்துக்களனைத்தும் உன் திருவடிகளே யென்று அறு யிட்டிரா நின்றேன் என்பது முன்னடிகளின் தேர்ந்த கருத்து. இல்லவள்—வடமொழியி 'க்ருஹிணீ' என்ற சொல்லின் பொருள் கொண்டது. துடவை—ஸ்ரீக்ஷேத்ரம். வளைப்ப+ அகம், வளைப்பகம்; தொகுத்தல் விகாரம். தோட்டம் முதலியவற்றைப் பொன்னடிக்கீ வளைப்பவகுத்துக் கொண்டிருக்கையாவது—எம்பெருமான் திருவடியை ஏழு வகுப்பாக பிரித்து, ஒருவகுப்பைத் தோட்டமாகவும், மற்றொரு வகுப்பை இல்லவளாகவும்,.......... மற்றொரு வகுப்பைக் கிணறாகவும் ப்ரதிபத்தி பண்ணுகையேயாம். எம்பெருமான திருவடியையொழிய வேறொன்றைப் போஷகமாக மதிப்பதில்லை யென்றவாறு.

இனி முன்னடிகளுக்கு வேறுவகையாகவும் பொருள் கொள்ளத்தகும்; அதாவது;— தோட்டம்.......கிணறுமாகிய இவையெல்லாம், வளைப்பு அகம்—சூழ்ந்திருக்குமிடம், உ பொன் அடிக்கீழ்—உனது திருவடி நிழலிலே (என்று), வகுத்துக்கொண்டிருந்தேன். (எ நெஞ்சினால் அத்திருவடியைச்) சூழ்த்துக் கொள்ளா நின்றேன், என்பதாம் உன் திருவ நிழலையே எல்லாப் பொருளுமாக ப்ரதிபத்திபண்ணி, அத்திருவடியை நெஞ்சினால் வளைத்து கொண்டேன் என்பது கருத்து. "உன் பாதநிழலல்லால் மற்றோருயிர்ப்பிடம் நானெங்கு காண்கின்றிலேன்" என்று மேல் அருளிச்செய்வது காண்க. இப்பொருளில், அகம் என் தற்கு, 'இருப்பிடம்' என்று பொருள். (தொகுத்தல் விகாரமுமில்லை)

இங்ஙனருளிச்செய்த ஆழ்வாரை நோக்கி எம்பெருமான், "ஆகில் இனி உமக்கு ஒ குறையுமில்லையே" என்று கேட்க; அதற்கு ஆழ்வார், "என் அப்பனே! பிறர் பொருள்தா மென்றிவற்றை நம்பி அலைந்தோடுகின்ற ப்ராக்ருதர்களின் நடுவே எனக்கு இருக்கமுடி வில்லை. இவ்விருப்பை ஒழித்தருளவேணும்" என்று வேண்ட; அதுகேட்டு எம்பெருமான் "ஆழ்வீர்! நீர் இங்ஙனே வேண்டலாகாது, இவ்வுலகவிருப்பை வேண்டுவார் எத்தனை பேருளர் பாரீர்; அவர்களோடொக்க நீரும் இவ்விபூதியிலேயே இருந்தால் குறையென்?

என்ன; அதற்கு ஆழ்வார், ஹொகொஷிநூ—ஷி: ஆகையால் பலர் இவ்விருப்பை விரும்பினர் களாகிலும், எனக்குப் * பாமபோடொரு கூறையிலே பயின்றுற்போ விராநின்றது; ஆகையால் இவ்விருப்பை ஒழித்தேயருளவேணும்" என்பதாய்ச் செல்லுகிறது, இப்பாசுரம்.

ஸம்ஸார ஸாகரத்தினின்றும் அடியேனை எடுத்து, ஸ்வஸ்தாநமான உன் திருவடிகளிற் சேர்த்துக்கொள்ளவல்ல வல்லமையும், அச்சேர்த்திக்கு விரோதியான கருமங்களை யொழித் தருளவல்ல வல்லமையும் உனக்கு உண்டென்பார், "கேழலொன்றாகிக் கோட்டுமண் கொண்ட கொள்கையினானே" என்றும், "குஞ்சரம்வீழக் கொம்பொசித்தானே" என்றும் விளிக்கின்றார்; ஸாஷி௺ாயஸம்பொயநமென்றபடி. ஹிரண்யாக்ஷனால் பாயாகச் சுருட்டிக் கடலினுள் கொண்டு போகப்பட்ட பூமியைத் "தானத்தே வைத்தானால்" என்கிறபடியே வராஹாரவதாரமெடுத்து ஸ்வஸ்தாநத்தில் வைத்தருளியதுபோல, அடியேனையும் இப்பிறவிக் கடலினின்று மெடுத்து ஸ்வஸ்தாநமாகிய உன் திருவடிகளில் வைத்தருளவேணும்; கம்ஸ னுடைய ஏற்பாட்டுக்கிணங்க வஞ்சனை வகையாற்கொல்ல நினைத்தெதிர்ந்த குவலயா பீடத்தைக் கொன்றருளியவாறுபோல, எனது ஊழ்வினைகளையும் கொல்லவேணுமென வேண் டியவாறு. குஞ்சரம்—வடசொல். "சாவ" என்னாமல், வீழ என்றது—மங்கலவழக்கு; துஞ்ச என்பது போல. ... .... ... .... (5)

438 கண்ணாநான்முகனைப்படைத்தானே காரணாகரியாயடியேன்நான் *
உண்ணாநாள்பசியாவதொன்றில்லை ஓவாதேநமோநாரணாவென்று *
எண்ணாநாளுமிருக்கெசுச்சாமவேத நாண்மலர்கொண்டுனபாதம்
நண்ணாநாள் * அவைதத்துறுமாகில் அன்றெனக்கவைபட்டினிநாளே. (6)

| | | | |
|---|---|---|---|
| காரணா | (லோகஸ்ருஷ்டிக்குக் காரணமானவனே! | இருக்கு எசு சாம வேதம் | ருக், யஜுஸ், ஸாமம் என்கிற வேதங்களை [ச்சொல்லிக்கொண்டும்] |
| நான்முகனை படைத்த | பிரமனை (உந்திமேல்) படைத்தருளினவனே! | நாள் மலர் கொண்டு | அப்போதலர்ந்த [புதிய] பூக்களை எடுத்துக்கொண்டும் [வந்து] |
| கண்ணா | கண்ணபிரானே! | உன பாதம் நண்ணா நாள் | உன திருவடிகளைக் கிட்டப்பெறாத நாள்களும் |
| கரியாய் | [காளமேகம்போல] கருத்த நிறத்தை யுடையவனே! | அவை | [எனக்கு] அந்த உண்ணாதொழிந்த நாள்களாம்; |
| அடியேன் நான் உண்ணா நாள் பசி ஆவது ஒன்று இல்லை | [உனக்கு] சேஷபூதனான நான் உண்ணாதொழிந்தபோது பசி யென்பது ஈஷத்தும் உண்டாவதில்லை; | அவை | அந்த வேதாநுஸந்தாநமும், புஷ்பஸமர்ப்பணமும் |
| ஓவாதே நமோ நாரணா என்று எண்ணா நாளும் | இடைவிடாமல் 'நமோ நாராயணாய' என்று அநுஸந்திக்கப் பெறாத நாளும் | *தத்துறும் ஆகில் | தட்டுப்படுமாகில் |
| | | அன்று எனக்கு பட்டினி நாள் | அந்த நாளானது எனக்கு உண்ணாதொழிந்த நாளாகும். |

* * *—'தாரகபோஷகங்களெல்லாம் எம்பெருமான் திருவடிகளே' என்று கீழ் அருளிச் செய்ததை இப்பாட்டில் விசதமாக்கி நிகமித்தருளுகிறார். இவ்வுலகத்திலுள்ளாரனைவரும் ஒருபொழுது உண்ணாதொழிந்தால், பசியினால் மிகவும் தளர்ந்து வருந்துவர்கள்; அடியே னுடைய இயல்வு அங்ஙனொத்ததன்று; திருமந்திரத்தை அநுஸந்திக்கப் பெறாதநாளும், * தொழுது முப்போது முன்னடிவணங்கித் தூமலர் தூய்த்தொழுது ஏத்தப்பெறாத நாளுமே அடியேனுக்கு உண்ணாநாள்; இவ்விரண்டும் அடியேனுக்கு வாய்க்கப்பெற்ற நாள் உண்டு களிக்கப்பெற்ற நாளேயாம். 'சோற்றால் வயிற்றை நிரப்பின நாள் உண்டநாள், அப்படி நிரப்பாதநாள் பட்டினிநாள்' என்கிற வ்யவஸ்தை என்னிடத்தில்லை; நான் வயிறார உண்ட

* அவை—அந்த நாள்கள், தத்துறுமாகில்—நேரிடுமானால், என்று முரைக்கலாம். கருத்து ஒன்றே.

போதிலும், திருமந்த்ராநுஸந்தாநமும் ஸ்ரீபாதஸேவையும் தட்டுப்பட்டதாகில், அந்நாள் எனக்குப் பட்டினிநாளே என்றவாறு

இருக்கேசுச் சாமவேதம்—ருக்யஜுஸ்ஸாமவேத மென்ற வடமொழித்தொடரின் விகாரம். தத்துறுதல்—வாய்க்கப்பெறு தொழிதல். ... .... ... (6)

439 வெள்ளைவெள்ளத்தின்மேலொருபாம்பை மெத்தையாகவிரித்ததன்மேலே *
கள்ளநித்திரைகொள்கின்றமார்க்கங் காணலாங்கோலென்னுசையினலே *
உள்ளஞ்சோரவுகந்தெதிர்விம்மி உரோமகூபங்களாய்க்கண்ணநீர்கள் *
துள்ளஞ்சோரத்துயிலணைகொள்ளேன் சொல்லாயானுன்னைத்தத்துறுமாறே. (7)

| | | | |
|---|---|---|---|
| வெள்ளை வெள்ளத்தின மேல் | பால்மயமான பெருக்கிலே | உகந்து எதிர் விம்மி | மகிழ்ச்சியின் மிகுதியால் [வார்த்தை சொல்லவொண்ணுதபடி] மாறுகக் கலங்கி |
| ஒரு பாம்பை மெத்தையாக விரித்து | ஒப்பற்ற திருவனந்தாழ்வானைப் படுக்கையாக விரித்து | உரோம கூபங்கள் ஆய் | [உடம்பு முழுவதும] மயிர்க்குழியெறியப்பெறறு |
| அதன்மேலே கள்ளம் நித்திரை கொள்கின்ற மார்க்கம் | அப்படுக்கையின்மீது [நீ,] யோக நித்திரை செய்தருளும்படியை | கண்ணநீர்கள் துள்ளம் சோர | கண்ணீர் துளி துளியாகச்சோரப் பெற்று |
| காணலாம் கொல் என் ஆசையினலே | காணக்கூடுமோ என்கிற விருப்பத்தினலே, | அணை துயில கொள்ளேன் | படுக்கையில் உறங்கப்பெறுகிறேனில்லை; |
| உள்ளம் சோர | நெஞ்சு அழிய | யான் உன்னை தத்துறும் ஆறு சொல்லாய் | [இப்படிப்பட்ட] அடியேன் உன்னைக் கிட்டும் வழியை அருளிச் செய்யவேணும். |

* * *—ப்ராக்ருதமான உணவு அடியேனுக்கில்லை என்றாற்போல, உறக்கமுமில்லையென்கிறார், இப்பாட்டில். திருப்பாற்கடலில் திருவனந்தாழ்வான் மீது சயனித்துக்கொண்டு யோக நித்திரை செய்தருளுங் க்ரமத்தை ஸாக்ஷாத்கரிக்கப்பெறலாமோ வென்னுமாவல் கொண்டு, ("பாலாழி நீ கிடக்கும் பண்பையாங் கேட்டேயும, காலாழும நெஞ்சழியுங் கண்சுழலும" என்கிறபடியே) அவ்வநுஸந்தாநமடியாக நெஞ்சு அழியப்பெற்று, ப்ரீத்யதிசயத்தினல் வாய்திறந்து ஒரு பேச்சுப்பேச வொண்ணுதபடி ஏங்கி உடம்பெல்லாம் ரோமாஞ்சிதமாகப் பெற்று, 'நமது மநோரதம் தலைக்கட்டவில்லையே' என்ற அவஸாதத்தினல் கண்ணீர் துளிதுளியாகச் சோரப்பெறுகையால் இதுவே சிந்தையாய்ப் படுக்கையிற் சாய்ந்தால் கண்ணுறங்கப் பெருத அடியேன் உன்னை எவ்வாறு கிட்டுவேனே, அவ்வழியை அருளிச் செய்யாய் என்கிறார்.

எம்பெருமான் திருவனந்தாழ்வான்மீது உறங்குவான்போல யோகுசெய்கின்றனுதலால், கள்ளநித்திரை எனப்பட்டது. நித்திரை—நித்ரா. மார்க்கம்-மார்க்க:. உரோமகூபம்—ரோமகூபமென்ற வடமொழித்தொடர் விகாரப்பட்டது; ரோமம்-மயிர்; கூபம்—குழி. தத்துறுதல் என்பதற்குக் கீழ்ப்பாட்டில் "தட்டுப்படுதல்" என்று பொருள் கூறப்பட்டது; இப்பாட்டில், அச்சொல்லுக்கே கிட்டுதல் என்று பொருள் கூறப்படுகின்றது. ஒரு சொல்லுக்குப் பல பொருள் கொள்ளக்கூடுமிறே. அன்றி, கீழ்ப்பாட்டிற் போலவே இப்பாட்டிலும் தத்துறுதல் என்று மாறுபாட்டையே சொல்லிற்றாய், கிட்டுதல் என்பது தாத்பர்யப் பொருளாகவுமாம; உள்ளஞ்சோர்தலும, உகந்தெதிர் விம்முகையும், கண்ணநீர் துள்ளஞ்சோர்தலும், துயிலணை கொள்ளாமையும் மாறுபடுவதே எம்பெருமானைக் கிட்டுகை என்று கருத்து. இனி, உண்மைப் பொருளை வல்லார்வாய்க் கேட்டுணர்க. .... (7)

440 வண்ணமால்வரையேகுடையாக மாரிகாத்தவனேமதுசூதா *
கண்ணனேகரிகோள்விடுத்தானே காரணாகளிறட்டபிரானே *
எண்ணுவாரிடரைக்களைவானே யேத்தரும்பெருங்கீர்த்தியினானே *
நண்ணிநானுன்னைநாடோறுமேத்தும் நன்மையேயருள்செய்யெம்பிரானே. (8)

காரணா — [உலகங்கட்குக்] காரணமானவனே!
எண்ணுவார் இடரைக் களைவானே — [எப்போதும் உன்னையே தியானிப்பவர்களுடைய துன்பங்களைப் போக்குமவனே!
மது சூதா — மதுவைக் கொன்றவனே!
கரிகோள விடுத்தானே — கஜேந்திராழ்வானுடைய துக்கத்தை நீக்கினவனே!
கண்ணனே!
வண்ணம் மால வரை குடை ஆக மாரி காத்தவனே — அழகிய பெரிய கோவர்த்தன மலை குடையாக [அமைய] மழையினின்றும் [பசுக்களையும் இடையரையும்] காத்தருளினவனே!
களிறு அட்ட பிரானே — (குவலயாபீடமென்னும்) யானையை முடித்த உபகாரக[னே]!
ஏத்த அரு பெரு கீர்த்தியினானே — துதிக்க முடியாத அளவற்ற கீர்த்தியை யுடையவனே!
எம்பிரானே — எமக்குத்தலைவனே!
நான உன்னை நாள் தொறும் நண்ணி ஏத்தும் நன்மை அருள் செய் — அடியேன் உன்னை தினந்தோறும் ஆச்ரயித்து துதிக்கையாகிற நன்மையை அருள செய்ய வேணும்.

* * *—அட்ட—அடு என்ற குறிலிணைப் பகுதியடியாய்ப் பிறந்த பெயரெச்சம். ஏத்த+அரு, ஏத்தரு; தொகுத்தல் விகாரம். "நன்மையே அருள் செய்யும் பிரானே" என்றும் பாடமுண்டு; "அருள்செய்யும்" என்பதற்கும் பொருளதுவே: "பல்லோர்படர்க்கை முன்னிலை தன்மையிற், சொல்லாதாகுஞ் செய்யுமென முற்றே" என்ற இலக்கணத்தின்படி 'நீர் செய்யும்' என முன்னிலையிற் பன்மையேவலாய் வருதல் ஒவ்வாதாயினும், இது * புதியன புகுதலெனக்கொள்க. ... .... .... .... .... (8)

441 நம்பனேநவின்றேத்தவல்லார்கள் நாதனேநரசிங்கமதானாய் *
உம்பர்கோனுலகேழுமளந்தாய் ஊழியாயினாயாழிமுன்னேந்தி *
கம்பமாகரிகோள்விடுத்தானே காரணாகடலைக்கடைந்தானே *
எம்பிரானேயென்னையாளுடைத்தேனே யேழையேனிடரைக்களையாயே (9)

நமபனே — (ரக்ஷகன என்று) நம்பததகுநதவனே!
நவின்று ஏத்த வல்லார்கள நாதனே — (ஸ்தோத்ரங்களை) வாயாரச்சொல்லிப புகழவல்லவர்களுக்கு ரக்ஷகனே!
நரசிங்கம் அது ஆனாய் — நரஸிம்ஹாவதாரஞ் செயதருளினவனே!
உம்பர் கோன — நித்யஸூரிகளுககுத் தலைவனே!
உலகு ஏழும அளந்தாய் — எலலா வுலகஙகளையும் (திரிவிக்ரமாவதாரததில்) அளநதுகொணடவனே!
ஊழி ஆயினாய் — காலம முதலிய பதார்த்தங்களுக்கெல்லாம் நிர்வாஹகனானவனே!
முன் ஆழி ஏந்தி — முனனே திருவாழியாழ்வானை (திருக்கையில) ஏந்திக்கொணடு
மாகம்பம கரிகோள் விடுத்தானே — (எழுந்தருளி) மிக்க நடுக்கத்தை அடைந்த கஜேநதிராழ்வானுடைய சிறையை விடுத்தருளினவனே
காரணா — ஜகத்காரண பூதனே!
கடலைக் கடைந்தானே — (திருப்பாற) கடலை (தேவர்கட்காகக்) கடைந்தருளினவனே!
எம்பிரான் — எம்பிரானே!
என்னை ஆளுடைத் தேனே — அடியேனை ஆட்படுத்திக்கொண்டவனும் தேனபோல் இனியவனுமானவனே!
ஏழையேன் இடரைக் களையாய் — (உன் திருநாமஙகளில்) சாபல்யமுடைய எனனுடைய துன்பத்தைக் களைந்தருளவேணும்.

* * *—உன் திருவடிகளில் நிரந்தர ஸேவை பண்ணுதற்கு விரோதியான பாபங்களைப் போக்கியருளவேணு மென்று எம்பெருமானை இரக்கிறார். 'நரசிங்கமதானாய்' என்பது—

எம்பெருமானைத் தவிர மற்றையோரை நம்பக்கூடாமைக்கும் அன்புகொண்டு எத்தாமவர்களைக் காக்கின்ற பெருமானது தலைமைக்கும உதாரணமாகும். "உம்பர்கோ னுலகேழுமளந் தாய்" என்பதை ஒரு வாக்கியமாகவே அந்வயித்து, இந்திரனுக்காக ஏழுலகங்களையு மளந்தவனே! என்றும், பிரமனது ஏழுலகங்களையு மளந்தவனே! என்று முரைக்கலாம். .... (9)

442 காமர்தாதைகருதலர்சிங்கங் காணவினியகருங்குழற்குட்டன் *
வாமனனென்மரதகவண்ணன் மாதவன்மதுசூதனன்றன்னை *
சேமனன்கமரும்புதுவையர்கோன் விட்டுசித்தன்வியன்தமிழ்பத்தும் *
நாமமென்றுநவின்றுரைப்பார்கள் நண்ணுவாரொல்லைநாரணனுலகே. (10)

| | |
|---|---|
| காமர் தாதை | மன்மதனுக்குத் தந்தையும் |
| கருதலர் சிங்கம் | (தன்னை) விரோதிப்பவராகிய யானைகட்குச் சிங்கம்போன்றவனும் |
| காண இனிய கரு குழல் குட்டன் | ஸேவிப்பதற்கு அழகாயிருக்கிற கறுத்த குழலையுடைய சிறுக்கனவனும் |
| வாமனன் | வாமனாவதாரம் செய்தருளியவனும் |
| என் | எனக்குத்தலைவனும் |
| மரதகம் வண்ணன் | மரதகப் பச்சைபோன்ற வடிவையுடையவனும் |
| மாதவன் | பிராட்டிக்குக் கணவனும் |
| மதுசூதனன் தன்னை | மதுவைக்கொன்றவனுமான எம்பெருமானைக் குறித்தருளிச் செய்த, |
| சேமம் நன்கு அமரும் புதுவையர் கோன் | க்ஷேமமானது நன்றாக [குறைவின்றி] அமைந்திருக்கப்பெற்ற ஸ்ரீ வில்லிபுத்தூரிலுள்ளார்க்குத் தலைவரான |
| விட்டுசித்தன் | பெரியாழ்வாரது |
| வியன் தமிழ்பத்தும் | பெருமையுள்ள (இந்த) தமிழ்ப் பாசுரங்கள் பத்தையும் |
| நாமம் என்று நவின்று உரைப்பார்கள் | (எம்பெருமானது) திருநாமங்களாகப் பிரதிபத்திபண்ணி அன்புகொண்டு ஓதுமவர்கள் |
| ஒல்லை நாரணன் உலகு நண்ணுவர் | விரைவாக ஸ்ரீவைகுண்டத்தைக் கிட்டப்பெறுவார்கள். |

* * *—மற்றைத்திருமொழிகளிற் காட்டில் இத்திருமொழியில் எம்பெருமானுடைய திருநாமங்கள் விசேஷமாக அருளிச்செய்யப்பட்டிருப்பதனால், இத்திருமொழியை ஸஹஸ்ர நாமாத்யாயதோடொக்கப் பிரதிபத்தி பண்ணுதல் ஏற்குமென்க. [காமர் தாதை] ருக்மிணிப்பிராட்டியினிடத்து மன்மதனுடைய அம்சமாகப்பிறந்த பிரத்யும்நனுக்குக் கண்ணபிரான் தந்தையாதல் அறிக. மரதகவண்ணன்—வடசொற்றொடர்த்திரிபு. "மதுசூதன் றன்னை" என்றும் ஓதுவர், சேமம நன்கு அமருகையாவது—எம்பெருமானுக்குப் பல்லாண்டு பாடுவதில் மிக்க ஆவல்கொண்டிருக்கை. .... ... .... (10)

அடிவரவு:—வாக்கு சழக்கு நன்மை நெடுமை தோட்டம் கண்ணு வெள்ளை வண்ணம நம்பன் காமர் நெய்.

---

## ஐந்தாம்பத்து-இரண்டாந் திருமொழி, நெய்க்குடத்தை.

---

அவதாரிகை:—எம்பெருமான், ஆழ்வார்க்குத் தன் பக்கலில் அமைந்த அவாவின் மிகுதியைப் பலவகைகளாலறிந்து, அவருடைய திருவுள்ளத்தைத் தனக்கு இருப்பிடமாகக் கொண்டருளினபடியையும், அதனால் ஆழ்வார், இனி நோய்கள் முதலியவை தம்மை அணுகவொண்ணாதபடி, அவற்றை ஒழுத்தருளுகிறபடியையுங் கூறுவது, இத்திருமொழி.

" ஓங்கார வட்டத்து மாசுணப்பாயி லுலோகமுண்ட
பூங்கார் விழிக்குப் புலப்பட்டதா லெப்பொழுதுமென்னை

நீங்காதிடர்செய்யுந் தீவினைகா ளினி நின்றுநின்று
தேங்காது நீருமக் கானிடத்தேசென்று சேர்மின்களே"

[திருவரங்கத்துமாலை—102] என்ற ஐயங்கார் பாசுரத்தை இத்திருமொழியோடு ஒரு புடை ஒப்பிடலாகும். .... ... ... .... (*)

443 நெய்க்குடத்தைப்பற்றி யேறுமெறும்புகள்போல்நிரந்து * எங்குங்
கைக்கொண்டுநிற்கின்றநோய்காள் காலம்பெறவுய்யப்போமின் *
மெய்க்கொண்டுவந்துபுகுந்து வேதப்பிரானார்கிடந்தார் *
பைக்கொண்டபாம்பணையோடும் பண்டன்றுபட்டினங்காப்பே. (1)

| | | | |
|---|---|---|---|
| நெய்க்குடத்தைப் பற்றி | நெய் வைத்திருக்கும் குடத்தைப் பற்றிக்கொண்டு | பைக்கொண்ட பாம்பு அணையோடும் வந்து புகுந்து | படங்களையுடைய திருவனந்தாழ்வானாகிற படுக்கையோடுங்கூட எழுந்தருளி |
| ஏறும் எறும்புகள் போல எங்கும் நிரந்து | (அக்குடத்தின்மேல்) ஏறுகின்ற எறும்புகளைப்போல் என்னுடைய உடம்பு முழுவதும் பரவி | மெய்கொண்டு கிடந்தார் | (எனது) சரீரத்தைத் தனக்கு இனிதாகத் திருவுள்ளம்பற்றி [என சரீரத்தினுள்ளே] பள்ளிகொண்டிராநின்றார், ஆதலால்,] |
| கைக்கொண்டு நிற்கின்ற நோய்காள் | (என்னை) வசப்படுத்தி என்னையே இருப்பிடமாகக் கொண்டு) நிலைத்துநிற்கிற வியாதிகளே! | | |
| காலம்பெற உய்யப் போமின் | விரைவாக (நீங்கள்) பிழைக்க வேண்டி (என்னைவிட்டுவேறிடத்தைத்தேடிப்) போய்விடுங்கள்; | பட்டினம் பண்டு அன்று | [அவ்வெம்பெருமானுடைய] பட்டணமாகிய இவ்வாத்துமா பழைய நிலைமையை உடையதன்று; |
| வேதம் பிரானார் | [பிரமனுக்கு] வேதத்தை உபரித்தருளின எம்பெருமான் | காப்பு | [அவனால்] காக்கப்பெற்றது, |

* * *—அக்நிஹோத்ரஸமாராதநாதிகளுக்கு உதவும்படி சேமித்து வைக்கப்பட்டிருக்கும் நெய்க்குடத்தை எறும்புகள் ஏறி ஆக்கிரமிப்பது போல, எம்பெருமானுக்குப் பல்லாண்டு பாடுகைக்கென்று சேமிக்கப்பட்டிருக்கின்ற எனது உடலை ஆக்கிரமித்துக்கொண்டு, நான் உங்களுக்கு வசப்பட்டு ஒழுகும்படி என்னைக் கையாளாக்கிக்கொண்டு சாச்வதப்ரதிஷ்டையாக நிற்கின்ற நோய்களே! இனி இவ்வாத்துமா உங்களுடைய ராஜ்யமன்று; இத்தனை நாளும்போலல்ல இந்நாள்; எம்பெருமான் தனது படுக்கையோடுங்கூட விரும்பிப் பள்ளிகொண்டிருக்குமிடமாயிற்று இன்று இவ்வாத்துமா; ஆனபின்பு, அவனது காவலில் அகப்பட்ட இவ்விடத்து இனி உங்களுக்குப் பிழைத்திருக்க வழியில்லை; இன்னுஞ் சில நாளளவும் பிழைத்திருக்க வேணுமென்றவிருப்ப முங்களுக்கு உளதாகில், இவ்விடத்தைவிட்டுச் சடக்கென ஓடிப்போங்கள் என்கிறார்.

"பாம்பணையோடும் வந்து புகுந்துகிடந்தார்" என்றதனால், நித்யவாஸத்துக்காக எழுந்தருளினமை விளங்கும். பட்டினம்—பத்தநமென்ற வடசொல் விகாரம்; ராஜதானி என்பது பொருள்: ஆத்துமா எம்பெருமானுடைய ராஜதானியாதலறிக. .... (1)

444 சித்திரகுத்தனெழுத்தால் தென்புலக்கோன்பொறியொற்றி *
வைத்தவிலச்சினைமாற்றித் தூதுவரோடியொளித்தார் *
முத்துத்திரைக்கடற்சேர்ப்பன் மூதறிவாளர்முதல்வன் *
பத்தர்க்கமுதனடியேன் பண்டன்றுபட்டினங்காப்பே. (2)

| | | | |
|---|---|---|---|
| சித்திர குத்தன் | [சித்ரகுப்தனென்கிற [யமலோகத்துக்] கணக்குப்பிள்ளையானவன | தென்புலம் கோன் பொறி ஒற்றி | தெற்குத் திசைக்குத் தலைவனான யமனுடைய மேலெழுத்தை இடுவித்து |

எழுத்தால் வைத்த இலச்சினை } [தான்] எழுதிவைத்த குறிப்புச் சீட்டை
தூதுவர் மாற்றி ஓடி ஒளித்தார் { யமகிங்கரர்கள் கிழித்துப்போட்டுவிட்டு [கண்ணுக்குத்தெரியாத இடந்தேடி] ஓடி ஒளித்துக் கொண்டார்கள்;
முத்து திரை கடல் 'சேர்ப்பன் { முத்துக்களை [க்கொண்டு வீசுகிற] அலைகளையுடைய கடலில் கண்வளர்ந்தருளுமவனும்,

மூது அறிவு ஆளர் முதல்வன் } முதிர்ந்த அறிவுடைய நித்யஸூரிகளுக்குத் தலைவனும்,
பத்தர்க்கு அமுதன் { அடியார்களுக்கு அம்ருதம்போல் இனியனுமான எம்பெருமானுக்கு
அடியேன் [யான்] தாஸனாயினேன்;

பணடு அன்று பட்டினம் காப்பு—;

* * *—கீழ் "துப்புடையாரை" என்ற திருமொழியில், "எல்லையில் வாசல்குறுகச் சென்றுலெற்றி நமன்றமர் பற்றும்போது, நில்லுமினென்னுமுபாயமில்லை" என்ற குறைதீர இன்று அச்சங் கெட்டபடியை அருளிச்செய்கிறார், இப்பாட்டில். யமலோகத்தில், இந்நிலவுலகத்தின்கணுள்ள ஸர்வாத்மாக்களினுடையவும் பாபங்களைக் கணக்கிட்டு எழுதுவதற்காக நியமிக்கப்பட்டுள்ள சித்திரகுப்தனென்னுங் கணக்கப்பிள்ளை தன் தெய்விகத்தன்மையால் ஸூரியன் சந்திரன் வாயு அக்நி ஆகாசம பூமி வருணன் ஹ்ருதயம் யமன் பகல் இரவு காலை மாலை தருமம் என்ற பதினன்குபேர் ஸாக்ஷியாக ஒவ்வொருவரும் செய்த தீவினைகளையுமெழுதிவைப்பதுபோல ஒரு சுவடியில் என் தீவினைகளையுமெல்லா மெழுதி, அதன்மேல் யமனுடைய மேலெழுத்தையு மிடுவித்து அதனைப் பாதுகாவலாய் வைத்திருக்க, அதனை யமதூதர்கள் எடுத்துச் சுட்டுப்போட்டு ஓடி ஒளிந்து கொண்டனர்; இதற்கு அடி என்னெனில்; அயர்வறுமமரர்களதிபதிக்கு நான் அடிமைப்பட்டதேயாகும். அது காரணமாக எனது ஆத்துமா அவ்வெம்பெருமானுடைய பாதுகாப்பைப் பெற்றிருக்கின்றமையால் அவ்யமதூதர்கட்கு என்னை அணுகும்வழி எங்ஙனேயா மென்றவாறு.

"தரணியின் மன்னியயனர் தனித்தவங் காததபிரான்
கருணையெனுங் கடலாடித் திருவணை கண்டதற்பின்
திரணரகெண்ணிய சித்திரகுத்தன் தெரித்துவைத்த
சுருணையிலேறிய சூழ்வினைமுற்றுந் துரந்தனமே."

(தேசிகப்ரபந்தம்.) என்ற பாசுரமிங்கு நினைக்கத்தக்கது. சித்திரகுத்தன்—சித்ரகுப்தஃ. புலம் என்று திசைக்கும் பெயர். இலச்சினை—'லக்ஷணம்' என்ற வடசொல் விகாரம். [தூதுவரோடி யொளித்தார்.] "வள்ளலே! உன் தமர்க்கென்றும நமன்தமர் கள்ளர் போல்" "நமன்றமாலாராயப் பட்டறியார் கண்டீர் அரவணைமேற் பேராயற் காட்பட்டார் பேர்" என்ற அருளிச் செயல்களுமறிக. ... ... .... (2)

445 வயிற்றில்தொழுவைப்பிரித்து வன்புலச்சேவையதக்கி *
கயிற்றுமக்காணிகழித்துக் காலிடைப்பாசங்கழற்றி *
எயிற்றிடைமண்கொண்டவெந்தை யிராப்பகலோதுவித்து * என்னைப்
பயிற்றிப்பணிசெய்யக்கொண்டான் பண்டன்றுபட்டினங்காப்பே. (3)

(வராஹரூபியாய்த் திருவவதரித்தபோது)
எயிற்றிடை மண்கொண்ட எந்தை { [தனது] கோரப் பலமேல் பூமியைத் தாங்கியருளின எம்பெருமான.
(அடியேனுக்கு)

வயிற்றில் தொழுவைபிரித்து { வயிற்றினுள விலங்கிட்டுக்கொணடிருக்கையாகிற காப்பவாஸத்தைக் கழித்தருளியும்,
புலம் வல் சேவை அதக்கி { இந்திரியங்களாகிற கடுமையான ரிஷபங்களை [பட்டிமேய்ந்து திரியவொட்டாமல] அடக்கியும

| | | | |
|---|---|---|---|
| கயிறும் | நரம்புகளும் | இராபகல் ஓதுவித்து | இரவும் பகலும் நல்லறிவைப் போதித்து |
| அக்கு | எலும்புகளுமேயாயிராநின்ற | பயிற்றி | [கற்பித்தவற்றை] அநுஷ்டான பர்யந்தமாக்கி |
| ஆணி | சரீரத்தில் [ஆசையை] | பணிசெய்ய | நித்திய கைங்கர்யம் பண்ணும்படி |
| கழித்து | ஒழித்தருளியும் | என்னைக் கொண்டான் | அடியேனைக் கைக்கொண்டருளினான்; |
| பாசம் | [யமதூதர்களுடைய] பாசங்களை | | பண்டு அன்று பட்டினங்காப்பு—; |
| காலிடை கழற்றி | காலிலேகட்டி இழுக்கவொண்ணாதபடி பண்ணியும், | | |

* * *—கீழ்ப்பாட்டில் "பத்தர்க்கமுதனடியேன்" என்று எம்பெருமானுக்குத் தம்மை அடிமைப்பட்டவராக அருளிச்செய்து, இப்பாட்டில் அவ்வெம்பெருமான் தம்மை அடிமைகொண்ட ப்ரகாரங்களை அருளிச்செய்கிறார். அவன் செய்தருளின உபகாரபரம்பரைகளைக் கூறுகின்றவாறு. [வயிற்றில் இத்யாதி.] இனி யான் கருவிருத்தக்குழியில் விழாதபடி செய்தருளினான்; அப்படி கர்ப்ப வாஸம் நேராமைக்குடலாக, இந்திரியங்களாகிற காளைகளைப் பட்டிமேய்ந்து திரியவொட்டாமல் பாதுகாத்தருளினான்; தீண்டாவழும்புஞ் செந்நீருஞ்சீயும நரம்புஞ் செறிதசையும் வேண்டாநாற்ற மிகுமுடலில் விருப்பமொழியும்படி செய்தருளினான்; இப்படியெல்லாம அருள் செய்கையினால், யமபடர் கையும் பாசமுமாய் வந்து புகுந்து பாசங்களைக் காலிலேதுவக்கி முகங்கீழ்படத்தள்ளி இழுத்து நலிகையாகிற பரலோகஹிம்ஸைகளுக்கும ஆளாகாதபடி அருளினவாறுயிற்று; இவ்வகை அருள்களைச் செய்தபடி எங்ஙனே என்னில்? இரவும் பகலும ஓய்வின்றி என் நெஞ்சிற் குடிகொண்டிருந்து ஸ்வரூபஞானத்தைப் பிறப்பித்து, அதன்பிறகு அறிந்தபடியே அனுட்டிக்கும்படியாகவுங் கற்பித்து, அநவரதம் அடியேன் தனது திருவடிகளின் கீழ் அடிமைகளையே செய்து உய்யும்படி செய்தருளினனாதலால் இவ்வகை நன்மைகள் எனக்கு வாய்த்தன என்பதாக விரிந்த கருத்தறிக.

குற்றஞ் செய்தவர்களைத் தொழுமரத்தில் அடைப்பதும் விலங்கிடுகையேயாதலாலும, வயிற்றிற்கிடப்பது விலங்கிடுவதைப் போல்வதனாலும், கர்ப்பவாஸத்தை "வயிற்றில் தொழு" என்றனரென்க. இரண்டாமடியில் எதுகை நயம் நோக்கி "கயிற்றும்,, என வலித்துக்கிடக்கிறதென்க. கயிறு—நரம்பு; அக்கு—எலும்பு. ஆணி—சரீரத்துக்கும் பெயர். ஆணி கழித்தல்—சரீரத்தில் நசையை ஒழித்தல். "சாலிடைப் பாசங்கழற்றி" என்பதற்கு நான்குவகையாகப் பொருள் கூறுவர்; அவற்றுள் ஒன்று பதவுரையிற் கூறப்பட்டது. இனி இரண்டாவது பொருள்—சால் என்று காற்றாய், அதனால் பிராண வாயுவைச் சொன்னபடியாய், பாசம் என்று ஆத்துமாவைக் கட்டிக்கொண்டிருக்கிற ஸூக்ஷ்ம சரீரத்தைச் சொல்லுகிறதாய், பஞ்சவ்ருகதிப்ராணனாலே ப்ரேரிதமான ஸூக்ஷ்மசரீரத்தில் நசையறுத்தபடி சொல்லுகிறது; எனவே, கீழ் 'கயிற்றுமக் காணிகழித்து' என்றது—ஸ்தூலசரீரத்தில் நசையறுத்தபடியைச் சொல்லியவாறும். "ஸ்தூல ஸூக்ஷ்ம ரூபம் விஸ்ருஜ" என்ற ஸூக்தி இங்கு நினைக்கத்தக்கது. இனி மூன்றாவது பொருள்:—காற்கட்டான புத்ரதாரக்ருஹ க்ஷேத்ராதிகளிலுள்ள பற்றைப்போக்கினபடி சொல்லுகிறது. இனி, நான்காவது பொருள்:— "ஹரிணீவ ஸ்ரோணி ப்ரணாம் ரோஹிதம் ஜ்ஞாகு" என்றபடி—உலகமுழுவதையும மயக்கக்கூடியதும இரண்டு காலினிடையிலுள்ளதுமான ஹேயஸ்தானத்தின் விருப்பத்தை ஒழித்தபடி சொல்லுகிறது; உலகத்தை மோஹத்தினால் கட்டுண்டதுபோலச் செய்கின்ற அதனைப் பாச மென்றல் பொருந்தத் தட்டில்லையே. .... .... (3)

446 மங்கியவல்வினைநோய்காள் உமக்குமோர்வல்வினைகண்டீர் *
இங்குப்புகேன்மின்புகேன்மின் எளிதன்றுகண்டீர்புகேன்மின் *

சிங்கப்பிரானவனெம்மான் சேருந்திருக்கோயில்கண்டீர் *
பங்கப்படாதுய்யப்போமின் பண்டன்றுபட்டினங்காப்பே. (4)

| | | | |
|---|---|---|---|
| மங்கிய வல்வினை நோய்காள் | (ஆத்துமா உருத்தெரியாதபடி) மழுங்கிக் கிடப்பதற்குக் காரணமான வலியபாவங்களின் மூலமாக விளைந்த வியாதிகளே! | புகேல்மின் | (ஆதலால் இனி இங்கு) வர வேண்டா; |
| உமக்கும் ஓர் வல்வினை கண்டீர் | உங்களுக்குங்கூட ஒரு கடினமான தீமை (நேர்ந்தபடியை) (இன்று) பாருங்கள்; | | (எனது ஆத்துமா,) |
| இங்கு புகேல்மின் புகேல்மின் | இவ்விடத்தில் (இனி) வரவேண்டா, வரவேண்டா, | சிங்கப் பிரான எம்மான் அவன் | நரஸிம்ஹாவதார மெடுத்து உபகரித்தருளினவனும் எமக்குத் தலைவனுமான எம்பெருமான் |
| | (இனி நீங்கள் எனனைக் கிட்டுகை,) | சேரும் திரு கோயில் கண்டீர் | எழுந்தருளி யிருப்பதற் கிடமான திருக்கோயிலாக அமைந்தபடியைப் பாருங்கள்; |
| எளிது அன்று | சுலபமான காரியமன்று: | பங்கப்படாது உய்யப் போமின் | பரிபவப்படாமல் பிழைத்துப் போங்கள் |
| | | | பண்டு அன்று பட்டனம் காப்பு—. |

* * *—"ஜநாநுர கூதம் வாவம் வ்யாயிரூவெண வாயதெ" என்றபடி வியாதிகளின் அநுபவத்திற்கு ஊழ்வினைகள் ஹேதுவாதலால், அவ்வூழ்வினைகளை விளித்து, 'மிருத்யுவுக்கும் மிருத்யுவந்தான்' என்பதுபோல உங்களுக்கும் ஒரு வினைவந்தது, இனி நீங்கள் உறைப்பான காவல்பெற்ற என்னிடம் தங்கமுடியாது; தங்கினால் பரிபவமேபலிக்கும்; வேறிடந்தேடி ஓடினால் பிழைக்கலாம் என்கிறார். மங்கிய வல்வினை—வேறுபடுத்த வொண்ணாதபடி உருத்தெரியாமல் ஆத்துமாவோடு ஒட்டிக்கொண்டிருக்கிற வினைகாள்! என்னவுமாம்; "சார்ந்தவிரு வல்வினைகள்" என்றது காண்க. பங்கம்—ஹஜ்ஞ மென்ற வடசொற்றிரிபு. 'புகேல்மின் புகேல்மின் புகேல்மின்' என்ற அடுக்குத்தொடர், விரைவுபற்றியது; "அசைநிலை பொருள் நிலை இசைநிறைக் கொருசொல, இரண்டு மூன்று நான் கெல்லைமுறை அடுக்கும்" என்பது நன்னூல். .... .... .... .... (4)

447 மாணிக்குறளுருவாய மாயனையென்மனத்துள்ளே *
பேணிக்கொணர்ந்துபுகுதவைத்துக்கொண்டேன் பிறிதின்றி *
மாணிக்கப்பண்டாரங்கண்டீர் வலிவன்குறும்பர்களுள்ளீர் *
பாணிக்கவேண்டாநடமின் பண்டன்றுபட்டினங்காப்பே. (5)

| | | | |
|---|---|---|---|
| மாணி குறள் உரு ஆய | பிரமசாரி வேஷத்தை உடைய வாமனனாய் அவதரித்தவனும் | புகுத | புகுந்திருக்கும்படி |
| மாணிக்கப் பண்டாரம் | மாணிக்க நிதிபோல இனியனும் | பிறிது இன்றி வைத்துக்கொண்டேன் | வேற்றுமையில்லாமல் அமைத்துக் கொண்டேன்; |
| மாயனை | ஆச்சரிய பூதனுமான எம்பெருமானை | வலிவல் குறும்பர்கள் உள்ளீர் | மிகவும் கொடிய குறும்புகளைச்செய்கிற இந்திரியங்களே! |
| பேணி கொணர்ந்து | ஆசைப்பட்டு எழுந்தருளப் பண்ணிக்கொண்டு வந்து | நடமின் | (வேறிடந்தேடி) ஓடுங்கள்; |
| என் மனத்துள்ளே | என நெஞ்சினுள்ளே | பாணிக்கவேண்டா | தாமசிக்கவேண்டியதில்லை, |
| | | | பண்டு அன்று பட்டினம் காப்பு—. |

* * *—தேவேந்திரனுடைய வேண்டுகோளை நிறைவேற்றுதற் பொருட்டுக் குறட்பிரமசாரியாய் மாவலியை[illegible] குறும்பதக்கி அரசுவாங்கி ஓங்கியுலகளக்கும்போது, அநபேக்ஷிகள் தலையிலும் திருவடி[illegible] வைத்தருளின பரமகாருணிக ஸ்வபாவனும், தனது நிர்ஹேதுக கிருபையினாலன்றிப் பெற[illegible]ற்கரியனும், மாயச் செயல்களில் வல்லவனுமான எம்பெருமானை நான் இன்று எனது ஹ்[illegible]தயத்தில் நிலைநிறுத்தினேனாதலால், பொல்லாத இந்திரியங்களே! இனி நீங்கள் இங்கு ந[illegible] வத்திட வேண்டியதில்லை என்கிறார். இந்திரியங்கள் அசேதனங்

களாயினும் கொடுமைபுரிவதிற் சேதநரில் விஞ்சியிருத்தலால் "குறும்பர்களுள்ளீர்" என உயர்திணையாகக் கூறினரென்க. "உண்ணிலாவிய ஐவரால்" "கோவாய் ஐவர் என் மெய் குடியேறி" என்பன காண்க. இந்திரியங்களை வேறிடந்தேடி ஓடச்சொன்னது—கூறை சோறிவைதாவென்று குமைக்கையாகிற உங்கள் தொழில்களைச் செய்யாதொழியுங்கள் என்றவாறு. வலிவல்—மீமிசைச் சொல். [உள்ளீர்.] எம்பெருமான் எனது நெஞ்சில் வந்து குடிகொண்டவுடனே நீங்கள் ஓடிப்போகவேண்டியது ப்ராப்தம்: அப்படியன்றி இன்னும் ஓடாதிருந்தீர்களாகில் என்பது சமத்காரப்பொருள்.

மாணி—அழகுக்கும் பெயர்; 'பிரமசாரி' என்றபடியுமாம். உரு—வடிவு. பிறிது இன்றி—இரண்டு பொருளாகத்தோற்றுமல், ஏகவஸ்து என்னலாம்படி பொருந்தச்செய்து என்றபடி. எம்பெருமானை மாணிக்கப்பண்டார மென்றது—அதுபோல் பெறுதற்கரியவன் என்றவாறு. மாணிக்யபண்டார மென்ற வடசொல் திரிபு. .... .... (5)

448 உற்றவுறுபிணிநோய்காள் உமக்கோன்றுசொல்லுகேன்கேண்மின் *
பெற்றங்கள்மேய்க்கும்பிரானூர் பேணுந்திருக்கோயில்கண்டீர் *
அற்றமுரைக்கின்றேன் இன்னமாழ்வினைகாள் * உமக்கிங்கோர்
பற்றில்லைகண்டீர்நடமின் பண்டன்றுபட்டினங்காப்பே. (6)

| | |
|---|---|
| உற்ற உறு பிணி நோய்காள் | நெடுநாளாக இருக்கிற மிக்க வருத்தத்தைச் செய்கிற நோயகளே! |
| உமக்கு ஒன்று சொல்லுகேன கேண்மின் | உங்களுக்கு ஒரு வார்த்தை சொல்லுகிறேன்; கேளுங்கள |
| (நீங்கள் இப்போது குடியிருக்கிற எனது இவ்வுடலானது) | |
| பெற்றங்கள மேய்க்கும் பிரானூர பேணும திருக்கோயில | பசுக்களை மேய்த்தருளிய கண்ணபிரான் விரும்பி எழுந்தருளியிருக்கைக்கு இடமான திருக்கோயிலாயிற்று; |
| கண்டீர | [முன்புள்ள நிலைமையிற்காட்டில் இன்றுள்ள நிலைமையின் வாசியைப்பாருங்கள்; |
| ஆழ் வினை காள் | [ஸம்ஸார ஸமுத்ரத்தில் என்னை] ஆழங்காற்படுத்தின ஓ கொடுமைகளே! |
| இன்னம் | மறுபடியும் |
| அற்றம் உரைக்கின்றேன் | அறுதியாகச் சொல்லுகிறேன்; |
| உமக்கு இங்கு ஓர் பற்று இல்லை | உங்களுக்கு இவ்விடத்தில் ஒரு வகை அவலம்பமும் கிடையாது. [ஆதலால்] |
| நடமின் | [இனி இவ்விடத்தைவிட்டு] நடவுங்கள், |

* * *—யசோதைப்பிராட்டிக்கு அடங்கிநடந்த ஸ்ரீக்ருஷ்ணன் எனக்கு எளியனாய் நின்று தானுகந்தருளின நிலங்களிலுள்ள அன்புகொண்டு என் தேஹத்தில் எழுந்தருளியிருக்கிறான்; இதை ப்ரத்யக்ஷமாகக் காணுங்கோளென்று நோய்களுக்குக்கூறி, பிறகு அந்நோய்களுக்குங் காரணமான பாபங்களை நோக்கி மீண்டும் 'உங்களுக்காகத் தீர்ந்த ஒரு விஷயஞ் சொல்லுகின்றேன்: அதாவது–என்னுடைய தேஹம் முன்போலன்றி ஸ்ரீகிருஷ்ணன் குடிபுகுந்ததனால் காவல்பெற்றிருக்கின்றது; ஆகையால் இந்த தேஹத்தில் நீங்கள் நிராசையாய்ப் போய்விடுங்கள்' என்றருளிச் செய்கிறார். ... .... .... (6

449 கோங்கைச்சிறுவரையென்னும் போதும்பினில்வீழ்ந்துவழுக்கி *
அங்கோர்முழையினிற்புக்கிட்டு அழுந்திக்கிடந்துழல்வேனை *
வங்கக்கடல்வண்ணனம்மான் வல்வினையாயினமாற்றி *
பங்கப்படாவண்ணஞ்செய்தான் பண்டன்றுபட்டினங்காப்பே. (7)

| | |
|---|---|
| சிறுவரை கொங்கை என்னும் பொதும்பினில் | சிறிய மலைபோன்ற முலைகளாகிற பொந்தில் |
| வழுக்கி வீழ்ந்து | வழுக்கி வீழ்ந்து |
| அங்கு ஓர் முழையினில் புக்கிட்டு | (நரகமெனகிற) பரலோகமாகிய ஒரு குஹையினுள் புகுந்து |
| அழுந்தி கிடந்து | (அங்குநின்றும் கால் போக்கவொட்டாமல் அஙகேயே) அழுந்தியிருந்து |
| உழல்வேனை | திரியப்போகிற என்னுடைய |
| வல்வினை ஆயின | தீவினைகளாயிருப்பவைகளை |
| வங்கம கடல் வண்ணன் அம்மான் | கப்பல்களையுடைய கடல்போன்ற திருநிறததனுன எம்பெருமான் |
| மாற்றி | போக்கியருளி |
| பங்கப்படா வணணம செய்தான் | பரிபவப்படாதபடி செய்தருளினுன; |

பண்டு அன்று பட்டினம் காப்பு—.

* * *—"வாணிலாமுறுவல் சிறுநுதல் பெருந்தோள் மாதரார் வனமுலைப்பயனே பேணினேன்" என்றபடி விஷயாந்தரங்களில் ஆழங்காற்படுத்திப் பின்பு அதற்குப் பலமாக நரகங்களிலுங் கொண்டுபோய் அழுத்தக் கடவனவான எனது கருமங்களையெல்லாம் எம பெருமான் ஒழித்தருளி, பரிபவங்களுக்கு ஆளாகாதபடி செய்தருளிப் பாதுகாத்தருளின னென்கிறார்.

மலைபோற் கிளர்ந்துள்ள கொம்மை முலையைப் 'போதும்பு' [பொந்து] என்னலாமோ? எனின்; தன்னிடத்து ஆழங்காற் படுத்திக்கொள்ளுந் தன்மையின் ஒற்றுமைபற்றி அங்ஙனங் கூறினரென்க. இனி, 'கொங்கைச்சிறுவரை யென்றும்" என்று பாடமாகில், "சிறுவரை" என்பதை, சிறு அரை எனப்பிரித்து, 'கொங்கை என்றும, சிறு அரை என்றும' என இயைத்து, இதொரு முலையிருந்தபடியே! என்றும், இதொரு சிற்றிடை யிருந்தபடியே! என்றும் (மயங்கிச்) சொல்லிக்கொணடு (விஷயாந்தரத்தில் மூண்டு) ஹேயஸ்தாநமாகிய பொந்தில் வழுக்கி வீழ்ந்து எனப் பொருள் கொள்ளலாமென்பர். முழை என்று குஹைக்குப் பெயர்; அதுபோல் பயங்கரமான நரகத்தைச் சொல்லுகிறது இங்கு. உழல்வேனை—எதிர்காலம்; நிகழ்காலமன்று இவ்விடத்தில் இப்போது கொங்கைச் சிறுவரை யென்றும் பொதும்பினில் வழுக்கி வீழ்கிறதற்குப் பலனுக, பின்பு நகரததிற்புகுந்து அங்கு உழலப்போகிற என்னுடைய என்றவாறு. ["வங்கக்கடல் வண்ணன்"] தன் திருமேனியினழகை எனக்குக் காட்டியருளின மாத்திரத்தினுல் ஊழ்வினைகளெல்லாம் தன்னடியே ஒழிந்தன என்பது உள்ளுறை. பங்கப்படாவண்ணம்—*தென்னவன்தமர் செய்பமிலாதார் சேவதக்குவார் போலப்புகுந்து, பின்னும் வன்கயிற்றுற் பிணித்தெற்றிப் பின்முன்னுக விழுக்கை முதலிய பரிபவச் செயல்களுக்குப் பாத்திரமாகாதபடி என்கை. .... (7)

450 ஏதங்களாயினவெல்லாம் இறங்கலிடுவித்து * என்னுள்ளே
பீதகவாடைப்பிரானுர் பிரமகுருவாகிவந்து *
போதிற்கமலவன்னெஞ்சம் புகுந்துமென்சென்னித்திடரில் *
பாதவிலச்சினைவைத்தார் பண்டன்றுபட்டினங்காப்பே. (8)

| | |
|---|---|
| பீதக ஆடை பிரானுா | திருப்பீதாம்பரததையுடையனுன எம்பெருமான |
| பிரம குரு ஆகி வநது | பரஹமோபதேசம் பணணககடவனுன ஆசாயனுய் எழுநதருளி |
| போது இல | அறிவுக்கு இருப்பிடமானதும |
| வல் | (அநதாயாமியையும் அறிய வொட்டாத) வனமையையுடையதுமான |
| நெஞ்சம் கமலம் | ஹருதய கமலததினுள |
| புகுநது | பிரவேசிதது |
| என் உள | எனது (அநத) ஹிருதயததில் |
| ஏதஙகள ஆயின எலலாம் | தோஷஙகளாக இருபபவறறையெல்லாம் |
| இறஙகலிடுவிதது | நீக்கி |
| என சென்னிததிடரில | என்னுடைய தலையினமீது |
| பாத இலச்சினை வைததார் | ஸ்ரீபாத முத்திரையை ஏறியருளப் பண்ணினுன்; |

பண்டு அன்று பட்டினம் காப்பு—.

